## கல்கியின்



# அமர தாரா

ஆனந்தி



பாரதி பதிப்பகம்

தியாகராய நகரம்  சென்னை-17

# பதிப்புரை

இந்த நூற்றுண்டில் தமிழ் இலக்கிய உலகில் ஒரு எழுச்சியும் விழிப்பும் ஏற்பட்டிருக்கிறது. தேக்க நிலையைப் போக்கி புதுப்புது முறைகளைக் கையாண்டு வளப்படுத்திய பலருள் தமக்கென, பிறரால் இட்டு நிரப்ப முடியாத இணையற்ற ஸ்தானத்தை வகித்தவர் அமரர் கல்கி அவர்கள். அவரது எழுத்திலே பிறந்த நூல்கள் என்றும் நிலையாக நின்று 'கல்கிபாணி'யைப் புலப்படுத்திக் கொண்டிருப்பவை.

கல்கி அவர்களின் அற்புத சிருஷ்டிகளை நூல் வடிவில் தரும் பேறு பெற்றவர்கள் நாங்கள். பாரதி பதிப்பகம் அவருக்கெனத் தோன்றியது; அவரால் வளர்ந்து பெருகியது. எங்கள் ஸ்தாபனத்திலிருந்து தனியே பிரித்துப் பார்க்க முடியாத விதத்தில் அவர் ஈடுபாடு கொண்டிருந்தார். அவரது எழுத்தை யெல்லாம் ஏற்றமுள்ள புத்தகங்களாக வெளியிடும் பெருமைபெற்ற பாரதி பதிப்பகம் 'இதுதான் நான் எழுதும் கடைசிப் புத்தகமாக இருக்கும்' என்று கல்கி அவர்களே கூறிச்சென்ற அமரதாராவைத் தமிழ் மக்களுக்கு பணிவுடன் சமர்ப்பிக்கிறது.

'அமரதாரா' கல்கியின் புகழை ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் ஒப்பற்ற தாரகை. கதைக்கு இப்பெயரைத் தேர்ந்தெடுத்த காரணமே அதுதான் போலும்.

"எனது கதைகளிலேயே ஏதாவது ஒன்று குறைந்தது நூறு வருஷமாவது நிலைத்திருக்கு மென்ருல் அது 'அலை•ஓசை'தான் என்றார் கல்கி அவர்கள். அதை நூல் வடிவில் தமிழகத்துக்குத் தந்த நாங்கள் என்றும் தாரகைபோல் அழிவே

யின்றி ஆசிரியரின் திறனையும், பெருமையையும் உலகில் ஒளிபரப்பிக் கொண்டிருக்கக் கூடிய அமர தாராவை இப்போது அளிக்கிறோம்.

அமரதாரா கல்கி அவர்களின் அழியாச் சித்திரம். ஆசிரியர் கடைசிவரை தமது கை வண்ணத்தால் அமரதாராவை அழகு படுத்தவில்லை என்ற குறைக்கே இடமில்லாத விதத்தில் அவரது புதல்வி ஆனந்தி கதையைப் பூர்த்தி செய்திருக்கிறார். கல்கி அவர்கள் எழுதி வைத்த குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு ஆனந்தி கதையை சொல்லி வந்தபோது 'இதை வேறுயாரும் எழுதவில்லை; கல்கியின் ஆத்மாதான் ஆனந்தியின் எழுத்துக்கு உருவம் கொடுக்கிறது' என்ற எண்ணமே எவருக்கும் எழுந்தது.

தமிழ் உள்ளளவும் கல்கியின் பெயர் மறையாது. அதற்கு எடுத்துக்காட்டாக இருக்கக்கூடிய அவரது சிருஷ்டிகளில் தலையாய ஸ்தானம் வகிப்பது அமரதாரா.

இதைப் புத்தக உருவில் வெளியிட அனுமதித்த கல்கி அவர்களின் புதல்வி ஆனந்திக்கு நாங்கள் என்றும் நன்றியுடையவர்கள்.

இந்நூலை அழகுபடுத்த உள்ளே அமைந்துள்ள சித்திரங்கள் ஏற்கனவே 'கல்கி' இதழில் வெளியானவை. அவற்றை உபயோகித்துக் கொள்ள அன்புடன் இசைந்த கல்கி அதிபர் திரு. சதாசிவத்துக்கும் எங்கள் நன்றி உரியது.

வாழும் தமிழை வளரச் செய்யவேண்டிய பொறுப்புடைய தமிழ் மக்கள் தங்கள் அன்புக் கரம் நீட்டி இதனை வரவேற்பார்கள் என்ற நம்பிக்கையுடன் சமர்ப்பிக்கிறோம்.

தியாகராய நகரம்
28—2—57.

**பழ. சிதம்பரன்**
பாரதி பதிப்பகம்




இந்த உலக வாழ்க்கையைப் பற்றி எத்தனையோ மகான்கள் சொல்லியிருக்கிறார்கள். வாழ்வே மாயை என்றும், உலகம் அநித்தியம் என்றும், காயம் பொய் யென்றும் சொல்லியிருக்கிறார்கள். நானும் அந்த உண்மை களைப் புரிந்துகொள்ள முயற்சித்துத் தோல்வி அடைந் திருக்கிறேன். உண்மையில் என் வாழ்க்கையிலேயே நான் தோல்வியடைந்த விஷயம் இது ஒன்றுதான் என்று நினைத்து இறுமாப்பு அடைந்திருந்தேன். இந்த விஷ யத்தில் தோல்வியடைவதனால் அவமானம் ஒன்றும் இல்லையல்லவா ?

'வாழ்க்கையை ஏன் மாயை என்று சொல்லுகிறார்கள்? விஞ்ஞானப்படி வாழ்க்கை எவ்வளவு ஸ்திரமானது? உலகம் எப்படி மாயையாக இருக்க முடியும்? கடவுள் இந்த உலகைப் படைத்திருந்தால் அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டுமல்லவா? இறைவனுடைய உலகத்தை மாயை என்று நாம் ஒதுக்கித் தள்ளிவிடலாமா?' என்று பல தடவைகள் எண்ணியிருக்கிறேன்.

'உடலைப் பொய்யென்று எப்படி எண்ண முடியும்? நான் மூச்சு விடுகிறேனே, நடக்கிறேனே, படிக்கிறேனே, உணர்கிறேனே! இதெல்லாம் எப்படிப் பொய்யாகும்?

என்னை நான் படைத்துக் கொள்ளவில்லை. உண்மைதான். என்னை உண்டாக்கிய சக்திக்கு இறைவன் என்று பெய ரிட்டு நான் வணங்குகிறேன். என்னை அவர் இந்த உலகத்துக்குப் பொய்யாக அனுப்பியிருப்பாரா? அவர் எனக்குக் கொடுத்த தேகம் பொய்யா?

'எல்லாவற்றுக்கும் மேலாக உள்ளம் என்ற வஸ்து வைப் படைத்திருக்கிறரே இறைவன்! அது எப்பேர்ப் பட்ட விந்தை! அந்த மனம் எங்கே இருக்கிறது என்று யாராலாவது சொல்ல முடியுமா? அந்த உள்ளத்தில் அன்பு என்னும் சக்தியை உற்பத்தி செய்கிறரே அந்த அற்புதத்துக்குத்தான் ஈடு இணையுண்டா? அந்த அன் பென்னும் அற்புதத்தை மாயை என்று சொல்வதில் பொருள் இருக்கிறதா?' என்று யோசித்துப் பார்த் திருக்கிறேன்.

உலகையும், அதிலுள்ள எண்ணற்ற ஜீவராசிகளையும், மனித குலத்தையும் ஏதோ ஒரு லட்சியத்துடன்தான் இறைவன் படைத்திருக்கிறர். அவருடைய லட்சியத்தை நாம் உணர்ந்து அதை மதித்து நடப்பதே வாழ்க்கை யாகும். அதுதான் இப்போது மனித குலத்துக்கு அவசிய மானதும் ஆகும். இதை மாயை என்று உதறுவது இவை களின் சிருஷ்டி கர்த்தாவையே உதாசீனம் செய்வதாகும் என்று எனக்குத் தோன்றுகிறது.

என் இதயத்தில் ஜோதியாக விளங்கும் இந்து மதியை என்னல் மாயை என்று எண்ண முடியவில்லையே. அவள்மீது எனக்கு ஏற்பட்ட அன்பினல் என் உள்ளம் விசாலமாகி நான் மனிதனகி இருக்கிறேனே. இதெல்லாம் பொய்யாக இருக்க முடியவே முடியாது. இது இந்த ஜன்மத்தோடு முடிவடைந்துவிடும் விஷயமும் அல்ல. இந்த அன்பு என்னை உயர்த்தியிருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை.

நான் இங்கிலாந்தில் இருந்த சமயத்தில், ஒரு சமயம் யுத்தம் ரொம்ப உக்கிரமாக நடந்துகொண்டிருந்தது. எறும்புப் புற்றுக்குத் தீ வைத்தால் எறும்புகள் சாகுமே அந்தமாதிரி மனிதர்கள் நெருப்பில் மடிந்தார்கள். நான் சிறுவனுக இருந்த பொழுது எறும்புப் புற்றின்மீது வைக்கோலைக் கொளுத்திப் போடும் பயங்கரக் காட்சியைக் கண்டு அழுதிருக்கிறேன். மனிதர்கள் அந்த மாதிரி என் கண் முன்னுல் செத்துப் போனதைப் பார்த்தபோது எனக்கு உலகத்தின்மீதே அளவு கடந்த வெறுப்பு உண்டாயிற்று. அந்தச் சமயத்தில் நான் தத்துவப் புத்தகங்கள் பலவற்றைப் படித்து, 'பிறப்பு, இறப்பு இவைகள் ஏன் ஏற்படுகின்றன? உலகத்தில் துன்பம் ஏன் ஏற்படுகிறது?' என்பனவற்றைத் தெரிந்து கொள்ள முயன்றேன். பல வாசகசாலைகளுக்குச் சென்று, இறந்த பிறகு என்ன ஆகும் என்று தெரிந்துகொள்ள முயற்சி செய்தேன்.



நமது மதங்களில் சொல்லப்படும் சுவர்க்கம், நரகம் இவற்றில் எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. என் அன்னை, வெகு காலத்துக்கு முன்பு, நான் குழந்தையாக இருந்த காலத்தில் இதைப்பற்றியெல்லாம் எனக்குச் சொல்லியிருக்கிருள். பல மதங்களைப் பற்றிப் படித்தேன். இந்திய வேதாந்தப் புத்தகங்கள், கிறிஸ்தவ நூல்கள், இஸ்லாமிய தத்துவங்கள், அவற்றுக்கு விளக்கங்கள், புத்த மதக் கொள்கைகள் எல்லாம் படித்தேன். ஒன்றிலாவது நான் தேடிய விஷயம் கிடைக்கவில்லை. உயிர்களின் பரிணும தத்துவப்படி முதன் முதலில் 'ப்ரோடோப்ளாஸம்' என்ற உயிர் தோன்றியதாம். அது எப்படித் தோன்றியது என்பது யாருக்கும் தெரியவில்லை.

இதனுலெல்லாம் எனக்கு ஒரு முக்கியமான உபயோகம் ஏற்பட்டது. பல மதங்களைச் சேர்ந்தவர்களுடன்

வித்தியாசம் இல்லாமல் பழக முடிந்தது. விசால நோக்கம் ஏற்பட்டது. மொத்தத்தில் எல்லா மதங்களின் அடிப்படையிலும் சொல்லப்பட்டிருக்கும் விஷயம் ஒன்றுதான் என்பது தெரிந்தது. அதாவது எல்லா மதங்களும், "மனிதன் ஒருவனிடம் ஒருவன் அன்பாக வாழவேண்டும். ஒருவனை இன்னொருவன் துன்புறுத்தக் கூடாது" என்னும் விஷயத்தையே சொல்லுகின்றன.

பொய் சொல்லக்கூடாது என்றும், திருடக்கூடாது என்றும் எல்லா மதங்களிலும் கட்டுப்பாடு இருக்கிறதல்லவா? ஏன்? அதனால் மற்றவர்களுக்குத் துன்பம் ஏற்படும்; அதனால்தான். வீட்டுக்குப் பசியுடன் வந்தவர்களை உபசரிக்க வேண்டுமென்று எல்லா மதங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. தர்ம சிந்தனையை வற்புறுத்துகிறது! ஏன்? மனிதர்கள் ஒருவரையொருவர் நேசிக்க வேண்டும் என்பதற்காகவே. யோசித்து ஆராய்ந்து பார்த்தால் இந்த உண்மை ஒவ்வொரு மதக் கொள்கையிலும் இருப்பது விளங்கும்.

இந்து வேதாந்தமும், புத்தருடைய பஞ்சசீலமும், கிறிஸ்தவர்களின் பத்து ஆணைகளும் இதே விஷயத்தைத் தான் சொல்வதாக எனக்குப் படுகிறது.

ஆனால்? இந்த ஆனாலைப் போட்டு ஒரு பெரிய மிகப் பெரிய கேள்விக் குறி போடவேண்டியிருக்கிறது. இத்தனை மதங்களும் இவ்வளவு சொல்லியும் இன்று உலகம் என்ன நிலையில் இருக்கிறது? உலகத்தில் அன்பு தழைக்கச் செய்வதற்கு இத்தனை கொள்கைகளும், மதங்களும் போதவில்லையல்லவா? ஏன்? கம்யூனிஸ தத்துவங்கள்கூட ஒருவருக்கொருவர் அன்பாக இருப்பதைத்தானே சொல்லுகின்றன? கோடிக்கணக்கான ஏழை மக்கள்மீது இருந்த அன்பினால் எழுந்ததுதானே கம்யூனிஸம்? அதைப் பிரயோகித்தவர்கள் அதைத் துஷ்பிரயோகம் செய்தார்கள். அது கொள்கையின் தவறல்ல.

ஆகவே, இத்தனை மதங்களும், கட்டுப்பாடுகளும் உலகத்தில் ஒற்றுமையை வளர்க்கச் செய்யப் போதவில்லை. வேறு புதிய தத்துவம்தான் வேண்டும்போலிருக்கிறது.

அதை நினைக்கும்போது ஏன் இப்படிப்பட்ட மனிதப் பிறவி எடுத்தோம் என்று அவமானமாக இருக்கிறது.

ஆனால், அதே சமயத்தில் இந்துமதியைப் பற்றி நினைக்கும்போது, என் இதயத்திலிருந்து அவளுடைய உள்ளத்தில் இடையருமல் பாய்ந்துகொண்டே இருக்கும் அன்பு என்னும் தேன் ஊற்றை உணரும்போது பிறவி எடுத்ததன் பயனே இதுதான் என்று தோன்றுகிறது.

ஆம்! உலகில் ஒவ்வொருவரும், யாரேனும் ஒருவரை உண்மையாகவே விரும்பி நேசிக்கத் தெரிந்துகொண்டு விட்டால் இந்த உலகம் பிருந்தாவனமாகவே ஆகிவிடும். அது இல்லாததனுல்தான் உலகம் இப்படி நாசத்தைத் தேடி வெகு வேகமாகப் போய்க்கொண்டிருக்கிறது.

"இந்துமதி!" ஆகா! அந்தப் பெயரை நினைக்கும் போது என் நெஞ்சத்தில் உண்டாகும் உணர்ச்சியை விவரிக்க முடியுமா? அது ஒரு குழந்தையிடம் தந்தைக்கு ஏற்படும் வாத்ஸல்யமா? கணவனுக்கு மனைவியிடம் ஏற்படும் காதலா? குருவுக்கு சிஷ்யனிடம் உண்டாகும் சிரத்தையா? தாய்க்குத் தன் மகவினிடம் உண்டாகும் வாஞ்சையா? சிறுவனுக்கு மாம்பழத்தினிடம் ஏற்படும் கவர்ச்சியா? கண்ணனுக்கு ராதையிடம் ஏற்பட்ட பிரேமையா? இவைகள் எல்லாமே எனக்கு அவள்மீது ஏற்படும் அன்புக்குப் பொருத்தமானதுதான். இத்தனையும் கலந்த உணர்ச்சிதான் இந்துவை நினைக்கும்போது ஏற்படுகிறது?

அது எதற்காக ஏற்படுகிறது என்று இந்துவே நினைக்கலாம்.

கடல் அலைகள் ஓயாமல் கரையின் மேல் வந்து ஏன் மோதுகின்றன? வானத்து விண்மீன்களிலிருந்து ஏன்

இடைவிடாமல் ஒளி நாலா பக்கங்களிலும் பாய்ந்து கொண்டே இருக்கிறது ? வண்ண மலர்கள் செடிகளில் ஏன் பூத்துக் குலுங்குகின்றன ? மரங்கள் ஏன் கனிகளைப் பொழிகின்றன ? தண்ணீர் ஏன் பள்ளத்தை நோக்கிப் பாய்கிறது ? அதேமாதிரிதான் எனக்கு இந்துவிடமிருக்கும் அன்புக்கும் காரணம் கூற முடியாது. இயற்கை என்று கூறலாம்.

இந்துமதி என்னை, “ உங்களைப்பற்றி ஒன்று விடாமல் எழுதித் தரவேண்டும் ” என்று கேட்டுக்கொண்டாள். அவள் என்னைப்பற்றி எப்படி எப்படியோ தெரிந்து கொள்ளவேண்டுமென்று ஆசைப்பட்டாள். அனுபவத்தின் மூலமாகவும், அன்பின் மூலமாகவும், பேச்சு, பாட்டு இவை களின் மூலமும் என்னைப்பற்றி அவளுக்குச் சொல்ல நினைத்திருந்தேன். இப்படிச் சொல்ல நேரிடுமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. என் இந்துவின்மீது நான் வைத்திருக்கும் அன்பைச் சொல்லாவிட்டால் நான் என்னைப்பற்றி எதுவுமே சொல்லிக்கொண்டதாகாது.

என்னைப் பற்றிச் சொல்லவேண்டுமானால் நான் நாலு பேரைப் பற்றிக் கட்டாயம் சொல்லவேண்டும். முதலில் இந்து, பின்னர் என் அருமைத் தோழன் தங்கபாண்டியன், அதன்பின் என் அன்னை, பிறகு என்னை ஆபத்திலிருந்து காப்பாற்றிய ஒரு உத்தமர்.

இந்துவைப்பற்றிச் சொல்ல வார்த்தைகளே இல்லை. அதை விட்டுவிடுகிறேன். என் நண்பன் தங்கபாண்டி யனைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். முதலில் என்னை மிக அன்போடு, வறுமையுடன் போராடிக்கொண்டே வளர்த்த என் அன்னையைப்பற்றிக் கூறுகிறேன். இந்துவுக்கும் அவளைப்பற்றித் தெரிந்துகொள்வது நன்மை தரும். வறுமையையும், தாங்கொணாத துன்பத்தையும், கடமைக் காகப் பொறுத்துக்கொண்ட ஒரு உத்தமத் தாயைப்பற்றித் தெரிந்துகொள்வதே மனத்தைப் புனிதமாக்கும். மேலும்

அவள் பட்ட துயரங்களையும், வேதனைகளையும், துன்பங்களையும் பற்றிக் கேட்டால் இந்துவுக்கும் தன் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளத் தைரியம் வரும். இப்போதே அவள் சொல்ல முடியாத துணிவுடன்தான் இருக்கிறாள். அவளுடைய தைரியத்தையும், அமைதியையும் கண்டு நான் வியக்கிறேன். ஆனால் அதே சமயத்தில் முன் யோசனையோடு காரியம் செய்யத் தெரியவில்லை. எல்லாவற்றுக்கும் அவசரப்படுகிறாள். நிதானமாக யோசித்து முடிவுக்கு வராமல், திடீரென்று எதையேனும் நினைத்துக் கொண்டு விடுகிறாள். அதைப் பிறகு மாற்றவே முடிவதில்லை.

அவளை 'லாக்அப்'பில் வைத்த உடனேயே இனிமேல் மரணம்தான் என்று தீர்மானித்துவிட்டாள். " விடுதலையாக முடியும். முயற்சி செய்தால் அவளை நிரபராதி என்று நிரூபிக்கலாம் " என்று எத்தனை தடவை சொல்லியும் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. அந்தக் காரணத்தினாலேயே வக்கீல் வைத்து வாதாடக் கூடாது என்று பிடிவாதம் பிடித்தாள். நான் வக்கீலை அழைத்துக்கொண்டு போனபோது அவரிடம் ஒன்றுமே சொல்லவில்லை. அவர் என்ன செய்ய முடியும் ? அவர் சொன்னதுபோல் ஒரு காரியமும் செய்ய வில்லை. தந்தப் பிள்ளையார் என்னுடையதில்லை என்று சொல்லச் சொன்னார். அவள் கேட்கவில்லை. அவளுக்குக் கடிதம் கொண்டு வந்து கொடுத்த சிறுவனைப் பிடித்துக்கொண்டு வந்து சாட்சி சொல்ல வைத்தார்கள். இந்துமதி கடிதத்தைக் கண்டவுடனே புறப்பட்டுச் சென்றதைப் பார்த்ததாக அவன் சாட்சி சொன்னான். இப்படியெல்லாம் குளறுபடியாகிவிட்டது. நாங்கள் என்ன முயற்சித்தும் அவள் நிரபராதி என்று நிரூபிக்கச் சாட்சியம் கிடைக்கவில்லை.

அவளுடைய வாழ்க்கையில் எவ்வளவு ஏமாற்றங்கள் ? எவ்வளவு ஏற்றத் தாழ்வுகள் ? எவ்வளவு பயம் ? எவ்வளவு

சோதனை ? என்ன வேதனை ? ஒரு வீரப் பெண்மணியால் தான் இத்தனையையும் தாங்க முடியும். அவளை நான் 'லாக் அப்'பில் போய் முதல் தடவை பார்த்தபொழுது என்னைத் தேற்றினாள். அதை நினைத்தால் வியப்பாக இருக்கிறது.

அதன் பிறகு எவ்வளவோ தடவை என்னைப் புரிந்து கொள்ளாமல் பேசினாள் ; அவள் என்னிடம் வெறுப்பாகப் பேசினால் என் மனமும் மாறிவிடும் என்று எண்ணினாளோ என்னமோ தெரியவில்லை. என் இதயவானில் ஒரு சந்திரன்தான் பிரகாசிக்க முடியும் என்பது அவளுக்குத் தெரியவில்லை. இந்து இருந்தாலும், மறைந்துவிட்டாலும் என் இதய ஆகாசத்தில் அவள் என்றும் பூர்ண சந்திரனாகவே திகழ்வாள். அதில் சிறிதும் சந்தேகமில்லை.

இந்துவுக்காக இந்தக் கதையை எழுதத் தொடங்கி யிருக்கிறேன். நான் ஏற்கனவேயே டயரி எழுதுவதுண்டு. ஆனால் அது காலேஜில் ஏற்பட்ட பழக்கம். என் இளமைப் பிராயத்தைப்பற்றி எழுத ஒரு குறிப்பும் இல்லை. நினைவு ஏடுகளில்தான் அத்தனையும் அழுந்தப் பதிந்திருக்கிறதே ! என் அன்னையுடன் நான்... ...

என் அன்னை ! அவரைப்பற்றி நினைக்கும்போது என் நெஞ்சம் பக்தியினால் நிறைந்து விடுகிறது. பழைய காலத்துப் பழக்க வழக்கங்களில் நம்பிக்கையும், தெய்வ பக்தியும், பதிபக்தியும் கொண்ட அவருடைய முகமே அலாதியான சோபையுடன் பிரகாசிக்கும். அவருடைய தோற்றத்தைப் பார்த்தாலே நமஸ்கரிக்கத் தோன்றும். இத்தனைக்கும் எத்தனை வறுமையிலும், மனோ வேதனை யிலும் உழன்றிருக்கிறார் தெரியுமா ? அத்தனை கஷ்டங் களும் அவருடைய உடலைப் பாதித்ததே தவிர உள்ளத்தைச் சிறிதும் பாதிக்கவே இல்லை.

எல்லாவற்றையும் விட என்மீது அவர் வைத்திருந்த அன்பையும், நம்பிக்கையையும் நினைத்தாலே அதிசயமாக

இருக்கிறது. எல்லாத் தாய்மாரும் தன் குழந்தையிடத்தில் அன்பு வைப்பார்கள். ஆனால், என்னிடம் அவருக்கு இருந்த அசைக்க முடியாத நம்பிக்கையை நினைத்தாலே என் கரங்கள் அவருக்கு அஞ்சலி செலுத்துகின்றன.

"துரைக்கண்ணு ! நீ சமர்த்தாய்ப் படிக்கப் போகிறாய். பெரிய படிப்பெல்லாம் படிப்பாய் ! பெரிய வக்கீலாகவோ, ஜட்ஜாகவோ வேலை பார்க்கப் போகிறாய். முருகன் அருள் உனக்குப் பூரணமாக இருக்கிறதடா என் கண்ணே ! உனக்குத் தைரியம் மட்டும் வேண்டும்" என்று சாதம் போட்டுக்கொண்டே அவர் நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது கூறியது இன்று நடந்ததுபோல் நினைவு இருக்கிறது. 'இப்படி இருக்கவேண்டும், அப்படி இருக்க வேண்டும்' என்றே சொல்ல மாட்டார். "பெரிய ஜட்ஜாக வேலை பார்ப்பாய்" என்றுதான் சொல்லுவார். அன்னையின் வாக்கு பலித்தது. பள்ளிக்கூடத்தில் கெட்டிக்கார மாணவன் என்றே பெயர் எடுத்தேன். படிப்பு முடிந்ததும் பெரிய வேலையே கிடைத்தது. நான் உண்மையிலேயே நீதிபதி உத்தியோகம் பார்த்ததை அவர் இருந்து பார்க்கவில்லையே என்று சில சமயம் வருத்தமாக இருக்கிறது. அவருடைய நம்பிக்கையை நான் வீணாக அடிக்கவில்லை. அந்தத் திருப்தியோடு அந்த வேலைக்கு ஒரு ஸ்நானம் செய்துவிட்டேன். இந்துவின் வழக்கு முடிந்து அவள் விடுதலையாக வேண்டியதுதான். நான் அவளுடன் எங்காவது ஒரு கிராமத்தில் போய் இருந்துவிடுவேன். எனக்கு அவளும், அவளுக்கு நானும் இருந்தால் போதாதா ? இந்தப் பட்டண வாழ்க்கை எங்களுக்கு எதற்கு ?

என் கதையை ஆரம்பிப்பதற்குக் கொஞ்சம் பின்னோக்கிச் செல்ல வேண்டும். திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள அல்லிக்குளம் என்ற கிராமத்தில் என் வாழ்க்கை ஆரம்பமாகிறது.

# 2. அன்பு வளர்த்தது !

என் அருமைத் தாயார் அல்லிக்குளம் கிராமத்தில் வசித்து வந்தபோது எவ்வளவோ கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிட்டது. அத்தனையையும் பொறுத்துக் கொண்டு என்னை மிகவும் அன்பாக வளர்த்தார். அந்தச் சூழ்நிலையில் எப்படி அவரால் அத்தனை பொறுமையாக இருக்க முடிந்தது என்பதை நினைத்தால் மிக ஆச்சரியமாக இருக்கிறது. என்னுடைய அன்னை எனக்குச் சாதம் போட்டே வளர்க்கவில்லை. அவருடைய தன்னலமில்லாத தூய அன்பே என்னை வளர்த்தது.

என் அன்னை, இந்துவின் தாயார் சந்திரமணியைப் போலக் காதல் மணம் புரிந்து கொண்டவரல்ல. பிறந்ததே ஏழைக் குடும்பத்தில்தான். பத்து வயதில் என் தந்தைக்கும் அவருக்கும் விவாகம் நடந்ததாம். என் தந்தையான கந்தசாமி அவரை எப்போதும் அலட்சிய மாகவே நடத்தி வந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஆரம்பத்தில் எப்படி இருந்தாரோ எனக்குத் தெரியாது. நான் அதைப்பற்றிக் கேட்டது கிடையாது. ஆனால் எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் அவர் ஒரு நாளாவது வீட்டில் சத்தம் போடாமலிருந்தது கிடையாது. அவர் என்ன சொன்னாலும் என் அன்னை வாய் திறக்க மாட்டார் அவர் சென்ற பிறகு மௌனமாகக் கண்ணீர் உகுப்பார். அல்லது என்னை அழைத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு, " துரை ! உன்னைத்தான் நான் நம்பியிருக்கிறேனடா. நீ சீக்கிரம் பெரியவனாகிவிடக் கூடாதா ?" என்று சொல்லுவார்.

நானும், " நீ தினமும் நிறையச் சாதம் போடு, அம்மா ! நான் சீக்கிரம் பெரியவனாகி விடுவேன். அப்புறம் பெரிய வேலை பார்ப்பேன் " என்பேன் மகிழ்ச்சியோடு.

அதைக் கேட்டதும் அவர் பூரித்துப் போய் என்னைக் கட்டியணைத்து உச்சி முகர்வார். என்மீது வைத்திருந்த அசைக்க முடியாத நம்பிக்கையினுல்தான் அவர் உயிர் வாழ்ந்தார் என்று சொல்லவேண்டும்.

இத்தகைய அன்பு மயமான அன்னைக்கு நேர் விரோதமாக இருந்தார் என் தந்தை. அவர் மகா கோபக் காரர். சீட்டாடுவதுதான் அவருக்கு முக்கியமான வேலை. நிலங்களைக் குத்தகை எடுத்துப் பயிரிடுவது இரண்டாவது வேலை. ஆனுல், அவரைக் குற்றம் சொல்லியும் பயனில்லை. வறுமை அவரைச் சீட்டாடச் செய்தது. அதில் பணம் சேர்த்துவிடலாம் என்ற நம்பிக்கை, அவரை மேலும் மேலும் அந்த வலையில் கொண்டுபோய் நன்ருகச் சிக்க வைத்துவிட்டது. அதன் பிறகு அதிலிருந்து விடுவித்துக் கொள்ளவே முடியாமல் அதில் அழுந்திப் போய்விட்டார்.

குத்தகைப் பணம் கட்டியது போகப் பாக்கியுள்ள பணம் அநேகமாகச் சீட்டாட்டத்தில் தொலைந்துவிடும். அபூர்வமாக எப்போதேனும் ஜெயிப்பதும் உண்டு. அவர் முகத்தில் சிரிப்பைக் கண்டால் என் தாயாருக்கு அவர் அன்று சீட்டாட்டத்தில் ஜெயித்திருக்கிருர் என்று தெரிந்து விடும். என்னிடமும், "என்ன துரை ! நல்லாப் படிக் கிருயா ?" என்று கேட்பார். அதற்குமேல் அவர் அன்பு காட்டி நான் அறிந்ததில்லை.

அல்லிக்குளம் கிராமத்தில் வசித்து வந்த மற்றக் குடும்பத்தினருக்கெல்லாம் என் அன்னையைக் கண்டால் ஒரு அலாதியான பிரியம். ஒருமுகமாக அனைவரும் "பாவம், நல்லவள் !" என்பார்கள்.

அந்த நல்ல பெயரினுல்தான் நாங்கள் அந்த ஊரில் காலந்தள்ள முடிந்தது. கடன் பெருகியிருந்தபோதிலும், என் அன்னையை உத்தேசித்துக் கடனைத் திருப்பிக் கேட்டு நெருக்காமலிருந்தனர் அந்த ஊர்க்காரர்கள்.

குத்தகை நிலத்தைச் சரியாகக் கவனித்துத் தண்ணீர் பாய்ச்சி, கண்ணுங் கருத்துமாகப் பாதுகாத்தால்தானே, நிலச் சொந்தக்காரருக்குக் கொடுப்பது போக லாபம் வரும்? அவர் அப்படிச் செய்ய மாட்டார். என் அன்னை எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். கேட்கவில்லை. சொந்தக் காரருக்குக் கொடுக்க வேண்டிய அளவுக்கே விளைச்சல் இருக்காது. இதைக் கண்ட என் அன்னை தானே சென்று கவனித்து வரலானார்.

அப்போதெல்லாம் அவருடன் நானும் போவேன். பள்ளிக்கூடம் விட்டுத் திரும்பியதும் நேரே வயலுக்குச் செல்வேன். என் அன்னை அங்கே வேலையாக இருப்பார். அவருடன் சேர்ந்து வீட்டுக்கு வருவேன்.

அவர் என்னிடம் பேசிக்கொண்டே வருவார். "நல்லாப் படிச்சயா ரங்கா?" என்பதுதான் எப்போதும் அவரது முதல் கேள்வியாக இருக்கும்.

"படிச்சேன், அம்மா! வாத்தியார் வீட்டுக் கணக்குக் கொடுத்திருக்கார். தமிழ்ப் பாடம், இங்கிலீஷ் பாடம் இரண்டும் எழுதவேண்டும்."

"வீட்டுக்குப் போனதும் நேரத்தை வீணாக அடிக்காமல் முதலில் அதைச் செய்துவிடு. பிறகு விளையாடப் போகலாம்" என்பார்.

"அம்மா! நாளைக்கு லீவு போட்டுவிட்டு உன்னோடே நானும் வந்து வயல்லே வேலை செய்யறதைப் பார்க்கிறேன், அம்மா!"

"ஐயையோ! கூடவே கூடாது! உன்னை நம்பித் தாண்டா நான் உயிரை வச்சிண்டிருக்கேன். நீ பேசாமல் படி. இந்த வேலையெல்லாம் உனக்காகத்தானே நான் செய்யறேன், கண்ணு! நீ படித்துப் பெரிய உத்தியோகம் பார்ப்பாய். எனக்கு நீ சம்பாதிக்க ஆரம்பித்துவிட்டால் பிறகு என்ன கவலை?" என்பார்.

என் மனத்திலும் உடனே பெரிய கோட்டைகள் எழுந்துவிடும். நான் ஒரு ஆபீஸராக இருக்கிறேன். கூப்பிட்டால் உடனே ஓடி வர இரண்டு ஆட்கள் நிற்பார்கள். பங்காவை ஒரு சேவகன் இழுப்பான். நல்ல மேஜை நாற்காலிகள் இருக்கும். நான் புதிய துணிமணிகள் உடுத்திக் கொண்டிருப்பேன். கையில் கடிகாரம்கூடக் கட்டிக்கொண்டிருப்பேன். என் முன்னால் அடுக்கடுக்காகக் காகிதங்கள் இருக்கும். அவற்றிலெல்லாம் ரூ. அ. பை. கணக்குகளும், உத்தமப் பொது அளவு, அதமப் பொது மடங்கு கணக்குகளும் போட்டுப் போட்டுத் தள்ளுவேன். என்னுடைய மேலதிகாரி வந்து, "பேஷ்! ரங்கதுரை! இன்று நிறையக் கணக்குப் போட்டிருக்கிறாய். எல்லாம் சரியாக இருக்கிறது. உனக்கு இருபது ரூபாய் சம்பளம் உயர்த்தி இருக்கிறேன்" என்பார். உத்தியோகங்களைப் பற்றி எனக்கு இவ்வளவுதான் தெரியும். அது எவ்விதமான உத்தியோகமானாலும் சரி.

சம்பளம் உயர்ந்ததும் அம்மாவுக்குப் பட்டுப் புடவைகள் வாங்கிக் கொடுப்பேன், நல்ல வீட்டில் வசிப்போம் என்றெல்லாம் எண்ணங்கள் வானளாவப் பரவி நிற்கும். இந்தக் கனவுகளிலிருந்து நான் விழித்துக் கொள்வதற்கு வெகு நாட்களாயின.

அல்லிக்குளம் மிக அழகான கிராமம். குங்குமத்துறை மாதிரி மலை சூழ்ந்த பிரதேசமன்று. ஆயினும், மண் வளம் மிக்க பூமியாதலால் எங்கும் பச்சைப் பசேலென்று கண்ணுக்குக் குளுமையாக இருக்கும். அல்லது, தான்ய லக்ஷ்மி வயல்களில் கிளி, மைனா, தூக்கணாங்குருவி, சிட்டுக் குருவி முதலிய சேடிப் பெண்களுடனும், அணில், முயல், எலி, மண்டூகம் முதலிய சேவகர்களின் காவலுடன் கொலு விருப்பாள். அந்த அழகுக்கு ஏதேனும் ஈடாகுமா?

அல்லிக்குளத்தில் உண்மையாகவே ஒரு குளம் இருந்தது. சிவன் கோவிலுக்கு அடுத்தாற்போல் இருந்த

அந்தக் குளத்தில் விடியற்காலை நேரங்களில் 'வானத்து நட்சத்திரங்கள் எல்லாம் பூமிக்கு வந்து இந்தக் குளத்தில் ஸ்நானம் செய்கின்றனவோ' என்று நினைக்கும்படி அல்லி மலர்கள் பூத்து மண்டிக் கிடக்கும்.



குளத்தங்கரையிலிருந்த பூவரசமரம் அதற்குப் போட்டியாகப் பூக்களைச் சொரிந்து நிற்கும். களிமண்ணினால் சின்ன உருண்டை செய்து அதற்கு முகம் எழுதிப் பூவரசம்பூவில் ஈர்க்குச்சியால் பொருத்தி மஞ்சள் பாவாடை உடுத்தி விடுவேன். அது எனக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் தெரியுமா? அந்தக் காலத்தை நினைத்தாலே இன்பமாக இருக்கிறது. 'ஏன் வளர்ந்து பெரியவளானேன்? அப்படியே இருந்திருக்கக் கூடாதா' என்று தோன்றுகிறது.

கூடாது! கூடாது! அப்படியே இருந்திருந்தால் இந்துவின் காதலைப் பெற்றுப் பெருமிதமடைந்திருக்க முடியுமா? அவளுக்காக ஏங்குவதில், அவளை நினைத்து உருகுவதில் ஏற்படும் துயரச் சாயை படிந்த இன்பத்தைத் தான் நான் அனுபவித்திருக்க முடியுமா?

ஆனால், என்ன இருந்தாலும் இந்துவுக்கு இப்படி ஒரு கதி நேர்ந்திருக்க வேண்டாம். அவள் பட்ட கஷ்டமெல்லாம் போதாதா? சிறையில் வேறு இருக்கும்படி நேர வேண்டுமா? அவள் மனம் என்ன பாடு படுகிறதோ?

திரும்பத் திரும்ப என் நினைவு இந்துவைச் சுற்றிச் சுற்றி வருவதால் நான் எழுத ஆரம்பித்த விஷயத்தைத் தொடரவே முடியவில்லை. எப்படி ஆரம்பித்தாலும் இந்துவிடமே வந்து முடிகிறது. அவளை மறந்து இதை எப்படி என்னால் எழுத முடியும்?

இந்துமதியின் அழகிய சோகம் ததும்பும் விழிகள், ஜீவகளை நிறைந்த பார்வை, என் கண்முன் எப்போதும்

நின்றுகொண்டிருக்கின்றன. அவள் சினிமா வானில் சுடர் வீசிப் பிரகாசித்ததற்குக் காரணம் அவளுடைய உணர்ச்சிகளைப் பொழியும் கண்கள்தான் என்று சொல்ல வேண்டும். கன்னங் கரேலென்ற நீண்ட இமைகளை அவள் மலர விழித்துப் பார்க்கும் போது, என் இதயத்தையே ஊடுருவிப் பார்ப்பதுபோலிருக்கும்.



எத்தனையோ சூழ்ச்சிகளுக்கும், பொறாமைகளுக்கும், வேதனைகளுக்கும் இடையே உழன்றும் அவள் பரிசுத்தமான மனத்தில் சிறிதும் கறை படியவே இல்லை. அந்தக் கண்ணாடியை ஒத்த மனத்தில் தூசி படியவே படியாது. இதை நினைக்கும்போதுதான் அவள்மீது எனக்கு அன்பு பொங்கி வருகிறது.

இந்துவைச் சற்று மறந்து என் குழந்தைப் பருவத்தில் நடந்த சம்பவங்களை எழுத முயற்சிக்கிறேன்.

என் அன்னை குத்தகை நிலங்களுக்குச் சென்று மேற்பார்வை பார்த்து வந்தாரல்லவா? அதுவும் ஒரு நாள் நின்றுவிட்டது.

ஒரு நாள் அப்பா வரும்போதே கோபமாக வந்தார். படித்துக்கொண்டிருந்த நான் அவரைக் கண்டதும் புத்தகத்தை ஒளித்து வைத்துவிட்டுப் படுத்துக்கொண்டுவிட்டேன். சில சமயம் என்னுடைய புத்தகங்கள் அவருடைய கோபத்துக்குப் பலியாவதுண்டு. கிழித்து எறிவாரே தவிர வாங்கித் தரமாட்டார்.

அன்று அவர் என் அன்னையைக் கூப்பிட்டபோதே என் கதி கலங்கிவிட்டது.

"நீ ஏன் குத்தகை நிலத்துக்குப் போனாய்?" என்று உறுமினர்.

"யாராவது போய்க் கவனிக்க வேண்டுமல்லவா? முனிசாமி எல்லோரும் சரியாக வேலை செய்கிறார்களா என்று பார்க்கப் போனேன்."

"என்னைச் சோம்பேறின்னு குத்திக் காட்டறியா?" என்றார் அவர்.

"அப்படியெல்லாம் சொல்லவில்லையே. இன்னிக்குத் தண்ணி சரியாய்ப் பாய்ச்சி, களை பிடுங்கினால்தானே நாளைக்கு நன்றாக விளையும். குத்தகைப் பணம் கொடுத்து மிஞ்ச வேண்டாமா? நன்றாக அவர்கள் வேலை செய்ய வேண்டுமே என்ற கவலையால் போனேன்."

"இதைப் பாரு! உன்னாலே என் கௌரவமே இன்னிக்குப் பாழாய்ப் போச்சு. என்னை எல்லாரும் பரிகாசம் பண்ணுகிறார்கள். 'பெண்டாட்டி கவனித்துக் கொள்கிறாள். இவனுக்கென்ன கவலை?' என்று சொல்லிக் காட்டுகிறார்கள். இனிமேல் அந்தப் பக்கம் போனாயோ அவ்வளவுதான்! மறுபடியும் இந்த வீட்டிலே காலடி எடுத்து வைக்கக் கூடாது!" என்றார்.

என் அன்னை, "இனிமேல் போகவில்லை" என்று பேச்சை உடனே முடித்துவிட்டார். ஆனால், என் தந்தை சென்ற பிறகு அவர் குமுறிக் குமுறி அழுததை நான் பார்த்தேன். அப்போது எனக்கு என்ன கோபம் வந்தது தெரியுமா? என் தந்தைமீது வெறுப்பு உண்டாகிவிட்டது. நான் சீக்கிரம் பெரியவனாகி என் அருமை அன்னையை இந்தக் கஷ்டத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தேன். சற்றைக்கெல்லாம் அவர் எழுந்து வந்து என் அருகில் உட்கார்ந்துகொண்டு, "கண்ணு! நீ தினமும் பள்ளிக்கூடம் விட்டதும் வழக்கம்போல நிலத்தைப் பார்த்துவிட்டு வந்து சமாசாரம் சொல்கிறாயா?" என்றார். அப்போது நான் அடைந்த பெருமை சொல்ல முடியாது. என் தாயாருக்கு ஒரு முக்கியமான உதவி

செய்யப் போகிறோம் என்ற எண்ணம் எனக்கு மிக மகிழ்ச்சி அளித்தது. அவருடைய கஷ்டத்தைத் தீர்த்து விட்டதாகவே கற்பனை செய்து கொண்டேன். 'பாவம்! அவருடைய கஷ்டங்களை நான் தீர்க்கவே போவதில்லை என்று நான் கண்டேனா?'

# 3. அன்னையின் விருப்பம்

அது முதல் தினமும் அந்த வேலைகளை நான் பார்த்து வந்தேன். ஆனால், சிறுவனான எனக்கு என்ன தெரியும்? ஏதோ நடந்துவந்தது. அந்த வருஷம் விளைச்சல் ரொம்பக் குறைவு. ஆனால், என் தந்தைக்குக் கடன் ஏறியிருந்தது. என் அன்னை என்ன செய்வார் பாவம்! எனக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் வேறு கட்டியாக வேண்டும்.

பள்ளிக்கூடத்திலோ தலைமை உபாத்தியாயர் இரண்டு மாதச் சம்பளம் கட்டாவிட்டால் வகுப்புக்கு வரக் கூடாதென்று கூறிவிட்டார். நான் அம்மாவிடம் இதைச் சொல்லவே பயந்தேன். சொன்னால் அவர் மனமிடிந்து போய்விடுவார். என்ன செய்வதென்று புரியாமல் தத்தளித்தேன்.



ஒரு நாள் பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது குத்தகை நிலத்தைப் பார்க்கச் சென்றேன். அங்கே என் தந்தை நின்றுகொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

'இவரல்லவா என் பள்ளிக்கூடச் சம்பளத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? பாவம்! அம்மா என்ன செய்வாள்?' என்ற நினைப்புடன் அவர் அருகில் சென்றேன்.

என் தைரியத்தையெல்லாம் சேர்த்துக்கொண்டு, "அப்பா! பள்ளிக்கூடச் சம்பளம் கட்டணும். வாத்தியார் உடனே பணம் கட்டாவிட்டால் பள்ளிக்கூடத்துக்கே வரக்கூடாது என்கிறார், அப்பா!" என்றேன்.

"போக வேண்டாமே."

எனக்குக் குபீரென்று அழுகை பொங்கிக்கொண்டு வந்தது.

"என்னடா அழறே? நீ பள்ளிக்கூடம் போகா விட்டால் குடி முழுகிப் போய்விடுமோ? அவ்வளவு அக்கறை இருந்தால் வேலை செய்து சம்பாதித்துப் பணம் கட்டேன்."

"பள்ளிக்கூடத்துக்கு இப்போ போகாவிட்டால் பரீட்சை எழுத முடியாது. ஒரு மாதச் சம்பளமாவது கொடுங்கள், அப்பா!" என்று கெஞ்சினேன்.

என் தந்தை என் அருகில் வந்தார். காதை முறுக்கிப் பிடித்துக் கொண்டார். நான் துடித்தேன். அப்படியே இழுத்துக்கொண்டு வீட்டுக்குப் போனார்.

"வேண்டாம், அப்பா! பணம் வேண்டாம். என்னை விட்டு விடுங்கள். அம்மாவுக்குத் தெரிய வேண்டாம்" என்று அழுதுகொண்டே கூறினேன்.

அவர் கோபம் இன்னும் அதிகரித்தது. வீட்டு வாசல் வரை காதைப் பிடித்தே இழுத்துக்கொண்டு போனார்.

என் அன்னை எதற்காகவோ வாசல் பக்கம் வந்தவர் இதைப் பார்த்துத் திகைத்து நின்றார். சொல்ல முடியாத வேதனை அந்த முகத்தில் பிரதிபலித்தது. வேகமாக ஓடி

வந்து என் தந்தையின் கையை உதறிவிட்டு என்னை அணைத்தவாறு வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். நான் விம்மி விம்மி அழத் தொடங்கினேன். அம்மா பேசவே இல்லை. அவர் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகக் கொட்டியது.

கோபத்துடன் உள்ளே வந்த அப்பா, "பள்ளிக் கூடச் சம்பளம் வேணுமாமே சம்பளம். உதைக்கணும் நன்னு. உன்னுலேதான் அவன் இப்படித் துளுத்துப் போகிருன்" என்ருர்.

"ஏன்? குழந்தை சம்பளப் பணம் கேட்டதிலே என்ன தப்பு? இஷ்டமிருந்தால் கொடுக்கிறது, இல்லாவிட்டால் பேசாமல் இருக்கிறது. குழந்தையை இப்படிப் பாடு படுத்துவானேன்?" என்ருர் என் அன்னை. சாந்தமே உருவான அவருக்குக்கூட அன்று கோபம் வந்து விட்டது.

"படிப்பு ரொம்ப முக்கியம்தான். பணத்தை இரைத்துப் படிக்க வைத்தால் பெரிய வக்கீலாகவும், ஜட்ஜாகவும் வேலை பார்த்துவிடப் போகிருனுக்கும். உன்னைத் தூக்கிச் சிம்மாசனத்தில் உட்கார வைத்து விடுவான். மாடு மேய்க்கக்கூட லாயக்கில்லாத பயலுக்குப் படிப்பென்ன, படிப்பு?" என்று கூறிவிட்டுப் போய் விட்டார்.

காது 'விண்விண்'ணென்று தெறித்தது. ஆனல், மனத்தில் விழுந்த அடி அதைவிட அதிகமாக வலித்தது. அப்பா போனதும் அம்மாவின் மடியில் படுத்து விசித்தேன். என் தாயாரும் கண்ணீர் விட்டார். பிறகு தன் கண்களைத் துடைத்துக்கொண்டு என்னைத் தேற்றினர்.

"துரை! நீ ஏன் அப்பாவிடம் போய்ச் சம்பளம் கேட்டாய்? என்னிடம் சொல்லுவதற்கென்ன?" என்று கேட்டார்.

" உன்னிடம் பணம் இல்லை என்று எனக்குத் தெரியாதா, அம்மா! உன்னிடம் சொன்னால் நீ வருத்தப் படுவாய் என்று சொல்லவில்லை. அப்பாகிட்டே கேட்டுத் தான் பார்க்கலாமே என்று கேட்டேன்" என்று விம்ம லுக்கும், விசும்பலுக்கும் இடையே கூறினேன்.

" கண்ணு! நீ அழாதே. நான் நாளைக்கு எப்படி யாவது சம்பளம் கட்டி விடுகிறேன் " என்று கூறினார்.

எனக்கு அதில் உற்சாகமே உண்டாகவில்லை. அப்பா கூறியதுதான் இன்னும் என் மனத்தில் எரிந்துகொண் டிருந்ததே.

" அம்மா! நான் மாடு மேய்க்கக்கூட லாயக்கில் லாதவனா ?" என்று கேட்டேன்.

அம்மா என் முகத்தை நிமிர்த்தினார். " துரை! இது என்ன அசட்டுக் கேள்வி? நீ ரொம்பக் கெட்டிக்காரன் என்று எனக்குத் தெரியும். அப்பாவுக்கும் தெரியும். ஏதோ நமது போதாத காலம் இப்படியெல்லாம் தவிக்கவேண்டி யிருக்கிறது. நீ ரொம்ப நன்றாகப் படிக்கப் போகிறாய். காலேஜில் படிப்பாய். பிறகு நிஜமாகவே வக்கீல் வேலையோ ஜட்ஜ் வேலையோ பார்ப்பாய். அப்போது பாரேன், அப்பாவை. அவர் அப்படியே பெருமைப்பட்டுக் கொள்வார்."

" வேண்டாம். அப்பா ஒன்னும் என்னைப் பார்த்துப் பெருமைப்பட வேண்டாம். அவர்தான் என் காதைப் பிடித்துத் திருகினாரே !"

" அப்படிச் சொல்லக்கூடாது, கண்ணு! அப்பாவிடம் நீ மரியாதையாக இருக்க வேண்டும் " என்றார் அம்மா.

பிறகு, பாவம், எப்படியோ பள்ளிக்கூடத்துக்குச் சம்பளம் கட்ட மறுநாளே பணம் சேர்த்துக் கொடுத்து விட்டார். அதைக் கொடுக்கும்போதுதான் அவர் முகத்தில் என்ன பெருமை? என்ன நம்பிக்கை? அது அல்லவா

அதிசயம்? நான் பத்து வயதுச் சிறுவனுக இருந்தபோது என்னை அவ்வளவு நம்பினுரே! அந்த நம்பிக்கைக்கு ஏழு உலகங்களையும் கொடுக்கலாமே! அவரைப் பற்றிய மற்ற எல்லா நினைவுகளையும்விட அதுதான் என் நெஞ்சை விட்டு அகலமாட்டேனென்கிறது.

சம்பளம் கட்டிய பிறகு மிகத் தீவிரமாகப் படித்தேன். பள்ளிக்கூடத்தில் நடந்த கட்டுரைப் போட்டியில் முதல் பரிசு பெற்றேன். என் அன்னை அப்போது அடைந்த சந்தோஷத்தை நினைத்தாலே இப்பொழுதுகூட மிகவும் பெருமையாக இருக்கிறது.

விளையாடுவதில் எனக்கு அதிகப் பிரியம் என்ருலும் விளையாடப் போகமாட்டேன். எப்போது பார்த்தாலும் படித்துக்கொண்டே இருப்பேன். இதற்காக என் நண்பர்கள் எல்லோரும் என்னைப் பரிகசிப்பார்கள்.

வருஷாந்திரப் பரீட்சையில் நான் முதல் வகுப்பில் தேறியபோது என் தாயார் அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை. "எனக்குத் தெரியும், ரங்கதுரை என் நம்பிக்கையைப் பாழாக அடிக்கமாட்டான் என்று. கெட்டிக் காரன்" என்று வந்தவர்களிடமெல்லாம் கூறி மகிழ்ந்தார். நானும் ஜட்ஜ் உத்தியோகமே ஆகிவிட்ட மாதிரி மகிழ்ந் தேன். அந்த வருஷம் எனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்தபோது, மிக அதிகமான மகிழ்ச்சி அடைந்தது நாஞ, அம்மாவா அல்லது அப்பாவா என்று யாராலும் சொல்ல முடியாது.

பரீட்சையில் தேறியதும் விடுமுறை நாட்கள் வந்தன. என் அன்னைக்கு அப்போது உடம்பு ரொம்பவும் சரி இல்லாமல் இருந்தது.

அவர் என்னை அழைத்துப் பக்கத்தில் உட்காரச் சொன்னுர். உட்கார்ந்தேன். உடம்பு சரியில்லாமல் கஷ்டப்பட்ட பொழுதுகூட அவர் முகத்தில் பிரகாசம்

போகவில்லை. என்னைப் பார்த்து, " துரை, எனக்கு நீ ஒரு வாக்குறுதி கொடுக்கவேண்டும் " என்றார்.

" என்னம்மா, இப்படிக் கேட்கிறாய் ? நீ என்ன சொன்னாலும் செய்கிறேன், அம்மா !" என்றேன்.

" நீ முதல் வகுப்பில் தேறியிருப்பதை நினைத்தாலே எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. நீ ரொம்பக் கெட்டிக்காரன் என்று எனக்குத் தெரியும். நீ வாழ்க்கையில் மிகவும் முன்னுக்கு வருவாய். அதைப் பார்த்து மகிழ்வேன் என்றுதான் இதுவரை எண்ணியிருந்தேன். ஆனால், இப்போது என் உடம்பு ரொம்பத் தளர்ந்து போய்விட்டது. அதனால் உடனே நான் செத்துப் போய் விடுவேன் என்று சொல்லவில்லை. நீ கவலைப்படாதே. நெருப்பு என்றால் வாய் வெந்து போய்விடுமா ? என் மனத் திருப்திக்காகச் சொல்கிறேன். நான் இருக்கும்வரை நீ நன்றாகப் படிப்பாய். அது எனக்குத் தெரியும். ஒரு வேளை எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டாலும் நீ மனம் குன்றாமல் படித்து வரவேண்டும். அதுதான் என் ஆசை. உன் அப்பா உன்னைப் படிக்கவிட மாட்டார். பணமும் தர மாட்டார். ஆனாலும், நீ எப்படியாவது உபகாரச் சம்பளம் பெற்றாவது படித்துவிட வேண்டும். இந்த வாக்குறுதி எனக்குத் தருவாயா ? இதை மறக்காமலிருப்பாயா ?" என்றார்.

" அம்மா, உன் ஆசையைக் கட்டாயம் நிறைவேற்று வேன். ஆகவே, அதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துகொள்ள வேண்டும். அதுதான் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது " என்றேன்.

என் தாயார் மகிழ்ச்சியுடன் சிரித்தார். " நீ சொன்னதைக் கேட்டதுமே எனக்கு உடம்பு சரியாகிவிட்டதடா, கண்ணு ! உன்னை விட்டு விட்டுச் செத்துப் போக மாட்டேன். நீயாவது வாழ்க்கையில் கஷ்டப்படக் கூடாது

என்பதுதான் என் ஆசை. அதை நீ எப்படியாவது நிறைவேற்ற வேண்டும் " என்ருர்.

" நிச்சயமாய் நான் நன்ருகப் படிப்பேன் அம்மா !" என்று கூறினேன்.

அதன்பின் இரண்டு நாட்களுக்கெல்லாம் என் தாயாருக்கு உடம்பு சரியாகிவிட்டது. மறுபடியும் முன்போல் என்னைக் கவனித்துக்கொள்ள ஆரம்பித்தார். சில நாட்கள் அமைதியாகச் சென்றன. அப்படியே வாழ்க்கை ஆற்ருெழுக்கைப்போல் தவழ்ந்து சென்றுவிட்டால் வாழ்வில் ரஸம் ஏது ?

மிராசுதார் ஈசுவரமூர்த்தி எங்கள் வாழ்க்கையில் குறுக்கிட்டு ரஸம் உண்டாகும்படி செய்தார். என்ன பயங்கரமான ரஸம் அது !

# 4. தமிழ் வாத்தியார்

எல்லோருடைய வாழ்க்கையிலும் இளமைப் பருவத்தின் நினைவுகள் அழியாமல் பதிந்து விடுகின்றன. அதிலும், என் பள்ளிக்கூட வாழ்க்கையைப் பற்றிச் சொல்ல வேண்டியது அவசியம். ஒரு பண்பாடு உள்ள தந்தையை அடையாத எனக்கு, பள்ளிக்கூடமும், உபாத்தியாயர்களும்தான் மனிதனுக வாழ வழி கற்றுக் கொடுத்தார்கள். அதிலும் என்னுடைய தமிழ் உபாத்தியாயர் தான் முக்கியமாக என் உள்ளத்தின் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தார். உண்மையில் அவரைத்தான் என் தந்தை என்று கூறவேண்டும். தமிழ் உபாத்தியாயர் தர்மலிங்கம் அவர்களுக்கு நான் எவ்வளவோ கடமைப் பட்டிருக்கிறேன்.

ஸ்ரீ தர்மலிங்கம் அவர்கள் நல்ல சீலமுடையவர். அவருடைய நடை உடை பாவனைகள் எல்லாவற்றிலும்

அவருடைய ஒழுக்கமான வாழ்க்கை பிரதிபலிக்கும். வாக்குத் தவற மாட்டார். மகா மானி. மொத்தத்தில் என் தந்தைக்கு நேர் விரோதமானவர். இரைந்துகூடப் பேச மாட்டார். ஆனால், ஒரே ஒரு ஒற்றுமை. அதுதான் வறுமை. அவரையும் வறுமை வாட்டியது. பெரிய குடும்பம். குறைந்த வருமானம். ஒருவருடைய சம்பாத்தியத்தில், குழந்தைகள், வயதான தாய் தந்தையர், மனைவி, அவருடைய விதவைத் தங்கை இத்தனை பேர் காலம் தள்ள வேண்டும்.



எங்கள் பள்ளியில் ஒரு பையன், "வகுப்புக்கு ஒருவராக யார் வீட்டிலிருந்து வருகிறார்கள் ?" என்று கேட்டான்.

"தமிழ் வாத்தியார் வீட்டிலிருந்து" என டக்கென்று கேலியாகப் பதில் வந்தது. அவர் வீட்டிலிருந்த ஏழு பேரும் எங்கள் பள்ளியில்தான் படித்தார்கள். எட்டாவது பாஸ் பண்ணிய ஒரு பெண் மட்டும் வீட்டில் இருந்தாள். அவளுக்குக் கல்யாணம் செய்யவேண்டிய வயது.

நான் தமிழ் வாத்தியார் வீட்டுக்கு அடிக்கடி போவது வழக்கம். அவருடைய பிள்ளை காளமேகம் என் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான்.

அவனுடன் அவர்கள் வீட்டுக்குப் போவேன். அவன் தாயாரும் ரொம்ப நல்லவர்தான். ஆனால், கொஞ்சம் முன் கோபம் அதிகம். ஏழு குழந்தைகளை மேய்த்துப் பார்த்தால் அல்லவா அந்தக் கஷ்டம் தெரியும் ?

அவருக்கும் என்னிடம் பிரியம் உண்டு. நான் போகும் போதெல்லாம் எனக்குக் கையில் ஏதாவது பணியாரமோ, பக்ஷணமோ தருவார். இதனால் சில மாணவர்களின்

பொறுமைக்கு நான் ஆளாக நேர்ந்தது. நான் கஷ்டப் பட்டுப் படித்து மார்க் வாங்கினுல்கூட, "வாத்தியார் ஐயா சம்சாரம் மார்க் போடச் சொல்லியிருப்பாங்க" என்று பேசிக்கொள்வார்கள். ஆனுல், நான் அதைப் பொருட் படுத்துவதில்லே. உண்மை எனக்குத் தெரிந்திருக்கும் போது அவர்களிடம் சண்டை போடுவானேன் என்று பேசாமலிருந்து விடுவேன். அதிலும் என் தந்தையைப் போல் சண்டைக்காரன் என்று பெயர் வாங்கக் கூடா தென்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தேன். ஆகவே யாரேனும் சண்டைக்கு வந்தால்கூட நான் ஒதுங்கிப் போய்விடுவேன். இதனுல் எனக்குப் பள்ளிக்கூடத்தில் ரொம்ப நல்ல பெயர். உபாத்தியாயர்களுக்கெல்லாம் பணிவாக இருக்கிற பிள்ளேகளேத்தானே பிடிக்கும் ?

தமிழ் வாத்தியார் வீட்டுக்கு நான் சென்ற நேரங் களில் அவருக்கும் ஓய்வு நேரம் இருந்தால் என்னிடம் சில சமயம் பேசிக்கொண்டிருப்பார். எனக்குப் புத்திமதி சொல்லுவார்.

"உன் அப்பாவுக்கு இருக்கும் சாமர்த்தியத்துக்கு அதை நல்ல வழியில் செலுத்தினுல் எவ்வளவோ முன் னுக்கு வந்திருக்கலாம். ஆனுல், சீட்டாடுவதில் அவ னுடைய சாமர்த்தியம் செலவழிந்து போய்விட்டது. இனி மேல் அவனுல் திருந்த முடியாது. நீ அவனேப்போல் இருக்கவே இருக்காதே, ரங்கதுரை. அவனும் நல்லவன் தான். இந்தச் சீட்டாடும் வழக்கம் ஏற்படுவதற்கு முன்னுல் அவன் ரொம்ப முன்னுக்கு வருவான் என்று எண்ணியிருந்தேன். அநியாயமாய் வீணுய்ப் போய் விட்டான்" என்று கூறுவார்.

அதிகாலேயில் எழுந்து அவர் குளத்தில் ஸ்நானம் செய்துவிட்டுப் பூஜை செய்வார். எனக்கு அவரிடம் விவரிக்க முடியாத ஒரு பிரியமும், மரியாதையும் உண்டாகி

இருந்தன. அவர் மூலம்தான் நான் என் தந்தையைப் பற்றிப் பல விஷயங்கள் அறிந்துகொண்டேன்.

என் அன்னை என் தந்தையைப் பற்றிக் குறைவாகப் பேசவே மாட்டார். ஒரு தடவைகூட அவர் கோபித்துக் கொள்வதைப் பற்றியோ, பணம் கொடுக்காததைப் பற்றியோ என் காது கேட்கக் குறை சொன்னதே இல்லை.

ஆனால், தமிழ் வாத்தியார் வீட்டில் அவர் மனைவி எப்போதும் அவரை ஏதாவது சொல்லிக்கொண்டே இருப்பார். நான் போகும்போதெல்லாம் அவரிடம் ஏதேனும் குறைபட்டுக் கொண்டிருப்பார். " குழந்தைக்கு ஒரு நல்ல துணி இல்லை. கல்யாணம் பண்ணுகிற வயதாகிவிட்டது " என்பார். அல்லது, " நீங்கள் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைப்பதற்குள் பிள்ளையாருக்குக்கூடக் கல்யாண மாகிவிடும் " என்பார். ஆனால், இவற்றையெல்லாம் தமிழ் வாத்தியார் பொருட்படுத்தவே மாட்டார். காதில் விழாத மாதிரியே உட்கார்ந்திருப்பார். இந்த மாதிரிப் பேச்சுக்களை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன்.

ஒரு நாள் அவருடைய பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. மிகவும் பிரயாசைப்பட்டுக் கல்யாணம் நிச்சயித்திருந்தார் தமிழ் வாத்தியார். மாணவர்களாகிய எங்களுக்கெல்லாம் ஒரே உற்சாகம். ஊரில் கல்யாணம் என்றாலே உற்சாகமாக இருக்கும். அதிலும் வாத்தியார் வீட்டில் கல்யாணம் என்றால் சந்தோஷத்துக்குக் கேட்பானேன் ? ஆளுக்கு ஒரு வேலையாக இழுத்துப் போட்டுக் கொண்டு உற்சாகத்துடன் செய்தோம்.

கல்யாணத்திற்குப் பத்து நாட்களுக்கு முன்னால் நான் அவர் வீட்டுக்குப் போனேன். நான் சென்றபோது வாத்தியாரும் அவர் மனைவியும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

" எப்படித்தான் இந்தக் கல்யாணத்தைச் சமாளிக்கப் போகிறீர்களோ ? ஒரு சாமான் இல்லை. ஊரையெல்லாம்

அழைத்துச் சாப்பாடு போடாவிட்டாலும், சம்பந்திப் பேருக்காவது சாப்பாடு போடவேண்டுமோ இல்லையோ ? எப்போது வாங்கப் போகிறீர்கள் ? எப்படி வாங்கப் போகிறீர்கள் ? ஒன்றும் புரியவில்லையே ?" என்றார்.

அதற்கு அவர், " என்னை என்ன செய்யச் சொல்கிறாய் கமலம் ? கையில் பணமிருந்தால் என்ன வேண்டுமானாலும் வாங்கலாம். எனக்குக் கடன் கேட்க அவமானமாக இருக்கிறது. பள்ளிக்கூடத்தில் முன்பணம் கொடுக்கும்படி கேட்டேன். அவர்கள் கொடுக்க மறுத்து விட்டார்கள். நான் வேறு எங்கே கேட்பது ?" என்றார்.

அவர் குரலில் தொனித்த பரிதாபம் என்னை உருக்கியது. அவர் மனைவியின் கோபத்தை அதிகரித்தது.

" இப்படி என்னிடம் கூறினால் என்ன அர்த்தம் ? எப்படியாவது கல்யாணத்தை நடத்த வேண்டுமல்லவா ? வீட்டிலே உட்கார்ந்து வருத்தப்பட்டால் நடக்குமா ? எங்கேயாவது போய்ப் பணம் புரட்டிக் கொண்டு வாருங்கள். பந்தல்காரன் நாளைக்கு வருவான். அவனுக்குப் பணம் கொடுக்க வேண்டும் " என்று கோபமாகக் கூறினார்.

தமிழ் வாத்தியார் வெளியே வந்தார். தம் தடியை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். என்னைப் பார்க்கும் போதெல்லாம் சந்தோஷமாகப் பேசும் வழக்கமுள்ள அவர் அன்று என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க வில்லை. நேரே சென்றுவிட்டார். அவருடைய மனம் எவ்வளவு புண்ணாகியிருக்க வேண்டுமென்று அதிலிருந்தே தெரிந்தது.

அவர் சென்ற பிறகு நான் உள்ளே சென்றேன். வாத்தியாரின் மனைவி என்னைப் பார்த்ததும், " ரங்கா ! சரியான சமயத்தில்தான் வந்திருக்கிறாய். பரண்மீது ஏறி அங்கேஇருக்கும் பாத்திரங்களையெல்லாம் எடுத்துக் கொடுக்

கிருயா ?'' என்று கேட்டார். நானும் உடனே ஏறினேன். சாமான்களை எடுத்துக்கொண்டே பேச்சுக் கொடுத்தேன். கல்யாணத்தைப் பற்றித்தான் பேச்சு ஆரம்பித்தது.

அவர் கூறினர் : "உங்கள் வாத்தியார் செய்வது கொஞ்சமாவது சரியா இருக்கா ரங்கா! பெண்ணுக்குக் கல்யாணம் அவர் செய்ய வேண்டுமா? நான் செய்ய வேண்டுமா? கடன் கேட்க மாட்டேன், மானம்தான் முக்கியம் என்ருல் எனக்குக் கோபம் வராதா? நிச்சயமான கல்யாணம் நின்று போனல் அவமானமில்லையாக்கும் ?''

நான் சிறியவனுனலும் என்னிடமிருந்த அன்பினல் அவர் மனம் விட்டுப் பேசினர். எனக்கும் பணக் கஷ்டம் தெரிந்திருந்தபடியால் அவர்களுடைய பேச்சை நான் புரிந்து கொள்வேன் என்றும் தோன்றியிருக்கலாம்.

அப்போது எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அதை அவரிடம் கூறிக் கவலைப்பட வேண்டாமென்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். என் வகுப்பு மாணவர் களின் வீடுகளுக்கெல்லாம் சென்று அவர்களை அழைத்துக் கொண்டேன். எல்லோரும் சேர்ந்த பிறகு என் யோசனை யைக் கூறினேன். அல்லிக்குளம் மாந்தோப்பில் எங்கள் மகாநாடு நடந்தது. அனைவருக்கும் தமிழ் உபாத்தியாய ருடைய நிலைமையைக் கூறினேன். மாணவர்களுக்கு எப்போதுமே தமிழ் உபாத்தியாயரிடம் மதிப்பு அதிகம். மார்க்கு நான் நிறைய வாங்கும்போதுதான் பொருமைப் படுவார்களே தவிர மற்ற சமயங்களில் நான் சொல்வதைக் கேட்பார்கள்.

ஆகவே, நான் உபாத்தியாயர் வீட்டுக் கல்யாணத் துக்கு வேண்டிய சாமான்களை, அவரவர்கள் சக்திக்குத் தகுந்த முறையில் சேகரித்துக் கொடுக்க வேண்டும் என்று சொன்னதும் எல்லோருக்கும் உற்சாகமே உண்டாகி விட்டது.

“ எங்கள் வீட்டிலிருந்து நான் பூசணிக்காய் கொண்டு வருகிறேன் ” என்ருன் ஒருவன்.

“ எங்கள் வீட்டு மரத்திலிருந்து முருங்கக்காய் கொண்டு வருகிறேன் ” என்ருன் இன்னொருவன்.

“ எங்கப்பாவிடம் சொல்லித் தேங்காய் அனுப்புகிறேன் ” என்ருன் தென்னந்தோப்பு முதலியார் வீட்டுப் பையன்.

“ நான் மாலைகளும், புஷ்பங்களும் கொண்டு வருகிறேன் ” என்ருன் பூக்காரச் சிங்காரத்தின் புத்திரன்.

“ நான் அப்பாவிடம் சொல்லிப் பால், தயிர் கொண்டு வருகிறேன் ” என்ருன் பால்காரச் சடகோபனின் மகன்.

இப்படிப் பல சாமான்கள் சேகரிக்கத் திட்டமிட்டோம். எல்லாவற்றையும் நான் எழுதிக் கொண்டேன்.

பின்னர் என் வீட்டுக்குப் போனேன். ‘ நான் என்ன கொடுப்பது ?’ என்ற யோசனை என்னுடைய உள்ளத்தை மிகவும் வாட்டியது. வீட்டுக்குச் சென்றதும் எல்லா விவரங்களையும் அம்மாவிடம் கூறினேன்.

அம்மா உடனே, “ அரை மூட்டை அரிசி கொடுக்கலாம் ரங்கா. நானும் கல்யாணத்தில் சீர் வைக்க முறுக்குச் சுற்றித் தருகிறேன். இதை அவருக்குத் தெரியாமல் அவர் வீட்டு அம்மாளிடம் சொல்லிவிட்டு வா !” என்ருர்.

நான் சந்தோஷமாக ஓடினேன். நான் சென்ற போது தர்மலிங்கம் அவர்கள் வீட்டுக்கு வரவில்லை. ஆகவே, நான் அவர் மனைவியிடம் சென்று விஷயங்களைக் கூறினேன். அவர் முதலில் சந்தேகித்தார். என் அன்னை கூறியதைச் சொன்னதும் அவர் முகம் மலர்ந்தது.

“ பொன்னம்மாவின் குணத்துக்கு அவர் எவ்வளவோ சிறப்பாக இருக்கணும். அவளுடைய புண்ணியத்தால் நீ நன்ருக இருப்பாய் ” என்று மனமார வாழ்த்தினர்.

பிறகு நான், "இதை வாத்தியார் ஐயாகிட்டே சொல்லி விடாதீர்கள். அவர் கூடாதென்று சொல்லித் தடுத்துவிடுவார்" என்றேன்.

கல்யாணப் பந்தல் போடுவதற்குக்கூட மாணவர்களெல்லாம் உதவி செய்தோம். விவாகத்துக்கு முதல் நாள்தான் அவருக்கு விவரம் தெரியும். தேங்காயும், அரிசியும், புஷ்பமும், காய்கறிகளும் தாமாக வந்து சேர்ந்தன. அதைக் கண்டு அவர் பிரமித்துப் போய் விட்டார். எனக்கு அதைப் பார்த்தபோது என்ன களிப்பாக இருந்தது தெரியுமா?

இரண்டு நாட்களும் கல்யாண வீட்டில் வேலை செய்தோம். அப்போது கோடை விடுமுறையானபடியால் சௌகரியமாக இருந்தது.

கல்யாணம் முடிந்த பிறகு உபாத்தியாயரும், அவர் மனைவியும் என்னைக் கூப்பிட்டார்கள். ஒரு நல்ல வேஷ்டி பரிசளித்தார்கள். நான் வாங்கிக்கொள்ள மறுத்தேன். மற்ற நண்பர்கள் கேலி செய்வார்களோ என்ற பயம். பிறகு தட்ட முடியாமல் வாங்கி உடுத்திக்கொண்டு இருவருக்கும் நமஸ்கரித்தேன். உபாத்தியாயர், "நீ மேலும் மேலும் நன்றாகப் படித்து நல்ல உத்தியோகம் பார்த்து உன் தாயார் மனம் குளிரச் செய்யவேண்டும்" என்று ஆசீர்வதித்தார்.

அவரது மனைவி, "வாத்தியார் நல்ல ஆசீர்வாதமாகச் செய்துவிட்டார். அவர் சொல்லாததை நான் சொல்கிறேன். உனக்கு நல்ல குணவதியாக மனைவி கிடைப்பாள், ரங்கா" என்று பரிகாசமாகக் கூறினர். எனக்கு ஒரே வெட்கமாகப் போய்விட்டது. அங்கிருந்து ஓடியே போய் விட்டேன்.

அவருடைய வாக்கு பொய்க்காது என்று எனக்கு ரொம்ப நம்பிக்கை இருக்கிறது. என் இந்துவைவிட

நல்ல குணமுள்ள பெண் யாரேனும் இருக்க முடியுமா? இந்து எப்படியும் எனக்குக் கிடைத்துவிடுவாள் என்று தான் தோன்றுகிறது.

# 5. மனமாற்றம்

தமிழ் உபாத்தியாயர் வீட்டுக் கல்யாணம் முடிந்து ஐந்தாறு நாட்களுக்குப் பின் ஒரு நாள் எங்கள் வீடு ரணகளமாயிற்று. அன்றுதான் எனக்கு என் தாயின் மன உளைச்சல் தெரியவந்தது. பல நாட்களாக அடக்கி வைத்துக் கொண்டிருந்த தாபமெல்லாம் அன்று சீறிக் கொண்டு வெளிவந்தது. அவருக்கு அப்படி மிதமிஞ்சிய கோபம் வருவதற்கு நிறையக் காரணங்கள் இருந்தன. பூமி தேவிக்குக் கூட உள்ளே செந்தழலான அக்னிக் குழம்பு கொந்தளித்துக் கொண்டே இருக்கிறதல்லவா? ஒரு நாள் அது பேரதிர்ச்சியுடன் மோதி எல்லாத் தடைகளையும் தகர்த்தெறிந்துகொண்டு வெளியே கொட்டுகிறதல்லவா? அன்று என் அன்னை கிட்டத்தட்ட அந்த நிலையை அடைந்துவிட்டார்.

அன்றுதான் அந்த அக்னிக் குழம்பின் வேகமும், உஷ்ணமும் எனக்குத் தெரியவந்தன. அவரையே அந்த வெப்பம் கடுமையாகத் தகித்துவிட்டதென்று சொல்ல வேண்டும்.

என் தந்தை அன்று இரவு வழக்கம்போல் சீட்டாடி விட்டுச் சாப்பிட வந்தார். அவர் முகம் இருந்த அழகைப் பார்த்தபோதே இன்று ரொம்ப நஷ்டமென்று என் அன்னைக்குத் தெரிந்திருக்கும். வந்தவுடன் சாப்பிட உட்கார்ந்தார். என் அன்னை மத்தியானம் வடித்த சாதத்தை இலையில் வைத்தார். அது ஆறிப்போய் வரவரவென்று

காய்ந்து போயிருந்தது. சற்று முன்னல் நானும் அதைத் தான் சாப்பிட்டிருந்தேன்.

அந்தச் சாதத்தைக் கண்டதும் அவருக்கு ஒரே கோபம் வந்தது. அதை எடுத்து வீசி எறிந்தார். சமையல் அறை பூராவும் சாதம், வான வெளியில் இறைந்து கிடக்கும் நட்சத்திரங்களைப்போல் சிதறியது.

எனக்கு உடலெல்லாம் நடுங்க ஆரம்பித்து விட்டது. வழக்கம்போல் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்துக் கொள்ளக்கூடப் போக முடியவில்லை. மரம் மாதிரி நின்றேன்.

எறிந்த கையோடு எழுந்தார். திகைத்து நின்ற என் அன்னையின் அருகில் சென்று கன்னத்தில் ஓங்கி ஒரு அடி அடித்தார். "சோறு பொங்கி வைக்கக்கூட முடிய வில்லையா உனக்கு? இதை மனிதன் தின்ன முடியுமா?" என்று கத்தினர். இரவின் நிசப்தத்தில் அவருடைய ஆத்திரமான குரல் பயங்கரமாக ஒலித்தது.

என் அன்னையின் கண்கள் நீரைக் கக்கின. ஆத்திரம் தாங்காமல் நடுங்கிய குரலில், "வீட்டில் அரிசி இருந்தால் தானே சமைக்கலாம்?" என்ருர்.

"ஏன்? தர்மலிங்கம் வீட்டுக்குக் கொடுக்க இருந்ததோ? அருமைப் பிள்ளையின் குருவுக்குக் காணிக்கை செலுத்தி னீர்களே?" என்று இரைந்தார்.

அரிசி கொடுத்த விவரம் என் தந்தைக்கு முன்பே தெரியும். அப்போது ஒன்றும் சொல்லவில்லை. அவருடைய சுபாவமே அப்படி. ஏதாவது செய்யும்போது, அவருக்குப் பிடிக்காத விஷயமாயிருந்தால் சொல்ல மாட்டார். பிறகு எப்போதாவது சொல்லிக் காட்டி வதைத்து விடுவார். என் அன்னை அவருடன் எப்படித் தான் விவரம் தெரியாத பருவத்திலிருந்து வாழ்ந்து வந்தாரோ? அதை இறைவன்தான் அறிவார்.

என் அன்னையின் பதில் என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

" ஏன்? நீங்கள் சீட்டாடிச் சீட்டாடி இந்தக் குடும்பத்தைச் சீரழித்தது தவறில்லை. நான் அரை மூட்டை அரிசி தர்மலிங்க வாத்தியாருக்குக் கொடுத்ததினால்தான் நம் வீட்டுக்குத் தரித்திரம் வந்துவிட்டதோ?" என்றார்.

" வாயை மூடு. இல்லாவிட்டால் கொன்று விடுவேன்!"

" குற்றமுள்ள நெஞ்சு உங்களை உறுத்துவதனால் தான், என்னைக் கொல்லவேண்டுமென்று தோன்றுகிறது. நான் சொன்னதில் என்ன தவறு என்று நாலு பேரைக் கூட்டி நியாயம் கேளுங்கள். உங்களைப் பார்த்து ஊரெல்லாம் சிரிக்கிறது. எங்கே பார்த்தாலும் கடன். அது உங்களுக்கு அவமானமாக இல்லையா? நான் எனக்காகவா சொல்கிறேன்? நான் நேற்று சாதம் வேண்டுமானாலும் சாப்பிடுவேன். சாப்பிடாமலேயே இருந்தாலும் இருப்பேன். உங்களுக்குத்தானே இரண்டு வேளையும் சுடுகிற சாதம் வேண்டியிருக்கிறது?" என்றார்.

என் தந்தையின் கோபம் எல்லை கடந்துவிட்டது. என் அன்னையைப் பிடித்துத் தள்ளினார். அவருடைய தலை சுவரில் மோதியது.

" என்னைக் கொன்று உங்களுக்கு என்ன பிரயோஜனம்? கொஞ்சம் நின்று யோசித்துப் பாருங்கள். இன்று முதல் சீட்டாடுவதை நிறுத்திவிடுங்கள். நான் எப்படியாவது எல்லாக் கடனையும் அடைத்து விடுகிறேன். மறுபடியும் மானமாய் இந்த ஊரில் வாழலாம்" என்றார்.

என் தந்தையின் உடல் நடுங்கிற்று. பக்கத்தில் தொங்கிய குடையைக் கையில் எடுத்துக்கொண்டார். ' ஐயோ! அம்மாவைக் குடையினால் அடிக்கப்

போகிறாரா ?'— இந்த எண்ணம் எனக்கு என்றுமில்லாத



தைரியத்தை அளித்தது. ஓடிச் சென்று அப்பாவின் முன் நின்றேன். என்னைக் கண்டதும் அவர் நின்றார். என்ன தோன்றியதோ தெரியவில்லை. குடையை ஒரு மூலையில் வீசி விட்டு வேகமாக வெளியே போய்விட்டார். நான் நின்ற இடத்திலேயே தடாலென்று உட்கார்ந்தேன்.

அதன்பிறகு என் தந்தை ஐந்தாறு நாட்கள் வீட்டுக்கு வரவில்லை. என் அன்னை அப்போது பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. 'அவர் ஓடிப் போய் விட்டாரோ ? திரும்பி வரவே மாட்டாரோ ?' என்ற நினைப்பு அவர் மனத்தைப் பிழிந்து எடுத்துவிட்டது.

" துரை, அப்பா எங்கேயாவது இருக்காரா என்று தேடிப் பாரேன். அவருடைய சிநேகிதர்களிடமெல்லாம் விசாரியேன் " என்று என்னை ஏவிக்கொண்டே இருந்தார். நான் ஊர் முழுதும் பத்துத் தடவை சுற்றி அலைந்தும் அவரைப் பற்றிய சமாசாரம் யாருக்கும் தெரியவில்லை.

" நான் எப்போதும் போல் வாயை மூடிக் கொண்டு இருந்திருக்கக் கூடாதா ? ஏன் வாதாடினேன் ? ஈசுவரா ! அவரை இந்தத் தடவை கொண்டு வந்து சேர்த்துவிடு. பிறகு என்ன செய்தாலும் பேசமாட்டேன். அவர் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தால் போதும் " என்றெல்லாம் புலம்பிக்கொண்டே இருந்தார்.

இப்போது எண்ணிப் பார்த்தால் எனக்கு ரொம்ப வியப்பாக இருக்கிறது. அவருடைய உள்ளம் எப்பேர்ப்

பட்டது ? தன்னை இவ்வளவு பாடுபடுத்திய ஒரு மனித ரிடம் எவ்வாறு இத்தனை அன்பு இருக்க முடியும்? அன்பே இல்லாத பாலைவனம் போன்ற ஒரு மனிதனிடம் எப்படி அன்பு வைக்க முடியும் ?

மனோதத்துவத்தை ஆராயும் எண்ணத்துடன் பார்க்கும்போது இதைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. இது என்ன அன்பு ? எப்படி உண்டாயிற்று ? அவர் அவ்வளவு கொடுமைப்படுத்தியும் மாறுமலிருந்த காரணம் என்ன ? இவையெல்லாம் எண்ணத்துக்கு அப்பாற் பட்டதாக இருக்கின்றன.

அழகோ, குணமோ, பணமோ, திறமையோ, அன்போ ஒன்றுமே இல்லாதவரை, அவர் மனைவி எதற்காக இவ்வளவு நேசித்தாள் என்பது புரியவே இல்லை.

அதை நினைக்கும்போது நான் இந்துமதியிடம் வைத் திருக்கும் அன்பு ஒன்றுமே இல்லை எனத் தோன்றுகிறது. இந்துவுக்கு அழகு இருக்கிறது. நல்ல குணம் இருக் கிறது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பளிங்கு போன்ற உள்ளம் இருக்கிறது. அன்பு சொட்டும் இதயம் இருக் கிறது. கூர்மையான அறிவு இருக்கிறது. கலையுள்ளமும், திறமையும் இருக்கின்றன. அவள் திறமையைப் பற்றி எனக்கு முதலில் தெரிந்திருக்கவில்லையானாலும், மற்றவை யெல்லாம் தெரிந்துதானே இருந்தன.

உண்மையில் அப்படியா ? இந்துவிடம் அழகும், புத்திசாலித்தனமும், திறமையும் இல்லாவிட்டால் நான் நேசித்திருக்க மாட்டேனா ?

இல்லை ! அப்படி இல்லை ! இந்துவிடம் எனக்கு ஏற்பட்ட அன்புக்கு இதெல்லாம் மூலகாரணமில்லை. இதையெல்லாம் நான் உணர்கிறேன், அனுபவிக்கிறேன் என்பது உண்மைதான். ஆனால், அதனால்தான் ஏற் பட்டது என்று சொல்ல முடியாது.

இது வேறு ஏதோ உள்ளத்துக்குப் புலப்படாத காரணத்தினால் எழுந்தது. ஆத்மாவின் விழிப்பினால் ஏற்பட்ட அன்பு, ஒவ்வொரு ஆத்மாவும் தன்னோடு ஐக்கியமாகி விடக்கூடிய இன்னொரு ஆத்மாவைத் தேடிக் கொண்டே இருக்கிறது. எத்தனையோ பேரிடம் அது ஐக்கியமாக முயற்சிக்கிறது. கடைசியில் திடீரென்று ஒரு நாள், பார்த்த உடனே, "இந்த ஆத்மாதான் என்னுடன் ஐக்கியமாகக் கூடிய ஆத்மா" என அறிந்து கொள்கிறது. அந்த நிமிஷத்தில்தான் ஆத்மாவுக்கு விழிப்பு ஏற்படுகிறது. அந்தப் புதிய அனுபவத்தினால் அகம்பாவம் என்கிற நிழல் அதன் மீதிருந்து விலகி, ஆத்மா பரிசுத்தமடைகிறது.

எனக்கு இந்துவிடம் உள்ள அன்பு இத்தகையது என்றே எண்ணுகிறேன். இது மனங்களின் கலப்பு மட்டும் அல்ல. ஆத்மாக்களின் கலப்பு என்றே தோன்றுகிறது. இந்த அனுபவத்தை அடைந்தவன்தான் மனிதன் என்று எனக்குத் தோன்றுகிறது.

என் தந்தை ஆறு நாட்களுக்குப் பிறகு திரும்பி வந்தார். அவரைப் பார்த்தபோதே, பெரிய வித்தியாசம் தெரிந்தது. முகம் மாறியிருப்பதைப் போலவே மனமும் மாறியிருந்ததென்று சிறிது நேரத்தில் தெரிந்தது.

அவர் உள்ளே வந்ததும் என் அன்னை பேசாமல் இலை போட்டார். இலையின் முன் சாப்பிட உட்கார்ந்தவர், சாதம் பரிமாறியதும், குழந்தை மாதிரி கண்ணீர் விட்டு அழுதார். என் அன்னையின் கண்களிலிருந்தும் நீர் சொரிந்தது. நானும் அழுதேன். மூன்று பேருடைய கண்ணீரும் ஒன்றாகக் கலந்து எங்கள் உள்ளங்களையும் கலக்கச் செய்தன.

ஒருவாறு சாப்பிட்டு முடிந்த பிறகு என் தந்தை என்னைப் பார்த்து, "ரங்கா! நீ போய் விளையாடு"

என்று அனுப்பினர். நான் அவருடைய குரலில் தொனித்த பரிவைக் கண்டு வியந்தேன். அதட்டியே பேசி வழக்கமான அவர் அப்படிப் பேசியது விநோதமாகக் கூட இருந்தது.

நான் படபடக்கும் உள்ளத்துடன் ஒரு புத்தகத்தை எடுத்துக்கொண்டு அல்லிக் குளத்துக்குப் போய்விட்டேன். அங்கு சென்று உட்கார்ந்ததும் தமிழ் வாத்தியாரின் நினைவு வந்தது. உடனே, தலைதெறிக்க அவர் வீட்டுக்கு ஓடினேன். அவரைப் பார்த்து அப்பா என்னிடம் பரிவாகப் பேசியதைச் சொல்ல வேண்டுமென்று நெஞ்சம் பறந்தது. இரைக்க இரைக்க நான் ஓடி வந்ததைப் பார்த்ததும் முதலில் அவர் மிகவும் பயந்தே போய் விட்டார்.

"என்ன ரங்கா ? என்ன ஆயிற்று ?" என்று கேட்டார்.

"அப்பா வந்து விட்டார். அம்மாவோடு பேசிக் கொண்டிருக்கிறார்" என்று கூறினேன்.

அவர் அப்போதும் ஏதோ சண்டை நடக்கிறதென்று நினைத்துக்கொண்டு, "ரொம்ப சத்தம் போடுகிறாரா ?" என்று கவலையுடன் கேட்டார்.

அதன் பிறகு நான் நிதானித்துக் கொண்டு விஷயங்களைச் சொன்னேன். அப்பா அழுதார் என்று நான் கூறியதும், "அவன், அழுதானா ? அப்படியானால் நிஜமாகவே இனிமேல் மாறிவிடுவான். அவனுக்குக் கண்ணீர் சுரக்கும் கோளங்களே இல்லை என்று இதுவரை எண்ணியிருந்தேன். இப்போது அது சரியாக வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. இனிமேல் அவன் ஒழுங்காக இருப்பான், பார் !" என்று கூறினர்.

என் மனமும் அமைதியடைந்தது. ஆனால், இந்த அமைதியை நீடிக்க விடாமல் மிராசுதார் ஈசுவரமூர்த்தி எங்கள் வாழ்க்கையில் வந்து குறுக்கிட்டு விட்டார்.

# 6. பிரார்த்தனை நிறைவேறியது!

தமிழ் வாத்தியார் வீட்டிலிருந்து நான் திரும்பி வந்தபோது, நன்றாக இருட்டிவிட்டது. வீட்டில் நிசப்தம் குடிகொண்டிருந்தது. மெதுவாகத் தலையை மட்டும் நீட்டிப் பார்த்தேன். அப்பா படுத்துக்கொண்டிருந்தார். இருளாக இருந்ததால் அவர் தூங்குகிறாரா, விழித்துக்கொண்டிருக்கிறாரா என்று தெரியவில்லை. அடிமேல் அடி வைத்துப் பூனை மாதிரி கூடத்தைக் கடந்து சமையலறைக்குள் புகுந்தேன்.

ஸ்வாமி படத்தருகில் விளக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. என் அன்னை கூப்பிய கரங்களுடன் அதற்கு எதிரில் உட்கார்ந்திருந்தார். அவர் கண்கள் மூடியிருந்தன. அவரைப் பார்த்ததும் என் நெஞ்சத்தில் விவரிக்க ஒண்ணாத சாந்தி நிலவியது. நானும் அவருக்கு அருகில் உட்கார்ந்து குவிந்த கரங்களுடன், " அப்பா இன்று மாதிரியே இருக்கவேண்டும், ஸ்வாமி " என்று பிரார்த்தித்தேன். என் அன்னை என்னைச் சேர்த்து அணைத்துக்கொண்டு, " துரை! இன்றுதான் என் பிரார்த்தனை நிறைவேறிற்றடா கண்ணு! இனிமேல் கவலையே இல்லையடா " என்று கூறினார்.

அப்பா என்ன சொன்னாரென்று கேட்க விரும்பினேன். ஆனால், அவர் கூடத்திலிருந்தபடியால் அதைக் கேட்கவில்லை.

அம்மா என்னைக் கூடத்தில் போய்ப் படுத்துக்கொண்டு தூங்கச் சொன்னாள். நான் மறுத்தேன். எனக்கு என்னமோ அவரிடம் பயம், போகவில்லை. அந்த இடத்திலேயே அம்மாவின் மடியில் தலையை வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டேன். அவர் என் தலையைக் கோதிக்



கொண்டே உட்கார்ந்திருந்தார். அவர் மனத்தில் என்னென்ன சிந்தனைகள் எழும்பித் தணிந்தனவோ? சற்று நேரத்தில் நித்திராதேவியின் பிடியில் சிக்கிக் கொண்டேன்.

மறுநாள் காலை நான் எழுந்தபோது அப்பாவைக் காணவில்லை. எனக்கு மறுபடியும் பயமாக இருந்தது. தயக்கத்துடன் அம்மாவிடம் சென்று, "அப்பா எங்கே?" என்று கேட்டேன்.

என் தாயார் வெகு நாட்களுக்குப் பின் வாய்விட்டுச் சிரித்தார். என் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்தார். எனக்கு ஒரே வெட்கமாகப் போய்விட்டது. அந்த மாதிரி என் அன்னை கொஞ்சி ரொம்ப நாளாகிவிட்டிருந்தது. நான் பெரியவன் என்ற எண்ணம் வேறு எனக்கு அப்போது ஏற்பட்டிருந்தது. இன்னொரு சமயமாக இருந்திருந்தால் அதற்காகச் சண்டை பிடித்திருப்பேன். இன்று அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. மறுபடியும், "அப்பா எங்கே போயிருக்கிறார்?" என்று என் அன்னையிடம் கேட்டேன்.

"விடியற்காலையிலேயே வயலுக்குப் போய்விட்டார். நீ அவருக்குப் பலகாரம் கொடுத்துவிட்டு வருகிறாயா?" என்று கேட்டார்.

நான் சரியென்று தலையசைத்தேன். பிறகு அவர் சுடச் சுடச் செய்து கொடுத்த இடியாப்பத்தைத் தேங்காய்ப் பாலுடன் சாப்பிட்டுவிட்டு, அப்பாவுக்கு எடுத்துச் சென்றேன். மனம் திக்குத் திக்கென்று அடித்துக்கொண்டது. 'அவர் ஏதாவது கேட்டால் பேசவேண்டுமே? என்ன பேசுவது?' என்றெல்லாம் யோசித்தவாறு சென்றேன். அவரிடம் பேசுவது என்பதை எண்ணும்போதே எனக்குக் கூச்சமாக இருந்தது. இப்படி யோசித்துக்கொண்டே குத்தகை நிலத்துக்குச் சென்றுவிட்டேன்.

அப்போது அறுவடை காலம். எல்லாப் பயிர்களும் கதிர்கள் முற்றிச் சாய்ந்திருந்தன. கிளிகளும், மரங் கொத்திகளும், புருக்களும், மைனுக் குருவிகளும் கூட்டம் கூட்டமாகச் சுறுசுறுப்பாக வேலை செய்துகொண்டிருந்தன. அறுவடையாகி விட்டால் இவ்வளவு தானியம் நமக்குக் கிடைக்குமா என்ற பயத்நால் அவை அவ்வளவு வேக மாகப் பயிர்களைக் கொத்துவதுபோலத் தோன்றியது. சற்றுத் தூரத்திலிருக்கும்போது ஒரு பட்சி இருப்பதுகூடக் கண்ணுக்குத் தெரியாது. ஒரு சிறு கல்லை விட்டெறிந் தால் உடனே நூற்றுக் கணக்கான பட்சிகள் ஆகாயத்தில் எழும்பிப் பறக்கும். நீல நிர்மலமான வானத்தில் அவை பறப்பதுதான் எத்தனை அழகு? இவைகளை வேடிக்கை பார்த்துக்கொண்டே குத்தகை நிலத்தை நெருங்கினேன்.

வயலில் நெல் அறுவடையாகிக் கொண்டிருந்தது. சிலர் அறுவடை செய்துகொண்டிருந்தனர். சிலர் போர் அடித்துக் கொண்டிருந்தார்கள். சில பெண்கள் நெல்லைத் தூற்றிக்கொண்டிருந்தார்கள். என்னை பார்த்ததும் என் தந்தை அரிவாளைக் கீழே போட்டுவிட்டு வந்தார்.

நான் மௌனமாகப் பாத்திரங்களை அவரிடம் கொடுத் தேன். அங்கே இருந்த ஆலமரத்தடியில் துண்டை விரித்துகொண்டு உட்கார்ந்தார். அவரைப் பார்க்காமல் நான் போரடிப்பதைக் கவனித்துக்கொண்டு நின்றேன்.

" ரங்கா ! உனக்குப் பள்ளிக்கூடம் திறக்க இன்னும் எத்தனை நாள் இருக்கிறது?" என்று அவரே கேட்டார்.

" இன்னும் பதினைந்து நாட்கள் இருக்கின்றன " என்றேன்.

" அப்படியானால் நீயும் தினம் காலையில் என்னோடு இங்கு வந்து விடேன். நெல் அளப்பதற்கும், மூட்டை கட்டுவதற்கும் மிகவும் சௌகரியமாக இருக்கும் " என்றார்.

அப்போதுதான் நான் அவர் முகத்தைப் பார்த்தேன். எப்போதும் நான் பார்த்திருந்த முகம்தான். ஆனால், அதில் கடுமையில்லை. நான் உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டேன். வாய் மாத்திரம், " வருகிறேனே " என்று முணுமுணுத்தது. அவரை ஏறிட்டுப் பார்த்தே வழக்க மில்லாதபடியால் ஏதோ மாதிரி இருந்தது.

அவர் என்னிடம் பிரியமாகப் பேச விரும்பினார் போலும் !

" ஏன் ரங்கா நிற்கிறாய் ? உட்காரேன் " என்றார்.

நான் அதற்கும் பதில் சொல்லாமல் உட்கார்ந்தேன்.

" இடியாப்பம் நீ சாப்பிடுகிறாயா ?"

" வீட்டிலேயே சாப்பிட்டுவிட்டேன்" என்று தலையைக் குனிந்துகொண்டே மெதுவாகக் கூறினேன்.

" ஏன் ரங்கா, சரியாகவே பேசமாட்டேனென்கிறாய் ?"

" ஒன்றுமில்லையே !" என்றேன். ஆனால், கண்களில் நீர் ததும்பிற்று. ஏனென்றே புரியவில்லை.

" என்மேல் கோபமா ?"

" இல்லை."

" ரங்கா ! எனக்குத் தெரியும். உனக்கு நான் கோபித்துக் கொள்வேன் என்று பயம். அப்படித்தானே ?"

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. எதையாவது சொல்லிக் கோபத்தை வரவழைத்து விடக்கூடாதே என்று நிஜமாகவே பயமாக இருந்தது.

" உனக்கு என்னைப் பிடிக்கவில்லையா ?" என்று கேட்டார்.

" பிடிக்கிறதே " என்றேன். ஆனால் என் குரலில் உணர்ச்சியே இல்லை. பயந்து கொண்டு சொல்கிறேன் என்று அவர் நினைத்திருக்கலாம். உண்மையில் அவரை எனக்குப் பிடித்திருக்கிறதா இல்லையா என்பது எனக்கே

தெரியவில்லை. நான் அதைப் பற்றிச் சிந்தனை செய்ததே கிடையாதே. அப்பா கோபக்காரர் என்பதுதான் எனக்குத் தெரியும். அதற்குமேல் நான் அவரைப் பற்றி என்றும் நினைத்ததில்லை.

என் தந்தையுடன் நான் அன்றுதான் தொடர்ந்து அத்தனை வார்த்தைகள் பேசினேன். ஆகையால் தவறு செய்தவனைப்போல் நெஞ்சம் படபடவென்று அடித்துக் கொண்டது.

என் தந்தை, " ரங்கா ! எழுந்து வந்து இப்படி என் பக்கத்தில் உட்கார்ந்து கொள் " என்றார்.

எனக்குப் பயமாகவும், சங்கோஜமாகவும் இருந்தது. ஆயினும் அவர் சொன்னதைத் தட்ட விரும்பவில்லை. தயக்கத்துடன் எழுந்து அவர் பக்கத்தில் சென்று உட்கார்ந்தேன். ' ஐயோ ! முகம் அசடு வழிகிறது போலிருக்கிறதே' என்று வேறு தோன்றி என்னை ரொம்பச் சங்கடப் படுத்தியது.

அவர் அருகில் உட்கார்ந்ததும் இடது கையால் என்னை அணைத்துக்கொண்டு, " ரங்கதுரை ! நான் இனிமேல் உன்னைக் கோபித்துக் கொள்ளவே மாட்டேன். நீ பார்த்துக்கொண்டே இரு. அம்மாவையும் கோபித்துக்கொள்ள மாட்டேன். நீ இனிமேல் என்னிடம் பேசுகிறாயா ?" என்று கனிந்த குரலில் கேட்டார். அந்த நிமிஷத்தில்தான் என் தந்தையை நான் உண்மையில் தந்தையென்று எண்ணினேன். அதற்குப் பிறகு அவருடன் சகஜமாகப் பேசிப் பழக ஆரம்பித்தேன். அவரும் அதை விரும்பியதாகவே தோன்றிற்று. அடிக்கடி என்னிடம் பேசிக்கொண்டு கலகலப்பாக இருந்தார். எங்கள் வீட்டில்கூட சிரிப்பொலி கேட்க ஆரம்பித்தது. எல்லோரையும்விட அதைக் கண்டு என் தமிழ் வாத்தியார்தான் ரொம்ப சந்தோஷப்பட்டார்.

வயலில் அறுவடை முடிந்தது நான் என் தந்தைக்கு மிகவும் உதவியாக இருந்தேன். அந்த வருஷம் சுமாராக விளைந்திருந்தது.

பள்ளிக்கூடம் திறப்பதற்கு முதல் நாள் என் தந்தை எனக்கு இரண்டு புதிய சட்டைகளும், வேஷ்டிகளும் வாங்கி வந்தார். என் அன்னைக்கு ஒரு சேலையும் வாங்கிக் கொண்டு வந்தார். என் அன்னைக்கு ஆனந்தக் கண்ணீரே வந்துவிட்டது. நானும் ரொம்ப மகிழ்ச்சி அடைந்தேன். பள்ளிக்கூடத்துக்கு நல்ல துணிகள் அணிந்து செல்ல ஆசைப்பட்டது என் மனம்.

பள்ளிக்கூடம் திறந்து ஒரு வாரம் ஆயிற்று. என் தந்தையே முன் வந்து எனக்குப் புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தார். பள்ளிக்கூடத்தில் எனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்திருந்தபடியால் புத்தகம் மட்டும்தான் வாங்கவேண்டியிருந்தது. எனக்கு ஒரே ஆனந்தம். புத்தகங்களைத் தொட்டுப் பார்ப்பதும், அட்டை போடுவதும், பிரித்துப் பார்ப்பதுமாக நேரம் கழித்தேன்.

என் தந்தை வீட்டைவிட்டு அதிகமாய் வெளியில் செல்வதில்லை. சென்றாலும் குத்தகை நிலங்களுக்குப் போய்விட்டு நேரே வீடு திரும்பி விடுவார்.

அல்லிக்குளத்தில் நடந்த கோயில் உற்சவத்தில்கூட அவர் உற்சாகமாகக் கலந்து கொண்டார். அவருடைய நடையுடை பாவனைகளின் மாறுதலைக் கண்டு அல்லிக் குளமே வியந்தது.

யார் செய்த தீவினையோ ? என் தந்தை, என்னிடம் திடீரென்று சோனை மழையைப்போல் அன்பைப் பொழிந் தவர், ஒரு நாள் போலீஸாரிடம் சிறைப்பட நேர்ந்தது.

# 7. எதிர்பாராத செய்தி

அறுவடையாகி நெல் மூட்டைகள் வீட்டுக்கு வந்து விட்டன. விற்கக்கூடியவற்றை விற்றுவிட்டார் என் தந்தை. சில நாட்கள் நிம்மதியாக இருந்தவர் ஒரு நாள் மாலை கவலையுடன் காணப்பட்டார். நான் பாடம் படித்துக் கொண்டிருந்தேன்.

அப்போது என் அன்னை அங்கு வந்து, "ஏன் கவலையாக இருக்கிறீர்கள் ?" என்று கேட்டார்.

என்னால் மேலே படிக்க முடியவில்லை.

அப்பா, "குத்தகைப் பணம் செலுத்தவேண்டுமே, மிராசுதார் கடிதம் எழுதியிருக்கிறார். உடனே என்னைப் பணத்துடன் வரச் சொல்லியிருக்கிறார்" என்று கூறினார்.

"எவ்வளவு கொடுக்க வேண்டும் ?"

"நிறையக் கொடுக்க வேண்டும் !"

"தொகையைச் சொல்லுங்களேன்."

"ஐந்நூறு ரூபாய் இந்த வருஷமும், முந்நூறு ரூபாய் போன வருஷ பாக்கியும் சேர்த்து எண்ணூறு ரூபாய் கொடுக்கவேண்டும். அவ்வளவு ரூபாய்க்கு நாம் எங்கே போவது ?"

"இவ்வளவு இருக்கும்போதா புதுத் துணிகள் வாங்கினீர்கள் ?"

"அதனால்தான் குறைந்துவிட்டதாக்கும். அது இருபத்தைந்து ரூபாய்கூட ஆகவில்லை !"

"இப்போது எவ்வளவு இருக்கிறது ?"

"நெல் விற்று வந்த பணம் நானூறு ரூபாய்தான் இருக்கிறது. இதோ பாக்கி இருப்பதையும் விற்றால் இன்னும் நூற்றைம்பது ரூபாய் வரலாம்."

“இதையும் சீக்கிரமாக விற்றுவிட்டு, உடனே கொண்டுபோய் மிராசுதாரிடம் கொடுத்துவிட்டு வாருங்கள். மீதிப் பணம் சீக்கிரத்தில் தருவதாகச் சொல்லிவிட்டு வாருங்கள்.”

“இருப்பதையும் விற்றுவிட்டால் நாம் வருஷம் முழுவதும் என்ன செய்வது? விதைக்கும் நெல் வேண்டுமல்லவா? மீதி இந்த நானூறு ரூபாயைக் கொடுத்தால் இந்த வருஷம் ஒப்புக்கொள்வானா? மனுஷன் அப்படியே எஃகுமாதிரி இருப்பானே! என்னைப் பாடாய்ப் படுத்தி விடுவான். அடுத்த வருஷம் என்னிடம் குத்தகைக்கு விடமாட்டான்.” என் தந்தையின் குரல் கம்பியது.

இன்னொரு ஸ்திரீயாக இருந்தால், “அதற்கு நீங்கள் தானே காரணம்?” என்று குத்திக் காட்டியிருப்பாள். என் அன்னை அவற்றை அடியோடு மறந்துவிட்டதாகத் தோன்றியது.

“அதற்காக இப்போதே கவலைப்படாதீர்கள். நமக்கும் நல்ல காலம் வரும். ரங்கன் இருக்கிறான். அவனுடைய அதிர்ஷ்டத்தினால் நாமும் சந்தோஷமாக இருக்கப் போகிறோம்” என்றாள்.

என் தந்தை சிரித்தார். “ஆமாம்! நான்கூட ரங்க துரையின் அதிர்ஷ்டத்தைத்தான் நம்பியிருக்கிறேன்” என்று கூறினார்.

“சரி. ஆகவேண்டிய காரியத்தைப் பாருங்கள். நாளைக்குள் இருப்பதை விற்க முயற்சி செய்யுங்கள். எப்படியாவது மிராசுதாரை இதற்குச் சம்மதிக்க வைக்க வேண்டும். இங்கே சில்லறைக் கடனாளிகளுக்கு வேறு பதில் சொல்லியாக வேண்டும்” என்றாள் என் அன்னை.

மறுநாள் அவர் மிராசுதாரைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றார். மூன்று நாட்கள் ஒன்றும் சமாசாரம் தெரியவில்லை. நான்காம் நாள் அவரிடமிருந்து கடிதம் வந்தது.

திருநந்திபுரத்திலிருந்து எழுதியிருந்தார். மிராசுதார் ஈசுவரமூர்த்தி ரொம்பக் கண்டிப்பாக இருப்பதாகவும், பணம் முழுவதையும் கொடுத்தால்தான் வாங்கிக் கொள்வே னென்கிறார் என்றும், இன்னும் நான்கைந்து நாட்கள் இருந்து ஒருவாறு சரிப்படுத்தி விட்டு வருவதாகவும் எழுதி யிருந்தார். என் அன்னைக்கு நான் அதைப் படித்துக் காட்டியதும் ரொம்பக் கவலையாகப் போய்விட்டது.

“இங்கு வேறு கடன் இருக்கிறதே. நெல் விற்றாகி விட்டது என்று தெரிந்ததும் இங்குள்ளவர்கள் வேறு வந்து கேட்க ஆரம்பித்துவிட்டார்கள். என்னதான் செய்யப் போகிறேமோ தெரியவில்லை. மிராசுதார் அந்த நிலத்தை மறுபடியும் குத்தகைக்கு விடாவிட்டால் என்ன செய்வது ?” என்று புலம்பினார்.

மறுபடியும் மூன்று நாட்கள் கழித்து ஒரு கடிதம் வந்தது. அதில், ‘மிராசுதார் வழிக்கு வந்துவிடுவார் போலிருக்கிறது. சீக்கிரம் வந்துவிடுகிறேன்’ என்று எழுதியிருந்தார்.

என் அன்னைக்குச் சற்று மனம் சமாதானமாயிற்று. ஆனாலும் அவரைப் புதிய பயம் ஒன்று பிடித்துக் கொண்டது. அதை அவர் என்னிடம் சொல்லவில்லை. ஆனால், எனக்குத் தெரிந்து போயிற்று. ஏனெனில் எனக்கும் அதே மாதிரி எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருந்தன.

மறுபடியும் ஒரு வேளை சீட்டுப் பயித்தியம் பிடித்து விட்டதோ ? அங்கு போய் யாருடைய தூண்டுதலினாலாவது மறுபடியும் ஆடத் தொடங்கி விட்டாரோ என்ற பயம்தான் அது. என் அன்னையும் இதேமாதிரி கவலைப் படுகிறாரென்று தற்செயலாகத் தெரிந்துகொண்டேன். அம்மா சுவாமியின் படத்துக்கு முன்னால் நின்று கொண்டிருந்தபோது நான் உள்ளே சென்றேன்.

கண்களை மூடியவாறே, "ஷண்முகா! உன்னைத் தவிர எனக்குக் கதியில்லை. நீதான் அவரை மறுபடியும் அந்தப் படுகுழியில் விழாமல் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிக்கொண்டிருந்தார்.

நான் வந்த சுவடே தெரியாமல் வெளியே வந்து விட்டேன். நானும் இறைவனைப் பிரார்த்தித்தேன்.

அதன் பிறகு எனக்குப் பிறந்த நாள் வந்தது. என் அன்னை என்னை விடியற்காலையில் எழுப்பி எண்ணெய் தேய்த்துக் கொள்ளச் சொன்னார். என்னைக் கோயிலுக்குப் போய்விட்டு வரச் சொன்னார்.

நானும் அர்ச்சனைக்கு வேண்டிய சாமான்களுடன் கோயிலுக்குச் சென்றேன். அர்ச்சனை முடிந்தவுடன் பிள்ளையார் சந்நிதிக்குச் சென்று நூற்றிஎட்டு தோப்புக் கரணம் போட்டுவிட்டு, தர்மலிங்கம் வாத்தியார் வீட்டுக்குப் போனேன். அன்றும் ஏதோ காரணத்தால் விடுமுறை. வாத்தியார் ஐயாவுக்கு சாஷ்டாங்கமாய்த் தரையில் விழுந்து நமஸ்காரம் செய்தேன். பிறகு கோயில் பிர சாதத்தைக் கொடுத்தேன். விபூதியை அவர் தம் கையால் எனக்கு நெற்றியில் இட்டு ஆசி கூறினார்.

பிறகு, "என் ரங்கா, உன் அப்பாவிடமிருந்து கடிதம் வந்ததா?" என்று கேட்டார்.

"வந்தது ஸார்! மிராசுதார் முழுப் பணத்தையும் கொடுத்துவிட வேண்டுமென்று வம்பு செய்கிறாராம். அதனால்தான் நாளாகிறது என்று எழுதியிருக்கிறார், ஸார்!"

"அப்படியா? மறுபடியும் ஏதாவது சீட்டு கீட்டு ஆட ஆரம்பித்து விடாமல் இருக்கவேண்டும். அது பொல்லாத வழக்கம். விடுவது சுலபமான விஷயமல்ல?" என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. எல்லாருக்கும் ஒரே மாதிரி தோன்றுகிறதே என்று வியந்தேன். நான்

நினைத்ததைக் கூருமல், "அம்மாகூட நேற்று பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார் ஸார்" என்று கூறினேன்.

"இல்லை ரங்கா. உன் அப்பா இப்போது சீட்டாடு கிருர் என்று நான் சொல்லவில்லை. அப்படி இருக்காது என்றுதான் தோன்றுகிறது. இந்த மாதிரி மனிதர்கள் மனம் மாறி நல்வழிப் படும்பொழுது எப்போதும் ஒழுங் கான வாழ்க்கை நடத்துபவர்களைவிட இன்னும் ஒரு படி மேலாகவே இருப்பார்கள். இதில் ஈடுபடாமலேயே வாழ்ந் தவர்களுக்கு, 'இதில் ஏதோ இருக்கும்' என்று தோன்றிக் கொண்டே இருக்கும். ஆடித்தான் பார்ப்போமே என்று சபலம் தட்டும். ஆனல், ஒரு தடவை அதில் அடிபட்டுக் கரையேறினவன் மறுபடியும் அதில் விழவேண்டுமென்று நினைக்கமாட்டான். அவனுக்கு நன்ருகத் தெரியும், அதில் உள்ள அபாயங்கள். கந்தசாமி இதை நன்ருக உணர்ந்து விட்டானென்றே நினைக்கிறேன். ஊருக்குப் போவதற்கு முன்னல் அவனைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தேன். அவனுடைய பேச்சிலிருந்து நன்ருக உள்ளம் பண்பட்டு விட்டதென்றே தோன்றியது" என்ருர்.

எனக்கு அவருடைய வார்த்தைகள் இன்பமளித்தன. என் தந்தையைப் பற்றித் தமிழ் வாத்தியாருக்கு நல்ல அபிப்பிராயம் இல்லையே என்று நான் ரொம்ப வருந்தி யிருக்கிறேன். இப்போது அவர் நல்ல விதமாகச் சொன்னது ஆறுதலாக இருந்தது.

"என் பிறந்த நாளுக்காக அம்மா சர்க்கரைப் பொங்கல் செய்து சமைத்திருப்பாள், ஸார்! நான் காள மேகத்தை என்னேடு சாப்பிட அழைத்துக்கொண்டு போகிறேனே" என்றேன்.

"உள்ளே போய் அம்மாவிடம் சொல்லிவிட்டு அழைத்துக்கொண்டு போ" என்ருர்.

காளமேகமும் நானும் வீட்டுக்கு வந்தபோது சமையல் ஆகியிருந்தது. என் அன்னை சந்தோஷத்துடன் எங்களை வரவேற்றார். அவரிடமும் கோயில் பிரசாதங்களைக் கொடுத்துவிட்டு நமஸ்கரித்தேன்.

"நல்லாப் படித்து, நிறைய மார்க்கு வாங்கி..." என்று அவர் கூறி முடிப்பதற்குள் நான் குறுக்கிட்டு, "காலேஜிலே படித்து, கலெக்டர் உத்தியோகம் பார்க்கணும்" என்று முடித்தேன்.

என் அன்னை கலகலவென்று சிரித்தார். "ஆமாண்டா, கண்ணு! மகாராஜனாய் இருக்கணும்" என்றார்.

காளமேகத்துடன் சாப்பிட உட்கார்ந்தேன். அவன், என் அன்னை உள்ளே சென்றபோது, "நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரன்டா" என்றான்.

"என்னடா அதிர்ஷ்டத்தைக் கண்டு பிடித்து விட்டாய்? சர்க்கரைப் பொங்கல் நன்றாக இருக்கிறதா?" என்றேன்.

"போடா! அது ஒன்றும் இல்லை. உங்கம்மா உன்னிடம் இவ்வளவு பிரியமாகப் பேசினாளே, அதுக்குச் சொன்னேன். எங்கம்மாகிட்டே இந்த மாதிரி குறுக்கே பேசினா விறகுக் கட்டைதான்" என்று ஆதங்கத்துடன் கூறினான்.

என் நண்பன் என் தாயாரின் குணத்தைப் போற்றுகிறான் என்ற எண்ணம் எனக்கு மகிழ்ச்சி அளித்தது. அந்தச் சந்தோஷத்தில் மோர் சாதம்கூட இனித்தது. இந்தப் பெருமையை அனுபவித்துக்கொண்டே ருசித்துச் சாப்பிட்டேன். சாப்பிட்டு எழுந்ததும் தபால்காரன் வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனான்.

அம்மா கடிதத்தைப் பிரித்துப் படிக்கச் சொன்னாள். உறையைக் கிழித்துக் கடிதத்தை எடுத்தேன். அது

அப்பாவின் கையெழுத்து இல்லை என்று உடனே தெரிந்து விட்டது.

முதல் வரியைப் படித்ததும் எனக்குத் திகிலாக இருந்தது. சிரமப்பட்டுக் கடிதத்தை மனத்திற்குள் படித்தேன். அதிலிருந்த விஷயத்தை என்னவென்று சொல்லுவேன்? எனக்குத் தலை சுற்றியது ஐயோ, அம்மாவுக்கு எப்படி அதைப் படித்துக் காட்டுவது ?

அதற்குள் அம்மா துடித்துப் போய்விட்டாள். "படியேண்டா ரங்கா! ஏன் இப்படி மரம் மாதிரி நிக்கறே? சீக்கிரம் படியேண்டா!" என்றார். எனக்குக் காளமேகத்தின் எதிரில் படிப்பதற்கு வேறு அவமானமாக இருந்தது. இப்போதுதான் அவன் என்னைப் பார்த்து வியந்தான். அதற்குள் அவன் பரிதாபப்படும்படியான சம்பவம் நிகழ்ந்துவிட்டதென்றால் எனக்குத் துயரமாக இருக்காதா ?

என்ன செய்வது ? கடிதத்தைப் படித்தேன். கடிதம் எப்படி எழுதியிருந்தது என்று இப்போது ஞாபகமில்லை. விஷயம் மட்டும்தான் ஞாபகமிருக்கிறது. என் தந்தை ஏதோ ஒரு காரணத்துக்காகச் சிறைக்கு அனுப்பப்பட்டிருந்தார். அதை அவருடைய வேண்டுகோளின் பேரில் யாரோ எழுதியிருந்தார்கள். காரணம் எழுதப்பட்டிருக்கவில்லை. திருநெல்வேலி சிறையில் இருப்பதாகவும் தெரிந்தது. திருநந்திபுரம் சென்றவர் எதற்காகத் திருநெல்வேலி சென்றார் என்பது ஒன்றும் விளங்கவில்லை. நான் கடிதத்தை இரைந்து படித்தவுடன் என் அன்னை மயங்கி விழுந்துவிட்டார். காளமேகம் நடுங்கிப் போய் விட்டான். நான் அவனிடம், "காளமேகம்! நீ இதை யாரிடமும் சொல்லாதே. வீட்டுக்குப் போய் விஷயத்தை அப்பாவிடம் மாத்திரம் சொல்லி அவரை இங்கே உடனே வரச் சொல்லு. நான் அம்மாவைக் கவனித்துக் கொள்கிறேன்" என்றேன்.

காளமேகம் ஓடிச் சென்றான். தமிழ் வாத்தியார் அன்று உடனே வந்து என் அன்னையைத் தேற்றியிரா விட்டால் என்ன ஆகியிருக்குமோ ? அம்மா மனமுடைந்து போயிருந்தார்.

"உங்களுடைய நல்ல மனத்திற்கு ஒரு குறையும் வராது அம்மா. நீங்கள் கொஞ்சங்கூடக் கவலைப்படாதீர்கள். நான் லீவு எடுத்துக்கொண்டு திருநெல்வேலிக்குப் போய் அவரைப் பார்த்துவிட்டு வருகிறேன். என்ன செய்ய வேண்டுமோ செய்யலாம். 'லாக்அப்'பில் தான் வைத்திருப்பார்கள். நான் கவனித்துக் கொள்கிறேன் அம்மா !" என்று அன்புடன் கூறினார்.

என் அன்னை விம்மல்களுக்கு இடையே, "நீங்கள் தெய்வம் மாதிரி உதவுகிறேன் என்று வருகிறீர்கள். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள், உதவி செய்வதற்கு ? உங்களை என் சகோதரனாக நினைத்துக்கொள்கிறேன். நீங்கள்தான் அவரை எப்படியாவது சிறையிலிருந்து விடுதலை செய்துகொண்டு வர வேண்டும். இத்தனை நாட்கள் இவ்வாறு ஆகியிருந்தால்கூட இப்படி என் நெஞ்சு துடிக்காது. அவரே மனம் மாறி, நான் ஒழுங்காக இனி வாழ்க்கை நடத்தவேண்டுமென்று நினைத்த சமயத்தில் இப்படி மண் விழுந்துவிட்டதே. இப்படியும் ஒரு சோதனை உண்டா ?" என்று புலம்பினார்.

அன்று எங்களுடைய கஷ்டத்துக்குக் காரணமாக இருந்த ஈசுவரமூர்த்தியே, இன்றும் என் கஷ்டங்களுக்குக் காரணமாக இருக்கிறாரென்பது விந்தையான விஷயம் அல்லவா ? எங்களைத் துன்புறுத்தியது போலவே அவர் இந்துவின் பெற்றோர்களையும், இந்துவையும் துன்புறுத்தி வந்திருக்கிறார். ஆனால், அப்போது ஈசுவரமூர்த்தியைப் பற்றி எனக்குத் தெரியாது. என் தந்தை சிறை சென்று பல நாட்களுக்குப் பின்னர் தமிழ் வாத்தியார் மூலம் நான்

இந்த விவரங்களையெல்லாம் அறிந்து கொண்டேன். அவர் தான் என் அன்னைக்கு ஆறுதல் சொல்லித் தேற்றினார். அதனால்தான் இன்றுகூட அவரை நினைத்தால் என் மனம் நன்றியால் நிறைகிறது.

# 8. இன்னல் தொடர்ந்தது

என் தந்தை சிறைப்பட்ட விவரம் தெரிந்தது முதல் என் அன்னை துடிதுடித்துப் போனார். என்ன நொந்து என்ன பயன் ? மனத்தைத் தேற்றிக்கொண்டு உயிர் வாழவேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இருந்தது. நான் ஒரு மகன் இருந்தேனல்லவா ? எனக்காக அவர் தைரியமாக இருந்தார்.

தமிழ் வாத்தியார் திருநெல்வேலி சென்று என் தந்தையை நேரில் பார்த்துப் பேசிவிட்டு வந்தார். வழக்கு நடத்துவதற்கும் ஏற்பாடெல்லாம் செய்தார். பெரிய வக்கீல் வைத்து வழக்கு நடத்துவதற்குக் கையில் பணம் ஏது ? அது இல்லாததால் இன்னலுக்கு மேல் இன்னலாக வந்து எங்களைத் தாக்கிற்று. அந்தச் சமயத்தில் எங்களிடம் ஊரார் அனைவருமே அனுதாபத்துடன் நடந்து கொண்டார்கள் என்று சொல்லவேண்டும். அதிலும் பண்ணையார் வேதாசலம் மிகவும் உதவியாக இருந்தார். அவருடைய உதவி இல்லாவிட்டால் தமிழ் வாத்தியார் தர்மலிங்கத்தாலும் ஒன்றும் செய்திருக்க முடியாது. போய்ப் பார்த்திருக்கக்கூட முடியாது.

என் அன்னை மட்டும் சென்று என் தந்தையைப் பார்த்துவிட்டு வந்தார். என்னை அழைத்துச் செல்ல மறுத்துவிட்டார். அதற்கு என் படிப்புக் கெட்டுவிடும் என்று காரணம் கூறினார். ஆனால், அது உண்மைக் காரணம்

அல்ல என்று எனக்குத் தெரிந்திருந்தது. என் தந்தை சிறையில் இருப்பதை நான் பார்க்கக்கூடாது என்பதே அவருடைய எண்ணம் என்பதை நான் ஊகித்து அறிந்து கொண்டேன். ஆகையால் நானும் வருவேனென்று அவரிடம் பிடிவாதம் செய்யவில்லை.

அங்கே என்ன நடந்ததென்று எனக்கு விவரமாகத் தெரியாது. ஆனால், என் அன்னை திரும்பி வந்த பிறகு முன்னைவிடத் தைரியமாக இருப்பதாக எனக்குத் தோன்றியது.

அப்போது எனக்கு வழக்கு விவரங்களைப் புரிந்து கொள்ளும் அளவுக்கு அறிவு ஏற்பட்டிருக்கவில்லை. வாத்தியார் ஐயா தர்மலிங்கத்துடன் என் அன்னை மணிக்கணக் காகக் கவலையுடன் பேசுவதையும், கண்ணீர் வடிப்பதையும் நான் பார்த்திருக்கிறேன். என் அன்னை இருக்கும்போது நான் இதைப் பற்றியே பேசமாட்டேன். அவர் மனம் புண்ணாகிவிடும் என்று எனக்கு ரொம்பப் பயம்.

வாத்தியார் ஐயா வீட்டுக்குச் சென்றபோதும் பேச முடியாது. அவர்கள் வீட்டு மனிதர்கள் எதிரில் என் தந்தையைப் பற்றிப் பேச எனக்குக் கூச்சமாக இருந்தது. ஆகவே, வாத்தியார் ஐயா தனியாக இருக்கும் சந்தர்ப் பத்தை எதிர்பார்த்திருந்தேன். ஒரு நாள் அப்படிச் சந்தர்ப்பம் நேரிட்டபோது, "ஸார்! நான் ஒன்று கேட்கிறேன் சொல்வீர்களா?" என்று கேட்டேன்.

"என்ன வேண்டுமோ கேளேன். இதற்குப் பீடிகை போடுவானேன்?" என்றார் தர்மலிங்கம் அவர்கள்.

"என் தந்தையை ஏன் சிறையில் போட்டிருக்கிறார்கள் என்ற காரணத்தை நிஜமாகச் சொல்லவேண்டும். அப்பா தவறு செய்து சிறைக்குப் போயிருந்தாலும் அதைக் கண்டிப்பாகச் சொல்லத்தான் வேண்டும். என்னிடமிருந்து மறைக்கக் கூடாது. அதைப்பற்றி நீங்களும் அம்மாவும்

மறைப்பதுதான் எனக்கு ரொம்ப வேதனையாக இருக்கிறது" என்று கூறி நிறுத்தினேன். எனக்கு, உணர்ச்சியோடு பேசியதால் மூச்சு வாங்கியது. மரியாதைக்குரிய வாத்தியார் ஐயாவிடம் அப்பொழுது பேசுகிறோம் என்பதைக்கூட மறந்து அவ்வாறு பேசிவிட்டேன்.

அவர் என்னை அனுதாபத்தோடு பார்த்தார். பின்னர் என் முதுகில் தட்டிக் கொடுத்து, "ரங்கதுரை! நீ குழந்தை. உனக்கு எதற்காக இந்த விவரமெல்லாம் தெரிய வேண்டும்? உன் மனம் குழம்புமே தவிர அதனால் உனக்கு ஒன்றும் பயன் இல்லையே. ஆகவேதான் நானும் அம்மாவும் உன்னிடம் இதைப்பற்றிப் பேசவேண்டாமென்று தீர்மானித்தோம்" என்று கூறினார்.

"இப்படி நீங்கள் மறைப்பதால்தான் என் தந்தை ஏதோ பெரிய குற்றம் செய்துவிட்டதாகத் தோன்றி என்னை வதைக்கிறது. இதே ஞாபகத்தில் வேறு ஒன்றுமே என்னால் செய்ய முடியவில்லை. தயவு செய்து......"

"ரங்கா! உன் தந்தையின் மீது ஒரு தவறும் இல்லை. அவர் நிரபராதி. வேறு ஒருவனுடைய வஞ்சனையால்தான் உன் தந்தை சிறை சென்றிருக்கிறார். உன் அப்பா தவறே செய்யவில்லை என்று நான் சொல்லவில்லை. முன்பு இப்படி ஏற்பட்டிருந்தால்கூட எனக்கு இவ்வளவு அனுதாபம் உண்டாகியிருக்காது. வெண்ணெய் திரண்டு வருகிற சமயத்தில் தாழி உடைந்தமாதிரி, அவன் மனம் திருந்திய சமயத்தில் இப்படி நேர்ந்துவிட்டதே என்றுதான் ரொம்ப வருத்தமாக இருக்கிறது. ரங்கா! இதற்கு மேல் நீ என்னை இப்போது ஒன்றும் கேட்காதே. சமயம் வரும்போது நானே சொல்கிறேன். இதை அடியோடு மறந்துவிட்டுப் படிப்பில் கவனத்தை நன்றாகச் செலுத்து. உன் அம்மாவுக்கு ஆதரவாக நீதான் இருக்கிறாய்

என்பதை ஒருபோதும் மறந்துவிடாதே. உன் தந்தைக்குப் பத்து வருஷம் தண்டனை கொடுத்திருக்கிறார்கள். அவர் வரும் வரையில் உன் அன்னைக்கு நீ ஒருவன்தான். அப்பா வரும்போது என்ன நிலையில் வருவாரோ? இறைவனுக்குத்தான் வெளிச்சம். நீ இப்போது படிப்பில் இன்னும் கண்ணும் கருத்துமாக மனத்தைச் செலுத்த வேண்டும்."

" நீங்கள் சொன்னதை எப்போதும் நினைவு வைத்துக் கொள்வேன் ஸார். என் மனம் இப்போதுதான் ஓரளவு சாந்தி அடைந்திருக்கிறது. முழுதும் சமாதானமாகவில்லை. இருந்தாலும் பெரிய பாரம் குறைந்தமாதிரி இருக்கிறது. இனிமேல் நான் இதைப்பற்றி உங்களை வற்புறுத்தவில்லை. நீங்களே எப்போது எல்லா விவரங்களையும் சொல்லலாமோ அப்போது சொல்லுங்கள்" என்று கூறிவிட்டு உடனே படிக்கப் போய்விட்டேன்.

அப்போது நடந்ததையெல்லாம் நினைத்தால் இப்போதுகூட மிகவும் வியப்பாக இருக்கிறது. எவ்வளவு சோதனைகள்? எத்தனை மனத் துயரம்? என்ன வறுமை? இவைகளையெல்லாம் சகித்துக்கொண்டு எப்படியோ நானும் அம்மாவும் உயிர் வாழத்தானே செய்தோம்? பொறுக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்போது கடவுள் அதைத் தாங்குவதற்கு அபரிமிதமான சக்தியையும் கொடுக்கிறாரே! இந்தத் தத்துவம் இலகுவாக விளங்கக் கூடியதா?

அன்றும் சரி. இன்றும் சரி. அந்த மனோதிடம் எங்கேயிருந்து எனக்கு வருகிறது என்பதை என்னால் தெரிந்துகொள்ளவே முடியவில்லை. என் இதயமென்னும் விளக்கின் சுடரொளியாகத் திகழும் இந்துமதி சிறைப்பட்ட

செய்தியைக் கேட்டுத் தாங்கிக் கொண்டேனே. அப்போது தந்தை சிறைப்பட்டதைத் தாங்கியதில் என்ன வியப்பு ?

* * *

வர வர எங்கள் பொருளாதார நிலை சீர்குலைந்து கொண்டே வந்தது. சீர்குலையாமல் எப்படி இருக்கும் ? நல்லவேளையாக எனக்காவது உபகாரச் சம்பளம் கிடைத்திருந்தது. இல்லாவிட்டால் என் அன்னையின் மனம் உடைந்து போயிருக்கும். பாவம் ! அவர் விரிந்துபோன பானையைப் புளி வைத்து அடைப்பதுபோல, அவருடைய விரிந்த உள்ளத்தை என்மீது உள்ள அன்பு என்னும் வஸ்துவால் விண்டு போகாமல் ஒட்ட வைத்திருந்தார்.

எத்தனை நாட்களுக்கு வருமானம் இல்லாமல் காலந் தள்ள முடியும் ? மேலும் என் அன்னை வீட்டிலிருந்த சாமான்களை விற்று, அந்த ஊரில் கைமாற்ருகப் பணம் கொடுத்திருந்தவர்களுக்கெல்லாம் கொடுத்து விட்டார். ஆகவே, அடியோடு ஒன்றுமில்லாமல் போய்விட்டது.

இந்தப் பொருளாதார நிலையைச் சீர்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதற்காக என் அருமை அன்னை திண்பண்டங்கள் செய்து அந்த ஊரில் உள்ள பணக்காரர்களின் வீடுகளுக்குக் கொடுக்க ஆரம்பித்தார். அவருடைய முகராசியோ என்னமோ எல்லோருக்கும் அவை ரொம்பப் பிடித்தன. அவ்வப்போது நடக்கும் விருந்துகள், கல்யாணங்கள் முதலியவற்றுக்கு என் அன்னையை உதவிக்கு அழைத்துக்கொள்வார்கள். அந்தச் சமயங்களில் ரொம்பக் கஷ்டமில்லாமலிருந்தது. அம்மா செய்து கொடுக்கும் திண்பண்டங்களை நான் சில சமயம் எடுத்துக்கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருவதுண்டு.



சில வீடுகளுக்கு தினமும் இடியாப்பமோ அல்லது இட்டிலியோ செய்து கொடுக்கும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். என் அன்னை செய்யும் பணியாரங்கள், பல காரங்கள் எல்லாம் அல்லிக்குளத்துப் பெரிய மனிதர்கள் வீட்டுத் தவிசுப் பிள்ளைகள் செய்வதைவிட நன்ருயிருந்தன. ஆகவே, அம்மாவின் பலகாரங்கள் செலவழியாமல் இருந்ததே இல்லை. நான் அவைகளை ஒரு கூடையில் எத்துக்கொண்டு வீடுவீடாகப் போய்க் கொடுத்துவிட்டு வருவேன். எனக்கு என் தாயின் கஷ்டம் கண்களை உறுத்தினலும், நான் நன்ருகப் படிக்கவேண்டுமென்றுதானே இவ்வளவு பாடுபடுகிருர் என்று தோன்றிய உடனே மனம் குழைந்து போய்விடும். எப்படியாவது பெரிய உத்தியோகத்தில் அமர்ந்து அவரைத் திருப்தி செய்யவேண்டும் என்று மனத்துக்குள் உறுதிப் படுத்திக் கொள்வேன்.

ஒரு கையில் புத்தகமும், இன்னெரு கையில் கூடையுமாக நான் அல்லிக்குளத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்துப் பல தினங்கள் ஆகியிருந்தன.

என் அன்னை முன்போல் இல்லாமல் இப்போது என்னிடமும் பேசுவதை மிகவும் குறைத்துக்கொண்டு விட்டார். வேலை! வேலை!! வேலை !!! வேலை செய்வதுதான் அவருக்குத் தெரிந்தது. பாவம், எனக்காக அவர் என்ன பாடு பட்டிருக்கிருர் ?

''......ஈன்ருளோடு வைத்து
எண்ணக் கடவுளும் இல் ''

என்று நான்மணிக்கடிகை ஆசிரியர் கூறியிருப்பது மற்றவர்களுக்குப் பொருந்துமோ இல்லையோ, என்னுடைய அன்னைக்கு முற்றிலும் பொருந்தும்.

என்னைப் பொறுத்த வரையில் அவர் தெய்வத்திற்தும் மேலாகத் திகழ்ந்தார். அளவு கடந்த துயரம் அவரைத்

தாக்கியபோதிலும், அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில், ஒரு ஆர்ப்பாட்டமும் செய்யாமல் தன் துயரத்தையெல்லாம் மறந்துவிட்டு எனக்காகவே அவர் வாழ்ந்தார்.

பண்ணையார் வேதாசலத்தின் வீட்டில் ஏதேனும் ஒரு விசேஷம் நடந்துகொண்டே இருக்கும். அவருக்கு நிறையப் பெண்கள். யாருக்காவது குழந்தை பிறந்து கொண்டே இருக்கும். என் அன்னை அப்போது உதவி செய்யச் சென்று வருவார். ஏதேனும் பணம் கொடுப் பார்கள். இப்படி எங்கள் ஜீவனம் நடந்து வந்தது. நானோ படிப்பு! படிப்பு !! படிப்பு !!! என்று அதில் மூழ்கியே விட்டேன். என் தந்தையை நான் மறந்தே போய் விட்டேன். ஏன், என்னையே கூட மறந்துவிட்டேன் !

அதுவரை எப்படியும் எழுபத்தைந்து மார்க் வந்து விடுமென்று தைரியமாக இருப்பேன். இப்போது எல்லா வற்றிலும் தொண்ணூறு மார்க்காவது வாங்கிவிட வேண்டு மென்று புஸ்தகக் கடலில் அமிழ்ந்துவிட்டேன். என் அன்னை இவ்வளவு கஷ்டப்படுவதற்கு நான் இதுகூடச் செய்யவேண்டாமா என்றுதான் தோன்றிக்கொண்டே இருந்தது.

நான் பணியாரக் கூடையை எடுத்துக்கொண்டு போகும்போது எனக்கும் சிலர் வேலை வைப்பார்கள். அதைச் செய்துவிட்டு அவர்கள் ஏதாவது கொடுத்தால் வாங்கிக்கொண்டு வந்து என் தாயாரிடம் கொடுப்பேன்.

இப்படி ஒரு நாள் நான் பண்ணையார் வேதாசலம் வீட்டுக்கு, அம்மா செய்திருந்த முறுக்குகளை எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தபோதுதான் அந்தச் சம்பவம் நடந்தது. அதே சம்பவந்தான் தமிழ் வாத்தி யாரின் வாயைத் திறந்தது. அதன் பிறகுதான் என்

தந்தையைப் பற்றிய முழு விவரங்களையும் அவர் எனக்குச் சொன்னார். அந்தச் சந்தர்ப்பத்தையும், அதன் மூலம் ஏற்பட்ட விளைவுகளையும் இப்போது நினைத்தால்கூட உடல் சிலிர்க்கிறது. எதிர்பாராத விஷயங்கள், சிறிய சம்பவங்கள் எவ்வளவு தூரம் நம் வாழ்க்கையைப் பாதித்து விடுகின்றன ?

# 9. மிராசுதாரர் தரிசனம்!

எனக்கு அரை வருஷப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது ஒரு நாள் என் அருமை அன்னை என்னைக் கூப்பிட்டார். நான் புஸ்தகத்தை எடுத்து வைத்துவிட்டு எழுந்து சென்றேன்.

" துரை ! உன் படிப்பைக் கெடுத்து விட்டேனா ? பாவம் ! உன்னைப் பரீட்சை சமயத்தில்கூடச் சேர்ந்தாற் போல் படிக்கவிட முடியவில்லை " என்றார்.

" இல்லை அம்மா ! படித்து விட்டேன். சும்மா படித்தாலும்தான் கஷ்டமாக இருக்கிறது. நடுவில் கொஞ்சம் வேறு ஏதாவது வேலை செய்தால்தான் மறு படியும் படிக்கும்போது மனத்தில் நன்றாகப் பதிகிறது."

" அப்படியானால் சரி ! பண்ணையார் வேதாசலம் வீட்டில் முறுக்கு செய்து தரச் சொல்லியிருந்தார்கள். இதோ இந்தக் கூடையில் வைத்திருக்கிறேன். நீ சாப்பிட்டு விட்டு, அவர்கள் வீட்டில் இதைக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டுப் பள்ளிக்கூடம் போகிறாயா ?"

" ஓ ! கொடுத்து விடுகிறேனே " என்று கூறி விட்டுச் சீக்கிரமாகச் சாப்பிட்டேன். பிறகு ஒரு கையில் புஸ்தகப் பையுடனும், இன்னொரு கையில் கூடையுடனும் புறப்பட்டேன்,

தெருவில் நடக்கும்போதே என் மனத்தில் மனப் பாடம் செய்ய வேண்டிய சில பகுதிகளை நினைவு படுத்திக் கொண்டே போனேன். தமிழ் இலக்கணப் பாடம் எப் போதுமே எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கும். தமிழ் வாத்தியாரிடமிருந்த பக்தியினால் அந்தக் கஷ்டத்தை நான் வெளியே சொல்லிக் கொண்டதே இல்லை. இலக்கணத்தில் நிறைய மார்க்கு வாங்கினால்தான் அவருக்குப் பிடிக்கும். ஆகவே மண்டையை உடைத்துக்கொண்டு நன்னூல் சூத்திரங்களை உருப் போடுவேன். இப்போதும் ஒரு நன்னூல் சூத்திரத்தை மனதில் சொல்லிக்கொண்டே போனேன். முழுதும் சரியாக ஞாபகம் இல்லை.

"...உறழும் என்மரும் உளரே "

என்று மனத்தில் சொல்லிக் கொண்டதுதான் நினைவிருக் கிறது. ஏதோ தவறு இருப்பதாகத் தோன்றியது. 'உறழும்' என்பது 'உளறும்' என்றே வாயில் வந்தது. மனத்தில் எழுந்த ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, முறுக்குக் கூடையைக் கீழே வைத்துவிட்டுப் பையிலிருந்த இலக்கணப் புத்தகத்தை எடுத்துக் கொண்டேன். அதைப் பிரித்து ஒரு கையில் வைத்துக் கொண்டு, கூடையைக் கையில் எடுத்துக்கொண்டு படித்துக்கொண்டே சென்றேன்.

எவ்வளவு தூரம் இப்படித் தமிழ் இலக்கணத்தில் முட்டிக் கொண்டே முன்னேறினேனோ தெரியாது. பின்னால் வண்டி வருவதுபோல் சத்தம் கேட்டது. ஒதுங்க வேண்டும் என்று நான் நினைப்பதற்குள், "ஏய்! ஏய்! ஓரம்! ஓரம்!" என்று ஒரு குரல் கர்ண கடூரமாக ஒலித்தது. அதைக் கேட்டுத் திடுக்கிட்டதில் அத்தனை நேரம் நான் பாடம் பண்ணியதெல்லாம்கூட மறந்து விட்டது.

நான் ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் சுரீல் என்று பலமாக என் முதுகில் ஏதோ பட்டது. வலி பொறுக்க

முடியாமல், "ஐயோ !" என்றேன். மறுபடியும் சுரீல் என்று இன்னொரு அடி விழுந்தது. என் கையிலிருந்த கூடை ஒரு மூலையில் விழுந்து முறுக்குகளெல்லாம் சிதறி மண்ணில் விழுந்தன. என் புத்தகமும் எங்கோ போய் விழுந்தது. நான் வலி தாங்காமல் கீழே விழுந்து விட்டேன். என்னைத் தாண்டி ஒரு மாட்டு வண்டி சென்றது. அதில் ஒரு மனிதர் உட்கார்ந்து கொண்டிருந்தார். இந்த வண்டிக்காரன்தான் என்னைச் சாட்டையால் அடித்திருக்கிறான் என்று அப்போதுதான் எனக்குத் தெரிந்தது. அந்தப் பாதகனை மனமாரத் திட்டினேன். சிறிது நேரங்கழித்துக் கலங்கிய உள்ளத்துடன் கூடையையும் புத்தகங்களையும் எடுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிச் சென்றேன்.

அம்மா என்னைப் பார்த்ததும் பதறிப் போய் விட்டார்.

"என்ன ஆயிற்று ரங்கா ? ஏன் திரும்பி வந்து விட்டாய் ? மேலே எல்லாம் மண்ணாக இருக்கிறதே ? விழுந்து விட்டாயா அப்பா ?" என்று கேட்டார்.

"விழவில்லை, அம்மா ! நான் படித்துக்கொண்டே போனேன். பின்னால் ஒரு வண்டி வந்தது. ரோடு நடுவிலே நடக்கிறேன் என்று வண்டிக்காரனுக்குக் கோபம் போலிருக்கிறது. வண்டிச் சாட்டையால் இரண்டு அடி அடித்துவிட்டான். அப்போ கூடை விழுந்து விட்டது. முறுக்கெல்லாம் மண்ணாகி விட்டது அம்மா !" என்றேன். அதைச் சொல்லும்போது எனக்குத் தொண்டையை அடைத்தது. பாவம் ! அவர் எவ்வளவு சிரமப்பட்டு முறுக்குகளைச் சுற்றினார் ? பொருளும் நஷ்டம். அவர் பட்ட சிரமமும் வீண். ஆயினும் நான் ஆண் பிள்ளை அல்லவா ? அதனால் அழுகையை அடக்கிக்கொண்டு ரொம்பக் கவலைப்படாதவன் மாதிரி என் தாயாரிடம் காட்டிக் கொண்டேன்.

என் அன்னைக்கு அந்த வண்டிக்காரன்மீது ஒரே கோபம்.

"முறுக்குப் போனால் போகிறது ரங்கா. ஆனால் அந்தப் படுபாவிக்குத் தெருவோடு போகும் குழந்தையை அடிக்க எப்படி மனம் வந்தது ? பாதகன் ! அவன் நன்றாக இருப்பானா ? என் நெஞ்சு எரிகிற மாதிரி அவனுக்கும் எரியாதா ?" என்று கூறிவிட்டு என் சட்டையைக் கழட்டச் சொன்னார். முதுகிலும், தோளிலும் சிவப்பாக இரண்டு கோடுகள் தெரியவே துடித்துப் போய் விட்டார்.

கண்களில் நீர் ததும்ப அதற்குத் தேங்காய் எண்ணெய் தடவிக்கொண்டே, "ரங்கா ! அது யார் வீட்டு வண்டி சொல்லு. நான போய்க் கேட்கிறேன். நியாயம், தர்மம் ஒன்றுமே கிடையாதா ? ஒரு தவறும் பண்ணாத குழந்தையை இப்படி எதற்காக அடிக்க வேண்டும் ?" என்று புலம்பினார்.

"அம்மா ! நீ வருத்தப்படாதே. இது ஒன்றும் வலிக்கவே இல்லை. மேலும் அந்த வண்டி நம்ம ஊருக்குப் புதிது. வந்தவரும் புதிய மனிதர் !" என்று கூறிச் சமாதானப்படுத்தினேன்.

அன்று நான் பள்ளிக்குச் செல்லும்போது நேரமாகி விட்டது. தமிழ் வாத்தியார்தான் என் வகுப்பை நடத்திக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும், "ஏன் இத்தனை நேரம் ?" என்று கேட்டார். நான் விவரங்களைச் சொன்னவுடன் ரொம்ப வருத்தப்பட்டார். அந்தப் புதிய மனிதர் யாரென்று கண்டு பிடிக்கப் போவதாகவும் கூறினார்.

மறு நாள் காலை நான் அவர் வீட்டுக்குச் சென்ற போது என்னிடம் சில முக்கியமான விவரங்களைக் கூறினார்.

ரங்கா ! நேற்று இந்த ஊருக்கு வந்திருக்கும் புதிய மனிதர் யாரென்று தெரியுமா ?" என்று கேட்டார்.

" தெரியாதே, ஸார் !"

" அந்தப் பாவிதான் ஈசுவரமூர்த்தி."

" எங்கள் குத்தகை நிலத்துச் சொந்தக்காரர், மிராசுதார் ஈசுவரமூர்த்திதானே ? இனிமேல் அவரைப் பற்றி எனக்குத் தெரிந்து என்ன ஆகப்போகிறது ஸார் ? நிலம்தான் இனி எங்களுக்குக் கிடையாதே !"

" அதோடு விட்டு விட்டாயே, துரை. இந்தப் படுபாதகனுடைய சூழ்ச்சியால்தான் உன் தந்தை சிறைக்குப் போயிருக்கிறார்."

" என்ன ! நிஜமாகவா ?"

" ஆமாம், ரங்கா ! இவன் செய்த சட்டவிரோதமான செயலுக்கு உன் தந்தையை உடந்தையாக இருக்கச் சொல்லி நிர்ப்பந்தப்படுத்தினான். அவரும் வேறு வழி யில்லாமல் அதில் அகப்பட்டுக் கொண்டார். கடைசியில் அவரைக் காட்டிக் கொடுத்து விட்டு இவன் தப்பித்துக் கொண்டு விட்டான். நியாயமாக உன் தந்தை இருக்கும் இடத்தில் இவன் இருக்கவேண்டும் " என்று கூறினார்.

"இவ்வளவு சொன்ன பிறகு விவரங்கள் முழுவதையும் தான் சொல்லி விடுங்களேன் " என்றேன்.

அவர் ஒரு கணம் கண்களை மூடிக்கொண்டு பேசாமல் இருந்தார். பிறகு என் தந்தை சிறைப்பட்ட விவரங்களை — அதாவது என் தந்தை அவரிடம் கூறியதைச் சொன்னார்.

ஈசுவரமூர்த்தியை என் தந்தை பார்க்கச் சென்ற போது அவர் மிகவும் கடுமையாக இருந்தார். பணம் முழு வதையும் கொடுத்தால்தான் மறு வருஷம் நிலத்தைக் குத்தகைக்கு விட முடியும் என்றார். என் தந்தை கெஞ்சிப் பார்த்தார். அவர் மசியவில்லை. ஆகவே, மறு நாள் பார்த்துக்கொள்ளலாம் என்று தாம் தங்கியிருந்த இடத் துக்குப் போய்விட்டார். மறு நாளும் அவர் பிடி கொடுத்துப் பேசவில்லை.

அதற்கு அடுத்த நாள் என் தந்தை அவரைப் பார்க்கப் போன சமயத்தில் ஈசுவரமூர்த்தி சற்றுத் தணிந்து பேசினர். கொஞ்சம் வியப்புடனே என் தந்தை தன் விஷயத்தை அவரிடம் மறுபடியும் கூறினர்.

ஈசுவரமூர்த்தி அதன் பிறகு, " கந்தசாமி ! போனுல் போகிறது என்று இந்தத் தடவை நீ கொடுப்பதை வாங்கிக் கொள்கிறேன். ஆனுல் ஒரு நிபந்தனே. நீ இப்போது ஒரு காரியம் செய்வதாக ஒப்புக்கொள்ள வேண்டும்" என்று கூறினர்,

" கட்டாயம் செய்கிறேன். எது வேண்டுமானுலும் செய்யத் தயாராக இருக்கிறேன் " என்ருர் கந்தசாமி.

" இதை யாருக்கும் சொல்வதில்லே என்று உங்கள் பிள்ளேமீது ஆணேயாகச் சத்தியம் செய்ய வேண்டும்."

இதைக் கேட்டதும் கந்தசாமிக்குக் கொஞ்சம் தயக்கம் ஏற்பட்டது. ' சத்தியம் செய்ய வேண்டுமென்ருல் ஏதோ தவருன காரியமாக இருக்கும். இப்போதுதான் திருந்தி மனிதனுகி இருக்கிரும். மறுபடியும் ஏதாவது சிக்கிக் கொள்ளக்கூடாது' என்று நினேத்துக்கொண்டு, "சத்தியம் எதற்கு ? நான் யாரிடமும் சொல்லவில்லே " என்ருர்.

இதைக் கேட்டதும் ஈசுவரமூர்த்திக்குக் கோபம் வந்து விட்டது. " என்ன ஐயா ? விளேயாடுகிருயா ? பணத்தைக் கீழே வைத்துவிட்டு மறு காரியம் பாரும் " என்று உறுமினர்.

கந்தசாமியின் மனம் தளர்ந்தது. வீட்டின் நிலே என்ன ஆகும் என்ற எண்ணத்திஞல் அவர் ஈசுவரமூர்த்தியின் நிபந்தனேயை ஒப்புக்கொண்டார்.

" என் ஒரே மகன்மீது ஆணேயாக நீங்கள் சொல்வதை யாரிடமும் சொல்லவில்லேயென்று சத்தியம் செய்கிறேன் " என்று கூறினர்.

அதன் பிறகு ஈசுவரமூர்த்தி விஷயத்தைக் கூறினார். புதுச்சேரியிலிருந்து அவர் பலவிதமான சரக்குகளைத் தருவித்துக் கொண்டிருந்தார். உயர்ந்த ரக மது வகைகள், பட்டுத் துணிகள், சீட்டுக் கட்டுகள், வாசனைத் திரவியங்கள் முதலிய சகலவிதப்பொருள்களும் அதில் அடங்கியிருந்தன. இப்போது ஒரு இக்கட்டான நிலை ஏற்பட்டிருந்தது. சுமார் ஐயாயிரம் ரூபாய் பெருமானமுள்ள பொருள்களை அவர் வரவழைப்பதற்கு ஏற்பாடு செய்து விட்டார். பாதிப் பணம் கொடுத்தாகி விட்டது. இப்போது அதை வழக்கமாகச் சுங்க அதிகாரிகளின் கண்களில் மண்ணைத் தூவி விட்டுக் கடத்திக்கொண்டு வரும் ஆளின்மீது போலீஸாருக்குச் சந்தேகம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தது. ஆகவே அவன் எடுத்துக்கொண்டு வந்து மாட்டிக்கொண்டால் இவர் பாடு திண்டாட்டம். கந்தசாமி போய்ச் சரக்குகளை எப்படியாவது எடுத்துக்கொண்டு வந்து விட்டால், அவருக்கு வேண்டிய சௌகரியங்களையெல்லாம் ஈசுவரமூர்த்தி எப்போதும் செய்து கொடுப்பார். எந்தவிதமாகக் கடத்திக்கொண்டு வரவேண்டுமென்பதை ஈசுவரமூர்த்தி இதற்குக் கந்தசாமி உடன்பட்ட பிறகு கூறுவார். இது தான் விஷயம்.

இதைக் கேட்டதும் கந்தசாமியின் நெஞ்சம் பரிதவித்தது. உரலுக்குள் தலையை இட்டுக் கொண்டு விட்டோமே என்று தவித்துப் போனார். ஈசுவரமூர்த்தி இதைச் செய்யாவிட்டால் பாக்கிப் பணத்துக்காக வழக்குப் போடுவேன் என்று வேறு பயமுறுத்தினார். ஆதலால் கந்தசாமிக்குச் சிறிதும் இஷ்டமில்லாமலிருந்தும் இந்தக் காரியத்துக்கு மனச் சாட்சிக்கு விரோதமாக அவர் ஒப்புக் கொள்ள நேர்ந்தது.

# 10. கள்ளச் சரக்கு

தமிழ் வாத்தியாருக்கு இதையெல்லாம் என்னிடம் சொல்வதற்குத் தயக்கமாகவே இருந்தது. மகனிடம் தந்தை செய்த தவறைப் பற்றிக் கூறுவதற்கு யாராக இருந்தாலும் தயங்குவது இயல்பேயல்லவா? அவரை நான் எல்லா விவரங்களையும் கூறும்படி வற்புறுத்த முடியவில்லை. ஆயினும், அவர் கூறிய விவரங்களையெல்லாம் வைத்துக்கொண்டு, இப்படித்தான் நடந்திருக்க வேண்டுமென்று நானாகவே ஊகித்து அறிந்து கொண்டேன்.

கந்தசாமி புதுச்சேரிக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார். இரண்டு, மூன்று நாட்கள் அங்கே இருந்தார். பட்டுத் துணிகள் முதலிய சில சாமான்களைக் கொண்டு வரவேண்டியிருந்தது. அங்கு சென்ற உடனேயே அவைகளை வாங்கிக்கொண்டு விட்டார். ஆனால், உடனே திரும்பி வர முடியவில்லை. அனுபவமில்லாததபடியால் பயமாக இருந்தது. இரண்டு மூன்று நாட்கள் கடற்கரையையும், தூண் சிற்பங்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டு காலம் கழித்தார். பெரிய ரோடுகளையும், விநோதமான மனிதர்களையும் கண்டார். இப்படி அலைந்துவிட்டு நான்காம் நாள் அன்று புறப்பட்டார். தைரியத்தைக் கையில் எடுத்துக் கொண்டுதான் வந்தார். 'கஸ்டம்ஸ்' காரியாலயத்தில் தாம் சாமர்த்திமாகச் சமாளித்து விடலாம் என்று நம்பினார். ஆனால், அங்கேதான் அவர் தவறு செய்தார். கஸ்டம்ஸ் உத்தியோகஸ்தரை ஏமாற்றுவதற்கு அவரால் முடியவில்லை.



அவர் சாதாரணமாக எப்போதும்போல் வந்திருந்தால் அந்த உத்தியோகஸ்தருக்கு இவர்மீது சந்தேகமே ஏற்பட்டிருக்காது. இவர் வேஷம் போட்டுக்கொண்டு வந்தார். தாடியைப் பார்த்தவுடனேயே வேஷம் என்று அந்த உத்தியோகஸ்தருக்குத் தெரிந்துவிட்டது. ஆகவே, உடனே அவருடைய பெட்டியைச் சோதித்தார். சோதனையின் போது அவர் கள்ளச் சரக்குக் கொண்டு வந்திருப்பது தெரிந்து போய்விட்டது. அவரைக் கைது செய்து விட்டார்கள். அங்கேயே அவரை விசாரணை செய்துவிட்டுச் சிறையில் தள்ளிவிட்டார்கள். அதன் பிறகு அவர் அங்கே யாரோ ஒருவரை விட்டு இதைப்பற்றி வீட்டுக்குக் கடிதம் எழுதச் சொல்லியிருக்கிறார். விசாரணையின்போது கந்தசாமி என்ன சொல்லியும் அது எடுபடவில்லை. ஈசுவரமூர்த்தி என்ன செய்தாரோ தெரியவில்லை. அவரைப் பற்றிய பேச்சை எடுத்தாலே அவர்கள் வாய்மேல் அடித்தார்கள். ஈசுவரமூர்த்தி இதில் எப்படி அகப்பட்டுக் கொள்ளாமலிருந்தார் என்பது கந்தசாமிக்குத் தெரியவில்லை. ஆனால், எல்லாம் பணம் செய்த வேலைதான் என்று மட்டும் அவரால் ஊகிக்க முடிந்தது. அவ்வளவு தான் விஷயம்.

இதைத் தமிழ் வாத்தியார் சொல்லி முடிப்பதற்குள் அவர் பாடு ரொம்பத் திண்டாட்டமாகப் போய்விட்டது. கடைசியில் எல்லாவற்றையும் சுருக்கித்தான் அவரால் சொல்ல முடிந்தது. பாவம்! அவருடைய மனம் மிகவும் மென்மையானது. என் மனம் புண்ணாகி விடுமே என்று அவருக்கு ரொம்பக் கவலை. எனக்கும் அவர் சொல்லி முடிக்கும்வரை ஒரே படபடப்பாக இருந்தது.

அவர் முடித்த பிறகு என் முகத்தைப் பார்த்தார். எவ்வளவு சிரமப்பட்டு நான் புன்னகையை வரவழைத்துக் கொண்ட போதிலும், எனக்குக் கண்களில் ஜலமும் வந்து விட்டது.

" வருத்தப்படாதே, ரங்கா ! நீ ஆண் பிள்ளை இல்லையா ? கண்ணீர் விடலாமா ? தைரியமாக இதை யெல்லாம் தாங்கவேண்டும். உன்மீது எனக்கு உள்ள ஒரு பாசத்தினால், இவைகள் உனக்கு தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று சொன்னேன். உலகம் எவ்வளவு பொல்லாதது என்பதை நீ அறிந்துகொள்ள வேண்டும். அதிலும் இந்த ஈசுவரமூர்த்தி மிகவும் பொல்லாதவன். கொடூர இதயம் படைத்தவன். கந்த சாமியைக் காட்டிக் கொடுத்துவிட்டுத் தான் எப்படியோ தப்பித்துக்கொண்டு விட்டான் பார்த்தாயா ? பொல்லா தவன் கெட்டிக்காரனாகவும் இருந்துவிட்டால் ரொம்ப ஆபத்து. உன்னை வண்டிக்காரன் அடித்தபோது, இவன் அடிக்க வேண்டாமென்று சொல்ல வேண்டாமா ? அப்படிச் சொல்லாதவனுடைய இதயம் இரும்பாகத்தான் இருக்க வேண்டும். அவனுடைய மனத்தை என்ன செய்தாலும் மிருதுவாக ஆக்க முடியாது. ஆனால், இது ஒருநாள் துருப்பிடித்து, தூள் தூளாக வெடிக்கப் போகிறது " என்றார்.

அவர் அப்படிச் சொன்னது எனக்கு ரொம்ப ஆறுத லாக இருந்தது.

இதெல்லாம் நடந்து நான்கு நாட்கள் ஆனதும் ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு ஒரு ஆள் வந்தான். அன்று நான் வீட்டில் இருந்தேன். அந்த ஆள் வந்தவுடனேயே, " இந்த வீடு கந்தசாமி வீடுதானே ?" என்று உரத்த குரலில் என்னிடம் கேட்டான்.

" ஆமாம் " என்றேன்.

" உன்னைக் கையோடு எங்கள் எஜமானர் அழைத்துக் கொண்டு வரச் சொன்னார். உடனே வா."

" என்னை யார் அழைத்துக்கொண்டு வரச் சொன் னார்கள் ?" என்று திகைப்புடன் கேட்டேன்.

"மிராசுதார் ஈசுவரமூர்த்தி உடனே உன்னை வரச் சொன்னார், வருகிறாயா?" என்று கேட்டான் அந்தப் புது ஆள்.

அதற்குள் என் அன்னை அங்கு வரவே அவரிடம் விஷயத்தைச் சொன்னேன். அவர் சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையில் அமிழ்ந்திருந்தார். பிறகு அவர் என்னை ஏறிட்டுப் பார்த்தார்.

"துரை! உனக்குப் பயமாக இல்லாவிட்டால், போய் விட்டு வருவதுதான் நல்லது என்று தோன்றுகிறது. உன்னிடம் ஏதோ அப்பாவைப் பற்றிய விஷயம் சொல்ல அவர் விரும்புகிறாரோ என்னவோ? எதற்கும் போய்விட்டு வா. பிறகு பார்த்துக் கொள்ளலாம். அவர் உன்னை என்ன செய்துவிட முடியும்?" என்று கூறினார்.

நானும் சம்மதித்துப் புறப்பட்டேன். அந்த ஆளுடன் சென்றேன். மிராசுதார் அவருடைய சொந்த வீட்டில் இறங்கியிருந்தார். முன்பு அந்த வீட்டை நான் பார்த்திருக்கிறேன். மிக மோசமாக அழுக்கடைந்து கிடக்கும். இப்போது நன்றாகப் பெருக்கித் துடைத்துச் சுத்தமாக இருந்தது. வீட்டினுள் புகும்வரை எனக்குப் பயமாக இல்லை. அதில் நுழைந்தவுடனே ஏதோ ஒரு திகில் என் நெஞ்சில் புகுந்துகொண்டது. மிகவும் சிரமப்பட்டு உணர்ச்சிகளை அடக்கிக்கொள்ள முயன்றேன்.



நான் வவாறு சுமார் ஐந்து நிமிஷ நேரம் என்ன செய்வதென்று தெரியாமல் கூடத்தில்

நின்று கொண்டிருந்தேன். சற்றைக்கெல்லாம் நான் அன்று மாட்டு வண்டியில் பார்த்த மனிதர் வந்தார். என்னைப் பார்த்ததும் ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு உடனே முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டார்.

" நீ வந்தது ரொம்ப நல்லது பையா. வரமாட்டேன் என்று சொல்லி விடுவாயோ என்று நினைத்தேன் !" என்றார் அவர்.

நான் பதில் சொல்லாமல் நின்றேன்.

" உன்னை எதற்காக வரச் சொன்னேன் தெரியுமா ?"

" தெரியாது."

" சோமையா ! நீ சொல்லவில்லையா இவனிடம் ?"

" சரி நானே சொல்கிறேன். உன் பெயர் என்ன, சொல்லு ?"

" ரங்கதுரை " என்றேன்.

" உனக்கு என்ன வயது ஆகிறது ?"

" எனக்கு ஒன்பது முடிந்து பத்து வயது ஆகிறது " என்று கூறினேன்.

" அப்படியா ? ரொம்ப நல்லதாகப் போயிற்று. எனக்கு உன் வயதில் வேலை செய்ய ஒரு பையன் தேவையாக இருக்கிறது. நீ என்னிடம் வந்து இருக்கிறாயா ?" என்று கேட்டார்.

நான் இதை எதிர்பார்க்கவே இல்லை. என் தந்தையைப் பற்றி ஏதோ பேசப் போகிறார் என்றும், தான் செய்த தவறுக்கு மனம் வருந்தி ஒரு வேளை பணம் கூடக் கொடுப்பார் என்றும், அப்படிக் கொடுத்தால் வாங்கிக் கொள்ள மறுத்துவிட வேண்டும் என்றும் வழியெல்லாம் எண்ணிக்கொண்டே சென்றேன். ஆகவே, நான் சிறிதும் எதிர்ப்பார்க்காத விஷயத்தை அவர் கேட்கவே திகைத்துப் போனேன்.

நான் விழித்துக்கொண்டு நிற்கும்போதே அவர், "என்னிடம் உங்க அப்பா நிறையக் கடன் பட்டிருக்கிறார். நான் மனம் வைத்திருந்தால் வீட்டைக் கூட ஜப்தி பண்ணியிருக்கலாம். ஏதோ பரிதாப உணர்ச்சியால்தான் அப்படிச் செய்யவில்லை. என்னிடம் வேலை செய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தக்கூட என்னால் முடியும். ஆனால், அப்படிச் செய்ய நான் விரும்பவில்லை. நீ மனப் பூர்வமாகச் சம்மதித்து என்னுடன் வந்துவிடு. உனக்கு நான் படிப்பதற்கு ஏற்பாடு செய்கிறேன். கவலைப்படாதே" என்றார்.

இவ்வளவு அவர் பேசிய பிறகு நான் அவருக்குப் பதில் சொல்லத்தான் வேண்டி இருந்தது.

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "எங்கம்மா தனியாக இருக்கிறாளே. அவளை விட்டுவிட்டு என்னால் ஒரு நாளும் வர முடியாது. அவளை யார் பார்த்துக் கொள்வார்கள் ?" என்றேன்.

அவர் சிரித்துவிட்டு, "உங்க அம்மாவை யாரும் பிடித்துக்கொண்டு போய்விடமாட்டார்கள். மாதா மாதம் இருபத்தைந்து ரூபாய் அவளுக்கு நான் அனுப்புகிறேன். நீ என்னுடன் உடனே புறப்பட்டு வந்துவிடு. இதற்கு நீ யோசிக்க வேண்டியதே இல்லை !" என்று சொன்னார்.

மாதம் இருபத்தைந்து ரூபாய் அம்மாவுக்கு அனுப்பு கிறேன் என்று அவர் சொன்னதும் எனக்கு அம்மா படும் கஷ்டங்கள் எல்லாம் வரிசையாகக் கண்முன்னால் வந்து நின்றன. அந்தக் கணத்தில் அப்படியே அவருடன் போய் விடலாம் என்றுகூடச் சபலம் தட்டிற்று. ஆனால், உடனே இவர் என்னை அடியோடு தொலைத்துவிடுவார் என்ற எண்ணம் வந்து நின்றது. மேலும் என் அன்னைக்கு என்னைவிடப் பணம் பெரிதாக இருக்க முடியாது. ஆகவே நான் கண்டிப்பாய் இதற்கு ஒப்புக்

கொள்ளக்கூடாது. மாட்டேன் என்றும் சொல்ல முடியாது. அதனால், அம்மாவிடம் சொல்லி உத்தரவு பெற்றுக்கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் போய் விடுவோம் என்று நினைத்துக்கொண்டு, “ அம்மாவிடம் சொல்லிப் பார்க்கிறேன் ” என்றேன்.

“ அம்மாவிடம் சொல்லி என்ன பார்ப்பது ? சொல்லி விட்டு வந்துவிட வேண்டியது. நீ வராவிட்டால் உன்னை வரவழைத்துக்கொள்ள எனக்குத் தெரியும் ” என்றார் ஈசுவரமூர்த்தி.

எனக்குக் கோபம் வந்தது. மிகவும் துயரமாகவும் இருந்தது.

ஏதோ ஒரு வகையான கதம்ப உணர்ச்சிகளுடன் நான் வீட்டுக்குப் புறப்பட்டேன். வழியில் தமிழ் வாத்தி யாரின் நினைவு வந்தது. நேரே அவர் வீட்டுக்குச் சென்றேன். அவர் வாசல் திண்ணையில் உட்கார்ந்து திருவாசகம் படித்துக் கொண்டிருந்தார். என் தோற்றத் தைப் பார்த்த உடனேயே அவருக்கு நான் மிக்கக் கவலை யோடு வருகிறேனென்று தெரிந்து விட்டது.

“ ஏன் முகத்தைத் தூக்கிக் கொண்டு வருகிறாய் ரங்கதுரை ?” என்று பரிவுடன் கேட்டார்.

நான் விஷயத்தை விவரமாகக் கூறினேன். வாத்தி யாரய்யா அதைக் கேட்டு மலைத்துப் போனார்.

# 11. அன்னையின் ஆறுதல்!

தமிழ் வாத்தியாரால் சிறிது நேரம் நான் கூறியவை களையெல்லாம் நம்பவே முடியவில்லை.

“ நீ ஏன் அவன் கூப்பிட்டதும் போனாய் ரங்கா ? இப்படி ஒரு அசட்டுக் காரியம் செய்யலாமா ? நான்

ஈசுவரமூர்த்தியைப் பற்றி எவ்வளவு சொன்னேன். அவன் பஞ்ச மகா பாதகங்களுக்கெல்லாம் அஞ்சாதவன் என்று சொல்லவில்லையா ? அதற்குப் பிறகுமா உனக்குத் தெரியவில்லை ? உன் அம்மா எப்படி இதற்குச் சம்மதித்தாள் ?'' என்று வியப்புடன் கேட்டார்.

"அம்மா வேறு விதமாக நினைத்து என்னைப் போகச் சொன்னாள். அப்பாவைப் பற்றி ஏதேனும் சமாசாரம் தெரியும் என்று தோன்றியிருக்கும். இப்படி அவர் சொல்வாரென்று யார்தான் எதிர்பார்க்க முடியும் ?'' என்றேன்.

தமிழ் வாத்தியார் சிறிது நேரம் ஆழ்ந்து யோசித்து விட்டு, "இப்போது ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை, ரங்கா. நீ அங்கே போகவேண்டாம். அவ்வளவு தான். அவர் என்னதான் செய்கிறாரென்று பார்த்து விடுவோம். நீ தைரியமாக இரு" என்று கூறினார்.

அதன் பிறகு நான் வீட்டுக்குச் சென்றேன். என் அன்னையிடம் இந்த விவரங்களைச் சொல்லும்போதே பல தடவைகள் கண்ணீர் விட்டு விட்டார். என்னைச் சேர்த்து அணைத்துக்கொண்டு விம்மினார். "ரங்கா ! இப்படிச் சொல்லுவான் அந்தப் பாதகன் என்று நான் அறிந்திருந்தால் உன்னைப் போகச் சொல்லியிருக்கவே மாட்டேனே" என்று புலம்பினார்.

நான் அவரைத் தேற்றினேன்.

"இப்போது என்ன அம்மா ஆகிவிட்டது ? நம்முடைய இஷ்டமில்லாமல் அவரால் என்ன செய்துவிட முடியும் ? தமிழ் வாத்தியார்கூட அதைத்தான் சொன்னார். மறுபடியும் அங்கே போகவேண்டாம் என்று கூறினார். நீ ஏன் அனாவசியமாக அழுகிறாய் ?'' என்றேன்.

"ஆமாண்டா, கண்ணு ! இந்தக் கொடுமைக்கு நாம் உடன்படவே கூடாது. அதை நினைத்தாலே எனக்குப்

பகீரென்கிறது. நீ இல்லாமல் என்னால் உயிர் வாழவே முடியாது. அந்த மகா பாதகன் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறானோ தெரியவில்லையே. முதலில் அவருக்கு உலை வைத்தான். இப்போது உனக்கு வைக்கிறானே. அவன் பாழும் நரகத்துக்குத்தான் போவான்'' என்று அவரைச் சபித்தார்.

நான் சிரித்து விட்டேன்.

"என்ன ரங்கா சிரிக்கிறாய்?''

"இல்லை அம்மா. அவர் எல்லோரும் போகிற நரகத்துக்குக்கூடப் போகாமல் பாழும் நரகத்துக்குத்தான் போக வேண்டுமா? போனால் போகட்டும். வெறும் நரகம் போதும் அம்மா!'' என்று விளையாட்டாகக் கூறினேன்.

"என்ன பரிகாசம் வேண்டிக் கிடக்கிறது ரங்கா. அவன் பாழும் நரகத்துக்குப் போனால் என்ன? அல்லது அவனுக்கு என்று புதிதாக நிர்மாணித்தால்தான் எனக்கென்ன? உன்னை ஒன்றும் செய்யாமலிருந்தால் போதும் எனக்கு'' என்றார் என் அன்னை.

"அம்மா! நான் ஒன்று சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டாயே?''

"ஒன்றுமில்லை அம்மா. அப்பாவுக்குத்தான் அவரிடம் நிறையக் கடன் இருக்கிறதே. அதை அடைப்பதற்குத்தானே நான் வேலை செய்ய வேண்டுமென்று ஈசுவரமூர்த்தி சொல்கிறார். நம்மால் அதைப் பணம் கொடுத்து என்றும் அடைக்க முடியப் போவதில்லை. ஆகவே நான் வேலை செய்து அப்பாவின் கடனை அடைத்துவிட்டால் என்ன? அது என் கடமை அல்லவா? அதன் பிறகு...''

"ரங்கா! நிறுத்து. உங்கப்பா கடன் பட்டபோது நம்மைக் கேட்டுக்கொண்டா பட்டார்? போதும். நீ உளராதே. எது கடமை எது இல்லை என்று எனக்குத் தெரியும். நீ சம்பாதிக்கும் காலத்தில் இரண்டு பங்காகத்

திருப்பிக் கொடுத்து விடலாம். அதைப்பற்றி இப்போது கவலைப்படாதே " என்றார்.

" இல்லை அம்மா ! அதற்குச் சொல்லவில்லை. நாம் கொடுக்கும் வரையில் அவர் காத்துக்கொண்டிருப்பாரா ? அப்பாவைப்பற்றி நாலு இடங்களில் தூற்றமாட்டாரா ? அப்பா சிறையிலிருப்பதே எனக்கு மிகவும் துயரமாக இருக்கிறது. அவருக்குக் கடனாளி என்று வேறு ஒரு பட்டம் எதற்காக இருக்கவேண்டும் ? அப்பா பட்ட கடனைப் பிள்ளை கழித்து விட்டான் என்றாவது எல்லாரும் சொன்னால் அப்பாவின் மனம், கொஞ்சம் ஆறுதல் அடையாதா என்று தோன்றுகிறது. அதற்காகத்தான் சொன்னேன், அம்மா !"

" ரொம்ப நன்றாக இருக்கிறது, ரங்கா நீ பேசுவது ! என் கனவுகளையெல்லாம் சிதற அடித்து விடாதே. நீ படித்துப் பெரிய உத்தியோ......"

" ஏம்மா ? படிப்பு எங்கே ஓடிப் போய் விடுகிறது. இரண்டு வருஷம் வேலை செய்துவிட்டுப் படிக்கிறேன். அவர்தான் என்னைப் படிக்க வைக்கிறேன் என்று சொன்னாரே."

" ஏன் ரங்கா ? உனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா ? என்னை விட்டு விட்டுப் போகிறேன் என்கிறாயா ? நான் அதற்குப் பிறகு எதற்காக உயிரோடு இருக்கவேண்டும் !" என்று உணர்ச்சியுடன் கூறிவிட்டு விம்மி அழுதார் என் அருமை அன்னை.

" அம்மா ! நீ போகவேண்டாம் என்று சொன்னால் நான் போய்விடுவேனா ? உன் வார்த்தையை மீறி நான் எப்போதாவது நடந்திருக்கிறேனா ? நீ எதற்காக அழுகிறாய் ? உன் சொல்லை மீறி நான் என்றும் நடக்கமாட்டேன். நீ கவலைப்பட வேண்டாம். நீ போகக் கூடாது

என்றால் நான் போகவில்லை. எனக்கு என் மனசில் தோன்றியதைச் சொன்னேன் " என்றேன்.

என் அன்னையின் விம்மல்கள் அதிகமாயின. அவருடைய துயரத்தைப் பார்க்கும்போது எனக்கும் கொஞ்சம் வருத்தமாக இருந்தது.

அவரை மறுபடியும் சமாதானப்படுத்த முயன்றேன்.

" அம்மா ! நீ அழுதால் எனக்கும் ரொம்ப வருத்தமாக இருக்கிறது !" என்று கூறினேன்.

" ரங்கா நான் வருத்தத்தினால் அழவில்லை. அப்பாவிடம் நீ இவ்வளவு அன்பும், அவருடைய கௌரவத்தில் இவ்வளவு சிரத்தையும் வைத்திருக்கிறாய் என்று எனக்கு இத்தனை நாளாகத் தெரியாது. அதனால் பொங்கி வந்த ஆனந்தக் கண்ணீர் இது ரங்கா. நீ வருத்தப் படாதே. அவர் வைத்துப்போன கடனை எப்படியாவது அடைக்க வேண்டுமென்ற ஆசை உன் மனத்தில் எப்படிப் புகுந்ததென்று வியப்பாக இருக்கிறது. பெருமையாகவும், இருக்கிறது, கண்ணு !"

எனக்குக் கூச்சமாக இருந்தது. பதில் சொல்லவில்லை.

சற்றுப் பொறுத்து அவரே, " ரங்கா ! நீ தமிழ் வாத்தியாரிடம் யோசனை கேட்டுக்கொள். அவரை நமக்காகத்தான் இறைவன் அனுப்பி இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இனி எதுவாக இருந்தாலும் அவரைக் கேட்காமல் செய்யாதே. முதலிலேயே அவரிடம் யோசனை கேட்டிருந்தால் இப்படி ஒரு அசந்தர்ப்பமான விஷயம் நடந்தே இருக்காது. போனால் போகட்டும். நீ உன் வேலையைக் கவனி" என்று சொல்லிவிட்டுத் தன் காரியங்களைப் பார்க்கத் தொடங்கினார்.

மறுநாள் தமிழ் வாத்தியார் என் அன்னையிடம் பேசுவதற்காக எங்கள் வீட்டுக்கு வந்தார். என் தாயார் அவரிடம் நான் சொன்னதையெல்லாம் விரிவாகக் கூறினார்.

வாத்தியார் ஐயாவின் மனம் முதலில் கொஞ்சம் இளகத்தான் செய்தது. உடனே முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு, " ரங்கா, உனக்கு மூளை சரியாகத் தானே இருக்கிறது. அவனோடு நீ போய் இருப்பதைவிட உன்னை நானே சிறையில் தள்ளிப் பூட்டி விடலாம். ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்? உனக்கு எவ்வளவோ தடவை நான் சொல்லியாகிவிட்டது. ஈசுவரமூர்த்தி உன்னை எதற்காகக் கூப்பிடுகிறான் தெரியுமா ?" என்று கேட்டார்.

" வேலை செய்ய, ஸார் !"

" அதுதான் தெரிகிறதே. என்ன விதமான வேலை ?"

" அதை எனக்கு அவர் சொல்லி விடுவாரா ஸார் ?"

" அவர் சொல்லாவிட்டால் போகட்டும். நான் சொல்கிறேன். இந்த மாதிரி மனிதர்கள், உன்னைப் போன்ற சமர்த்துக் குழந்தைகளைப் பிடித்து நன்றாகப் பழக்கம் செய்து கொடுத்துத் தவறான காரியங்கள் செய்ய வைப்பார்கள். கடைசியில் எதிலாவது மாட்டிக்கொண்டு விட்டால் காப்பாற்றவே மாட்டார்கள். ஒன்றுமே நடக்காத மாதிரி இருந்து விடுவார்கள். தங்களுக்குச் சம்பந்தமே இல்லை என்று எப்படியாவது நிரூபித்து விடுவார்கள். ஜாக்கிரதை! உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமென நான் இதைச் சொன்னேன் " என்றார்.

" இப்படியும் ஒரு அநியாயம் உண்டா ஐயா உலகத்தில் ? அவர் உண்மையிலேயே வேலைக்குத்தான் கூப்பிடுகிறார் என்று நினைத்துக் கொண்டிருந்தேன் " என்று கூறினார் என் அன்னை.

" உலகம் நீங்கள் அறிந்துகொண்டிருப்பதைவிடப் பொல்லாதது அம்மா ! உங்கள் தைரியத்தினால்தான் ரங்கதுரை பெரியவனாகி அமோகமாக வரவேண்டும். நீங்கள் கவலைப்பட வேண்டாம். ஈசுவரமூர்த்தியின் கண்

களில் படாமல் ரங்கதுரை இருக்கவேண்டியது. அது ஒன்றுதான் இப்போது நாம் செய்ய முடிகிற விஷயம். நாளை ஆள் வந்தாலும் அவன் இல்லை என்று கூறி விடுங்கள்" என்று சொல்லிவிட்டு வாத்தியார் ஐயா போய்விட்டார்.

அதே மாதிரி மறுநாள் ஒரு ஆள் வந்தான். அவன் உடனே ரங்கதுரையை ஈசுவரமூர்த்தி அழைத்துக் கொண்டு வரச் சொன்னதாகக் கூறினான்.

என் அன்னை நிச்சயமாக மறுத்துவிட்டார்கள். "ரங்க துரை ரொம்பக் குழந்தை. அவனால் வேலை ஒன்றும் செய்ய முடியாது. அவனை அனுப்பச் சௌகரியமில்லை என்று மிராசுதாரிடம் சொல்லி விடுங்கள்" என்றார். வந்த ஆளும் திரும்பிச் சென்றுவிட்டான். ஆனால், எனக்கு மனம் சமாதானமடையவே இல்லை. ஏதாவது விபரீதம் நடந்துவிடுமோ என்ற கவலை என்னுடைய உள்ளத்தை அரித்துக்கொண்டே இருந்தது.

அதற்குப் பிறகு சில நாட்கள் ஒன்றும் நடக்கவில்லை. பத்து நாட்களுக்குப் பின் மிராசுதார் ஈசுவரமூர்த்தி ஊருக்குப் போய்விட்டார் என்று கேள்விப்பட்டேன். அதன் பிறகுதான் என் மனம் சமாதானமடைந்தது.

அவர் ஊருக்குப் போய்விட்டாரா என்பதை ஊர்ஜிதம் செய்து கொள்வதற்காக நான் உடனே அவருடைய வீட்டுப் பக்கம் சென்றேன். வாசலில் பெரிய பூட்டு தொங்கியது. நல்ல வேளையாக அவர் என்னை அடியோடு மறந்துவிட்டார் என்று எண்ணிக்கொண்டே வீடு வந்து சேர்ந்தேன்.

என் அன்னையிடம், "அம்மா! ஈசுவரமூர்த்தி ஊருக்குப் போய்விட்டார். இனிமேல் நீ கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம்" என்றேன்.

அவருடைய முகம் தெளிவடைந்தது.

. "நிஜமாகவா துரை? அவன் மகாராஜனுக இருக்கட்டும்" என்ருர். அவர் என்னை அழைத்துக்கொண்டு போகவில்லை என்பதனுல் அம்மாவுக்கு, ஈசுவரமூர்த்தி என் தந்தையைச் சிறையில் தள்ளியதுகூட மறந்து விட்டது.

நான் சிரித்தேன். "பத்து நாளைக்கு முன்னுல் பாழும் நரகத்துக்குப் போகவேண்டுமென்று சபித்தாயே. அதற்குள் மறந்து போய்விட்டதா?" என்றேன்.

நான் சொல்வதற்காக என்ன நடக்கப் போகிறது துரை? எல்லாவற்றையும் இறைவன் பார்த்துக்கொண்டு தான் இருக்கிருர். அவருக்கு யாரை என்ன செய்ய வேண்டுமென்று தெரியும். உன்னை அவர் ஒரு குறைவும் இல்லாமல் வைப்பார். அதில் சந்தேகமே இல்லை" என்ருர்.

அவர் அப்போதும் அப்படித்தான் சொன்னுர். ஒரு குறைக்கு மேல், இன்னொரு குறையாக வந்து நாங்கள் திக்குமுக்காடியபோதும் அவர் அதையே சொன்னுர். இன்று, இத்தனை துயரங்களுக்கும் இடையே அவருடைய வார்த்தைகள் எனக்குத் துணையாக நிற்கின்றன.

# 12. அக்னிக் குழம்பு

சிறு வயதிலேயே எனக்கு அதிகாலையில் மிக சீக்கிரம் எழுந்திருக்கும் வழக்கம் உண்டு. என் அன்னை என்னை அப்படிப் பழக்கி வைத்திருந்தார். அந்த நல்ல வழக்கம் எனக்கு இங்கிலாந்தில் படித்த காலத்தில் போய் விட்டது. ஆனுல், இந்து சிறைப்பட்ட பிறகு எனக்கு அடியோடு தூக்கமே இல்லாமல் போய்விட்டது.

இந்து சிறையில் இருக்கிருள். தன்னந் தனியாக இருக்கிருள். அவளே அங்கே விட்டுவிட்டு நான் இங்கே குங்குமத்துறையில் உட்கார்ந்து என் கதையை எழுதிக் கொண்டிருக்கிறேன். அதை நினைத்தால் அப்படியே என்னைத் தூக்கிப் போடுகிறது.

நான் இங்கே வருவதற்குமுன் இந்துவைப் பார்க்கப் போயிருந்தபோது அவள் என்னுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களையெல்லாம் ஒன்றுவிடாமல் எழுதித் தரவேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். அவள் அதைக் கேட்ட விதம் என்னை உலுக்கி எடுத்து விட்டது. " உங்களைப் பற்றி என்னல் வேறு எப்படித் தெரிந்து கொள்ள முடியும் ?" என்று கேட்டாள். அதில் அவளே அறியாமலேயே தொனித்த ஏக்கத்தைக் கண்டு என்னுடைய நெஞ்சம் துடித்தது.

நான் இப்போது பாதிரித் தோட்டத்தில் நானும் இந்துவும் சந்தித்த அதே புன்னை மரத்தடியில் உட்கார்ந் திருக்கிறேன். மணி ஐந்தரை ஆகிறது என்று என் கைக் கடிகாரம் காட்டுகிறது. இலேசாக வெளிச்சம் பரவ ஆரம் பித்திருக்கிறது.

இதே சூழ்நிலையில் நாங்கள் இருவரும் ஏழு வருஷங் களுக்கு முன்னல் சந்தித்தபோது இந்தத் தோட்டம் இன்ப வனமாகத் திகழ்ந்தது. இப்போது அதே இடம் சோகவனமாகத் தோன்றுகிறது.

இந்த மங்கலான வெளிச்சத்தில் இந்தத் தோட்டம் அற்புதமாகத் திகழ்கிறது. ஆயினும் அந்த அற்புதத்துக்கு இடையே இந்துமதியின் சௌந்தர்யம், துயரச்சாயை படிந்திருப்பதுபோல, சோகம் பரவிக் கிடக்கிறது. இந்தச் சோக சித்திரத்தைப் பார்க்கும்போது இந்துவையே பார்ப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது.

அதிகாலே வேளைதான் எவ்வளவு இனிமையானது ? என்ன ரம்யமாக இருக்கிறது. அனலாகக் கொதிக்கும்

என் நெஞ்சத்தையும் (இ)ந்தக் குளிர்ந்த காற்று சற்று ஆறச் செய்கிறது.

இந்த இருள் நீங்கி ஒளி பரவும் அற்புதத்தைப் பார்க்கும்போது எனக்கு உற்சாகமே உண்டாகிறது. என் வாழ்க்கையிலும் இதே போலப் பொழுது புலர்ந்து விடும் என்ற நம்பிக்கை மனத்தின் அடிவாரத்திலிருந்து எழுகிறது.



நான் சிறு வயதில் நிகழ்ந்த சம்பவங்களையெல்லாம் எழுதுவதால், நான் பிறந்து வளர்ந்த கிராமமான அல்லிக்குளத்தின் நினைவு வருகிறது. அதிகாலையில் ஸ்நானம் செய்யக் குளத்துக்குப் போய்விட்டு, குளிக்க மனம் வராமல் கரையின்மீது உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பேனே! அது படம் மாதிரி என் கண் முன்னால் வந்து நிற்கிறது.

மலை சூழ்ந்த பிரதேசமான குங்குமத்துறையில் பொழுது புலர்வது ஒரு விதமான அழகு என்றால், அல்லிக் குளத்தில் வேறு ஒரு விதமான அழகு.

ஐந்து மணிக்கு என் அன்னை என்னை எழுப்பியதும் குளத்தங்கரைக்குச் செல்வேன். போகும்வரை உற்சாகமாக இருக்கும். தண்ணீரின் அருகில் சென்றதும் குளிக்கச் சோம்பலாக இருக்கும். இரண்டு விரல்களால் தண்ணீரைத் தொட்டுப் பார்ப்பேன். ஜில்லென்று கையைக் கடிப்பது போலிருக்கும். அதன் பிறகு முழங்காலைக் கட்டிக்கொண்டு குளக்கரையில் உட்கார்ந்து விடுவேன்.

இலேசான வெளிச்சம் பரவ ஆரம்பிக்கும் சமயத்தில் ஒரு சப்தம் இருக்காது. ஒரே அமைதியாக இருக்கும்.

இந்த உலகில் உயிரே இல்லையோ என்று தோன்றும். கிழக்குத் திசையில் சிவப்பு ரேகைகள் படர ஆரம்பிக்கும் அழகை மெய்மறந்து பார்த்துக்கொண்டிருக்கும் போதே திடீரென்று ஒரு சிறிய சப்தம் கேட்கும். திரும்பிப்பார்த்தால் ஒரு குருவி தத்தித் தத்தி வரும். அதைப் பார்த்துக்கொண்டிருக்கும்போதே இன்னொன்று வரும். அதன் பிறகு கூட்டம் கூட்டமாக எங்கிருந்தோ குருவிகள் வந்துகொண்டே இருக்கும். ஐந்து நிமிஷங்களில் பலவிதமான பறவைகளின் இனிமையான குரல் ஒலிகள் கேட்க ஆரம்பிக்கும்! காகம் கரையும். திடீரென்று ஒரு அணில் வெகு வேகமாக ஓடி வரும். "கீச்! கீச்!" என்று அது தன் சின்னஞ் சிறு கண்டத்திலிருந்து எழுப்பும் பெரிய சப்தத்தைக் கேட்கும்போது அது என்னுடன் ஏதோ பேச முயற்சிப்பதுபோலவே எனக்குத் தோன்றும்.

அந்த இனிமையான காட்சிகள் இன்னும் என் கண் முன்னால் பசுமையாக நிற்கின்றன. அதிகாலை நேரத்தில் உலகமே கண் விழிக்கும் வேளையில், இறைவனும் துயிலெழுவார் போலும்.

இன்று இங்கும் அதேமாதிரி பறவைகள் கத்துகின்றன. வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன. புஷ்பங்கள் கொத்துக் கொத்தாய் மலர்ந்து பகலவனை வரவேற்கின்றன.

இதைப் பார்க்கும்போது சிருஷ்டியின் தொடக்கம் இப்படித்தான் இருந்திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. நான் விஞ்ஞானரீதியாகச் சொல்லவில்லை. ஆனால், உலகத்தில் உயிர்கள் தோன்றிய காலம் எப்படி இருந்திருக்க வேண்டுமென்று எனக்கு இதைப் பார்க்கும்போது ஒருவாறு விளங்குகிறது. நான் இந்த ஜீவராசிகள் உயிர் பெற்று எழுவதைப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல, இறைவனும் அப்போது பார்த்து ரசித்துக்கொண்டிருந்திருப்பாரோ எனத் தோன்றுகிறது.

வேகமாகப் படிகளில் இறங்கி வந்து, " டேய்! யாரடா கத்தினது? இங்கே வாடா. உன்னுடைய தோலை உரித்து விடுகிறேன் " என்றான்.

அவனுடைய தோற்றம் விநோதமாக இருந்தபடியாலும், கையை ஆட்டி ஆட்டி அவன் பேசிய விதத்தாலும் மாணவர்களுடைய உற்சாகம் அதிகமாகி விட்டது. எல்லோரும் சிரித்தார்கள். நான் சுந்தரத்தின் சட்டையைப் பிடித்து இழுத்து, " வேண்டாம்! உன் வாலை இங்கே காட்டாதே. போய் விடுவோம் " என்றேன்.

" டேய்! ரங்கதுரை மீசைக்காரனைப் பார்த்துப் பயந்துட்டாண்டா " என்று சத்தம் போட்டான் சுந்தரம். இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறது? ஆனால் அத்தனை பேரும் சேர்ந்து சிரித்தார்கள். ஏற்கனவேயே நான் நன்றாகப் படிக்கும் மாணவன் என்பதால் என்னிடம் அவர்களுக்கு அசூயை உண்டு. காரணமில்லாமலேயே மட்டம் தட்டுவார்கள். கொஞ்சம் காரணம் கிடைத்துவிட்டால் போதாதா ரகளை செய்ய? என் தலையில் ஒரு பையன் நறுக்கென்று குட்டினான். இன்னொருவன் எழும்பிக் குதித்துச் சோமையாவின் மீசையைப் பிடித்து இழுத்துடான்.

அவ்வளவுதான்! சோமையா இரண்டு கைகளாலும் அருகில் அகப்பட்ட பையனை இரண்டு அடி வைத்தான். அவன் சுருண்டு விழுந்து விட்டான். உடனே என்னுடைய சகாக்களின் ஆத்திரம் வெறியாகக் கிளம்பி விட்டது. தெருவில் கிடந்த கற்களை எடுத்து வீச ஆரம்பித்தார்கள். ஈசுவரமூர்த்தியின் வீட்டிற்குள் சில கற்கள் போய் விழுந்தன. எனக்கு இரண்டு அடி கிடைத்தது. யார் யாரை அடித்தார்கள்



ஏன்பதுகூடப் புரியவில்லை. திடீரென்று ஒரு இரும்புக் கரம் என் கையை அழுந்தப் பிடித்தது. திரும்பிப் பார்த்தேன். நெற்றியிலிருந்து ரத்தம் சொட்டச் சோமையா பயங்கரமான தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்தால் மனிதன் மாதிரியே அப்போது தோன்றவில்லை. காட்டேரி, முனி என்று சொல்லுவார்களே அந்தமாதிரி இருந்தது.

நான் திகைத்து நிற்கும்போதே ஒவ்வொருவராக எல்லோரும் ஓடிவிட்டார்கள். அடிபட்டுச் சுருண்டு விழுந்த பையனைக்கூடக் காணோம். வீட்டு வாசலில் ஈசுவரமூர்த்தி நிற்பதைப் பார்த்தேன். அவருடைய முகத்தில் குரோதம் கொதித்தது. எள்ளைப் போட்டால் வெடித்திருக்கும். அப்படிப் பழுக்கக் காய்ந்த சட்டியைப்போல இருந்தது அவர் முகம்.

சோமையா என்னை உள்ளே இழுத்துக்கொண்டு போனான். நான் திமிறிப் பார்த்தேன். முடியவில்லை. "என்னை விட்டுவிடு. நான் ஒன்றும் செய்யவில்லையே?" என்றேன்.

" விட்டு விடுவதா ? உன்னை அப்படியே கொல்லப் போகிறேன். இங்கே கலாட்டா பண்ணுவதற்கு ஆள் சேர்த்துக்கொண்டு வந்தாயா ? இத்தனை கெட்டிக்காரன் நீ என்று எங்களுக்குத் தெரியாதே " என்றான் சோமையா.

ஈசுவரமூர்த்தி, " ஏய் ! சோமையா ! அந்தப் பையனுடன் உனக்கென்ன பேச்சு ? அவனை இழுத்துக்கொண்டு உள்ளே தள்ளிப் பூட்டு. நான் அவனுடைய அருமை அம்மாவுக்குச் சொல்லி அனுப்புகிறேன் " என்றார்.

என் நெஞ்சம் அப்படியே துடிதுடித்துப் போயிற்று. நான் கொஞ்சங்கூட நினைக்காத ஒரு விஷயம் இப்படி நடந்துவிட்டதே என்று மலைத்துப் போனேன். அதன் பிறகு என்னால் திமிறக்கூட முடியவில்லை. உடலெல்லாம்

பதறிற்று. ‘ ஐயோ ! அம்மாவுக்குத் தெரிந்தால் எப்படித் துடித்துப் போவாள் ?’ என்று உள்ளம் வெம்பியது.

என் சிந்தனைகள் முடிவதற்குள் சோமையா என்னை வீட்டுக்குள் இழுத்துச் சென்று ஒரு அறையில் தள்ளினான். கதவைச் சாத்தியதும் வெளியே தாழ்ப்பாள் பலமாகப் போடப்பட்ட சத்தம் காதில் விழுந்தது.

என் உடலிலிருந்து திடீரென்று சக்தியெல்லாம் எங்கேயோ போய்விட்டது. அப்படியே பிரமித்துப் போய் உட்கார்ந்து விட்டேன்.

# 13. மனித உருவம்

ஒரு யுகம் என்று எனக்குத் தோன்றிய காலத்துக்குப் பிறகு அந்த அழுக்கடைந்த அறையின் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. திகைப்பினாலும், அடிபட்டதாலும் எனக்கு உடலும் உள்ளமும் ஒருங்கே சோர்ந்திருந்தன.

எல்லாவற்றையும்விட, “ கலாட்டா செய்வதற்கு வந்தாயா ?” என்று சோமையா கேட்ட கேள்வி என்னை உறுத்திக்கொண்டே இருந்தது. ‘ ஐயோ ! இதை அம்மா கேட்டுவிட்டால் என்னைப் பற்றி என்ன நினைப்பார் ? ஆனால் அம்மாவுக்கு என்னைப் பற்றித் தெரியும். இப்படிச் சொன்னாலும் நம்பமாட்டார். தமிழ் வாத்தியார் தான் என்ன நினைப்பார் ? அவர்கள் நினைப்பது கிடக்கட்டும். எவ்வளவு வருத்தப்படுவார்கள் ? என்ன கவலைப்படு வார்கள் ? இப்படி எக்கச்சக்கமாக வந்து மாட்டிக் கொண்டோமே. நான் இந்தப் பையன்களுடன் மாங்காய் அடிக்க வராமலிருந்திருக்கக் கூடாதா ?

இன்றைக்கு மட்டும் எப்படியாவது இங்கிருந்து வீடு போய்ச் சேர்ந்து விட்டால், பிறகு அந்த சுந்தரம்

முதலானவர்களுடன் சேரவே கூடாது. மாங்காய் அடிக் மாந்தோப்புக்குப் போகவே மாட்டேன்.

இப்படி இந்த அறையில் அடைத்து விட்டார்களே! இனிமேல் என்ன செய்வது? என்னை இப்படியே எங்கே யாவது தெரியாத ஊருக்கு அழைத்துக்கொண்டு போய் விடுவாரோ? வாத்தியாரையா முன்பு சொன்ன மாதிரித் தவருன காரியங்கள் செய்யச் சொல்லுவாரோ? ஆனல், என்னை இவர் பிடித்து இங்கே வைத்திருப்பது மற்றப் பையன்களுக்கெல்லாம் தெரியுமே. என் பேரில் அவர் களும் பழியைப் போட்டால்கூட நான் இங்கே இருப்பதை வாத்தியாரையாவிடமாவது சொல்லாமலிருக்கமாட்டார்கள். அவர் வந்து நிச்சயமாய் என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டு போய்விடுவார்' என்று நினைத்துக் கொண்டிருந்த சமயத்தில்தான் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. நான் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தேன். ஒருவேளை வாத்தியாரையாதான் வந்திருக்கிருரோ என எண்ணி னேன். கதவைத் திறந்தபோதுதான் நன்ருக இருட்டி விட்டதென்று தெரிந்தது. கூடத்தில் ஒரு விளக்குத்தான் எரிந்தது. அதன் மங்கலான வெளிச்சத்தில் ஈசுவா மூர்த்தி ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. நான் எதிர்பார்த்தபடி அங்கே யாரும் இல்லை. ஈசுவர மூர்த்தி மட்டும்தான் இருந்தார். என்னுடைய உடல் முழுவதிலும் ஒருவித நடுக்கம் பரவியது.

சோமையா என்னை அவர் முன்னல் நிறுத்திவிட்டு அவருக்குப் பின்னல் போய் நின்ருன். நான் நடுங்கும் நெஞ்சத்துடனும், பதறும் உடலுடனும் அவரெதிரில் நின்றேன். என் மூளையே ஸ்தம்பித்துப் போய்விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். ஒன்றுமே விளங்க வில்லை. 'எனக்கு என்ன ஆகிவிட்டது? ஏன் இப்படிப் பயந்து நடுங்க வேண்டும்?' என்று என்னையே கேட்டுக்

கொண்டேன். ஈசுவரமூர்த்தியின் குரல் என்னைச் சிந்தனை உலகத்திலிருந்து பூவுலகுக்கு வரச் செய்தது.

" என்ன துரை ! ரொம்பக் கெட்டிக்காரப் பையனாக இருக்கிறாயே " என்றார்.

அதில் தொனித்த ஏளனம் என்னைச் சுட்டது. அவருடைய முகம் மங்கலான வெளிச்சத்தில் மிகவும் விகாரமாக இருந்தது. அவரைப் பார்க்கச் சகிக்காமல் தலையைக் குனிந்து கொண்டேன்

" உன்னுடைய முழுப் பெயர் ரங்கதுரைதானே ?" என்று கேட்டார்.

" ஆமாம் " என்றேன்.

" நான் சொல்கிறபடி கேட்கிறாயா ?"

" விஷயம் என்னவென்று சொல்லுங்கள். யோசனை செய்துதான் ஒப்புக்கொள்ள முடியும்."

" ஏய் ! என்னை என்ன நீ கிள்ளுக்கீரை என்று நினைத்தாயா ? உன்னை என்ன செய்வேன் தெரியுமா ?"

" என்ன வேண்டுமோ செய்து கொள்ளுங்கள் " என்றேன். இப்படி நான் சொல்லும்போதே சோமையா சற்று நகரவே, அங்கே தொங்கிய ஒரு பெரிய சாட்டைக் கயிறு என் கண்ணில் பட்டது.

அதைப் பார்த்ததும் என் வயிற்றை என்னவோ செய்தது. சோமையாவின் தோற்றமோ சாட்டையை விடக் குரூரமாக இருந்தது. எனக்கு என்னமாக இருந்திருக்கும் ? அந்த வயதில் இந்த மாதிரி நிகழ்ச்சிகள் வரும் கதைகளைக்கூட நான் படித்ததில்லை.

ஈசுவரமூர்த்திக்கு என் பதிலைக் கேட்டு மிகவும் ஆத்திரம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால், அவர் சமாதானமாகக் காரியத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்பினார் போலிருக்கிறது. சற்று நிதானித்து விட்டு மறுபடியும் ஆரம்பித்தார்.

" ரங்கதுரை ! நீ புத்திசாலிப் பையன் என்று எனக்குத் தெரியும். உன் பள்ளிக்கூடத்தில் விசாரித்தேன். நீ ரொம்ப நல்ல பையன் என்றும், நீ படிப்பில் ரொம்பக் கெட்டிக்காரன் என்றும் அங்கே சொன்னார்கள். உன்னை முன்னுக்குக் கொண்டு வருவதை நான் என்னுடைய பொறுப்பாக ஏற்றுக் கொள்கிறேன். உன்னை நன்றாகப் படிக்க வைக்கிறேன். என்னுடன் வருவதாக ஒப்புக் கொண்டு விடு " என்றார்.

" ஒப்புக்கொள்ளா விட்டால் ?........."

" நீயாக ஒப்புக்கொள்ளா விட்டால் உன்னைச் சம்மதிக்க வைப்பதற்கு எனக்குத் தெரியும்."

" நான் எதற்காக என் அம்மாவை விட்டு விட்டு வரவேண்டும் ? என்ன செய்ய வேண்டுமென்று சொல்லவே மாட்டேனென்கிறீர்களே !"

" உன்னிடம் ஒன்றும் விவரித்துக் கொண்டிருக்க முடியாது. நீ இப்போது இந்தக் காகிதத்தில் உன் அம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுக்கவேண்டும் " என்றார்.

" என்ன எழுத வேண்டும் ?"

" நீ மனப்பூர்வமாகச் சம்மதித்து என்னுடன் வருவதாக எழுதித் தரவேண்டும் " என்று கட்டளையிட்டார்.

எனக்கு அதைக் கேட்டபோது என்னமாக இருந்தது தெரியுமா ? நான் அப்படி எழுதிக் கொடுத்தேனென்றால் அம்மா என்ன நினைப்பாள் ? வாத்தியாரையாதான் என்ன எண்ணுவார் ? பிறகு இவர் என்னை என்ன செய்வாரோ ? ஒருவேளை அதன் பிறகு அம்மாவை இந்த ஜன்மத்தில் பார்க்க முடியாமலேயே போய்விடலாம். ஐயோ ! இதற்குச் சம்மதிக்கவே கூடாது. அடித்துக் கொன்றாலும் சரி ' என்று மனதுக்குள் எண்ணிக் கொண்டேன்.

"நான் எழுதவே மாட்டேன்" என்று மறுத்துக் கூறினேன்.

அத்தனை குழப்பங்களுக்கும் மத்தியில் எனக்குத் தைரியம் மாத்திரம் போகவில்லை. அறையில் தள்ளிப் பூட்டியபோது இருந்த பயம் பறந்துபோய் விட்டது. வாத்தியார் ஐயா கூறியது பளிச்சென்று நினைவுக்கு வந்தது. உண்மையில் அவருடைய எச்சரிக்கையும், தெய்வானுகூலத்தால் வந்த இன்னொரு எதிர்பாராத உதவியும்தான் அன்று என்னைக் காத்தன.

வாத்தியாரையாவை நினைத்ததும் ஒரு அசாதாரண மான துணிவு எனக்கு ஏற்பட்டது. நான் வயதில் மிகச் சிறியவனை போதிலும் அந்தச் சமயத்தில் பெரி யவன் மாதிரி நடந்துகொண்டேன். வாத்தியாரையா என் நெஞ்சத்தில் நிறைந்துவிட்டார்.

இடி இடிப்பதுபோல் ஈசுவரமூர்த்தி இரைந்தார். "ரங்கதுரை! நான் சொல்வதைக் கேட்காவிட்டால் சோமையாவை விட்டு உன் முதுகுத் தோலை உரித்துவிடச் சொல்லுவேன்" என்றார்.

"எங்கம்மாவை விட்டு நான் எப்படி வருவேன்? அப்பாவையும் நீங்கள் ஜெயிலில் போட்டுவிட்டீர்கள். என் அன்னை என்னைப் பார்க்காவிட்டால் செத்தே போய் விடுவாளே, ஸார்" என்றேன். என்னுடைய படபடப்பில் என்ன சொல்லுகிறேன் என்றே எனக்குத் தெரியவில்லை.

"உங்கம்மா செத்துத்தான் போகட்டுமே. அவள் போய்விட்டால் இந்த உலகத்துக்கு மகத்தான நஷ்டம் ஏற்பட்டுவிடுமோ?"

அதைக் கேட்டதும் என் உடலில் உள்ள ஒவ்வொரு நரம்பும் முறுக்கேறிவிட்டது. என் அருமை அம்மாவை, ரொம்ப நல்லவளான என் அம்மாவைப் பற்றி அவர் அப்படிச் சொன்னதும் என்னால் பொறுக்க முடியவில்லை.

இவரை அடித்துவிட்டால் என்ன என்று தோன்றியது. பக்கத்தில் கிடந்த மேஜைமீது என் கண் சென்றது. அதன்மீது சில காகிதங்களும், பேனாவும் வைக்கப்பட்டிருந்தன. காகிதம் பறக்காமல் இருக்க அதன்மீது கண்ணாடியால் செய்த "பேப்பர் வெயிட்" வைக்கப்பட்டிருந்தது. 'அதை எடுத்து அவர்மீது வீசி விட்டால் என்ன ?' என்ற எண்ணம் எனக்கு எழுந்தது.

அதற்குள் ஈசுவரமூர்த்தி தொடர்ந்தார். "திருட்டுப் பயலுடைய மகனுக்குக்கூட, கௌரவத்துக்கும் வீம்புக்கும் குறைவில்லை. இந்தப் பையனுக்கு இருக்கும் திமிரைப் பார், சோமையா ! இவனுடைய அம்மாவைப்பற்றி ஒன்றும் சொல்லக் கூடாதாம். இத்தனை சின்னப் பையன் இன்று என்ன கலாட்டா பண்ணிவிட்டான் ? எல்லாம் அந்த ரௌடியின் பிள்ளைதானே ? கந்தசாமி திருட்டுத் தனம் பண்ணிவிட்டு என் தலையை வேறு சேர்த்து உருட்ட வில்லையா ?" என்றார்.

அதற்குமேல் என்னால் பொறுக்க முடியவில்லை. என் அப்பாவை இவன் காட்டிக் கொடுத்ததுமல்லாமல் இப்படிச் சொல்கிறானே என்று எனக்குத் தாங்க முடியாமல் கோபம் வந்தது. சடார் என்று பாய்ந்து அந்தப் பேப்பர் வெயிட்டை எடுத்து ஈசுவரமூர்த்தியை நோக்கிப் பலம் கொண்ட மட்டும் வீசினேன். அது அவருடைய தலையின் மேல் உரசிக்கொண்டு போய், அவருக்குப் பின்னால் கலீரென்ற சத்தத்துடன் விழுந்து நொறுங்கிச் சிதறியது.

சோமையா பாய்ந்து ஓடி வந்தான். "டேய் ! என்னடா கழுதை ? என்ன செய்தே !" என்று சொல்லிக் கொண்டே என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்து முறுக்கினான். நான் வலி தாங்காமல் துடித்துப் போனேன். "ஐயோ ! ஐயோ !" என்று கதறினேன்.

ஈசுவரமூர்த்தி எழுந்து நின்றவர் மறுபடியும் உட்கார்ந்தார்.

"சோமையா இந்தப் பையன் நல்லபடியாகச் சொன்னால் செய்ய மாட்டான். ரொம்பத் துள்ளுகிறான். நீ உன் காரியத்தைச் செய்" என்றார்.

சோமையா சுவரில் தொங்கிய சாட்டையை எடுத்துக் கொண்டு வந்தான். என் உடம்பிலுள்ள ரத்தமெல்லாம் அதைப் பார்த்த உடனே சுண்டிப் போய்விட்டது.

'இவர் கேட்பதுபோல் எழுதிக் கொடுத்து விட்டால் என்ன ? இந்தச் சாட்டையால் அடி வாங்குவதைவிட எழுதிக் கொடுத்து விடலாம். வாத்தியாரையா எப்படி யாவது காப்பாற்றுவார்' என்று எண்ணினேன்.

உடனே அந்த எண்ணத்திலிருந்த கோழைத்தனம் என் உடலைக் கூசச் செய்தது.

ஈசுவரமூர்த்தி அப்போது என்னைப் பார்த்து, "சொன்னதைக் கேட்கிறாயா ? இல்லாவிட்டால் சாட்டை யால் அடி வாங்குகிறாயா ?" என்று கேட்டார்.

சோமையா என்னை நெருங்கி வந்தான். சாட்டையை ஒரு சொடக்குச் சொடக்கினான். என்னைப் பார்த்து, "அன்னிக்கு வெறும் மாட்டை அடிக்கிற சாட்டையாலே அடி வாங்கினே. இன்னிக்குத்தான் நிஜமாக அடி வாங்கப் போறே" என்றான்.



எனக்கு எப்படி இருந்திருக்கும் என்று யாராலும் ஊகிக்கக்கூட முடியாது. அந்த நிலையில் எப்போதாவது இருந்திருந்தால்தான் மனத்தின் கொந்தளிப்புகள் புரிய முடியும்.

எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு இன்று அதை நினைக்கும்போதுகூட ஒருவிதமான நடுக்கம் ஏற்படுகிறதே! அன்று எப்படி இருந்திருக்கும் ?

" நீங்கள் சொன்னபடி செய்கிறேன் " என்று சொல்வதற்காக நான் வாயைத் திறந்தேன். அந்தச் சமயத்தில் முற்றத்தில் ஒரு பெரிய வஸ்து பொத்தென்று விழுந்தது. முதலில் ஏதோ கனமான வஸ்து என்றுதான் தோன்றியது. ஒரு கணத்திற்குப் பிறகு அது ஒரு மனித உருவம் என்று தெரிந்தது. சோமையாவின் ஓங்கிய கை தாழ்ந்தது. ஈசுவரமூர்த்தி எழுந்து நின்றார்.

# 14. விந்தை மனிதர்!

குதித்த உருவம் நேரே ஈசுவரமூர்த்தியை நோக்கி வந்தது. விளக்கின் ஒளி அந்த உருவத்தின் முகத்தில் பட்டதும், எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அந்த உருவம் முகமூடி அணிந்திருந்தது. நான் அந்த வயதில் முகமூடி அணிந்த திருடர்களைப் பற்றிய கதைகள்கூடப் படித்ததில்லை. " என்ன ஆகப் போகிறது? என்ன ஆகப் போகிறது ?" என்று என் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் கேட்டது. அந்த மனிதர் மேலிருந்து என் கண்களை அகற்றவே முடியவில்லை. உடலில் விவரிக்க முடியாத ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

நான் ஆச்சரியமும், திகைப்பும், பயமும் சேர்ந்த ஒரு நிலையில் அந்த விந்தை மனிதர் ஈசுவரமூர்த்தியின் அருகில் நிதானமாக நடந்து வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஈசுவரமூர்த்திக்கு ஒரு கஜ தூரத்தில் அவர் வந்ததும் நின்றார். " நான் வந்துவிட்டேன். என் உடம்பில் உயிர் இருக்கும் வரையில் நீ இந்தமாதிரி துஷ்கிருத்தியங்கள் செய்வதைப் பார்த்துக்கொண்டிருக்க மாட்டேன். எங்கே இருந்தாலும் வந்துவிடுவேன். இது ஞாபகமிருக்கட்டும் " என்றார்.

ஈசுவரமூர்த்தி பதில் பேசவே இல்லை. எனக்கு என் அருகில் சோமையா நின்று கொண்டிருந்தது கூட மறந்து போய்விட்டது. அந்தப் புதிய மனிதரின் பேச்சு என் மனத்தைக் கொள்ளை கொண்டுவிட்டது.

புது மனிதர் தொடர்ந்தார்: "கந்தசாமியின் பிள்ளையை இந்த மாதிரி ஏதாவது செய்வாய் என்று நான் எதிர்பார்த்தேன். என்னை ஏமாற்றி ஒரு காரியமும் நீ செய்ய முடியாது" என்று சொல்லும்போது சோமையா பாய்ந்து முன்னால் சென்றான். சாட்டையை ஓங்கி அந்தப் புதிய மனிதர்மீது வீசினான். நான் கலங்கிப் போய்விட்டேன். ஆனால், என்ன அதிசயம்? அந்த மனிதருக்கு மாத்திரம் தெரியும்போலிருக் கிறது. அந்தச் சாட்டைக் கயிறு அவரை நெருங்கிய போது லாகவமாக அதைத் தம் கையால் பிடித்துக் கொண்டார். உடனே அதைக் கையில் ஒரு சுற்றுச் சுற்றிக்கொண்டு ஒரு சுண்டுச் சுண்டினார். அதில் என்ன தந்திரம் இருந்ததோ? சோமையா ஒரு மூலையில் போய் விழுந்தான். அந்தச் சாட்டையைச் சரியாகப் பிடித்துக் கொண்டு சோமையாவின் அருகில் ஓடினார் அந்த முகமூடி மனிதர். ஓங்கியும் விட்டார். பிறகு அதை அவன்மீது எறிந்துவிட்டு, "உன்னை எதற்கு நான் அடிக்க வேண்டும்? எப்படியாவது நாசமாய்ப் போ" என்று சொல்லிவிட்டுத் திரும்பினார்.

அவர் திரும்பியதும் நான், "ஐயோ" என்று கத்தி விட்டேன். சோமையா சாட்டையை எடுத்து மறுபடியும் ஓங்கிவிட்டான். படீரென்று சப்தம் கேட்டது. முகமூடி மனிதரின்மீது அடி விழுந்ததோ இல்லையோ தெரிய வில்லை. அந்த இடத்திலிருந்த ஒரே ஒரு மங்கலான விளக்கின் வெளிச்சத்தில் ஒன்றும் சரியாகத் தெரிய வில்லை. இரண்டு பேரும் அடித்துக் கொண்டார்கள்.

அத்தனை நேரம் நின்றுகொண்டேயிருந்த ஈசுவர மூர்த்தி அப்போது இருவரும் சண்டை போட்டுக்கொண்டிருந்த இடத்துக்கு ஓடினார். புதிய மனிதரை அவரும் தாக்கினார். சோமையா தன் கையிலிருந்த சாட்டையை ஓங்க முடியாதபடி முகமூடி மனிதர் அவன் கையை முறுக்கிக் கொண்டிருந்தார். அப்போது ஈசுவரமூர்த்தி அவர்மீது பாயவே, புதிய மனிதர் சோமையாவின் முகத்தை நோக்கி ஓங்கி ஒரு குத்து விட்டார். சோமையா கீழே விழுந்தான்.

இரண்டு பேரும் சற்று நேரம் துவந்த யுத்தம் செய்தார்கள். என் கண்களோ சாட்டையின் மீதே இருந்தது. புதிய மனிதர் ஈசுவரமூர்த்தியையும் கீழே தள்ளிவிட்டார். அவர்மீது உட்கார்ந்துகொண்டு தலையைப் பிடித்துத் தரையில் ஒரு தடவை முட்டினார்.

"ரங்கா! அங்கே கிடக்கும் துணியை எடு" என்று உத்தரவு போட்டார் அந்த முகமூடி மனிதர்.

எனக்கு இன்னொரு தடவை தூக்கி வாரிப் போட்டது! 'என் பெயர் இந்த மனிதருக்கு எப்படித் தெரிந்தது?' என்று யோசித்துக்கொண்டே கீழே கிடந்த ஈசுவர மூர்த்தியின் மேல் வேஷ்டியை எடுத்துக் கொடுத்தேன்.

அந்தத் துணியால் ஈசுவரமூர்த்தியின் கைகளைக் கட்டிவிட்டுத் தன் கையிலிருந்த இன்னொரு துணியால் வாயை அழுத்திக் கட்டிவிட்டு எழுந்தார் அந்த முகமூடி மனிதர்.

பிறகு என்னைப் பார்த்து, "வா, ரங்கா!" என்று கூறி விட்டு முற்றத்தில் கிடந்த ஒரு சிறு பையைத் தன் கையில் எடுத்துக் கொண்டார். அவர் குதித்தபோது அதைப் போட்டிருக்கவேண்டும். பிறகு மேஜை மீதிருந்த விளக்கை அணைத்துவிட்டு வாசற் பக்கம் கதவைத் திறந்தார். நாங்கள் இருவரும் வெளியே வந்ததும் தெருவை

இரண்டு பக்கமும் திரும்பிப் பார்த்தார். ஒருவரும் கண் களுக்குத் தென்படவில்லை. பிறைச் சந்திரனின் மங்கலான ஒளியில் அந்த இடம் கனவு உலகம் போலிருந்தது.

உடனே அவர் வாசற் கதவைச் சாத்தி நாதாங்கியைப் போட்டார். பிறகு ஒரு விசித்திரமான காரியம் செய்தார். தான் அணிந்து கொண்டிருந்த முகமூடியைக் கழற்றிப் பையில் வைத்துவிட்டு, ஒரு மீசையை எடுத்து ஒட்ட வைத்துக்கொண்டார். ஒரு துண்டை எடுத்துத் தலைப் பாகை கட்டிக்கொண்டார். நான் அதை என் கண்களால் பார்த்துக்கொண்டே இருந்திராவிட்டால் என்னைக் காத் தவர் அவர்தான் என்பதை ஒப்புக்கொண்டிருக்கவே மாட்டேன். அப்படி அவர் தோற்றம் அடியோடு மாறிப் போய்விட்டது.

நான் வியந்துகொண்டு நிற்பதைப் பார்த்துவிட்டு அந்தப் புதிய மனிதர், என் கையைத் தம் வலிய கரத் தால் பிடித்துக்கொண்டார். "என்னுடன் வருகிறாயா துரை? பயமாக இல்லையே?" என்று கேட்டார்.

"இல்லை! பயமாகவே இல்லை!" என்றேன்.

"உன்னை எனக்கு அதனால்தான் ரொம்பப் பிடிக் கிறது. நீ ஈசுவரமூர்த்தியிடம் பயமில்லாமல் பேசினாய் பார். அதனால் உன்மீது என் பிள்ளையைப்போல் வாஞ்சை ஏற்படுகிறது. கண்ணாடியை எறிந்தாயே? நன்றாகத் தலையைப் பார்த்து எறிந்திருக்கக் கூடாது? அவன் மண்டையை உடைத்திருக்கலாம். உனக்கு மாங்காய் அடித்து வழக்கமில்லைபோல் இருக்கிறது. நீதான் சாதுப் பிள்ளை ஆயிற்றே! உனக்கெப்படி இதெல்லாம் தெரியப் போகிறது. ஆனால், நான் நினைத்த மாதிரி அவ்வளவு பயந்தாங்கொள்ளி இல்லை நீ. துணிச்சலான பையன்தான்" என்று சொல்லிக்கொண்டே போனார்.

"உங்களுக்கு என்னைப் பற்றி எப்படித் தெரியும்? நீங்கள் யார்? நான் உங்களைப் பார்த்ததே இல்லையே?" என்று இரண்டு மூன்று கேள்விகளை நானும் கேட்டேன்.

நாங்கள் ஈசுவரமூர்த்தியின் வீடு இருந்த தெருவைத் தாண்டிக் கொண்டிருந்தோம். அந்தத் தெருவில் ஈசுவர மூர்த்தியின் வீடுதான் கடைசியில் இருந்தது. அவர் வீட்டுக்கு வலது பக்கத்தில் மாந்தோப்பும், இடது பக்கத்தில் பாழ்மனையும் இருந்தன. பாழ்மனைக்கு அடுத்த வீட்டில் யாரும் இல்லை. எதிரிலும் வீடு கிடையாது. ஆகவே அவர் வீட்டில் என்ன நடந்தாலும் வெளியே தெரிய வழியில்லை.

முகமூடி மனிதர்......இல்லை, மீசை மனிதர், என் கேள்விக்கு உடனே பதில் சொல்லவில்லை. மௌனமாக நடந்து வந்தார். இன்னொரு தெரு தாண்டும் வரை பேச வில்லை. எனக்கும் மறுபடியும் கேட்கப் பயமாக இருந்தது. இரவு மணி பத்துக்கு மேல இருக்காது. கிராமம் ஆன படியால் வெளியில் யாருமே நடமாடவில்லை. ஒன்றிரண்டு வண்டிக்காரர்கள் மட்டும் எங்களைத் தாண்டிக்கொண்டு சென்றார்கள்.

எங்கள் வீட்டுக்கு வரும் வழியில் ஒரு இலுப்ப மரத் தோப்பு உண்டு. அந்த இடத்துக்கு வந்ததும் அவர், "தம்பி! இந்தத் தோப்புக்குள்ளே போய் உட்கார்ந்து சற்றுநேரம் பேசலாம் வா" என்று கூப்பிட்டார்.

எனக்கு முதலில் தயக்கமாக இருந்தது. ஆனாலும், அவருடைய குரலில் தொனித்த பரிவின் காரணமாகத் தைரியம் ஏற்பட்டது.

"சரி" என்றேன்.

இருவரும் இலுப்பைத் தோப்புக்குள் புகுந்து சென்று மரத்தடியில் போய் உட்கார்ந்தோம்.

அவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "ரங்கதுரை! நான் யார் என்று கேட்டாய். அதைப்பற்றிப்

பின்னால் தெரிந்து கொள்ளலாம். இப்போது உன்னைப் பற்றி எனக்கு எப்படித் தெரியும் என்று கேட்டாயே, அதற்குப் பதில் சொல்லி விடுகிறேன். உன் அப்பா கந்த சாமி உன்னைப்பற்றி என்னிடம் சொல்லியிருக்கிறார்."

"அப்பாவா ?"

"ஆமாம் ரங்கா! உன் அப்பாதான். நாங்கள் இருவரும் சிறையில் ஒன்றாக இருந்தோம்."

"அப்படியானால் அப்பா ஏன் உங்களோடு வர வில்லை ?"

மறுபடியும் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் புதிய மனிதர், "ரங்கா! நீ உன் மனத்தைத் திடமாக வைத்துக்கொள். அப்பாவும் நானும் சேர்ந்துதான் புறப் பட்டோம். ஆனால், விதி வேறு விதமாக இருந்துவிட்டது. நாங்கள் புறப்பட்ட வேளையோ என்னமோ தெரியவில்லை. அவருக்கு நல்ல அடி பட்டுவிட்டது. அவர் பிழைப்பது துர்லபம் என்று எண்ணுகிறேன். இனிமேல் நீ என்னைத் தான் உன் அப்பாவாக நினைத்துக்கொள்ள வேண்டும்" என்றார்.

என் தலையில் பேரிடி விழுந்தது போலிருந்தது. பொங்கிக்கொண்டு வந்த விம்மல்களை என்னால் அடக்க முடியவில்லை. நான் விசித்து விசித்து அழுவதைக் கண்ட அந்தப் புதிய மனிதர் என் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டு, "ரங்கதுரை! நீ ரொம்பத் தைரியசாலி என்று நினைத்தேன். நீ இப்படிக் கோழையைப்போல் அழலாமா? உன்னைவிட உலகத்தில் எத்தனையோ பேர் கஷ்டப்பட் டிருக்கிறார்கள். இன்னும் கஷ்டப்படுகிறார்கள். அதை நினைத்துக்கொண்டு திடமாக இருக்கவேண்டும்" என்றார்.

அவருடைய வார்த்தைகளில் என்ன மந்திர சக்தி இருந்ததோ தெரியவில்லை. அல்லது அவருடைய கரத்தில் தான் அந்த சக்தி இருந்ததோ ? உடனேயே எனக்கு ஆறுதல் உண்டாயிற்று. என் கண்ணீர் நின்றது.

ஆனால், அம்மா?' அவளுடைய நிலை என்ன என் பதை என்றால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அப்பா சிறைப்பட்டார் என்பதைக் கேட்டபோதே அப்படித் துடித்துப் போனவள் அவர் துப்பாக்கியால் சுடப்பட்டார் என்பதைக் கேட்டால் என்ன செய்வாள்?

"ஐயோ! நான் அம்மாவிடம் இதை எப்படிச் சொல்லுவேன்?" என்று கூறினேன். மறுபடியும் துயரம் என் தொண்டையை அடைத்தது.

அவர் என்னைத் தேற்றினார். "ரங்கதுரை! நடந்தது நடந்துவிட்டது. உன் அப்பாவும் நானும் இந்த ஏழு மாதங்களாக இணைபிரியாமல் பழகினோம். ஆனால், அவர் அடிபட்டுக் குற்றுயிராகக் கிடக்கும்போது நான் மனத்தைக் கல்லாக்கிக்கொண்டு ஓடிவரும்படி நேர்ந்தது. நானும் அங்கே தயங்கி நின்றிருந்தால் என்னையும் சுட்டுக் கொன் றிருப்பார்கள். உன்னையும் உன் அம்மாவையும் காப்பாற்ற யாருமே இல்லாமல் போயிருந்திருப்பீர்கள். கந்தசாமிக்கு உங்களை நான் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்தேன். அதை என்றென்றும் நிறைவேற்றுவேன். இப்போது நான் சொல்கிறபடி நீ செய்யவேண்டும். செய்கிறாயா?" என்று கேட்டார்.

"செய்கிறேன்" என்றேன்.

"சிறையிலிருந்து இரண்டு நாட்களில் தகவல் வரும். நான் நேற்றிரவு தப்பி வந்தேன். நான் இங்கே வருவே னென்று போலீஸார் எதிர்பார்த்து என்னை இங்கே தேடக் கூடும். ஆகையால் நான் இங்கே இருப்பது ஆபத்து. அதுவும் ஈசுவரமூர்த்தி வேறு இப்போது தகவல் கொடுத்து விடுவார். பின்னர் வேறு வினையே வேண்டாம். நீ சீக்கிரத்தில் உன் அம்மாவை எப்படியேனும் சென்னை நகரத்துக்குப் போகச் சம்மதிக்க வைத்துவிடு. நான் முதலில் போய் வீடு பார்த்து வைக்கிறேன். உனக்குப்

படிப்புக்கும் ஏற்பாடு செய்கிறேன். நீ பள்ளிப் படிப்பு முடித்துக் கல்லூரியில் சேர்ந்து படிக்க வேண்டுமென்று உன் தந்தை விரும்பினார். அதை என்னிடம் அடிக்கடி சொன்னார். அந்தப் பொறுப்பு என்னுடையது. மேலும், நீங்கள் இனிமேல் இங்கே இருந்தால் ஈசுவரமூர்த்தி சும்மா விடமாட்டான். ஏதாவது தொந்தரவு பண்ணிக் கொண்டே இருப்பான். அப்பாவைப் பற்றிய செய்தி வரும்போது அம்மா கலங்கிவிடாமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். இன்னொன்று. உன்னை யாராவது பிடித்து என்னைப் பற்றிக் கேள்வி கேட்டால், ஈசுவர மூர்த்தியின் வீட்டுக்கு வெளியில் வந்த பிறகு நான் மாந்தோப்பின் வழியாக ஓடிவிட்டேன் என்று சொல்லி விடு. என்னிடம் பேசியதையெல்லாம் பற்றிச் சொல்லி விடாதே. ஞாபகமிருக்கட்டும். அம்மாவிடம் மாத்திரம் சொல்லு."

"ஆகட்டும்! என்னுடைய தமிழ் வாத்தியாரிடமும் சொல்ல வேண்டும்."

"ஆமாம்! கந்தசாமி அவரைப் பற்றியும் சொல்லி இருக்கிறார். அவரிடம் சொல்லிக்கூட உன்னுடைய தாயாரைக் கிளம்பச் செய்யலாம்."

"ஆனால் வாத்தியாரய்யா ரொம்பச் சந்தேகப் பேர் வழி. யாரையும் நம்பமாட்டார். இதையெல்லாம் நான் சொன்னால் நம்பவேமாட்டார்."

"அவரை நம்பச் செய்வது என் பொறுப்பு. அவருடைய விலாசம் சொல்லு. எழுதிக் கொள்கிறேன்" என்று கூறிக்கொண்டே பையிலிருந்து ஒரு சிறிய புத்தகமும், ஒரு தீப் பெட்டியும் எடுத்தார். நான் ஒரு தீக்குச்சியைக் கிழித்துக்கொண்டே விலாசம் சொன்னேன். அதைக் குறித்துக் கொண்டார். அதன் பிறகு, "சமர்த்தாக இரு, ரங்கதுரை! எதற்கும் கவலைப்படாதே! நான் சொன்ன

வற்றையெல்லாம் ஞாபகம் வைத்துக் கொள். ஒரு மாதம் ஜாக்கிரதையாக இருங்கள். பிறகு நானே வந்து அழைத்துக்கொண்டு போகிறேன். அதற்குள் எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு எழுந்து நின்றார்.

"உங்கள் பெயர் என்ன என்பதைச் சொல்லவில்லையே ?'' என்றேன்.

"என் பெயர் எதுவாக இருந்தால் என்னப்பா? சமயம் வரும்போது நானே சொல்கிறேன். நீ இப்போது வீட்டுக்குப் போ. நானும் போய்விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு இலுப்பத்தோப்பின் இருளில் மறைந்து விட்டார் அந்த விந்தை மனிதர். நானும் வீடு நோக்கித் திரும்பினேன்.

நான் வீடு போய்ச் சேர்ந்தபோது வெகு நேரமாகி விட்டது. என் அன்னை வாசற்படியில் உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். நான் தூரத்தில் வருவதைப் பார்த்தவுடனேயே அவர் ஓடி வந்து என்னைத் தழுவிக் கொண்டார்.

"என் கண்ணு! இத்தனை நேரம் என்னடா செய்தாய்? எப்படி அவனிடமிருந்து தப்பி வந்தாய்?'' என்று கலங்கிய கண்களுடன் கேட்டார்.

"நீ முதலில் உள்ளே வா. சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றேன். அவரும் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு உள்ளே வந்தார்.

உடனே, "பாவம்! இத்தனை நேரம் கழித்து நீ வீட்டுக்கு வந்திருக்கே. சாப்பாடு போடாமல் நான் பேசிக் கொண்டிருக்கிறேனே!'' என்று சொல்லிக்கொண்டே இலையைப் போட்டார். நானும் அதற்குள் கைகளைக் கழுவிக்கொண்டு வந்தேன். எனக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது. 'அப்பாவைப் பற்றிய செய்தியை என்ன

விதமாக அம்மாவுக்குச் சொல்வது? நான் சொல்லா விட்டாலும் நாளைக்குத் தெரியத்தானே போகிறது?' என்றெல்லாம் மனத்தில் நினைத்துக்கொண்டே சாப்பிட உட்கார்ந்தேன். அம்மா மறுபடியும் என்னைக் கேள்வி கேட்க விடாமல், "என்னைக் காணவில்லையே என்று தேடினாயா?" என்று கேட்டேன்.

"ஆமாம், ரங்கா! ரொம்பக் கவலையாகப் போய் விட்டது. நீ இந்த மாதிரி காரியம் செய்யமாட்டாயே. வழக்கமாமாக வரும் நேரத்தில் வராமல் போகவே பக்கத்து வீட்டுப் பையனை விட்டு விசாரிக்கச் சொன்னேன். அவன் உன் சிநேகிதன் சுந்தரத்தை இழுத்துக்கொண்டு வந்தான். சுந்தரம்தான் சாயங்காலம் நடத்த கலாட்டா வைப்பற்றியெல்லாம் சொன்னான். நீ கூட ஏன் ரங்கா அவர்களுடன் போய்ச் சேர்ந்துகொண்டாய்?"

"ஏன் அம்மா? நான் எப்போதாவது இந்தமாதிரி நடந்துகொண்டிருக்கிறேனா? மாந்தோப்புக்குப் போய்க் கொண்டிருந்தோம். ஈசுவர மூர்த்தி வந்திருக்கிறார் என்று எனக்குத் தெரிந்திருந்தால் நான் அந்தப்பக்கம் தலைகூடக் காட்டியிருக்கமாட்டேன்."

"அது சரி! நீ ஏன் கல்லெடுத்து அடித்தாய்?" என்று கேட்டார்.

"என்ன? சுந்தரம் நான் கல்லெறிந்தேன் என்று சொன்னானா? எவ்வளவு துணிச்சலாகப் பொய் சொல் கிறான்? அவன்தான் அம்மா இன்று நடந்த சண்டைக்கே காரணம். அந்த மீசைக்காரச் சோமையாவைப் பார்த்து இவன் பரிகாசமாகச் சிரித்திருக்காவிட்டால் இந்த ரகளை ஏற்பட்டே இருக்காது."

"அவன் என்னிடம் அப்படிச் சொல்லவில்லையே!"

"அம்மா! அவன் சொன்னதெல்லாம் பொய். நான் நடந்தபடி சொல்கிறேன்" என்று கூறிவிட்டு

அன்று நடந்தவற்றையெல்லாம் விவரமாகக் கூறினேன். வாய் சொல்லிக்கொண்டிருந்ததே தவிர மனம் அப்பாவின் விஷயத்தை எப்படிச் சொல்வது என்பதிலேயே லயித்துப் போயிருந்தது. ஒருவாறு என்னை அறையில் தள்ளிப் பூட்டியது வரையில் சொல்லி முடித்துவிட்டேன். பிறகு எழுந்து போய்க் கையைக் கழுவிக்கொண்டு வந்தேன்.

" இப்படியா நடந்தது ? அந்தப் பிள்ளைதான் ஒரு தவறும் செய்யாத மாதிரி பேசினனே. அவன் உன்மீது பழியைப் போட்டபோது நான் கொஞ்சம் நம்பிவிட்டேன், ரங்கா. அப்பாவின் ஞாபகத்திஞல் நீ அவர் வீட்டில் கல்லெறிந்துவிட்டாயோ என்று கூட நினைத்தேன் " என்று கூறிஞர்.

' அப்பா ' என்று அவர் கூறியதும் என் உடம்பு முழுதும் பதட்டம் ஏற்பட்டுவிட்டது.

" அம்மா !" என்று விம்மி விம்மி அழுதுவிட்டேன்.

அவருக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு, " ஏன் ரங்கா ! உன்னைப் பற்றிச் சுந்தரம் சொன்னதை நம்பி விட்டேனே என்ரு அழுகிருய் ? இதற்கு அழலாமா ? இப்போதுதான் உண்மை தெரிந்துவிட்டதே !" என்ருர்.

நான் பிறகு கண்ணைத் துடைத்துக்கொண்டு மீதி விவரங்களையும் கூறினேன். முற்றத்தில் புதிய மனிதர் ஒருவர் குதித்தது, அவர் என்னைக் காப்பாற்றியது, இலுப்ப மரத் தோப்பு வரை கொண்டு வந்து விட்டது எல்லாம் சொன்னேன்.

" அந்தப் புண்ணியாத்மா வெகு காலம் நன்ருக இருக்க வேண்டும். அவர் யார் ரங்கா ?"

" நானும் அவரிடம் கேட்டேன், அம்மா ! அவர் சொல்லவில்லை. ஆனல், இன்னொரு விஷயம் சொன்ஞர்."

" என்ன விஷயம் ?"

" அப்பாவும் அவரும் இந்த ஏழு மாத காலமாக ஒன்ருகப் பழகி ரொம்பச் சிநேகமாக இருந்தார்களாம்.

அப்பா என்னைப் பற்றிச் சொல்லியிருந்தபடியால்தான் என்னை அவர் தகுந்த சமயத்தில் வந்து காப்பாற்றுவதற்கு முடிந்ததாம் " என்றேன்.

என் அன்னை கண்களில் பெருகிய நீரைத் துடைத்துக் கொண்டார்

அதற்கு மேல் எனக்குச் சொல்ல எப்படி மனம் வரும்? இருந்தாலும், ' சொல்லத்தானே வேண்டும் ' என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, " அப்பாவும் அவரும் சேர்ந்துதான் புறப்பட்டார்களாம் அம்மா ! அப்போது அவருக்குத் துப்பாக்கிக் காயம் பட்டுவிட்டதாம் " என்று கூறினேன்.

" என்ன ? என்ன சொன்னுய் ?"

" அம்மா ! அப்பாவுக்கு அடிபட்டு விட்டதென்று அந்தப் புதிய மனிதர் கூறினர். கவலைப்பட வேண்டா மென்றும் சொன்னர் " என்று துக்கம் நெஞ்சை அடைக்க, திக்கித் திணறி ஒருவாறு கூறிவிட்டேன்.

என் அன்னை அன்று துடித்த துடிப்பை என்னல் விவரிக்க முடியாது. " துரை ! எனக்குப் பயமாக இருக்கிறதே. துப்பாக்கியால் சுட்டு விட்டவர்கள் பிழைத்து எழுந்திருக்க முடியுமா ? ஐயோ ! அவர் சிறையிலாவது இருந்திருக்கக் கூடாதா ? தப்பி வருவதற்கு ஏன் முயற்சிக்க வேண்டும் ?" என்று கதறி அழுதார்.

நான் அவரைச் சாந்தப்படுத்த முயன்றேன். சிறையிலிருந்து தகவல் ஏதேனும் வரும் வரை இதை முழுதும் நம்புவதற்கில்லை என்றும், நமக்கு முன் கூட்டியே தகவல் தெரிந்துவிட்டதென்று வெளியில் தெரிந்தால் எல்லோருக்கும் சந்தேகம் ஏற்படும் என்றும், ஈசுவரமூர்த்தி இதைச் சாட்சியாக வைத்துக்கொண்டு என்னையும் சங்கடத்தில் மாட்டி வைப்பாரென்றும் கூறினேன். அதன் பிறகு அவர் அதிகமாகத் தன் உள்ளத்தை அரித்துத் தின்ற

சந்தேகத்தை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. எனக்கு ஏதும் நேர்ந்துவிடக் கூடாதே என்ற அளவற்ற பயத்தினுல் அவர் தம்முடைய தாங்கமுடியாத துயரத்தைக்கூட வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

மறுநாள் காலை பொழுது புலர்ந்ததும் வாத்தியாரய்யா வீட்டுக்குச் சென்று நடந்த விவரங்களையெல்லாம் மூச்சு விடாமல் சொல்லி முடித்தேன்.

அதைக் கூறும்போதே அவர் கண்கள் நன்ருகக் கலங்கிவிட்டன.

நானும் கண் கலங்குவதைப் பார்த்துவிட்டு, "உனக்குத் தைரியம் சொல்ல வேண்டியவனுன நான் உன்னைக் கலங்க வைக்கிறேன். உன்னைச் சாட்டையடியிலிருந்து காப்பாற்றியவர் தம் பெயரைச் சொல்லவில்லையா ?" என்ருர்.

" இல்லை. நான் கேட்டும் அவர் சொல்லவில்லை."

" அந்த மனிதர் வேறு ஏதும் சொல்லவில்லையா ? சிறையிலிருந்து தப்பி வந்தவர்களைச் சீக்கிரம் நம்பிவிடக் கூடாது."

" இவரைப் பார்த்தால் ரொம்ப நல்ல மனிதரென்று தோன்றிற்று ஸார். அவர் என்னை எதற்காக அடி வாங்குவதிலிருந்து காப்பாற்ற வேண்டும்? அப்படிப் பார்த்தால் என் தந்தையும் ஒரு சிறைக் கைதிதானே ?" என்றேன். அந்த முகமூடி மனிதரிடம் எனக்கு என்ன காரணத்தாலோ ஒரு தனிப் பிரியம் ஏற்பட்டுவிட்டது.

வாத்தியாரய்யா பதில் சொல்லவில்லை. நானே மறுபடியும், " அவர் என்னிடம் ரொம்பப் பிரியமாகப் பேசினுர் ஸார். அவரை என்னுல் ஒரு தப்பி வந்த கைதி என்று நினைக்க முடியவில்லை. அப்பாவைப் போலவே அவரையும் அபாண்டமான பழி சுமத்திச் சிறைக்கு அனுப்பியிருக்கக் கூடும் அல்லவா ? ஒரு வேளை ஈசுவரமூர்த்தியே செய்திருக்

கலாம். ஈசுவரமூர்த்தியிடத்தில் அவர் பேசிய விதத்தைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றிற்று" என்றேன்.

"ஏன் துரை? ஈசுவரமூர்த்தியின் விரோதிகள் எல்லாரும் நல்லவர்கள் என்று சொல்லிவிட முடியுமா? அவனுக்கு நல்லவர்களும் விரோதிகளாக இருக்கலாம். துஷ்டர்களும் இருக்கலாம். இவர் மிக நல்லவராகவே இருக்கலாம். ஆனால், முகமூடி போட்டுக்கொண்டும், வேஷத்தை மாற்றிக்கொண்டும் இருப்பவர்கள் ரொம்ப நல்லவர்களாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. அது போனால் போகட்டும். இந்த ஈசுவரமூர்த்தியினால் உனக்கு மறுபடியும் ஒரு சங்கடமும் வராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இப்போது வைஷம்யம் மிகவும் அதிகமாகி இருக்கும்."

"ஆமாம் ஸார்! நேற்று நடந்ததை நினைத்தாலே கதி கலங்குகிறது. அந்தச் சோமையாவையும், சாட்டை யையும் நினைத்தாலே பயமாக இருக்கிறது. அவன் அடிக்க வந்த சமயத்தில் கடிதம் எழுதிக் கொடுத்து விடலா மென்றே தீர்மானித்துவிட்டேன் ஸார். அந்த மனிதர் காப்பாற்றி இருக்காவிட்டால் உங்களை நான் மறுபடியும் பார்த்தே இருக்கமாட்டேன். அம்மா எங்கள் இருவரையும் ஒரே சமயத்தில் இழந்திருப்பாள்."

"எப்பேர்ப்பட்ட நிலைமையிலிருந்து நீ தப்பினாய் ரங்கதுரை? நினைத்தாலே வியப்பாக இருக்கிறது. இந்தக் கந்தசாமியின் கதியும் இப்படி ஆகியிருக்க வேண்டாம். தப்பி வருவதற்கு முயற்சிப்பானேன்? பேசாமல் சிறையி லாவது இருந்திருக்கக் கூடாதா?" என்று அவர் வருத்தப் பட்டார்.

# 15. அன்பெனும் தேன்!

நாங்கள் எதிர்பார்த்தபடி ஈசுவரமூர்த்தி ஒன்றும் செய்யவில்லை. அவர் என்ன செய்தார், செய்யவில்லை என்பது எனக்குத் தெரியாது. என்னை ஒன்றும் செய்ய வில்லை. அன்றைய கலாட்டாவில் சம்பந்தப்பட்டிருந்த மாணவன் ஒருவன் அன்று மாலை ஈசுவரமூத்தியின் வீடு பூட்டியிருக்கிறதென்று செய்தி கொண்டு வந்தான்.



அதைக் கேட்ட தமிழ் வாத்தியார் என்னிடம், " இவ் விவரத்தை வெளியிட்டால் உன்னை விசாரிப்பார்கள். நீ நடந்ததைச் சொல்லிவிடுவாய் என்று பயந்துகொண்டு கலாட்டா செய்யவில்லை. ஈசுவர மூர்த்தி யாரையும் கண்டு அஞ்சமாட்டான். ஆனால், மறு படியும் இந்தமாதிரி இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொள்ள அவனுக்கு விருப்பமில்லைபோலிருக்கிறது " என்றார்.

நாங்கள் எதிர்பார்த்த செய்தி வருவதற்கு ரொம்ப நாட்களாகவில்லை. என் அன்னையின் மௌனமான வேதனை மறுநாள் தீர்ந்தது. சிறை அதிகாரி, " தப்பிச் செல்ல முயன்ற கந்தசாமி குண்டுக் காயங்களால் அடி பட்டு இறந்துவிட்டார் " என்று தந்தி அடித்திருந்தார். ஏற்கனவேயே எதிர்பார்த்திருந்த தந்தியானாலும் என்னை யும் அது ஒரு கலக்குக் கலக்கி விட்டது.

அப்பா கடைசியில் பிரியமாக இருந்ததெல்லாம் படம் படமாகக் கண் முன்னால் வந்து நின்றது. அவருடைய குற்றங்கள் எல்லாம் மறைந்து குணங்கள் மட்டுமே

என் நினைவுக்கு வந்து நின்றன. மரணம் எப்பேர்ப்பட்டவர்களையும் நல்லவர்களாக்கி விடுகிறது !

என் அன்னையின் துயரத்தைப் பற்றிச் சொல்லி முடியாது. ஆகையால் அதையெல்லாம் விட்டுவிடுகிறேன். ஊரார் துக்கம் விசாரிப்பதெல்லாம் ஓய்ந்த பிறகு நான் சென்னைக்குப் போவதைப் பற்றிப் பேச ஆரம்பித்தேன்.

என் அன்னை ஒரே போடாகப் போட்டுவிட்டார். "துரை ! இந்த இடத்தை விட்டு நாம் எங்கும் போக வேண்டாம். அப்பா இருந்த இடத்திலேயே நான் மீதிக் காலத்தையும் கழித்துவிடுகிறேன். வேறே எங்கே போனாலும் என் மனத்துக்குச் சாந்தி கிட்டாது !" என்று கூறிவிட்டார்.

அந்தச் சமயத்தில் வாத்தியார் ஐயா எவ்வளவு ஆதரவுடன் நடந்துகொண்டார் என்பதைக் குறிப்பிடவேண்டும். நான் அவரிடம் மறுபடியும் இதைப் பற்றிச் சொன்ன போது பொறுமையாகப் பதில் சொன்னார்.

" துரை ! அந்த மனிதர் மிக நல்லவராகவே இருக்கலாம். உண்மையிலேயே உன் தந்தைக்கு அளித்த வாக்குறுதியைக் காக்க விரும்பலாம். ஆனால், ஏதோ ஒரு உத்வேகத்தில் எழுந்த எண்ணமானால் நாள்பட நிலைக்காது. பின்னால் உன் கதி என்ன வாகும் என்பதை யோசிக்க வேண்டும். ஊர் பேர் தெரியாத மனிதருடன் நீ உடனே புறப்பட்டுப் போய்விடலாமா ? அவர் மறுபடியும் வரும்போது என்னைக் கட்டாயம் பார்த்துப் பேசச் சொல். அதன் பிறகு உன்னை அனுப்பலாம் என்று எனக்குத் தோன்றினால் நானே அனுப்பி வைக்கிறேன். நீ கவலைப்படாதே '' என்றார்.



எனக்கு நான் சென்னை நகரம் சென்று மேல்படிப்புப் படிக்கவேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் அழுந்தி விட்டது. அல்லிக்குளத்திலேயே இருந்தால் அந்த வாய்ப்பு எங்கே கிடைக்கும்? இந்தப் புதிய மனிதரின் உதவியால் அது சாத்தியமாகக் கூடுமானல் அந்த உதவியை நான் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று நினைத்தேன். இதையெல்லாம் விவரித்து வாத்தியாரையா விடம் சொல்லும் துணிவு எனக்கு இருக்கவில்லை.

என் ஆசை நிறைவேறுவதற்கு உரிய வழிகளை யெல்லாம் இறைவன் எப்படியோ செய்துகொடுத்தார். நமது ஆசைகள் சில சமயங்களில் நிறைவேறவும்தான் செய்கின்றன. சில சமயங்களில் நாம் மிகவும் ஆர்வத் துடன் கட்டும் கோட்டைகள் தகர்ந்தும் போய்விடுகின்றன. அதுவும் ஒரு விசித்திரம்தான்.

ஒரு மாத காலம் உருண்டோடிச் சென்றது. நாட்கள் ஓடும் வேகத்தை நம்மால் புரிந்துகொள்ளவே முடிவ தில்லை. சில அபூர்வமான சந்தர்ப்பங்களில் கழுத்தைப் பிடித்துத் தள்ளினுலும் பொழுது போகாமல் பிராணனை வாங்குகிறது. சில சந்தர்ப்பங்களில் 'இவ்வளவு நாளாகி விட்டதா?' என்று நம்மைத் திகைக்க வைக்கிறது.

நான் இந்துவை முதல் தடவை சந்தித்து ஏழெட்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது என்பதை எண்ணும் போது ஒரே வியப்பாக இருக்கிறது. அந்தக் காட்சி என் உள்ளத்தில் இன்னும் பசுமையாகப் பதிந்திருப்பதால், நேற்று நடந்த சம்பவம் மாதிரியே தோன்றுகிறது.

இந்துவை முதன் முதலில் காரிலிருந்து பார்த்த போதே, "என்ன களையான முகம்!" என்று நினைத் தேன். அதன் பிறகு அவளைப் பாதிரித் தோட்டத்தின் மத்தியில் அழகுப் பிம்பமாகக் கண்டேன். அவளுடைய களங்கமற்ற வதனத்தில் என்னைப் பார்த்தவுடனே ஒரு

பிரகாசம் மின்னலைப்போலத் தோன்றியது. அதைக் கண்டு நான் மிகவும் வியந்தேன்.

'என்னைப் பார்த்தவுடனே இந்தப் பெண்ணின் முகத்தில் இப்படி ஒரு மாறுதல் ஏற்படுவானேன்?' என்று மனத்துக்குள் நினைத்தேன்.

அதற்குப் பின் அவள் செய்த காரியங்கள் என் மனத்தில் எழுந்த கேள்விக்கு விடை கூறின. அவள் புன்னை மரத்தடியில் சென்று நிற்காமல் போயிருந்திருக்கலாம் அல்லவா? நின்றதுமல்லாமல் புஷ்பங்கள் பொறுக்குவதுபோல் பாவனை செய்தாள். அது பாவனை என்பது முக பாவத்திலிருந்தே விளங்கியது. பூக்களைத் தன் மலர்க் கரங்களால் எடுத்துக்கொண்டே நான் இருந்த இடத்தைப் பார்த்தாள். அதற்குள் நான் ஒதுங்கிச் சற்று மறைவாக நின்றுகொண்டு அவளைக் கவனித்துக் கொண்டிருந்தேன். என்னைக் காணவில்லை என்று தெரிந்தவுடன் அவள் முகத்தில் அத்தனை ஏமாற்றமும் துயரமும் தென்படுவானேன்? அவளுடைய ஏமாற்றமடைந்த முகம் எனக்கு அவ்வளவு மகிழ்ச்சியளிப்பானேன்?

இந்துவின் முகம் உண்மையிலேயே கண்ணாடி போன்றது. அழகிலும் சரி. உணர்ச்சிகளைப் பிரதிபலிப்பதிலும் சரி. வள்ளுவரின் வாக்கு அவள் விஷயத்தில் நூற்றுக்கு நூறு பொருந்தும். நெஞ்சத்தின் கடுப்பு மட்டும் அல்ல. எந்தவிதமான உணர்ச்சியாக இருந்தாலும் அந்த முகம் தெளிவாகக் காட்டிவிடும். கண்களின் மாறுதல்களிலும், கன்னங்களின் குழிவுகளிலும், புருவங்களின் நெளிவுகளிலும், இதழ்களின் துடிப்புகளிலும் அவளுடைய மனத்தில் இருப்பதைப் படித்து விடலாம். அவள் வாயைத் திறந்து பேச வேண்டியதே இல்லை. தன் மனோ உணர்ச்சிகளை மறைத்து மறைத்து வாழ வேண்டிய அவசியமில்லாத, புனிதமான சூழ்நிலையில் வளர்ந்திருந்தபடியால் அவள் உணர்ச்சிகளைப் பொழியும் அற்புத

சித்திரமாக விளங்கினுள். தன் மனத்தில் எழுந்த எண்ணங்களையெல்லாம் மறைத்தே அறியாத பச்சிளங் குழந்தையைப் போன்ற கபடமற்ற உள்ளமுடையவளாக இருந்தாள் இந்துமதி. அந்த நிஷ்களங்கமான மனத்தில் முதன் முதலில் அன்பு என்னும் தாமரைக் கொடி படர ஆரம்பித்ததை நான் என் கண்களால் கண்டேன்.

அவளுடைய மனமாகிய நிசசலனமான தடாகத்தில் ஒரு அழகிய தாமரை மலர் பூத்தது. அந்த அன்பு மலரில் இன்பத் தேன் பருக ஒரு தேனீ வந்தது. அந்தத் தேனீயைக்கண்டு தாமரை அதிகம் மகிழ்ந்ததா? அல்லது



மதுவின் சுவையைக் கண்டு தேனீ அதிகம் மகிழ்ந்ததா என்று யாரால் சொல்ல முடியும்? ஆனல் அந்தத் தேனீ தன் கூண்டுக்குச் சென்றுவிட்டபோது மலர் மிக வேதனைப் பட்டது. ஆனல் தேனீ மட்டும் மிக வேதனைப்பட வில்லையா? அதற்கு எங்கு சென்றாலும் தாமரை மலரை மறக்க முடியவில்லை. எவ்வளவு உயரப் பறந்த போதிலும் மறுபடியும் தாமரை மலரின் மென்மையான இதழ்களில் தவழ்ந்து அதன் மிருதுவான ஸ்பரிசத்தை அனுப விக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டேதான் இருந்தது. அன்பின் மென்மையை மட்டும் அனுபவிக்கத் தெரிந்துகொண்டு விட்டால், அதைவிட இன்பந் தரக்கூடிய பொருள் மூவுலகத்திலும் இருக்க முடியாதென்று சத்தியம் செய்யத் தோன்றும்.

இந்துவின் அன்பைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் அதற்கு முடிவே கிடையாது. அவளுடைய அன்பு எப்படி மாறவில்லையோ அதேமாதிரி அவளுடைய குணங்கள் எதுவும் இன்றுவரை மாறவில்லை. உடல்தான் வாடிப் போயிருக்கிறதே தவிர, அவள் உள்ளம் முதன் முதலில் நான் பார்த்தபோது எப்படிப் பளிங்குபோல் இருந்ததோ அதே மாதிரி இன்னமும் இருக்கிறது.

அந்தக் கபடமற்ற சிரிப்பும், நேரான பார்வையும் அதைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன.

என் இந்துவின் பார்வை சூரியனின் பிரகாசத்தைப் போன்றது. ஒரே மாதிரியான பிரகாசம். மின்னலைப் போல் ஒரு கணம் உலகத்தை ஒளி வெள்ளத்தில் மூழ்கடித்துவிட்டு, அடுத்த கணம் பயங்கரமான இருளில் தள்ளும் பிரகாசமல்ல. அந்த ஒளியில் பார்த்தால் உள்ளத்தில் இருப்பதெல்லாம் தெளிவாகத் தெரியும். அந்தத் தெளிவை மின்னலின் ஒளியில் பெற முடியுமா? அவளுடைய நேரான பார்வையில் மற்றவர்களுடைய உள்ளத்துக்கு வெளிச்சம் போடும் தன்மை இயல்பாகவே அமைந்திருக்கிறது. இந்துவைப் பார்த்த உடனேயே பலருக்குத் தன் குற்றங்குறைகளை உணரச் சக்தி ஏற்பட்டு விடுகிறது. அவளுடைய தூய்மையான உள்ளத்தில் எழும் ஒளிக்கு இந்தச் சக்தி உண்டாவது அதிசயமில்லை போலும்!

இந்துவின் அருமைகளைப் பற்றி நான் எழுதத் தொடங்கினால் எங்கே நிறுத்துவது என்றே தெரியவில்லை. தோன்றிக் கொண்டிருப்பதையெல்லாம் எழுதிக்கொண்டே இருக்கவேண்டும் போலிருக்கிறது. ஆனால், நான் கதையைத் தொடர்ந்து, சீக்கிரம் எழுதிக் கொடுக்க வேண்டுமே! இதை நான் எழுதி இந்து படிக்க முடியாமல் போய்விடக் கூடாதல்லவா?

# 16. தந்தையின் கடிதம்

நாட்கள் உருண்டோடின என்று ஆரம்பித்தேன். ஒரு மாதத்துக்குப் பின்னர் ஒரு நாள் நான் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்தேன். நான் இலுப்பமரத் தோப்பைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தபோது யாரோ என்னைக் கூப்பிடுவதுபோலத் தோன்றியது. சற்று நின்று சுற்று

முற்றும் பார்த்தேன். பிறகு பிரமை என்று நினைத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன்.

மறுபடியும், "ரங்கதுரை!" என்று குரல் கேட்டது. இந்தத் தடவை குரல் இலுப்பமரத் தோப்பிலிருந்து வருகிறது என்று தெளிவாகத் தெரிந்தது. என் மனம் சந்தோஷத்தால் துள்ளியது. தோப்புக்குள் புகுந்து வேகமாகச் சென்றேன்.

தோப்பில் பத்து கஜ தூரம் சென்றதும் ஒரு மரத்தின் மறைவிலிருந்து ஒரு மனிதர் வெளிப்பட்டார். இரண்டே எட்டில் என் அருகில் வந்து என்னைத் தழுவிக்கொண்டார். அந்த மாதிரி யாரும் என்னிடம் அன்பு காட்டி அதுவரை நான் அறிந்ததில்லை. அந்தக் கணத்தில் எனக்கும் அவர் மீது அளவில்லாத பிரியம் உண்டாயிற்று. அவர் என்ன சொன்னாலும் செய்வதற்கு நான் சித்தமாகிவிட்டேன்.

"துரை! எனக்கு ஒரு பெண் குழந்தை இருக்கிறாள். அவளை ஒரு வீரப் பெண்ணாக வளர்க்க வேண்டுமென்பது என் ஆசை. ஆனால் அவளை நான் பார்க்கவே முடிவதில்லை. உன்னைப் பார்க்கும்போது எனக்கு அவளுடைய ஞாபகம் வருகிறது. அவளைப் போய்ப் பார்க்கவேண்டும் போல ஆசையாக இருக்கிறது" என்று கூறினார்.

உடனேயே, "அது கிடக்கட்டும், துரை! உன்னை யாராவது ஏதேனும் விசாரித்தார்களா? ஈசுவரமூர்த்தி வீட்டில் என்ன நடந்தது என்று யாரும் கேட்கவில்லையா?" என்று கேட்டார்.

"என் அம்மாவிடமும், தமிழ் வாத்தியாரிடமும்தான் இதைப் பற்றிச் சொன்னேன். வேறு யாரும் இதைப் பற்றி என்னிடம் கேட்கவும் இல்லை. நான் சொல்லவும் இல்லை. ஈசுவரமூர்த்தியும் இந்த ஊரில் இல்லை."

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. அவன் ஏதாவது ரகளை செய்வான் என்று எதிர்பார்த்தேன். ஆமாம்! உன்

8

அம்மாவிடம் நான் சொன்னதையெல்லாம் சொன்னுயா ? சென்னைக்குப் போகத் தயார்தானே ?"

" அம்மா இதற்கு லேசில் சம்மதிக்க மாட்டாரென்று தோன்றுகிறது. நீங்கள் பேசி, அப்பாவைப் பற்றிச் சொன்னுல்தான் நம்புவார் போலிருக்கிறது. நீங்கள் நேரில் வந்து பேசினுல் நல்லது."

" அப்படியானுல் சரி ! நான் இன்று மாலை ஏழு மணிக்கு உங்கள் வீட்டுக்கு வருகிறேன். உன் வாத்தியாரிடமும் பேசுகிறேன். அவரையும் வீட்டில் இருக்கச் சொல்லு. என்னுடன் பேசினுல் அவர்கள் சம்மதித்து விடுவார்கள் !"

" சரி ! கட்டாயம் ஏழு மணிக்கு வந்து விடுங்கள். நான் இப்போதே வாத்தியாரையாவிடம் சொல்லி விடுகிறேன். மணியாகிவிட்டது. நான் வரட்டுமா ?" என்று விடை பெற்றுக்கொண்டு பள்ளிக்கூடம் சென்றேன்.

அன்று எனக்குப் பள்ளிக்கூடத்தில் இருப்புக் கொள்ளவே இல்லை. எந்தப் பாடமும் புரியவில்லை. தமிழ் வாத்தியாரைத் தனியாகக் கண்டு இதைச் சொல்வதற்குள் போதும் போதுமென்ருகிவிட்டது. அன்றைய தினம் அவர் தலைமை உபாத்தியாயர் அறையில் இருந்து வெகுநேரம் வெளியே வரவில்லை. கடைசியாக அவரைப் பார்த்து விஷயத்தைச் சொன்னதும் அவர் வருவதாக ஒப்புக் கொண்டார். பின்னர் மணி எப்பொழுது அடிக்கும் என்று காத்துக்கொண்டே இருந்தேன். மணி அடித்த உடனே வீட்டுக்குச் சிட்டாய்ப் பறந்தேன். அம்மாவிடம் விஷயத்தைச் சொல்லி வரவேற்புக்கு ஏற்பாடுகள் செய்தேன்.

தமிழ் வாத்தியாரும் மாலை ஆறு மணிக்கு வந்து சேர்ந்தார். நேரமாக ஆக என் பரபரப்பு உச்சியை அடைந்தது. சரியாக மணி ஏழானதும் வாசற் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. நான் ஓடிப் போய்க் கதவைத் திறந்தேன்

உள்ளே வந்தவரைக் கண்டதும் எனக்கு ஒரே அதிசய மாகப் போய்விட்டது. காலையில் நான் பார்த்த மனிதர், மீசையும் முண்டாசுமாகக் காட்சியளித்தார். இப்போது அந்த விந்தை மனிதர் தூய வெள்ளை வேஷ்டியும், ஜிப்பா வும் அணிந்தவராய் ஒரு பட்டணவாசியைப் போலத் தோற்றம் அளித்தார். அவரைப் பார்க்கும்போது ஒரு நாகரிகமான படித்த இளைஞரைப் போலத் தோன்றியது. அவருடைய கண்களைப் பார்க்கும்போதுதான் அவர் அதே மனிதர்தான் என்ற நிச்சயம் எனக்கு உண்டாயிற்று.

தமிழ் வாத்தியாரும் அப்படிப்பட்ட ஒருவரை எதிர் பார்க்கவில்லை என்பது அவர் எழுந்து நின்றதிலிருந்து நன்குகத் தெரிய வந்தது.

" வாருங்கள் " என்றார் தமிழ் வாத்தியார்.

" நமஸ்காரம் " என்று கைகளைக் கூப்பினார் அந்தப் புதிய மனிதர்.

அவர்கள் நான் விரித்திருந்த ஜமக்காளத்தில் அமர்ந்ததும், தமிழ் வாத்தியார் என்னைப் பார்த்து, " ரங்க துரை ! நீ என்னுடைய வீட்டுக்குப் போய் என் மூக்குக் கண்ணுடியை எடுத்துக்கொண்டு வா. கொண்டு வர மறந்துவிட்டேன் " என்று கூறினார். எனக்கு அங்கிருந்து போகவே மனம் வரவில்லை. தமிழ் வாத்தியார் மீதே கோபம் வந்தது. ஆனாலும் சொன்னதைச் செய்துதானே ஆகவேண்டும். அதற்காக விழுந்தடித்துக்கொண்டு வாத்தியார் வீட்டுக்கு வேகமாக ஓடினேன்.

நான் திரும்பி வரும்வரை அவர்கள் என்ன பேசிக் கொண்டிருந்தார்களோ தெரியாது. நான் திரும்பி வந்த வுடன் வாத்தியாரின் முகம் சந்தோஷமாக இருப்பதைப் பார்த்தேன். அவர்கள் இருவரும் சிரித்துப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

என்னைப் பார்த்ததும் வாத்தியாரையா, “ துரை ! நீ சென்னைக்குப் போய் மேலே படிக்கப் போகிறாய். இந்த மாமா உனக்கு உதவி செய்யப் போகிறார். உனக்குக் கடவுள் எல்லா சுகங்களையும் கொடுக்க வேண்டும்” என்றார்.

நான் கண்ணாடியை அவரிடம் கொடுத்தேன். அதை வாங்கிப் போட்டுக்கொண்டு அவர் ஒரு காகிதத்தை எடுத்துப் படித்தார். படித்த பிறகு அதை என்னிடம் கொடுத்து என் அன்னையிடம் படித்துக் காட்டச் சொன்னார்.

நான் ஆலையுடன் சமையலறைக்குச் சென்றேன். சுவாமி படத்துக்கு அருகில் வைத்திருந்த விளக்கின் ஒளியில் அதை அம்மாவுக்குப் படித்துக் காட்டினேன். கடிதத்தில் என்ன எழுதப்பட்டிருந்தது என்பது இப்போது தெளிவாக நினைவில்லை. அதன் சாராம்சம் இதுதான்.

“ தங்கதுரைக்கு என் ஆசிர்வாதம்.

சிறுவனான உனக்கு என்ன எழுதுவது என்றே தெரியவில்லை. நான் விடுதலையடைந்து வந்ததும் உன்னை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை எனக்குத் தீவிரமாக ஏற்பட்டிருக்கிறது. உன் தாயாருக்கு இந்த ஆசை நீ பிறந்தது முதல் உண்டு. நான் வருவதற்கு ரொம்ப நாட்களாகும். இந்தக் கடிதம் கொண்டு வருபவர் என்னிடம் மிகவும் சிநேகமாக இருக்கிறார். இவர் சொல்வதுபோல் நீ கேட்டு நடக்க வேண்டும். உன்னை இவர் பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டு போய்ப் படிக்க வைப்பதாக எனக்கு வாக்குக் கொடுத்திருக்கிறார். அதனால் நீயும் அம்மாவும் அவருடையயோசனைப் படி நடந்துகொள்ளுங்கள். நான் வருவதற்குள்

நீ ரொம்பக் கெட்டிக்காரனாகிவிட வேண்டும். இறைவனுடைய அருள் உனக்குப் பரிபூரண மாக இருக்கவேண்டுமென்று நான் பிரார்த்தனை செய்துகொண்டே இருப்பேன்.

இப்படிக்கு உன் அப்பா,

**சுந்தரம்.''**

அதைப் படித்ததும் நானும் அம்மாவும் ரொம்பக் கண்ணீர் விட்டுக் கதறி விட்டோம். உணர்ச்சி வசத்தால் என்னால் படிக்கவே முடியவில்லை. விம்மிக்கொண்டே படித்தேன்.

வாத்தியாரையா என்னைக் கூப்பிட்டார். நான் கண்களைத் துடைத்துக்கொண்டு அவரிடம் சென்றேன்.

" துரை ! நீகூட இப்படி அழலாமா ? அம்மாவைச் சமாதானப்படுத்த வேண்டியது உன்னுடைய கடமை இல்லையா ?'' என்று அவர் கேட்டார்.

நான் உடைந்த குரலில் அந்தப் புதிய மனிதரைப் பார்த்து, " அப்பா இதில் எழுதியிருப்பதைப் பார்த்தால் அவருக்கு உங்களோடு வரும் எண்ணம் இருந்ததாகத் தெரியவில்லையே!" என்றேன்.

" ஆமாம் துரை ! இதை எழுதும்போது அவர் என் னுடன் வருவதாக இல்லை. நான் மட்டும் தப்பி வருவ தாக இருந்தேன். அவர் ஒத்தாசை செய்வதாகத்தான் சொன்னார். எனக்கு என் சொந்தக் காரியம் இருந்தது. அதைச் செய்துவிட்டு உங்களையும் கவனித்துக் கொள்வ தாகச் சொன்னேன். அவரும் சரியென்று சொல்லியிருந் தார். கடைசியில் தாமும் வருவதாகச் சொன்னார். அவரால் சிறையின் தனிமையைத் தாங்க முடியவில்லை. எப்படியேனும் தப்பிவிட்டால் உங்களுடன் எங்கேயாவது போய்விடலாமென்று எண்ணினார். ஆனால், துரதிர்ஷ்ட வசமாக இப்படி நேர்ந்துவிட்டது. நாங்கள் இருவரும்

சுவரேறிக் குதித்தபோது ஒரு நாய் குறைத்து எங்களைக் காட்டிக் கொடுத்துவிட்டது. நாங்கள் மிக வேகமாகத் தான் ஓடினோம்.

"ஆனால், அந்தப் போலீஸ்காரர்கள் துப்பாக்கியால் சுட்டார்கள். உன் தந்தைக்கு அடிபட்டது என்று எனக்குத் தெரிந்ததும் நான் நின்று அவரைப் பார்த்தேன். 'ஓடு! ஓடு!' என்று அவர் சத்தம் போட்டார். அந்தச் சந்தர்ப்பத்தில்கூட அவருக்கு நானாவது தப்பிச் சென்றால் உங்களைக் காப்பாற்றுவேன் என்று தோன்றியிருக்க வேண்டும். அவர் அப்படிச் சொல்லியிருக்காவிட்டால் நிச்சயமாக நானும் பிழைத்து வத்திருக்க மாட்டேன்" என்று கூறினார்.

வாத்தியாரையா, "நீங்கள் அன்று பிழைத்தது ரங்கதுரைக்காகத்தான் என்று நான் நினைக்கிறேன். மேற்கொண்டு செய்ய வேண்டியதையெல்லாம் இவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள்" என்றார்.

விந்தை மனிதரும் உடனே என்னைப் பார்த்து, "நான் சென்னையில் வீடு ஏற்பாடு செய்துவிட்டேன். வருகிற ஞாயிற்றுக்கிழமை மாலை நீங்கள் புறப்பட்டுச் சென்னைக்கு வந்து சேருங்கள். அங்கே ரயிலடிக்கு ஒருவரை அனுப்பி வைக்கிறேன். உனக்குப் பள்ளிக்கூடத்துக்கும் ஏற்பாடு செய்துவிட்டேன். நான் வந்தாலும் வராவிட்டாலும் என் நண்பர் உங்களைக் கவனித்துக் கொள்வார். நீங்கள் கட்டாயம் ஞாயிற்றுக்கிழமை புறப்பட்டு வந்துவிடுங்கள்" என்றார். என் அன்னை சமையல் அறையின் அருகில் நின்று கொண்டிருந்தவர் கண்களில் கண்ணீருடன் தலையை ஆட்டினார்.

ஞாயிற்றுக்கிழமையன்று அல்லிக்குளம் கிராமத்தினிடமும், என் அருமைத் தமிழ் வாத்தியாரிடமும் பிரியாவிடை பெற்றுக்கொண்டு நானும் என்னுடைய அன்னையும் சென்னைக்குப் புறப்பட்டோம்.

அன்று நான் சென்னைக்குச் சென்றபடியால் என் வாழ்க்கையில் எத்தனை மாறுதல் உண்டாயிற்று ! முன்பின் தெரியாத ஒரு மனிதரிடம் நான் வைத்த அளவற்ற நம்பிக்கை என் வாழ்வையே மாற்றி அமைத்துவிட்டது. அந்த மனிதரின் பெயர்கூட எனக்குத் தெரியவில்லை. வாத்தியாரையாவிடம் அவர் சொல்லியிருக்க வேண்டும். நான் சிறுவனானபடியால் ரகசியமான விஷயத்தை என்னிடம் சொல்லக்கூடாதென்று தீர்மானித்து விட்டார்கள் போலும் ! அதன் பிறகு அவரை நான் நேரில் பார்க்கவே முடியாமல் போய்விட்டது. அந்த உத்தமரைப் பற்றி வெகு நாட்களுக்குப் பின்னர் ஒரு போட்டோ ஆல்பத்தைப் பார்த்து விவரங்கள் அறிந்துகொண்டேன்.

# 17. உத்தம நண்பன் !

நாங்கள் சென்னை சென்ற விவரங்களையெல்லாம் நான் வளர்த்த விரும்பவில்லை. ஏற்கனவேயே அந்த விந்தை மனிதர் ஏற்பாடு செய்திருந்த வீட்டில் இருந்து கொண்டு, ஒரு பள்ளியிலும் சேர்ந்து படித்தேன். இந்த நாட்களில் முக்கியமாக ஒன்றும் நிகழவில்லையாதலால் அதையெல்லாம் தள்ளிவிட்டு நான் கலாசாலையில் சேர்ந்ததைப் பற்றி எழுதுகிறேன்.

எஸ். எஸ். எல். ஸி. யில் முதல் வகுப்பு மாணவனாகத் தேறியபடியால் கலாசாலையில் அதிக சிரமமின்றியே இடம் கிடைத்து விட்டது. நான் சேர்ந்தது கிறிஸ்தவப் பாதிரி மார்களால் நடத்தப்பட்டு வந்த கலாசாலையாகும்.

அந்தச் சமயத்தில்தான் எங்களுக்குச் சோதனை ஏற்பட்டது. பள்ளிப் படிப்பு முடியும் வரை மாதா மாதம் கொஞ்சம் பணம் வந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு பெயரில் பணம் வரும். எந்தப் பெயரில்

வந்தாலும் பணம் அனுப்புவது யார் என்பதுபற்றி நாங்கள் எப்போதும் சந்தேகப்பட்டதே கிடையாது.

நான் கலாசாலையில் சேர்ந்த பிறகு பணம் வருவது நின்றுபோய் விட்டது. காரணம் தெரியவில்லை. நாங்கள் ரொம்பத் திண்டாடிப் போனோம்.

கலாசாலையில் சேர்ந்ததும் இப்படி நேரவே எனக்குச் சொல்ல முடியாத துயரம் ஏற்பட்டது. இந்தக் கஷ்டம் போதாததற்கு என் அன்னைக்குக் கடும் ஜுரம் வேறு வந்துவிட்டது.

நான் கலாசாலையில் சேர்ந்து முதல் நாள் என் வகுப்பு அறைக்குள் காலை வைத்ததும், முதலில் ஒரு பையன் நின்று கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் அவன் தன் அருகில் இருந்த ஒரு மாணவனை நோக்கி, " இவன் யார் தெரியுமா ?" என்று கேட்டான். அந்தப் பையன் தெரியாதென்று தலையசைக்கவே அவன் என்னிடம், " உன் பெயரென்ன ?" என்று வினவினான்.

" ரங்கதுரை !" என்றேன்.

" ஓ ! முதல் வகுப்பில் பாஸ் பண்ணின பையனா ? கெட்டிக்காரன்தான். உன்னைப் பற்றி இங்கு எல்லோரும் பேசிக் கொண்டார்கள் " என்றான்.

எனக்கு எவ்வளவு பெருமையாக இருந்திருக்குமென்று சொல்ல வேண்டியதில்லை. தன்னைப் பற்றிப் பிறர் புகழ்வதைக் கேட்பதைவிட போதை தரும் ஒரு விஷயம் இந்த உலகில் வேறு எதுவுமே கிடையாது அல்லவா ?

" உன் பெயரென்ன ?" என்று அவனிடம் கேட்டேன்.

" தங்கபாண்டியன் " என்று 'டக்' என்று பதில் வந்தது.

" ஏதோ அரச குமாரன் பெயரைப்போலல்லவா இருக்கிறது ?" என்றேன்.

அதற்குத் தங்கபாண்டியனின் நண்பன், " அரச குமாரன் மாதிரி என்ன ? அரசகுமாரனேதான். குங்குமத் துறை ஜமீன்தாரின் ஏக புதல்வன் இந்தத் தங்க பாண்டியன் " என்று கூறினன்.

அன்றுமுதல் நாங்கள் இருவரும் மிக அன்னியோன்ய மாகப் பழகினேம். தங்கபாண்டியனிடம் என் வாழ்நாளில் நடந்த விஷயங்கள் எல்லாவற்றையும் சொன்னேன். சாட்டையடி சம்பவத்தையும், என்னைக் காத்த மனிதரைப் பற்றியும் மட்டும்தான் சொல்லவில்லை. என்னுடைய கதையைக் கேட்டுத் தங்கபாண்டியன் மிகவும் பரிதாபப் பட்டான். தன்னுடைய கஷ்டங்கள், ஆசாபாசங்கள் முதலியவற்றை என்னிடம் சொன்னன். தன் மாமா சொக்கையா தன்னைப் படுத்திவைத்த பாட்டையெல்லாம் அளவிலாத துயரத்துடன் கூறினன். பாவம் ! எனக்குப் பணமில்லாமல் தவிப்பு. அவனுக்குப் பணம் இருந்தும் தவிப்பு ! அதை உணர்ந்திருந்த நான் அவனைப் பண உதவியே கேட்பதில்லை என்று தீர்மானித்திருந்தேன். அதை நான் மீற வேண்டிய நிலை ஒரு நாள் எனக்கு ஏற்பட்டது.

என் அன்னை நோய்வாய்ப்பட்டார். அவருக்கு வைத்தியம் பார்க்கவாவது பணம் வேண்டாமா ? நான் ஒரு நாள் கலாசாலைத் தோட்டத்தில், வேப்பமரத்தடியில் உட்கார்ந்து உலகை மறந்து அம்மாவைப் பற்றியே நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். அப்போது தங்கபாண்டியன் அங்கே வரவே என்னைப் பார்த்துவிட்டு அருகில் வந்து உட்கார்ந்தான்.

" என்ன ? மகரிஷி தவம் செய்கிறார்போலிருக்கிறது. நான் அனாவசியமாய் அதைக் கெடுக்கிறேனே ?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

நான் பதில் சொல்லவில்லை.

" ஏன் ரங்கதுரை ஒரு மாதிரி இருக்கிறாய்? உடம்பு சரியாக இல்லையா ?" என்று கேட்டான்.

நான் அப்போதும் பதில் சொல்லவில்லை. தங்க பாண்டியனின் முகமும் கவலைக் குறி காட்டியது. என் அருகில் நெருங்கி உட்கார்ந்துகொண்டு திரும்பத் திரும்ப அதே கேள்வியைக் கேட்டுக் கொண்டே இருந்தான்.

கடைசியில் நானும் மனம் இளகி, அம்மா உடம்பு சரியில்லாமல் படுத்திருப்பதையும், பணக் கஷ்டத்தையும் பற்றிச் சொன்னேன்.

உடனே அவன் ஒரு துள்ளுத் துள்ளி எழுந்து, " உன்னைப்போல ஒரு பையன் இந்தப் பூலோகத்திலேயே இருக்க மாட்டான் " என்று கூறிவிட்டு என்னை இழுத்துக் கொண்டு ஹாஸ்டலுக்கு ஓடினான். அங்கிருந்த தன் பெட்டியைத் திறந்து உடனே இருபது ரூபாய் எடுத்து என்னிடம் கொடுத்து, என்னை வீட்டுக்குப் போகச் சொன்னான். நானும் போய்விட்டேன். சற்று நேரத்துக் கெல்லாம், கலாசாலையில் ' லீவு ' எடுத்துக் கொண்டு ஒரு டாக்டரையும் கூட்டிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்தான் தங்கபாண்டியன். என் நெஞ்சம் நன்றியால் நிறைந்தது.

இதெல்லாம் நடந்த நாலாவது நாள் எனக்கு இந்த உலகமே அஸ்தமித்து விட்டது போன்ற அதிர்ச்சி ஏற்பட்டது. என் அன்னை இவ்வுலகில் என்னை ஒரு அநாதையாகச் செய்துவிட்டுக் காலமானார். நான் அந்தத் துயரத்திலிருந்து எப்படி மீண்டேனென்றே எனக்கு விளங்கவில்லை. பாவம்! என் அன்னை தாம் இறந்து விடுவோமென்று எண்ணவே இல்லை. எண்ணினாரோ இல்லையோ? என்னிடம் சிறிதுகூட அப்படித் தாம் எண்ணியதாகக் காட்டிக்கொள்ளவில்லை. நான் இந்த உலகத்தில் ஒரு விதமான துணையுமில்லாமல் தன்னந் தனியனாக விடப்பட்டேன். என் அன்னையின் மரணத்தைப்

பற்றி நினைக்கும்போது மேகம் கவிவதுபோல் என் நெஞ்சைத் துயரம் கவிந்து கொள்கிறது. அதைப் பற்றி எவ்வளவு எழுதினாலும் என் உண்மையான துயரத்தை விவரித்ததாகாது. அவரவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டியதுதான். உலகமே திடீரென்று சூனிய மாகி விட்டதுபோல் எனக்குத் தோன்றியது. அத்துடன் நிறுத்திக் கொள்வதுதான் சரி.

அப்போதுதான் சஞ்சீவி போல் எனக்கு உதவினான் தங்கபாண்டியன். பண உதவியுடன், அன்பினாலும் உதவி செய்தான். சுபாவத்தில் மிகவும் பயந்தவனான அவன் சமயம் வரும்போது மிகத் தைரியமாக இருப்பதைக் கண்டு நான் வியந்திருக்கிறேன்.

அன்னையின் பிரிவுக்குப் பிறகு வீட்டிலிருந்த சொற்பச் சாமான்களை விற்றுவிட்டு நான் தங்கபாண்டியனுடன் கலாசாலை ஹாஸ்டலிலேயே சேர்ந்துவிட்டேன். அதிர்ஷ்ட வசமாக எங்கள் இருவருக்கும் ஒரே அறையும் கிடைத்தது. இதற்கெல்லாம் ஆன செலவைத் தங்கபாண்டியன்தான் ஏற்றுக்கொண்டான்.

ஒரு நாள் அவனுடைய கடிகாரத்தைக் காணவில்லை. மணி பார்ப்பதற்காகத் தேடினேன். அவனிடம் கேட்ட போது கெட்டுப் போய் விட்டது என்று கூறினான். நான் அவனை அஜாக்கிரதையாக இருந்ததற்காகக் கோபித்துக் கொண்டேன். ஆனால், பின்னால் இன்னொரு நண்பன் மூலமாகத் தங்கபாண்டியன் அந்தக் கடிகாரத்தை விற்று விட்டான் என்று தெரிந்ததும் மனமுருகிப் போனேன். என்னுடைய செலவுக்காகத் தன் விலை உயர்ந்த கைக் கடிகாரத்தை விற்றுவிட அவனுக்கு மனம் துணிந்தது மிக அதிசயமான விஷயம் அல்லவா? அதை எவ்வளவு போற்ற வேண்டும்! யார் அந்தமாதிரி நண்பனுக்காகப் பணம் செலவழிப்பார்கள்? அவனுடைய தாராள மனப் பான்மைக்காக அவன் தன் மாமனிடம் வேறு நிறையத்

திட்டும் வசவும் வாங்கியிருக்கிறன். அப்படி இருந்தும் என்னிடம் அவன் வைத்த அலாதியான பிரியத்தால் தன் கடிகாரத்தைக் கூட விற்றுவிடத் தோன்றியது வியப்பல்லவா !

தங்கபாண்டியன் சற்றுக் குட்டையான வாலிபன். அவனைப் பார்த்தால் ஒருவகை இரக்க உணர்ச்சி ஏற்படும். அவன் வேறு யாரிடமும் அதிகமாகப் பேச்சே வைத்துக் கொள்ள மாட்டான். நான் ஒருவன்தான் அவனுக்கு உண்மையில் நண்பனுக இருந்தேன். அவனுக்குப் புரியாத பாடங்கள் எல்லாம் சொல்லித் தருவேன்.

என் பொருட்டு அவன் செய்த காரியங்களுக்கெல்லாம் அவனைக் கலாசாலை மாணவர்கள் பரிகசித்து வந்தார்கள். அவனுக்கு அதனுல் ரொம்பக் கெட்ட பெயர் என்பதுகூட எனக்குத் தெரியும். ஆனுல், அவன் எதையும் லட்சியம் செய்யாமல் தொடர்ந்து என்னுடன் ஒட்டிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் நான் அதற்குக் காரணம் கேட்டபோது, " எனக்கு நிஜமாகத் தெரியாது, துரை ! ஒன்றுதான் தெரிகிறது. உன்னை மனப்பூர்வமாக நம்பலாம் என்று எனக்குப் படுகிறது. நீ ரொம்ப நல்லவன் " என்ருன்.

அவனுடைய அன்புக்குப் பதிலாக நான் அவனுக்குச் செய்யக் கூடியது வேறொன்றும் இருக்கவில்லை. நான் திரும்பக் கொடுக்கக் கூடியது அந்த அன்புக்குத் தகுதியுள்ளவனுக இருப்பதுதானே ? கூடியவரை அவனுடைய பாடங்களைக் கவனித்துச் சொல்லிக் கொடுத்து வந்தேன்.

தங்கபாண்டியனுக்குப் படிப்பு என்பது கொஞ்சம் வேதனை தரும் விஷயம். அவன் கல்லூரி ஹாஸ்டலில் சேர்ந்தது தன் மாமனிடமிருந்து தப்புவதற்காகத்தான் என்று பின்னுல் அறிந்து கொண்டேன்.

தங்கபாண்டியன் பயந்த சுபாவமுடையவன் என்று சொன்னேன். அவனுக்குத் தன் மாமாவிடம் சொல்ல முடியாத பயம். நான் சொல்லிப் பின்னால் கொஞ்சம் தைரியம் வந்தது. தன் மாமா ரொம்பப் பொல்லாதவ ரென்ற எண்ணம் அவன் நெஞ்சில் ஊறிப் போயிருந்தது. அவன் மனம் விட்டுப் பழகக்கூடிய ஆத்மா ஒன்றுகூட அவனுடைய ஜமீனில் இல்லை. சொக்கையாவுக்கு அடிமை யாக இருப்பது அவனுக்கு மிகவும் வேதனை தந்து வந்தது. சொக்கையா தன் காரியங்களுக்காகத் தங்கபாண்டியனை வெளியூருக்கு அனுப்ப நினைத்தபோது, தங்கபாண்டியன் தான் கலாசாலையில் படிப்பதாகக் கூறிவிட்டுச் சென்னைக்கு வந்துவிட்டான். ஜமீன் காரியஸ்தர் கொஞ்சம் மனச்சாட்சி உள்ளவரானபடியால் தங்கபாண்டியனுக்குப் பணம் மட்டும் தவருமல் அனுப்பிக்கொண்டு வந்தார்.

இதையெல்லாம் அவன் என்னிடம் கூறிவிட்டு, "ஜமீன்தாருக்கு மகனைப் பிறந்து என்ன பயன், துரை? வேறு ஒருவனுக்குப் பயந்து பயந்து சாகவேண்டியிருக் கிறது. என்னுடைய தங்கை லக்ஷ்மி அங்கே இருக்கிருள். அரண்மனையை விட்டுக் காலை வெளியே எடுத்து வைக்க அனுமதி கிடையாது. பள்ளிக்கூடத்துக்குக்கூட அவள் போகக் கூடாதாம். நானும் வந்த பிறகு அவள் பாடுதான் கஷ்டம். தன்னந்தனியாக இருக்கிருள்! அதை நினைத்தால் மிக வருந்தமாக இருக்கிறது" என்ருன்.

நான் அவனைத் தேற்றினேன். உலகத்தில் கஷ்டமே அனுபவிக்காதவர்கள் யாரும் இல்லையென்றும், நல்ல காலம் தானுக வருமென்றும் கூறி வைத்தேன்.

தங்கபாண்டியன் அடிக்கடி தன் தங்கை லக்ஷ்மியைப் பற்றிப் பேசிக்கொண்டே இருப்பான். அவன் அப்படிப் பெருமையுடன் பேசும்போதெல்லாம் எனக்கும் ஒரு தங்கை இருந்திருக்கக் கூடாதா என்று தோன்றும்.

இப்படித் தன்னந் தனியனாக உலகில் விடப்பட்டிருக் கிறோமே என்ற ஏக்கம் எழும். அதை நான் தங்கபாண்டிய னிடம் சொன்னபோது அவன் சிரித்துவிட்டு, "நான் உனக்குத் தம்பியாக இருக்கிறேனே துரை. வேறு யாராவது உனக்கு வேண்டுமா ?" என்றான்.

நானும் அவனும் சிநேகமாக இருப்பதைப் பார்த்துப் பல மாணவர்கள் பரிகசித்தார்கள். குசேலரையும் கிருஷ்ண னையும் ஒப்பிட்டுப் பேசினார்கள். நாங்கள் எதையும் பொருட்படுத்தவில்லை. நான் என் அன்னையையும் இழந்து, பணமும் இல்லாமல் அநாதரவாக நின்ற சமயத்தில் எனக்கு உயிர் அளித்த உத்தம நண்பன் தங்கபாண்டியன். ஆகையால் அவனிடம் நான் பின்னால் பல குற்றங் குறைகள் கண்டபோதிலும் அவைகளைப் பொருட்படுத்த வில்லை. எனக்கு அவன் அன்று செய்த உதவியை நான் என்றென்றும் மறக்க முடியாது.

# 18. சரித்திரப் பேராசிரியர்

என்னுடைய முகராசியைப் பற்றி என் நண்பர்கள் பலர் கூறிப் பொறாமைப்படுவதுண்டு. "உனக்கென்னடா? நல்ல முகராசி இருக்கிறது. எங்கு போனாலும் காரியத்தைச் சாதித்துக்கொண்டு விடுவாய்" என்பார்கள்.

என் முகராசியோ அல்லது ஜாதக பலனோ அல்லது என் பரிதாபமான நிலையோ என்ன காரணமோ தெரியாது. கல்லூரியில் அத்தனை பேராசிரியர்களும் என்னிடம் பிரிய மாக இருந்தார்கள். மாணவர்களிலும் அநேகம் பேர் அன்பு காட்டினார்கள்.

எனக்கு யாரும் இல்லை என்ற காரணத்தால் ஏற்பட்ட அனுதாபம்தான் இவற்றுக்குக் காரணம் என்று நினைக் கிறேன். விடுமுறை நாட்கள் வந்துவிட்டால் சந்துரு,

சேகர், கிருஷ்ணன், மணி முதலியவர்கள் எல்லாரும் "என் வீட்டுக்குத்தான் வரவேண்டும்" என்று நச்சரித்து விடுவார்கள். அவர்கள் என்னையே பங்கு போட்டுக் கொண்டு விடுவார்களோ என்றுகூடச் சில சமயம் பயமாக இருக்கும்.

தங்கபாண்டியன் மட்டும் பரிதாபமான முகத்துடன் உட்கார்ந்திருப்பான். எல்லாரும் போன பிறகு, "துரை! உன்னை என்னுடைய அரண்மனைக்கு அழைத்துப் போக எனக்குத் தைரியம் இல்லையே. நான் உனக்கு நண்பன் என்று சொல்லிக்கொண்டு என்ன பிரயோசனம்?" என்று வருத்தப்படுவான். நான் அவனைத் தேற்றுவேன்.

"நீ எனக்குச் செய்யும் உதவிக்கு நான் ஐந்து ஜன்மம் எடுத்துத் திருப்பிச் செய்யவேண்டும் பாண்டியா! என்னை அழைத்துப் போக முடியவில்லையே என்பதற்கு நீ வருத்தப் படவேண்டாம். இந்த நிலைமை மாறவேண்டுமே என்று கவலைப்படு. தைரியத்தை வரவழைத்துக் கொள். நமக்கு ரொம்ப வயதாகி விடவில்லையே. சொக்கையாவை எதிர்த்துப் போராட நம்மை இப்போது தயார் செய்து கொண்டால், காலம் வரும்போது தைரியமாகக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம். வயதானவர்கள் மாதிரி நீ துக்கப்படக் கூடாது" என்று கூறித் தைரியமளிப்பேன்.

முதல் வருஷம் இப்படிச் சென்றது. பரீக்ஷையில் முதல் மாணவனாகத் தேறினேன். அதன் பிறகு கல்லூரியில் என்ன நடந்தாலும் அதன் பொறுப்பை என் தலையில் கட்டிவிடுவார்கள். நானும் எது சொன்னாலும் தட்டிக் கழிக்கவே மாட்டேன். எனக்குந்தான் வேறு என்ன வேலை இருந்தது?

ஹாஸ்டலில் ஒரு தனி மாணவர் சங்கம் இருந்தது. என்னை இரண்டாவது வருஷ ஆரம்பத்தில் அதற்குக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுத்தார்கள். தங்கபாண்டிய

னுக்கு ஒரே ஆனந்தம். ஆரம்பத்தில் அந்தக் காரியதரிசி பதவி பொறுப்புள்ள வேலையானபடியால எனக்குப் பிடிக்க வில்லே. ஏதேனும் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறிப் பிடவேண்டும். அதைப் பற்றி பேசுவதற்கு யாராவது பிரபலஸ்தர்களைக் கூப்பிட வேண்டும். அவர்களுக்கு மரியாதை செய்யும் பொறுப்புக்கள் ; மாணவர்களே அமைதி யாக இருந்து கேட்க வைத்தல்; இப்படி எத்தனையோ விதமான பொறுப்புக்கள்.

சில சமயம் பேசுவதற்காகக் கூப்பிடப்பட்ட பிரசங்கி வந்துவிடுவார். கேட்பதற்கு ஒரு மாணவன்கூட இருக்க மாட்டான். பிரசங்கியை உட்கார வைத்துவிட்டு, கல் லூரியின் பல்வேறு மூலைகளில் பதுங்கிக்கொண்டிருக்கும் மாணவர்களை நயமாகவும் பயமாகவும் வற்புறுத்தி அழைத் துக்கொண்டு போகவேண்டும். சில சமயம் இலக்கியக் கூட்டத்துக்குப் பொருளாதாரம் படிக்கும் மாணவர்களேயும், சரித்திர ஆராய்ச்சிக் கூட்டத்துக்கு தாவர சாஸ்திரம் படிக்கும் மாணவர்களையும் இழுத்துக்கொண்டு போகும்படி நேரிட்டிருக்கிறது. கூட்டம் முடிந்த பிறகு எல்லாரும், “ உன்னால் இன்றைக்குக் கிரிக்கெட் மாட்ச் போச்சு ”, “ உன்னால் இன்று ஒரு பிரமாதமான சினிமா பார்க்க முடியாமல் போச்சு ” என்று என்னைத் திட்டிக்கொண்டே போவார்கள்.

ஆனால், இந்த கஷ்டங்களைச் சமாளிப்பதிலும் ஒரு உற்சாகம் இருக்கத்தான் செய்கிறது. அந்தக் காரியதரிசி பதவியை ஒப்புக் கொண்டபடியால் எனக்கு ஒரு மிகப் பெரிய நன்மையும் உண்டாயிற்று

நான் சரித்திரப் பாடத்தில் எப்போதுமே ஊக்க முடையவன். ஆகவே சரித்திரப் பாடம் எடுத்துக்கொண்ட மாணவர்களுக்கென்று தனியாகச் சரித்திரப் பேராசிரி யர்களை அழைத்துப் பேச ஏற்பாடு செய்வேன்.

பழைய காலத்தில் ஸிந்து நதி தீரத்தின் நாகரிகத்துக்குச் சான்றாக விளங்கிய "மோஹஞ்சதாரோ, ஹரப்பா" என்ற இரு பட்டணங்களைப் பற்றி விரிவான பிரசங்கம் செய்வதற்காக ஒரு சரித்திரப் பேராசிரியரை அழைக்க ஒரு நாள் நான் சென்றேன்.

'முகராசி, முகராசி' என்று என் நண்பர்கள் கூறுவார்களே, அதுதானோ என்னவோ, அந்தப் பேராசிரியர் கோதண்டராமனுக்கு என்மீது திடீரென்று ஒரு அபிமானம் உண்டாகிவிட்டது. நான் சரித்திர சம்பந்தமான சில சந்தேகங்களை விளக்கும்படி அவரிடம் கேட்டேன். ஒரு காகிதத்தில் சில கேள்விகளை எழுதிக் கொடுத்தேன். அதைப் பார்த்ததும் அவர் என்னைத் தட்டிக் கொடுத்தார். "நீ ரொம்பக் கெட்டிக்காரன். சரித்திரத்தை இவ்வளவு ஊன்றிப் படிக்கிறாயே" என்றார்.

கோதண்டராமன் வந்து பேசிவிட்டுப் போய் ஒரு வாரம் கழித்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. என்னைப் பார்க்க வேண்டுமென்று அவர் எழுதியிருந்தார். அவர் வீட்டுக்குப் போனதும் என்னைப் பற்றி விசாரித்தார். நானும் ரொம்பப் பரிதாபகரமாகச் சொல்லாமல் என் நிலையைச் சொன்னேன். தங்கபாண்டியன் உதவி செய்வதைப் பற்றியும் அவரிடம் குறிப்பிட்டேன்.

உடனே அவர், "நீ இன்னொருவரை எதிர்பார்க்காமல், நீயே சம்பாதித்து ஹாஸ்டல் செலவுக்கு ஈடு கட்ட முடியுமானால் உனக்குச் சந்தோஷமாக இருக்குமல்லவா?" என்று கேட்டார்.

அவர் அப்படிக் கேட்டதும், நான் வேலை தேடிச் சென்னைப் பட்டணத்தைச் சுற்றி வந்ததையும், எல்லாரும் படிக்கும் மாணவனை வேலைக்கு வைத்துக்கொள்ள முடியாது என்று மறுத்து விட்டதையும் கூறினேன். கடைசியில், "என் படிப்புக் கெட்டுப் போகாமல் ஓய்வு

நேரத்தில் செய்வதற்கு மாத்திரம் நான் வேலை கேட்டால் யார் தருவார்கள் ?" என்றேன்.

"படிக்கும் மாணவனுக்கு வேலை கொடுக்காமல் யாருக்குக் கொடுப்பது ? படிப்பவன் மனிதன் இல்லையா ? அவனுக்குச் செலவு இல்லையா ? அழகாக இருக்கிறது. நான் ஒரு வேலை தருகிறேன், செய்கிருயா ?" என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார்.

நான் மலைத்துப் போனேன். அவரிடமிருந்து அதை நான் எதிர்பார்க்கவே இல்லை. தங்கபாண்டியன் எத்தனையோ அன்புடன் எனக்கு உதவி செய்து வந்தான். அதனால் எனக்கு நன்றிக் கடன் ஏறிக்கொண்டே போயிற்று. அதன் பாரம் என் தலையை அழுத்திற்று. அவனுக்கே முடியாத நிலைமையில் எனக்கு அவன் உபகாரம் செய்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடிய வில்லை. எனினும், வேறு வழியில்லாமல் பொறுத்துக் கொண்டிருந்தேன். அவனுக்குப் பாரமாக நான் இருப் பதைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்பதற்காக, கல்லூரியில் எந்தப் போட்டி நடந்தாலும் கலந்துகொண்டு பரிசு வாங்க முயற்சிப்பேன். பரிசு வாங்கிய மறுநாளே அதை விற்றுச் செலவு செய்து விடுவேன்.

இப்படியெல்லாம் திண்டாடிக் கொண்டிருந்தவனுக்கு இந்தச் செய்தி எப்படி இருந்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா ? என்னால் பதில் சொல்லக் கூட முடியவில்லை.

அவர் என் பதிலை எதிர்பார்க்கவும் இல்லை. "நீ மாட்டேன் என்ருலும் நான் விடப்போவதில்லை. நான் கொடுக்கும் வேலை ரொம்பக் கஷ்டமானதுதான். என் வீட்டில் இரண்டு வாலான பையன்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு நீ தினமும் வந்து பாடம் சொல்லித் தர வேண்டும். அவர்களை நீ மேய்ப்பதிலிருந்து உன் சாமர்த்தியம் எனக்குத் தெரிந்துவிடும்" என்ருர்.

" தலைமைப் பேராசிரியரின் உத்தரவு வேண்டு மல்லவா ? அவரிடம் கேட்டு விடுகிறேன் " என்றேன்.

" அதெல்லாம் நான் கேட்டுக் கொள்கிறேன். நீ கவலைப்படாதே. வெள்ளிக்கிழமை மாலை நாள் நன்றாக இருக்கிறது. வந்துவிடு " என்றார்.

அன்று நான் தங்கபாண்டியனிடம் இதை மிகக் குதூகலத்தோடு கூறினேன். உலகத்தில் ஒருவரையும் எதிர்பாராமல் நானும் மனிதனாக வாழவேண்டும், வாழ்க்கையை அனுபவித்து வாழவேண்டும் என்ற என் லட்சியம் நிறைவேற அது முதல் படியாக அமையும் என்று எனக்குத் தோன்றியது.

நான் இண்டர் வகுப்பில் இரண்டாவது வருஷம் படித்துக் கொண்டிருந்தபோது என் மனோ பாவங்களெல்லாம் மாறத் தொடங்கின. சிறுவனாக இருந்தவன் பெரியவனாகி விட்டோம் என்ற ஒரு உணர்ச்சியைப் பெற்றேன்.

சில சமயங்களில் ஒரே சூன்யமாக வாழ்க்கை தென்படும்போதெல்லாம் என் அன்னையின் விருப்பம் நினைவுக்கு வந்து எனக்குத் தெம்பு அளிக்கும். எப்படியாவது அவருடைய விருப்பத்தை நிறைவேற்றிவிட வேண்டுமென்ற ஆர்வம் பொங்கி எழும்.

இதற்கிடையே தங்கபாண்டியனின் மனோபாவமும் மாறி வந்தது. இரண்டாவது வருஷ முடிவில் அவன் தனக்கு அதிகப் பணம் வேண்டுமென்று தன் மாமனுக்குக் கடிதம் எழுதுமளவுக்குத் துணிவு பெற்று விட்டான். அதை எழுதி என்னிடம் காட்டியபோது அவனுடைய முகத்தில் கண்ட ஆனந்தத்தை விவரிக்க முடியாது. தனக்கும் தைரியம் வந்துவிட்டது என்று அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை மற்றவர்கள் புரிந்து கொள்ளக்கூட முடியாது.

கடிதம் போய்ச் சேர்ந்ததும் அவன் மாமா சொக்கையா பாண்டியர் நேரே வந்து விட்டார். பையனுக்கு மூளை சரியாகத்தான் இருக்கிறதா என்று சந்தேகம் வந்து விட்டது போலிருக்கிறது.

கல்லூரி ஆசிரியர்களிடம் அவனைப்பற்றி விசாரணை செய்தார். அவன் ரொம்ப சாதுவான பிள்ளை என்ற அபிப்பிராயத்தையே எல்லாரும் தெரிவித்தார்கள். அதன் பிறகு அவர் தலைமைப் பேராசிரியரிடம் சென்று, “ தங்க பாண்டியன் பார்க்கச் சாது மாதிரி இருப்பான். ஆனால், ரொம்பப் பொல்லாத பிள்ளை. பணத்தைத் தாறுமாறாகச் செலவழிக்கிறான். சகவாச தோஷம் போலிருக்கிறது. யாரோ ஒரு பரதேசிப் பயலுடன் ரொம்பப் பழகுகிறானே. அதை அனுமதிக்காதீர்கள். கண்டிப்பாக இருங்கள் ” என்று கூறிவிட்டுப் போனாராம்.

அந்தச் சமயத்தில் அங்கே இருந்த எங்கள் வகுப்புப் பேராசிரியர் சந்தோஷம் அவர்கள் இதை என்னிடம் கூறினார். தங்கபாண்டியன் அவமானத்தினால் குன்றிப் போனான்.

சொக்கையா போன பிறகு தலைமைப் பேராசிரியர், சந்தோஷம் அவர்களைப் பார்த்து, “ இந்த மனிதன் பைத்தியமாக இருக்கவேண்டும். அல்லது மிகப் பொல்லாதவனாக இருக்கவேண்டும் ” என்று சொன்னாராம். இதை அவர் கூறிய பிறகுதான் எங்கள் மனம் சமாதானமடைந்தது. தங்கபாண்டியனுக்குத் தன் மாமாவைப் பகிரங்கமாக எதிர்க்க இதன் பிறகுதான் துணிவு வந்தது. நாங்கள் இண்டர் பரீக்ஷை முடித்ததும் குங்குமத் துறைக்குப் போய் விடுமுறை நாட்களைக் கழிப்பதாகத் தீர்மானித்தோம். ஆனால், அந்த வருஷம் என்னை ஸ்ரீ கோதண்டராமன் போக விடவில்லை. அவர்கள் வீட்டில் இருக்கும்படி செய்துவிட்டார். தங்கபாண்டியன்

இதனால் ஏமாற்றமடைந்தாலும், 'நாம் இவ்வளவு சீக்கிரம் சொக்கையாவை விரோதித்துக் கொள்வது நல்லதல்ல' என்று கூறியதும் சரியென்று ஒப்புக் கொண்டான்.

# 19. அற்புதம் நிகழ்ந்தது!

ஒவ்வொரு விடுமுறையிலும் நான் தங்கபாண்டியனுடன் குங்குமப் பூந்துறை செல்வதைத் தட்டிக் கழித்துக் கொண்டே வந்தேன். இன்டர் பரீட்சை முடிந்து பி. ஏ. வகுப்பில் சேர்ந்து இரண்டு வருஷங்களும் ஆகிவிட்டன. சொக்கையாவுடன் தங்கபாண்டியன் விரோதித்துக் கொள்வது சரியல்ல என்று பட்டதால் அவனுடன் போகவில்லை.

நான் பி. ஏ. வகுப்பில் ஸ்ரீ கோதண்டராமனின் தூண்டுதலினால் சரித்திரத்தை முக்கிய பாடமாக எடுத்துக் கொண்டேன். அத்துடன் நில்லாமல் அவருக்குச் சரித்திர ஆராய்ச்சி சம்பந்தமாகப் பல உதவிகள் செய்து வந்தேன். செப்பேடுகள், சிலாசாஸனங்கள், நாட்டுப் பாடல்கள் முதலியவற்றிலிருந்து சரித்திர சம்பவங்களைத் தொகுத்து எழுதுதல், ஒன்றோடொன்றை ஒப்பிட்டுப்பார்த்தல் முதலிய வேலைகளைச் செய்வேன். இந்த வேலைகளுக்காக விடுமுறை நாட்களில் பல ஊர்களுக்குச் சென்று கோவில்களிலும், மண்டபங்களிலும் உள்ள செப்பேடுகள், சிலாசாஸனங்கள் முதலியவற்றை நான் பேராசிரியருக்காக எழுதிக்கொண்டு வருவது வழக்கம். அவர் வீட்டுக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தருவதில்தான் ஆரம்பித்தேன். நாளடைவில் அவருக்கே ஒரு உதவியாளனாக ஆகிவிட்டேன்.

கோதண்டராமன் அவர்களுக்குப் படித்தவர்களிடையே நல்ல செல்வாக்கு இருந்தது. அவர் வெளியிட்ட சரித்திர சம்பந்தமான உண்மைகளை எல்லோரும்

மதித்தார்கள். அவரிடமிருந்து நான் கற்றுக் கொண்ட விஷயங்கள் எத்தனை எத்தனையோ? என் மனோபாவத்தின் வளர்ச்சிக்கு அவர்தான் முக்கியமான காரணம் என்று சொல்ல வேண்டும்.

ஒரு சமயம் நான் ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினேன். நமது தெய்வத் தமிழ் நாட்டை வெகு காலம் அரசாண்டு பல விதங்களிலும் அதன் சிறப்பு செழித்தோங்கும்படி செய்த பல்லவ அரசர்களைப் பற்றி ஒரு விவாதம் இருந்து வந்தது.

'பல்லவர்கள் வேறு ஏதோ தேசத்திலிருந்து தமிழகத்துக்கு வந்து, அதைக் கைப்பற்றி அரசாண்டார்கள்' என்பது ஒரு சாராருடைய கருத்து.

சிலர், 'செந்தமிழ் நாட்டு அரசகுமாரன் ஒருவன் வெளி தேசத்துக்குச் சென்று, ஒரு அரசகுமாரியை மணந்து கொண்டான். அவனுக்குப் பிறந்த குழந்தை புயற் காற்றுக்குத் தப்பித் தொண்டை நாட்டுக் கடற்கரையில் ஒதுக்கப்பட்டது. அந்தக் குழந்தையே பல்லவ அரசுக்கு அடிகோலினான்' என்று அவர்கள் கூறிக்கொண்டு வந்தார்கள்.

இந்த முரண்பாடான கொள்கைகளை வைத்துக் கொண்டு நான் விரிவான ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினேன்.

தமிழ் நாட்டின் மகோன்னதமான காலம் பல்லவ அரசாட்சிக் காலம். கலைகளிலும், கல்வியிலும், வீரத்திலும் சிறப்புற்றிருந்த காலம் அது. தமிழ் நாட்டையே உயர்த்தும்படியாகத் தமிழ்ப் பண்பாட்டுக்கு உகந்த முறையில் அரசாண்ட பல்லவ மன்னர்களை அயல்நாட்டார் என்று கூறுவது எவ்வளவு அபத்தமான விஷயம் என்று விவரித்து, ஆணித்தரமாக எழுதியிருந்தேன். அதைப் படித்த பேராசிரியர் கோதண்டராமன் மிகவும் என்னை

வியந்து பாராட்டி ஒரு பத்திரிகையில் பிரசுரித்தும் விட்டார்.

சாதாரணமாக வேறு யாரும் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள். அவருடைய பரந்த உள்ளமானது ஒரு எளிய மாணவனை முன்னுக்குக் கொண்டுவர ஆசைப் பட்டது.

ஆனால், நான் எவ்வளவுதான் சரித்திரப் பாடத்தில் ஊக்கமுள்ளவனாக இருந்தாலும் எனக்கு மேல்நாடு சென்று படிப்பதிலேயேதான் ஆர்வம் இருந்தது. இதை நான் ஓரிரு தடவை வெளியிட்டபோது பேராசிரியர் கோதண்டராமன் சற்று ஏமாற்றமடைந்தாரென்றுகூடச் சொல்ல வேண்டும்.

"ஏன் ரங்கதுரை ? நம் நாட்டில் இருந்துகொண்டே நல்ல வேலை செய்து முன்னுக்கு வர வழியிருக்கும்போது சீமைக்கு எதற்காகப் போக வேண்டும் ? உன் ஆசையை நான் கெடுக்கவில்லை. ஆனால், என் சொந்த அபிப்பிராயத்தைச் சொல்கிறேன். உன்னைப் போன்ற புத்திசாலியான மாண



வர்கள் எங்கிருந்தாலும் முன்னுக்கு வர முடியும். சீமை சென்றுதான் ஆகவேண்டுமென்பதில்லை" என்றார்.

"என் அன்னையின் மனோரதம் நான் சீமை சென்று படித்து கலெக்டராக வேண்டும் என்பது. அதுவே சிறு வயதிலிருந்தே என் மனோரதமாகவும் ஆகிவிட்டது. அதை நான் பூர்த்தி செய்யாவிட்டால் வாழ்க்கை முழுதும் நான் கடமையிலிருந்து தவறிவிட்டது போன்ற உணர்ச்சி தோன்றிக்கொண்டே இருக்கும் ஸார் ! நான் சீமை செல்வதற்குக்கூட நீங்கள்தான் உதவி செய்யவேண்டும்"

என்று கூறினேன். உடனே அவர் மனம் இரங்கி விட்டது.

"ஆகட்டும் துரை! உனக்கு இருக்கும் ஆர்வத்தை நான் கெடுக்கக் கூடாது. நீ அப்படி மேல்நாடு செல்ல விரும்பினால் அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன். உனக்கு உபகாரச் சம்பளம் வாங்கிக் கொடுக்கவும் முயற்சி செய்கிறேன். உன்னுடைய கலாசாலைத் தலைமைப் பேராசிரியரைக் கலந்துகொண்டு எல்லா ஏற்பாடுகளும் செய்கிறேன். நீ இன்னும் ஒரு மாதம் யோசித்துவிட்டுச் சொல்லு" என்றார்.

ஒரு மாதம் சென்ற பிறகும் நான் சீமை செல்ல வேண்டுமென்ற என் ஆர்வத்தை வற்புறுத்திக் கூறவே அவர் அதற்கு உடனே சம்மதித்தார். "உன்னைப் போன்ற ஒரு உதவியாளனை இழப்ப தென்றால் எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கிறது" என்று கூறிவிட்டு என் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

ஒரு சங்கத்தாரின் மூலம் அவரும், தலைமைப் பேராசிரி யருமாகச் சேர்ந்து எனக்கு மேல் நாடு சென்று படிக்க உபகாரச் சம்பளம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள்.

இதற்கிடையே நாங்கள் பி. ஏ. பரீட்சை எழுதி முடித்தோம். பரீட்சை முடிந்த உடனே தங்கபாண்டியன் என்னை நச்சரிக்க ஆரம்பித்து விட்டான்.

"துரை! நீ சீமைக்குப் போகப் போகிறாய். எப்போது திரும்பி வருவாயோ தெரியாது. அதற்கு முன்னால் நீ கட்டாயம் குங்குமத்துறைக்கு வந்துவிட்டுத்தான் போக வேண்டும். மேலும் நீ போய்விட்டால் எனக்குத் தைரியமும் போய்விடும். எனக்கும் வயதாகிவிட்டது. ஜமீன் இனிமேல் என்பேரில் மாறவேண்டியதுதான். அதற்கெல்லாம் நீ இல்லாமல் நான் என்ன செய்ய

முடியும்? கட்டாயம் நீ இப்போது வந்து இதற்கெல்லாம் ஏற்பாடு செய்துவிடவேண்டும்" என்ருன்.

"பாண்டியா! நான் தலையிடுவதால் எல்லாக் காரியமும் குட்டிச்சுவராய்ப் போகலாம். என் யோசனைப்படி நீ காரியம் செய்கிருய் என்று தெரிந்தால் உன் மாமா சும்மா இருப்பாரா? அதனல் நீயே இதையெல்லாம் செய்துகொள்வதுதான் நல்லது."

"இல்லை துரை! என்னல் தனியாக ஒன்றும் செய்து கொள்ள முடியாது. நீ வரவில்லையானல் நானும் உன்னேடு கப்பலேறி விடுகிறேன். ஜமீனைக் கட்டிக் கொண்டு அந்தச் சொக்கையாவே அழட்டும். எனக்கு ஜமீனும் வேண்டாம், சண்டையும் வேண்டாம்" என்று அலுப்புடன் கூறினன்.

"நீ அப்படி ஒருநாளும் சொல்லக்கூடாது, பாண்டியா! ஜமீனில் வேலை செய்யும் ஆட்களெல்லாம் ரொம்பக் கஷ்டப்படுவதாக நீயே கூறினய். உனக்குச் சண்டை போட விருப்பமில்லாவிட்டாலும், அந்த ஏழை ஜனங்களுக்காகவாவது கட்டாயம் நீ அதைச் செய்துதான் ஆக வேண்டும். நமக்கு ஏற்பட்ட பொறுப்புகளைத் தட்டிக் கழிப்பதுகூட கோழைத்தனம்தான். சொக்கையா ஜமீன் ஆட்களைத் துன்புறுத்துவதையும், சொத்துக்களைத் துஷ் பிரயோகம் செய்வதையும் தெரிந்துகொண்டிருந்தும் அதைத் தடுக்காமலிருப்பது மகா பாவம். இத்தனை நாள் நம்மால் முடியவில்லை பேசாமலிருந்தோம். இப்போ தாவது, கட்டாயம் நமது கடமையைச் செய்ய வேண்டாமா?" என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தேன்.

தங்கபாண்டியன் சற்று மௌனமாக உட்கார்ந்திருந் தான். பிறகு, "நீ சொல்லுவதிலுள்ள நியாயங்களெல் லாம் எனக்கு நன்ருகத் தெரிகிறது துரை. ஆனல், எனக்குத் தன்னந்தனியாக அந்தக் காரியங்களைச்

சாதிக்கத் திறமை போதாது என்பது உனக்கே தெரியும். நீ வந்தாயானால் உன்னைக் கலந்துகொண்டு ஏற்பாடுகள் செய்வேன். எனக்குத் தெரியாத விஷயத்தையெல்லாம் நீ வக்கீலிடம் கேட்கலாம். நீ நேரடியாக இவைகளில் சம்பந்தப்பட வேண்டிய அவசியமே இல்லை. நான் கலந்து பேசிக்கொள்ள ஒரு நண்பன் வேண்டாமா? கட்டாயம் நீ வரத்தான் வேண்டும். சீமை செல்வதற்குள் எல்லாப் பொறுப்புக்களும் எனக்கு வருவதற்கு ஏற்பாடு செய்துவிட வேண்டும்" என்று உருக்கமாக வேண்டிக் கொண்டான்.

அத்தனை அவன் கூறிய பிறகு போகாமல் இருக்கக் கூடாதென்று எனக்குத் தோன்றியது. ஆகவே, தலைமைப் பேராசிரியரிடமும், கோதண்டராமனிடமும் குங்குமத் துறை செல்ல அனுமதி கேட்கச் சென்றேன். அன்றைய தினத்திலேயே எனக்கு அந்த நல்ல சமாசாரமும் காத்திருந்தது. தலைமைப் பேராசிரியரின் அறைக்குள் நான் நுழைந்ததும், "கங்க்ராஜுலேஷன்ஸ் ரங்கதுரை! உனக்கு உபகாரச் சம்பளம் கிடைத்துவிட்டது. இன்னும் மூன்று மாதங்களில் நீ புறப்பட வேண்டும். ஏற்பாடுகள் செய்துகொள்ள நிறையப் பொழுதும் இருக்கிறது. உனக்கு எல்லா நன்மையும் உண்டாகுக" என்றார்.

நான் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினேன்.

கோதண்டராமன் அவர்களிடம் நான் குங்குமத்துறை செல்ல அனுமதி கேட்டதும் அவர், "நீ சீமை செல்ல இன்னும் மூன்று மாதங்கள் இருக்கின்றன. அதுவரை உன் அருமை நண்பனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டியது நியாயம்தான். உனக்கு வேண்டிய உடுப்புகள் முதலியவற்றுக்கு நான் ஏற்பாடு செய்து விடுகிறேன். நீ அங்கே போய்ப் பொழுதை வீணாக்காமல் உருப்படியான காரியம் ஒன்று செய்து கொண்டுவா. குங்குமத்துறையில்

மலையின்மேல் ஒரு கோட்டை இருக்கிறதாம். அங்கே போய்ப் பார்த்து நமது ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயம் கிடைத்தால் சேகரித்துக் கொண்டுவா. மற்றப்படி கப்பல் பிரயாணத்தைப் பற்றியெல்லாம் நீ கவலைப்படவே வேண்டாம்" என்றார்.

அவருக்கு எப்படி நன்றி தெரிவிப்பது என்றே எனக்குத் தெரியவில்லை.

"உங்களுக்கு......" என்று ஆரம்பித்தேன்.

"அநாவசியமாகப் பேசாதே. நமது பேச்சைக் குறைத்துக் கொண்டால் எத்தனையோ காரியங்களைச் சாதிக்கலாம். போய் விட்டு வா" என்று என்னை வந்தனம் சொல்லக் கூட விடாமல் அனுப்பிவிட்டார்.

குங்குமத்துறைக்குத் தங்கபாண்டியனும், நானும் மறுநாள் புறப்பட்டோம். அந்தக் குங்குமத்துறைப் பிரயாணம் என் வாழ்நாள் முழுதும் நான் நினைத்து நினைத்துப் போற்ற வேண்டிய சம்பவமாக அமையும் என்று நான் கொஞ்சங்கூட நினைக்கவில்லை.

குங்குமத்துறையின் அழகைப் பற்றியெல்லாம் தங்க பாண்டியன் எவ்வளவோ தடவை வர்ணித்திருக்கிறான். அந்த ஊரின் அருவிகளைப் பற்றியும் சொல்லியிருக்கிறான்.

இயற்கை அரசி, அழகென்னும் செங்கோலேந்தி அமைதியாக அரசுபுரியும் அந்தப் பிரதேசத்தில் தன் மாமா சொக்கையா கொடுங்கோல் செலுத்துவதைப் பற்றியும் கூறியிருக்கிறான்.

சொக்கையா யார் யாருக்கு மிகவும் தீங்கிழைத்து வந்தார் என்பதையும் கூறினான். தன் தகப்பனார் சுட்டுக் கொலை செய்யப்பட்ட சம்பவத்தைத் துயரத்துடன் ஒரு சமயம், நாங்கள் நண்பர்களான புதிதில் கூறினான்.

"என் தகப்பனாரைக் கொன்றது யார் என்ற விஷயத்தை இதுவரை யாரும் கண்டு பிடிக்கவில்லை. என்

மாமா சொக்கையா, என் தகப்பனுருக்கு உதவியாகச் சில்காலம் இருந்த காசிலிங்கம் என்பவர்தான் அவரைக் கொன்று விட்டாரென்று கூறினர். முதலில் நான் அதை நம்பினேன்......''

"யார் பேரிலாவது இன்னொருவர் குற்றம் சுமத்தினுல் அதை நம்பவே கூடாது பாண்டியா. இதை என் சொந்த அனுபவத்திலிருந்து கூறுகிறேன்'' என்று நான் குறுக்கிட்டேன்.

"வாஸ்தவந்தான் துரை. அந்தக் காசிலிங்கத்தின் வீட்டு மனிதர்களை நான் அதனுல் வெறுக்கத் தொடங்கினேன். அப்போது நான் ரொம்பச் சிறியவன்தானே? சொக்கையா மாமாவைப் பற்றி நான் அறிந்திருக்கவில்லை. அதனுல் நம்பினேன். நாளடைவில் அவரைப் பற்றித் தெரிந்துகொண்டபோது அவர் கூறிய எந்த விஷயத்திலும் எனக்கு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது. காசிலிங்கத்தின் மனைவியையும், பெண்ணையும் காப்பாற்றி வருகிற மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம், குடியானவர்களெல்லாம் ஒரு தந்தை மாதிரி அன்பு செலுத்தி வருவதைத் தெரிந்து கொண்டேன். சொக்கையா வேலையிட்டால் வெறுப்புடன் செய்யும் ஆட்கள், பண்ணையாரிடம் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் வேலை செய்கிருர்கள் என்பதை ஜமீன் காரியஸ்தர் மூலமாகத் தெரிந்து கொண்டேன்.''

"ஆமாம், பாண்டியா! பாட்டாளி மக்களை விரட்டி விரட்டி வேலை வாங்குவது முறையல்ல. அவர்கள் அன்போடும், ஊக்கத்தோடும் வேலை செய்யும்படி நாம் செய்ய வேண்டும். ஜமீன் உன் கைக்கு வந்த உடனே நீ அந்தமாதிரி இருக்கலாம்.''

"ஜமீன் என் கைக்கு வரும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. அதற்குள் ஜமீனே இல்லாமல் போய் விடும்

போல் இருக்கிறது. அது போனால் போகட்டும். இந்த மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம் விரோதித்துக் கொண்டிருப்பதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. மாமாவால் அவருக்கு எவ்வளவு கஷ்டநஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன தெரியுமா? அவருடைய நிலமெல்லாம் கோர்ட்டு விவகாரங்களினால் அநேகமாக அழிந்து போய் விட்டது."

"சொக்கையா செய்யும் காரியத்துக்கு நீ பொறுப்பாளியாக முடியாது. ஆனால், அவரிடம் நீ விரோதம் பாராட்டாமல் இருந்தால் போதும். அடுத்த விடுமுறைக்குப் போகும்போது அவரைப் பார்த்து, 'எனக்கு உங்களிடம் ஒரு விரோதமும் இல்லை' என்று சொல்லி விட்டு வா. உனக்கு இஷ்டமிருந்தால் 'காசிலிங்கம் என்பவர் உன் தந்தையைக் கொன்றார்' என்ற வதந்தியை நீ நம்பவில்லை என்று கூடச் சொல்லலாம்" என்றேன்.

அடுத்த தடவை தங்கபாண்டியன் குங்குமத்துறைக்குச் சென்று விட்டுத் திரும்பி வந்தபோதுதான் அந்த மந்திர மூர்த்திப் பண்ணையாரைப் பார்த்து விட்டு வந்ததாகக் கூறினான்.

"நீ சொன்னபடி செய்த பிறகுதான் எனக்கு மன நிம்மதி ஏற்பட்டிருக்கிறது, ரங்கதுரை. அவரைப் பார்த்தாலே எவ்வளவு நல்லவரென்று தெரிகிறது. அவர் வளர்த்து வரும் காசிலிங்கத்தின் பெண்ணைக் கண்ட போதெல்லாம் நான் ஆத்திரப்பட்டுப் பேசியிருக்கிறேன். அதைப் பற்றிக் கூறி நான் மன்னிப்புக் கேட்டபோது அவர் மன்னிப்பே அவசியமில்லை என்று கூறினார். அவர் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை."

"உண்மையில் அவர் நல்லவராகத்தான் இருக்க வேண்டும். கொலைக் குற்றம் சாட்டப்பட்டு, சிறையிலிருந்து விட்டு, ஓடி வேறு போய்விட்ட ஒருவருடைய மனைவியையும், பெண்ணையும் வைத்து ஆதரிப்பதற்கு எவ்வளவு விசாலமான மனப்பான்மை வேண்டும்?"

“ ஆமாம் ! ஊராரின் வம்பு வேறு கேட்க முடியாது. மாமாவே காசிலிங்கத்தின் குடும்பத்தைப் பற்றிப் பலவித மான வதந்திகளைப் பரப்பி விட்டிருக்கிறார். அவர்கள் வீட்டுக்கே யாரும் அதிகமாகப் போவதில்லை. அவர்களையும் வெளியே பார்க்க முடியாது. அந்தப் பெண் இந்துமதியும் நானும் ஒரே பள்ளிக்கூடத்தில் கொஞ்ச நாள் படித்தோம். அப்போதெல்லாம் அவளைப் பார்க்கும்போது என் நண்பர்கள் ‘ திருடனுடைய பெண் வருகிறாள் !’ என்று தங்களுக்குள் சொல்லிக் கொள்வார்கள்.”

“ ஐயோ ! பாவம் ! அந்தப் பெண்ணுக்குத் தெரிந்தால் எவ்வளவு வருத்தப்படுவாள் ? நானும் கிட்டத்தட்ட அதே நிலையில் இருந்தவன்தான், பாண்டியா ! பெற்றோர் செய்த தவறுகளுக்காக, சிறுவர்களை அவமதிப்பதும் துன்புறுத்துவதும் ரொம்பக் கொடுமை. அந்த வேதனை எப்படிப்பட்டதென்பது எனக்குத்தான் தெரியும் ” என்றேன். அப்போதே எனக்கு முன்பின் தெரியாத அந்தப் பெண் மீது மிகவும் இரக்கம் பிறந்துவிட்டது.

ஆனால், அவள் எவ்வளவு தூரம் பின்னால் என் வாழ்க்கையில் இணையப் போகிறாள் என்பதை அப்பொழுது நான் நினைத்துப் பார்க்கவே இல்லை. தங்கபாண்டியன் அவள் அழகைப் பற்றி மட்டும் ஒன்றும் கூறவில்லை. அவன் கூறியிருந்தாலும் நான் பொருட்படுத்தியிருக்க மாட்டேன். நான் போகும்போது ரயிலில் நினைத்துக் கொண்டு போன விஷயங்களுக்கும், திரும்பி வரும்போது கண்ட கனவுகளுக்கும்தான் எவ்வளவு வித்தியாசம் ?

ரயில் பிரயாணத்தின்போது நான் தங்கபாண்டியனிடம், “ நாம் இப்போது போவது சரியா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. பாண்டியா ! போன உடனே உன் மாமா பெரிய ரகளை பண்ணினால் நீ என்ன செய்வாய் ?” என்றேன்.

" ரங்கதுரை ! என்னைப்பற்றிக் கவலைப்படாதே. எனக்கு அவர் என்ன செய்தாலும் கவலை இல்லை. எத்தனை நாள்தான் அவருக்கு அடிமையாக இருக்க முடியும் ? எனக்கு ஒரே கவலைதான். அவர் ஏதாவது சத்தம் போட்டு, சண்டை பிடித்து ஏதாவது செய்தால் நீ வருத்தப் படமாட்டாயே. அவமானம் என்று எண்ணிக் கஷ்டப்பட மாட்டாயே ?" என்றான்.

" இன்னுமா நீ என்னைத் தெரிந்து கொள்ளவில்லை ? உன்னுடைய வீட்டுக்கு நீ என்னை அழைத்துப் போகிறாய். உன் மாமா என்ன சொன்னாலும் எனக்கு லட்சியமில்லை. இவனை அழைத்துக்கொண்டு வராமல் இருந்திருக்கலாம்' ரன்று நீ நினைத்தால்தான் எனக்கு அவமானமாக இருக்கும். அதைத் தவிர வேறு யார் என்ன சொன்னாலும் ரனக்குக் கவலை இல்லை."

" நான் ஒருகாலும் அப்படி வருத்தப்பட மாட்டேன், துரை ! நான் இதுவரை மகாக் கோழையாகத்தான் இருந்தேன். போன வருஷம்கூட நீ கூறிய மாதிரி நினைத்திருப்பேன். ஆனால், இப்போது நான் ரொம்பத் துணிந்து விட்டேன். பயந்து பயந்து வாழ்வதைப்போன்ற பயங்கரம் எதுவுமே இல்லை. நீ கூடிய சீக்கிரம் என் மாறுதலைத் தெரிந்து கொள்வாய். பார்த்துக் கொண்டே இரு " என்று கூறினான்.

அதைக் கூறும்போதே அவனுடைய கண்கள் பளபள வென்று ஜொலித்தன. இவன் இவ்வளவு உணர்ச்சி வசப் படும்படி என்ன ஆகிவிட்டது என்று நான் சிந்தனை செய்தேன்.

சொக்கையாவைப் பற்றிய பேச்சை மாற்றுவதற்காக, 'கோதண்டராமன் என்னை அங்கே உள்ள மலைக்கோட்டை, கோயில் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு வரச் சொல்லி யிருக்கிறார். உன் பாட்டனாருக்குப் பாட்டனார் அரசாண்ட

தைப் பற்றியெல்லாம் விவரமான செய்திகள், விவரங்கள் உங்கள் ஜமீனில் கிடைக்குமா ?" என்று கேட்டேன்.

தங்கபாண்டியன் அசிரத்தையோடு பதில் சொன்னான்: " உயிரோடு இருப்பவர்களின் குணாதிசயங்களைப் புரிந்து கொண்டு அவர்களோடு வாழவே முடியவில்லை. ஐந்தாறு தலைமுறைகளுக்கு முன்னால் வாழ்ந்து செத்துப் போனவர் களைப் பற்றியெல்லாம் விவரம் சேகரித்து எழுதி, அதற்குச் சரித்திரம் என்ற பெயர் கொடுத்து அமர்க்களப்படுத்துவது ரொம்ப அனாவசியம் என்பது என் அபிப்பிராயம். அதிலும் என் மூளையைக் குழப்புவதற்காகவே சரித்திரப் பாடம் ஏற்படுத்தியிருக்கிறார்களென்று எனக்குத் தோன்றுகிறது " என்றான்.

நான் வாய்விட்டுச் சிரித்து விட்டேன். நான் சிரித்ததும் தங்கபாண்டியனின் முகம் சிறுத்து விட்டது.

" நீ இதற்காக வருத்தப்பட வேண்டாம், பாண்டியா ! உன்னைப் பார்த்து நான் சிரிக்கவில்லை. நீ சொன்ன விதம் என்னைச் சிரிக்க வைத்தது. உனக்கும் எனக்கும் உள்ள மன வேறுபாடுகளையும், நாம் இவ்வளவு அத்யந்த நண்பர்களாக இருப்பதையும் நினைத்தால் எனக்கு வியப்பாக இருக்கிறது.

" என்ன மன வேறுபாடுகளைக் கண்டு பிடித்து விட்டாய் ? சொல்லேன்."

"நான் லட்சியத்திலும் கனவுகளிலுமே சஞ்சரிப்பவன். உனக்கு அவற்றில் நம்பிக்கை கிடையாது. " ப்ராக்டிகல் மைண்ட் " என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்களே, அந்த மாதிரி மனம் படைத்தவன் நீ. நமக்கு ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். நீ அந்தக் காரியம் என்ன செய்தால் நம் இஷ்டப்படி நடக்கும் என்று சிந்திப்பாய். நான் அது எப்படி நடக்கவேண்டும் என்று யோசிப்பேன். உலகத்தில் நாம் இரண்டு பேரும்

வாழ வேண்டியவர்கள்தான். என் மாதிரி மனிதர்களே இருந்தால் ஒரு காரியமும் நடைபெருது. உன்னை மாதிரியே எல்லாரும் இருந்தால் லட்சியமே இல்லாமல் போய்விடும்!" என்று கூறிவிட்டுச் சிரித்தேன்.

தங்கபாண்டியனும் சிரித்தான். "அப்படியானல் சரி. உனக்குச் சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயங்கள் ஜமீனில் கிடைக்குமோ கிடைக்காதோ, தெரியாது. அரண்மனைப் புத்தகசாலையில் தேடினல் ஏதேனும் கிடைக்கலாம். அல்லது பாதாளக் கிடங்கில் கிடக்கும் குப்பைகளைக் கிளறினல் கிடைக்கும். மந்திரமூர்த்திப் பண்ணையாரிடம் சென்ருல் உனக்குச் சுலபமாகப் பல விஷயங்கள் தெரியும். அவர் எத்தனையோ கதை கதையாகப் பாட்டுப் பாடுவார் என்று கேள்வி. குங்குமத்துறையில் அவரைப் போல் விஷய ஞானம் உள்ளவர்கள் கிடையாதென்று ஜமீன் காரியஸ்தரே கூறியிருக்கிருர்" என்ருன்.

* * *

நாங்கள் திருநந்திபுரம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கினேம். ஜமீன் காரியஸ்தர் வந்திருந்தார். அவரைப் பின்னல் சாமான்களை எடுத்துக்கொண்டு வில் வண்டியில் வரச் சொல்லிவிட்டுத் தங்கபாண்டியனும் நானும் காரில் புறப்பட்டோம். நான் குங்குமத்துறையின் அழகையெல்லாம் அப்போதே அனுபவிக்க விரும்பினேன். ஆகவே தங்கபாண்டியனிடம், "போகும்போதே இந்த ஊரின் மலய மாருதத்தை அனுபவித்துக் கொண்டு போக வேண்டாமா? காரின் மூடியை மடக்கிவிடச் சொல்லு" என்றேன்.

அந்தத் திறந்த காரில் மனேரம்மியமான மந்த மாருதத்தை அனுபவித்துக் கொண்டும், குங்குமப் பூந்துறையின் இயற்கை அழகுகளைப் பார்த்து ரஸித்துக் கொண்டும் நாங்கள் இருவரும் ஊர்வலம் செல்வதுபோல் சென்ருேம்.

திருநந்திபுரத்திலிருந்தே, தூரத்தில் வெளியே நீல நிறமான ஆகாயத்தில் கருநீல நிறக் கோடுகளாக மலைத் தொடர்கள் தெரிந்தன. திருநந்திபுரத்தின் எல்லையைத் தாண்டியதும் என் நெஞ்சம் அப்படியே பரவசமடைந்தது. கார் ஓட்டியை மெதுவாகப் போகும்படி கூறிவிட்டுத் தங்கபாண்டியனிடம் ஒவ்வொரு இடத்துக்கும், ஒவ்வொரு ஓடைக்கும் என்ன பெயரென்று கேட்டுத் தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு பெயருக்கும் பின்னல் ஒளிந் திருக்கும் ரஸமான கதையையும் கேட்டேன்.

எல்லா ரஸத்தையும் தோற்கடிக்கும் வண்ணம் ஒரு ரஸமான சம்பவம் குங்குமத்துறையின் எல்லைக்குள் வண்டி புகுந்ததும் நடைபெற்றது.

வண்டி ' ஹாரன் ' சப்தம் காதைத் துளைத்தது. ஒரு திருப்பத்தில் வண்டி திரும்பியது. அப்போதுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது !

கன்றுக் குட்டி ஒன்று துள்ளி ஓடி வந்தது. அதன் தும்பைப் பிடித்துக்கொண்டு ஒரு மான்—இல்லை, இல்லை—ஒரு பெண் ஓடி வந்து கொண்டிருந்தாள்.

கார் அந்தப் பெண்ணின் சமீபத்தில் போய் ஒரு ஆட்டத்துடன் நின்றது. அப்போதுதான் அவள் இருந்த ஆபத்தான நிலை எனக்குத் தெரிந்தது. " ஓ ! மை காட்!" என்ற சொற்கள் என்னையறியாமல் வாயிலிருந்து வந்தன.

# 20. பூரணச் சந்திரன் !

கன்றுக் குட்டியின் தும்பைப் பிடித்துக் கொண் டிருந்த அந்தப் பெண் திரும்பிப் பார்த்தாள். என்ன அழகான முகம் ? இத்தனை பெரிய ஆபத்திலிருந்து தப்பியும் அவளுடைய முகத்தில் பீதியின் அறிகுறியே

இல்லை. குறும்புத்தனம் தவழ்ந்த முகத்தில், பரபரவென்று அலையும் கண்கள். அவள் கன்றின் தும்பைப் பிடித்துக் கொண்டு, அழுக்குத் தாவணியுடன் நின்ற காட்சி இன்னும் என் கண் முன்னால் நிற்கிறது. ஓடி வந்ததால் முகத்தில் அரும்பிய வியர்வை முத்துத் துளிகளாகக் காட்சியளித்தது. தலையெல்லாம் கலைந்து நெற்றியில் அவளுடைய அழகிய கூந்தல் சுருள் சுருளாகத் தொங்கியது.

சினிமாவில் 'மேக்கப்'புடன் நான் பார்த்தபோது கூட, அன்று இந்துமதி அழகாக இருந்ததுபோல் இல்லை என்று தான் தோன்றியது.

அவள் என்னைத் திரும்பிப் பார்த்ததும் எனக்குச் சிரிப்பு வந்தது. என்னையறியாமலேயே " நல்ல கெட்டிக் காரப் பெண் அம்மா, நீ! உயிர் போனாலும் போகிறதென்று கன்றுக் குட்டியின் தும்பைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாயே ?" என்றேன். நான் சொல்லி முடிப்ப தற்குள் மறுபடியும் கன்றுக்குட்டி துள்ளி ஓடிவிட்டது. அவள் ஒரு கணம் திகைத்தாள். அதைக் கண்டதும் நான் கலகலவென்று சிரித்தேன். அவளுடைய முகத்திலும் சிரிப்புத் தவழ்ந்தது. அழகிய குவளை மலர் குவிவதுபோல் அவள் கண்கள் கவிழ்ந்தன. மறுபடியும் அந்த மலர் ஒரு தடவை மலர்ந்து என்னைப் பார்த்தது. அவளுடைய இதழ்களும் மலர்ந்தன. அவ்வளவுதான் ! கண் இமைக்கும் நேரத்தில் அந்தப் பெண் ஓடி மறைந்துவிட்டாள். கன்றுக் குட்டியை விட அவள் வேகமாக ஓடியதாக எனக்குப் பட்டது.

கார் மேலே நகர்ந்தது. தங்கபாண்டியன் என்னை நோக்கி, " என்ன துரை ! இப்படித் திகைத்துப் போய் விட்டாய் ?" என்று கேட்டான்.

" அப்பாடா ! அந்தப் பெண் எப்படிப் பட்ட ஆபத்தி லிருந்து இன்று பிழைத்தாள். நல்ல காலமாய்ப் போயிற்று.

நான் உங்கள் ஊரில் காலடி எடுத்து வைத்ததும் ஒரு விபத்துக்குச் சாட்சி சொல்லும் அவசியம் ஏற்படாமல் தப்பினேன் " என்று கூறினேன்.

தங்கபாண்டியன் சிரித்துக் கொண்டே, " ஆமாம். இப்போதே நமக்குக் கவலைப்பட நிறைய விஷயம் இருக்கிறது. வீட்டுக்குப் போனதும் ரகளை இருக்கிறது. அதற்குள் இங்கே ஒன்றும் ஆகாமலிருந்தது பெரிய காரியம் " என்ருன்.

பிறகு அவனுகவே, " அந்தப் பெண்தான், நான் சொன்னேனே காசிலிங்கம், அவருடைய பெண் இந்துமதி" என்ருன்.

இந்துமதி என்ற பெயரில் இருந்த அழகு என் நெஞ்சை நிறைத்தது. என் இதய வானத்தில் பூரணச் சந்திரனுக அவள் வதனம் பவனி வந்தது.

" என்ன பொருத்தமான பெயர் ? முகம் பூரணச் சந்திரன் மாதிரியே இருக்கிறதே " என்று என்னை அறியாமல் கூறிவிட்டேன். உடனேயே ஏன் அப்படிச் சொன்னேமென்று தோன்றியது. ஒரு கண நேரம் பார்த்த ஒரு பெண்ணைப் பற்றி அப்படி நான் கூறுவது பொருத்தமில்லாத விஷயமாக எனக்கு அப்பொழுது தோன்றிற்று.

அதற்கேற்ற மாதிரி தங்கபாண்டியன், "அடேயப்பா ! சரித்திர ஆராய்ச்சிக் கிறுக்கு அதற்குள் மறந்துவிட்டதா ? இலக்கியப் பித்துப் பிடித்து விட்டதாக்கும் ? அவளைச் சரியாகக்கூடப் பார்க்கவில்லை. அதற்குள் பூரணச் சந்திரன் என்கிருயே !" என்ருன்.



" அதற்காகச் சொல்லவில்லை, தங்கபாண்டியா! சில பேருக்குத்தான் பெயர் பொருத்தமாக அமைகிறது. அதற்குக்கூட அதிர்ஷ்டம் வேண்டும் ? அழகான

பெண்ணுக்கு அழகிய பெயரும் அமைந்திருக்கிறதே என்று சொன்னேன். ஏன் உன் பெயரைத்தான் எடுத்துக் கொள்ளேன். என்ன பொருத்தமாக அமைந்திருக்கிறது? உன் உள்ளமும் தங்கம். உன் பெயரும் தங்கம்" என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன். ஆனாலும் உள்ளத்தில் ஏதோ ஒன்று உறுத்திற்று. அது என்ன விதமான உணர்ச்சி என்று விவரிக்க முடியாது.



"உன்மாதிரிப் பேசக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று நானும் எவ்வளவோ முயற்சி செய்கிறேன். ஆனால் வரவேமாட்டேனென்கிறது ரங்கதுரை" என்று சிரித்தான் தங்கபாண்டியன்.

அதற்குள் அரண்மனை வந்துவிட்டது. காரை விட்டு இறங்கியதும் தங்கபாண்டியன் வாசலில் நின்று கொண்டிருந்த ஆளைப் பார்த்து, "மாமா எங்கே?" என்று கேட்டான்.

"சாயங்காலம் வருவதாகச் சொல்லிவிட்டு எங்கேயோ போனார். விடியற்காலையிலேயே போய்விட்டார்" என்றான் அந்த ஆள். தங்கபாண்டியன் நிம்மதியாக ஒரு பெருமூச்சு விட்டான். இறங்கிய உடனேயே அவர் ஏதாவது சண்டை போட்டு ரகளை செய்தால் என்ன செய்வதென்று அவனுக்குக் கவலையாக இருந்திருக்கலாமல்லவா? மாமா இல்லை என்று தெரிந்ததும் குதூகலமாக என் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு உள்ளே சென்றான்.

"மாமா வரும் வரையில் நிம்மதியாக இருக்கலாம். அவர் வந்து கோபித்துக் கொண்டாலும் நான் பயப்படப் போவதில்லை" என்றான்.

இதைப் பற்றி அவன் எவ்வளவு தூரம் கவலைப் படுகிறான் என்று அந்த வார்த்தைகளிலிருந்தே தெரிந்தது.

"நீ இப்படி அவருக்குத் தெரிவிக்காமல் என்னை அழைத்து வந்திருக்க வேண்டியதில்லை. முன்னாலேயே எழுதியிருக்கலாம். அப்போது உனக்குக் கொஞ்சம் கவலை குறைவாக இருக்கும்."

"போதும்! பேசாமலிரு. என் வீட்டுக்கு என் நண்பனை நான் அழைத்து வருவதற்கு அவரிடம் எதற்காக உத்தரவு கேட்க வேண்டும்? இனிமேல் எல்லாம் என் இஷ்டப்படித்தான் செய்யப் போகிறேன் என்பதை இன்று அவர் தெரிந்து கொள்ளட்டும்" என்றான்.

"அப்படியானால் எதற்காகக் கவலைப்படுகிறாய்?" என்றேன்.

அதன் பிறகு நாங்கள் ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பிட்டோம். அதுவரை தங்கபாண்டியனின் வீட்டில் வேறு யாரும் இருப்பதாகவே தெரியவில்லை. வேட்டை நாய்களும், வேலைக்காரர்களும்தான் காணப்பட்டார்கள்.

சாப்பிடும்போது, "தங்கபாண்டியா! உன் தங்கை லக்ஷ்மியும் வீட்டில் இல்லையா? யாரையுமே காணோமே?" என்று கேட்டேன்.

"நீ முதலில் நன்றாகச் சாப்பிடு. அவர்களைப் பிறகு பார்க்கலாம். எங்கும் ஓடிப் போய்விட மாட்டார்கள்" என்று சிரித்துக்கொண்டே சொன்னான். சாப்பாடு முடிந்த பிறகு பலாப்பழமும், மாம்பழமும், தேனும் வந்தன.

"ஏன் பாண்டியா! ஒரே நாளில் ஜமீனிலுள்ளதை யெல்லாம் சாப்பிட்டுவிட முடியுமா?" என்றேன். ஆனால் 'ஹாஸ்டல்' சாப்பாடு சாப்பிட்டுச் சாப்பிட்டுச் சலித்துப் போயிருந்த எனக்கு அங்கே சாப்பிடுவதற்கு ஒரே சந்தோஷமாக இருந்தது.

தங்கபாண்டியன் அன்போடு, 'இதைச் சாப்பிடு, அதைச் சாப்பிடு' என்று வேறு உபசாரம் செய்தான்.

என் அன்னை இறந்துபோன பிறகு என்னை யார் 'சாப்பிடு' என்று பிரியத்துடன் கூறியிருக்கிறார்கள் ? ஆகவே, அவனுடைய உபசரிப்பு எனக்கு உவகையளித்தது.

அதன் பிறகுதான் அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்றான் தங்கபாண்டியன். வெகு காலத்துக்கு முன்னால் மகாராஜாக்கள் வசிப்பதற்குக் கட்டப்பட்ட மாளிகை யாகையால் பழைய மாதிரியில் அமைந்திருந்தது. பிரதான வாசல் கட்டடத்தைமட்டும் புதுப்பித்துக்கட்டியிருந்தார்கள். நாங்கள் இருந்த முன்பக்க மாளிகையிலிருந்து ஒரு நீளமான வராண்டா இன்னொரு கட்டடம்வரை சென்றது. அதன் இரு பக்கத்திலும் பெரிய தோட்டம் அமைந் திருந்தது.

அந்த மாளிகை முன் பக்கத்திலிருந்ததற்கு முற்றும் மாறுபட்டிருந்தது. முன்பக்கத்து மாளிகை பட்டணத்துக் கட்டடங்களை ஒத்து இருந்தது. இதுவோ மரத் தூண் களும், திண்ணைகளும் கொண்ட கட்டடமாக இருந்தது. ஆயினும் விசாலமான கட்டடம்தான்.

நான் தங்கபாண்டியனிடம், " உன் தங்கையை அந்தப்புரத்தில் பூட்டி வைத்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியாதே " என்றேன்.

" இதெல்லாம் சொக்கையா மாமாவால் வந்த வினை தான், துரை. அப்பா இருந்தபோது அரண்மனைப் பெண் களுக்குக் கொஞ்சம் சுதந்திரம் இருந்தது. என் அம்மா இறந்து போனதும் அடியோடு ஒன்றுமில்லாமல் போய் விட்டது. கோவில் உற்சவ காலங்களில் தவிர அவர்கள் வெளியே வரவே கூடாது என்று உத்தரவு."

" அவர்கள் என்றால் யார் ?"

" என் தங்கை லக்ஷ்மி. என் அம்மாவின் சகோதரியும், அவளுடைய பெண்கள் இரண்டு பேரும் இங்குதான் இருக் கிறார்கள். தன் தங்கைதானே என்றுகூட மாமா

பார்ப்பதில்லை. எப்போதும் அவருக்குப் பயந்துசாகவேண்டி யிருக்கிறது. என் சின்னம்மாவும் அவருடைய பெண் களும் இல்லாவிட்டால் லக்ஷ்மி என்ன செய்வாள்? பாவம்!" என்றான் தங்கபாண்டியன்.

"உன் தங்கை படிக்கிறாள் என்றாயே. பள்ளிக்கூடம் செல்வதில்லையா?"

"இல்லை, துரை. இவர்கள் மூவருக்கும் இந்த ஊரிலிருக்கும் சுசீலாதேவி என்ற உபாத்தியாயினி பாடம் சொல்லிக் கொடுத்து வருகிறார்" என்றான்.

முன்பக்கத்து அறைக்குள் சென்று உட்கார்ந்தோம். உட்கார்ந்ததும் நான் அறையைக் கவனித்தேன். கட்டடம் பழையமாதிரி இருந்தாலும் உள்ளே அலங்காரங்கள் கொஞ்சம் புது மாதிரியில் அமைந்திருந்தன. ஒரு மேஜை. அதன்மீது பூ வேலை செய்த விரிப்பு. ஒரு அலங்கார மின்சார விளக்கு அந்த மேஜைமீது இருந்தது. நான்கு நாற்காலிகள் கிடந்தன. மேஜைக்கு நேரே சரஸ்வதியின் படம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. இன்னொரு பக்கத்தில் புத்தக அலமாரி ஒன்று இருந்தது. அதில் பல புத்த கங்கள் அழகாக அடுக்கப்பட்டிருந்தன. ஆனால், அந்த வீட்டுக்கும் அலங்காரத்துக்கும் பொருத்தமாகவே இல்லை.

அந்தச் சமயத்தில் கனமாகத் தொங்கிய திரையை விலக்கிக்கொண்டு ஒரு வயதான அம்மாளும் மூன்று பெண்களும் வந்தார்கள்.

தங்கபாண்டியன் உடனே, "சின்னம்மா! உங்களிடம் முன்பு சொன்னேனே, என்னுடைய அத்யந்த சிநேகிதன் ஒருவன் இருக்கிறான் என்று, அவன்தான் இவன் ரங்கதுரை என்று பெயர்" என்றான்.

நான் கைகளைக் கூப்பினேன்.

"உட்காரப்பா" என்றார் அவர்.

"இவள்தான் என் தங்கை லக்ஷ்மி" என்று ஒடிந்து விழுவது போலிருந்த தன் தங்கையை எனக்கு அறிமுகப்

படுத்தி வைத்தான் தங்கபாண்டியன். அரண்மனையின் செழிப்பிலுள்ள இளம் வயதுப் பெண்கூட இப்படி இருக்கிறாளே என்று வியந்தேன்.

"இவர்களும் என் தங்கைகள்தான். சரஸ்வதி, ஜயலக்ஷ்மி!" என்றான் தங்கபாண்டியன். ஐந்து நிமிஷத்தில் அங்கிருந்து புறப்பட்டு எங்கள் அறைக்குச் சென்று விட்டோம். புறப்படும்பொழுது, "மறுபடியும் மாலையில் ரங்கதுரையுடன் வருகிறேன் லக்ஷ்மி!" என்று கூறினான் தங்கபாண்டியன்.

"சாயங்காலம் எங்கள் சுசீலா டீச்சர் கூட வருவார். கட்டாயம் அழைத்து வாருங்கள். அவரை நீங்கள் பார்க்க வேண்டும்" என்றாள் லக்ஷ்மி.

எங்கள் அறைக்குச் சென்றதும் நான் தங்கபாண்டியனிடம், "ஏன் உன் தங்கை இப்படி இளைத்துப் போய் இருக்கிறாள்?" என்று கேட்டேன்.

"எல்லாம் வேதனைதான் துரை! இந்த மிகப் பெரிய சிறைக்கூடத்தில் அவள் அடைபட்டுக் கிடக்கிறாள். உன்னைப்போல் யாராவது உதவி செய்து அவளை விடுவிக்க வேண்டும். அகம் பூரித்தால், தானாகவே முகமும் பூரித்துவிடும்" என்றான்.

லக்ஷ்மியின் கண்களில் தெரிந்த ஏக்கம் எனக்கு நினைவுக்கு வந்தது. எனக்கு ரொம்பப் பரிதாபமாக இருந்தது.

"ஆமாம்! சீக்கிரம் கல்யாணம் செய்து கொடுத்து விடு. இனிமேல் அவளைக் கவனித்துக் கொள்வது முழுவதும் உன் பொறுப்புதானே?" என்றேன்.

"ஆமாம், துரை! அதற்காகவாவது நான் என் மாமாவுடன் போராடியே தீரவேண்டும். இன்று காலை நீ ஸ்நானம் செய்யப் போயிருந்தபோது, என் சின்னம்மாவைப் பார்த்தேன். அவர் கூறியதைக் கேட்டதும் என்

மனம் துடித்துப் போய்விட்டது. சொக்கையா மாமா லக்ஷ்மியைத்தான் கல்யாணம் செய்துகொள்ள உத்தேசித்திருப்பதாகக் கூறினாராம். சின்னம்மா இதை லக்ஷ்மியிடம் சொல்லியிருக்கிறார். அவள் இடிந்து போய்விட்டாள்."

" இது என்ன அநியாயம்? அவள் பச்சைக் குழந்தை மாதிரி இருக்கிறாளே!" என்றேன்.

" நான் உயிரோடிருக்கும்போது அப்படி நடக்கும்படி விட்டு விடுவேனா, துரை? மாமாவுக்கு இந்த ஜமீன்மீது காதல். லக்ஷ்மியை மணந்துகொண்டு விட்டால் மாப்பிள்ளையாக அதிகாரம் செய்து கொண்டிருக்கலாமென்று எண்ணம் போலிருக்கிறது."

" கேட்கவே பிடிக்கவில்லையே " என்றேன். லக்ஷ்மியின் மீது எனக்குச் சொல்ல முடியாத பரிவு ஏற்பட்டு விட்டது. அவளுக்குத் தகுந்த கணவனைத் தேடிக் கல்யாணம் செய்து கொடுத்துவிட நானே முயற்சி செய்ய வேண்டுமென்றுகூடத் தோன்றியது.

மாலை நான்கு மணிக்குத் தங்கபாண்டியன் வந்து, " அந்த ராக்ஷஸன் வருவதற்கு முன்னால் லக்ஷ்மியை இன்னொரு தடவை பார்த்துவிட்டு வரலாம் வா. மாமா வந்துவிட்டால் நான்கூட அங்கே அதிகமாகப் போக முடியாது. போனால் என்ன பேசிவிட்டேனோ என்று சந்தேகப்பட்டுச் சின்னம்மாவைப் பிடுங்கி எடுத்து விடுவார் " என்றான்.

நாங்கள் அங்கே சென்றதும் லக்ஷ்மி எங்களுக்குக் காப்பி கொடுத்து உபசரித்தாள். அப்போது அவளுடைய உபாத்தியாயினி சுசீலாதேவியும் இருந்தார். என்னை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்த பின் கல்லூரி வாழ்க்கையைப்பற்றியெல்லாம் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தேன். எல்லோரும் என்னுடைய பேச்சை ரொம்ப அனுபவித்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று தங்கபாண்டியன் சுசீலாதேவியைப் பார்த்து, " லக்ஷ்மிக்குச் சீக்கிரம் கல்யாணம் செய்துவிடப் போகிறேன் அம்மா. அவளுக்குப் படிப்பு வராவிட்டால் நீங்கள் கவலைப்படாதீர்கள். அவளுக்குச் சொல்லிக் கொடுக்கிறவர்கள் சொல்லிக் கொடுத்தால்தான் படிப்பு மண்டையில் ஏறும் " என்ருன்.

சுசீலாதேவி சிரித்துக்கொண்டே, " என்ன அப்படிச் சொல்லிவிட்டாயே. லக்ஷ்மி இப்போது ரொம்ப நன்ருகப் படிக்கிருளே. இந்த ஒரு வருஷத்தில் நிறையக் கற்றுக் கொண்டிருக்கிருள். ஆனல், நீ சொல்லுவதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது " என்ருர்.

உடனே அவர்களுடைய சின்னம்மா, " என்னமோ அப்பா! லக்ஷ்மியை நல்ல இடத்தில் கொடுத்து அவள் சௌக்கியமாக இருக்க வேண்டும். உங்களுடைய அப்பா இருந்தால் எவ்வளவோ உயர்வாக எல்லாம் நடக்கும். அப்படியெல்லாம் நாம் ஆடம்பரமாக ஒன்றும் செய்யா விட்டாலும் அவள் மனம் சிறிதும் கோணமல் ஒரு நல்ல பிள்ளையாகப் பார்த்துக் கொடுத்துவிட வேண்டும்" என்ருர்.

" நீங்கள் இதைப்பற்றிப் பேசுவதாக இருந்தால் நான் போகிறேன் " என்று எழுந்தாள் லக்ஷ்மி.

" எதற்காக இப்படிக் கூச்சப்பட வேண்டும் லக்ஷ்மி ? கல்யாண வயது அடைந்த பெண்களைப் பார்த்து எல்லோரும் அப்படித்தான் கூறுவார்கள். இந்துமதியைப் பற்றியும், அவள் கல்யாணத்தைப்பற்றியும் ஒரு சம்பந்தமு மில்லாத நான் கவலைப்படுகிறேன். உன்னைப்பற்றி உன் அண்ணு கவலைப்படமாட்டாரா ?" என்று சமாதானப் படுத்தினர் சுசீலாதேவி.

நான் சடாரென்று நிமிர்ந்து உட்கார்ந்தேன். அந்தப் பெயரைக் கேட்டதும் அவளைப் பற்றித் தெரிந்துகொள்ள

வேண்டுமென்று. தோன்றியது. நான் அவ்வாறுநினைத்தது எனக்கே வியப்பை அளித்தது. இதுவரையில் தோன்ருத ஒரு உணர்ச்சி என் இதயத்தில் சுரந்தது. 'அவளை உங்களுக்குத் தெரியுமா ?' என்று கேட்க வாயெடுத்தேன். ஆனால் உடனே, 'ரங்கதுரை உனக்கு என்ன ஆகி விட்டது ?' என்று என்னை நானே கேட்டுக்கொண்டு வாயை மூடிக்கொண்டேன். ஆனால் அந்தப் பெண்ணைப் பற்றி இன்னும் கொஞ்சம் பேசக்கூடாதா என்று மாத்திரம் தோன்றியது.

தங்கபாண்டியன் என் மனோரதத்தைப் பூர்த்தி செய்தான். "அந்த இந்துமதியைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியது ரொம்ப அவசியம்தான். இன்று காலையில் நாங்கள் இந்த ஊரின் எல்லைக்குள் நுழைந்ததும் அந்தப் பெண் காரின் அடியில் வந்து விழப் பார்த்தாள். கன்றுக்குட்டியைப் பிடிக்க அப்படியா ஓடி வருவது ? இன்று பெரிய ஆபத்திலிருந்து தப்பினாள் என்றுதான் சொல்லவேண்டும் " என்ருன்.

சுசீலாதேவி திகைத்துப் போய், " அப்படியா செய் தாள் ? ஒன்றும் அடிபடவில்லையே. இந்துமதி ரொம்பக் கெட்டிக்காரிதான். ஆனால், ரொம்பப் படபடத்த சுபாவம். நம் லக்ஷ்மி எவ்வளவு சாந்தமோ அவ்வளவுக்கவ்வளவு பரபரப்புக்காரி. நான் நாளைக்கு அவளை எச்சரிக்கிறேன்" என்று கூறினார்.

அவளைப் பற்றிய பேச்சு அத்துடன் முடிந்துவிடப் போகிறதே என்ற எண்ணத்தினால், " வீட்டில் அவளுக்கு ஏதாவது சண்டையா ? கோபித்துக் கொண்டு வந்து காரின் அடியில் விழுந்துவிட நினைத்தாளோ ?" என்று சிரித்துக்கொண்டே கூறினேன்.

ஏதோ பிரமாதமான ஹாஸ்யத்தைக் கேட்டுவிட்டது போல் எல்லாரும் கலகலவென்று சிரித்தார்கள்.

சுசீலாதேவி, “ அதெல்லாம் ஒன்றுமில்லை. வீட்டுக்கு அவள் செல்லப் பெண். தாய் தகப்பனின் அருமைக் கண்மணி. ஆனால், கொஞ்சம் துருதுருப்புள்ளவள் ” என்று கூறினார்.

“ ஓஹோ ! அவளுக்கு அப்பா அம்மா இருவரும் இருக்கிறார்களா ?” என்று கேட்டேன்.

தங்கபாண்டியன் குறுக்கிட்டு, “ நான் தான் சொல்லி யிருக்கிறேனே துரை. சொந்த அப்பா இல்லை. பண்ணை யார் மந்திரமூர்த்தி என்பவர்தான் அவளையும், அவ ளுடைய தாயாரையும் பாதுகாத்து வருகிறார் ” என்றான்.

அந்தச் சமயத்தில் வாசலில் ஏதோ சத்தம் கேட்டது. ஒரு ஆள் உள்ளே வந்து, “ சின்ன ஜமீன்தார் வந்து விட்டார் ” என்று கூறினான். தங்கபாண்டியனின் முகம் சிறுத்தது. எல்லோருடைய முக பாவமும் உடனே மாறிப் போய்விட்டது. நான் அந்தச் சமயத்தில் அங்கிருப்பது உசிதமில்லை என்று எனக்குப் பட்டதால் தங்கபாண்டி யனைப் பார்த்து, “ நான் ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன் ” என்றேன். தங்கபாண்டியன் தலையை ஆட்டிக்கொண்டே என்னைத் தொடர்ந்து வந்தான். நாங்கள் வாசலுக்கு வருவதற்கும் சொக்கையா எதிரில் வருவதற்கும் சரியாக இருந்தது.

சொக்கையாவை நெருங்கியபோது அவருடைய பார்வை எனக்கு வேட்டை நாயின் பார்வையை நினைவுறுத்தியது. ‘ இந்த மனிதனுடன் காலந்தள்ளுவது மிகவும் கடினம்தான்’ என்று எண்ணினேன். நாங்கள் அவரைத் தாண்டிச் சென்றோம். அவரும் ஒன்றும் எங்க ளிடம் கேட்கவில்லை. நாங்களும் பேசவில்லை. வெறித்த பார்வையுடன் அவர் சென்றுவிட்டார்.

நாங்கள் முன் பக்கத்து மாளிகையை நெருங்கியதும் தங்கபாண்டியன், “ துரை ! நீ போய்விட்டு நிதானமாய்

வா. நான் அதற்குள் இங்கே எல்லாவற்றையும் சரி பண்ணி வைக்கிறேன்" என்று கூறினன்.

"நாம் அவர் வரும்போது அங்கே இருந்ததால் இன்னும் மோசமாகி விட்டதோ" என்று நான் கேட்டேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ நிம்மதியாகப் போய்விட்டு வா" என்ருன் தங்கபாண்டியன்.

"நீ தைரியமாக இரு. ஆனல், அவர் மனம் புண்ணுகும்படி ஒன்றும் பேசவேண்டாம்" என்று கூறி விட்டு நான் நேரே வாசலுக்கு வந்துவிட்டேன். தங்க பாண்டியன் திரும்பிச் சென்ருன்.

நான் ஊரையெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு, மலை மீது ஏறினேன். ஆனந்தமாகச் சற்று நேரம் மலைமீது உலவி விட்டுத் திரும்பி வந்தேன். இருள் சூழ்ந்து வந்தது. மனத்தில் காலையில் பார்த்த இந்துமதியின் முகம் தோன்றிக் கொண்டே இருந்தது. 'என்ன களையான முகம்? என்ன அழகான கண்கள்? கண்களில் தான் எத்தனை துறுதுறுப்பு? அவளைப் போன்ற பெண்ணை நான் பார்த்ததே இல்லை' என்று நினைத்துக்கொண்டே இருந்தேன். திடீரென்று 'என்ன ரங்கதுரை இது. இப்படி முன்பின் தெரியாத பெண்ணைப் பற்றி இவ்வளவு தூரம் சிந்தனை செய்கிருயே' என்று ஒரு குரல் என் உள்ளத்திலிருந்து கேட்கும். எனக்கே ஒரே வெட்கமாய் போய்விடும்.

'தங்கபாண்டியனின் தங்கை லக்ஷ்மியும்தான் பெற்ருேர் இல்லாதவள். அவளிடமும்தான் உனக்குப் பரிவு ஏற்படுகிறது. இரக்கம் பிறக்கிறது. ஆனல் இந்துமதியைப் பற்றி அப்படியா இரக்கப்படுகிருய்? வேறு மாதிரி இருக்கிறதே. அவளுடைய பெயரை எண்ணும்போது தூக்கிப் போடுகிறதே! இதயத்தில்

ஏதோ சுரப்பதுபோல் தோன்றுகிறதே, அது என்ன?' என்று என் அறிவு கேட்டது. அதற்குச் சமாதானம் கூற என்னால் முடியவில்லை.

இப்படியெல்லாம் நினைத்துக்கொண்டே நன்றாக அஸ்தமிக்கும் வரை சுற்றிக்கொண்டிருந்துவிட்டு, வீட்டை நோக்கி வந்தேன். எதிரே சுசீலாதேவி வந்துகொண்டிருந்தார்கள். என்னைப் பார்த்ததும் சிரித்துவிட்டு, "இந்த ஊர் உனக்குப் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார்கள்?"

"இந்த ஊரையும் பிடித்திருக்கிறது. இங்குள்ள மனிதர்களையும் ரொம்ப பிடித்திருக்கிறது" என்றேன். அப்படிச் சொல்லும்போது அந்த இந்துமதியை நினைத்துக்கொண்டுதான் கூறினேன்.

சுசீலாதேவி புன்னகையுடன், "நீ எங்கள் வீட்டுக்குக் கூட வரவேண்டும். பாதிரித் தோட்டம், சிவப்பு பங்களா என்று சொன்னால் எல்லாருக்கும் தெரியும்" என்றார்.

"கட்டாயம் வருகிறேன்" என்று கூறிவிட்டுப் பிறகு தயக்கத்துடன், "தங்கபாண்டியன் வீட்டில் ஏதாவது ரகளை நடந்ததா?" என்று கேட்டேன்.

"சற்று மாமாவும் மருமகனும் சத்தம் போட்டார்கள். எல்லாம் அடங்கி ஒரு மணி நேரம் ஆகிவிட்டது. அந்தப் பிள்ளைக்குப் பகவான்தான் அருள்புரிய வேண்டும்" என்று கூறிவிட்டுப் போனார். நான் தயங்கியபடியே என் அறைக்குச் சென்றேன்.

அறையில் தங்கபாண்டியன் உட்கார்ந்திருந்தான். ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் புன்னகையுடன், "மாமாவுக்குச் சரியான சூடுகொடுத்துச் சரி பண்ணிவிட்டேன் துரை!" என்றான்.

"என்ன சொன்னாய்?" என்றேன்.

" எனக்குப் பிடித்தமான சிநேகிதனை நான் அப்படித் தான் அழைத்து வருவேன். உங்களுக்குப் பிடிக்கா விட்டால் ஒரு மாதம் எங்காவது போய் இருந்துவிட்டு வாருங்கள். அவர் ஒரு மாதம் இங்கு இருக்கப் போகிறான் என்றேன். அவன் ஒன்றுமே பேசவில்லை. நான் பேசிய விதத்தைக் கண்டு திகைத்துப் போய்விட்டார் என்று தோன்றியது. முதலில் ரொம்ப சத்தம் போட்டார். பிறகு அடங்கிப் போய்விட்டார்."

" பாண்டியா! உன் மாமா உன்னைக் கண்டு பயந்து விடுவாரென்று எனக்குத் தோன்றவில்லை. 'புலி பதுங்குவது பாய்வதற்காகத்தான்' என்று நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? அவர் பின்னால் ஏதேனும் பெரிய சங்கடத்தில் உன்னை மாட்டி வைத்து விடப் போகிறாரே என்றுதான் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது."

" அவரால் என்ன செய்துவிட முடியும்? நீ கவலைப் படாதே! நியாயம் நம் பக்கத்தில் இருக்கிறது. உனக்கு அரண்மனை வாசகசாலையைக் காட்டுகிறேன். ஏராளமான புத்தகங்கள் இருக்கின்றன. நாளைக்கு அந்த மந்திர மூர்த்திப் பண்ணையார் வீட்டுக்கு உன்னை அழைத்துப் போய் அறிமுகம் செய்து வைக்கிறேன். நீ உன் ஆராய்ச்சிகளைச் செய்துகொண்டு, அருவியில் பிரும்மானந்தமாய் ஸ்நானம் செய்துகொண்டு சந்தோஷமாக இரு. திருநந்திபுரத்தில் நமது வக்கீல் இல்லையாம். அடுத்த வாரம்தான் வருகிறாராம். காரியஸ்தர் கூறினார். அவர் வருவதற்குள் நீ உன் வேலைகளை முடித்துக்கொண்டு விட்டாயானால், வக்கீல் வந்ததும் அவரைக் கலந்து ஆலோசனை செய்து கொண்டு மேலே நடக்கவேண்டியவைகளைப் பற்றி யோசிக்கலாம்" என்றான் தங்கபாண்டியன்.

# 21. இந்துவும் சித்ராவும்

மறு நாள் காலை நான் அரண்மனை வாசகசாலையைப் பார்த்தபோது பிரமித்துப் போனேன். ஏராளமான புத்தகங்கள் குவிந்து கிடந்தன. எல்லாப் புத்தகங்களும் தங்கபாண்டியனின் தந்தை வாங்கிச் சேர்த்தவை என்று தெரிந்ததும் எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. அவர் மீது ஒருவித மரியாதை ஏற்பட்டது.

சற்று நேரம் புத்தகங்களையெல்லாம் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுக் கையில் கவியரசர் தாகூர் எழுதிய ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பினேன். கொஞ்ச தூரம் அலைந்த பிறகு சுசீலாதேவி தன் வீட்டுக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டது நினைவுக்கு வந்தது. பாதிரித் தோட்டம் எங்கே இருக்கிறது என்று விசாரித்துக்கொண்டு அங்கே போனேன்.

அந்தத் தோட்டத்தைப் பார்த்ததும் சுசீலாதேவியின் வீட்டுக்குப் போகும் எண்ணம் மறந்து போய் விட்டது. அத்தனை அழகான சோலையை நான் பார்த்ததே இல்லை.

முத்து முத்தாகப் பூத்துச் சொரிந்திருக்கும் புன்னை மரங்களும், வானத்தை அளாவி நின்ற கமுகு மரங்களும், சரம் சரமாகத் தங்க நிறத்தில் பூத்திருந்த கொன்றை மரங்களும் என் கண்களுக்கு விருந்தாக இருந்தன. எல்லாப் புஷ்பங்களின் மணமும் கலந்து தென்றலில் மிதந்து வந்து தலை கிறுக்கும்படி செய்தது. ஒரு மரத்தின் பொந்திலிருந்து சில தேனீக்கள் வந்து போய்க் கொண்டிருந்தன. அடி மரத்தில் காதை வைத்துக் கொண்டு கேட்டபோது "ஙொய்" என்ற சப்தம் வந்தது. அதற்குள் தேனடை இருக்கிறது என்று தெரிந்தது. இப்படி நான் வேடிக்கை பார்த்துக் கொண்டே நின்றேன்.

பிறகு சற்றுத் தாழ்வாக வளர்ந்திருந்த ஒரு மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து, கையில் கொண்டு வந்திருந்த புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன். கவியரசரின் சித்ரா என்ற கதை அது. அந்தச் சித்ராவைப் பற்றிப் படித்த போது எனக்கு முதல் நாள் பார்த்த பெண்ணின் முகம் நினைவுக்கு வந்தது. 'சே! இந்தக் கதைக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்?' என்று நினைத்துக் கொண்டே மேலே படிக்க முயற்சித்தேன். சில பக்கங்கள் படித்த பிறகு மறுபடியும், 'அந்தப் பெண் இங்கே இருந்தால் பேசிக் கொண்டிருக்கலாமே!' என்று தோன்றியது. நான் அவளைப் பற்றி நினைக்கக் கூடாது என்று எண்ண எண்ண அதிகமாக அவளைப் பற்றியே மனம் நினைத்தது. கடைசியில் மனம் போன போக்கில் விட்டுவிட வேண்டியதாயிற்று. 'இங்கே அவள் வரக் கூடாதா?' என்று தோன்றியபோது திடீரென்று என் தனிமை மிகவும் பெரிதாக எனக்குத் தெரிந்தது.

"எனக்கும் அம்மா இருந்தால் 'துரைக்குக் கல்யாணம் பண்ண வேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்திருப்பாள். மணியின் அம்மா பிடிவாதம் பிடித்து அவனுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்துவிட வில்லையா? அடுத்த மாதம் அவனுக்கு விவாகம் நடக்கப் போகிறது எனக்கு யார் இருக்கிறார்கள்? நானாகத்தான் எல்லாம் செய்து கொள்ள வேண்டும். என்னைப் பற்றிக் கவலைப்படவோ, அக்கறை எடுத்துக் கொள்ளவோ யார் இருக்கிறார்கள்? நான் எப்படி இருந்தால் யாருக்குக் கவலை?" என்று நினைத்தேன்.

எனக்கே என்னுடைய புதிய நினைப்புகள் திகைப் பூட்டுவனவாக இருந்தன. சோர்வுக்கு இடங் கொடுக்கக் கூடாது என்று தலையைக் குலுக்கி இந்த எண்ணங்களை உதறிவிட்டுப் புத்தகத்தில் கவனம் செலுத்த முயன்றேன். அந்தச் சமயத்தில் எதிரே இருந்த மரத்தில் சலசல

வென்று சத்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். ஒரு குரங்கு வந்து கொண்டிருந்தது.

" வா ! வா ! துணைக்கு ஒருவருமில்லையே என்று நினைத்தேன் !" என்று அந்தக் குரங்கைப் பார்த்துக் கூறினேன்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்த மரத்துக்கு நான்கு அடிகள் தள்ளி அந்தப் பெண்—அந்தப் பெண் என்ன ?—இந்துமதி நின்றுகொண்டிருந்தாள். என் கையிலிருந்த புத்தகம் நழுவிக் கீழே விழுந்தது !

மகாகவி தாகூர் தாம் எழுதியுள்ள 'சித்ரா' என்ற கதையில் ஒரு அற்புதமான பாத்திரத்தைச் சிருஷ்டித்திருக்கிறார். சித்ரா அழகற்ற பெண். அர்ஜுனனைக் கண்டு காதல் கொள்கிறாள். அர்ஜுனன் அவளுடைய காதலை நிராகரித்து விடுகிறான். தான் அழகாக இல்லை என்பதனாலன்றோ தன்னை நிராகரித்தார் என்று மனம் நொந்த சித்ரா, மன்மதனையும் வஸந்தனையும் நோக்கித் தவம் செய்து, ஓராண்டு காலம் ஒப்பற்ற பேரழகியாய் விளங்க வரம் பெறுகிறாள்.

திவ்ய சௌந்தரியம் பெற்ற சித்ரா தன் அழகைக் கண்ணாடி போல் மின்னும் ஏரித் தண்ணீரில் பார்த்து மகிழ்வதை அர்ஜுனன் பார்க்கிறான்.

பின், அர்ஜுனன் நினைக்கிறான்: " நான் அப்பொழுது கனவு கண்டேனா, அல்லது அந்த ஏரியின் அருகே கண்ட காட்சி உண்மையிலேயே நிகழ்ந்ததுதானா ? நான் அந்தப் புல் தரையில் மாலை வேளையில் உட்கார்ந்து கடந்துபோன நாட்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன். அப்போது இருள் மூடிய வனப் பிரதேசத்திலிருந்து அழகே உருவான ஒரு பெண் தோன்றினாள். அவள் ஏரிக்கரையோரமாக இருந்த ஒரு பாறையின் மீது ஏறி நின்றாள். அவள் பாத ஸ்பரிசம் பட்டதற்குப் பெரு மகிழ்ச்சியடைந்து பூமியின்

உள்ளம்கூடப் பொங்கிப் பெருகியதுபோல் தோன்றியது. அவள் கண்ணாடிபோல் மின்னிக் கொண்டிருந்த ஏரியின் தண்ணீரில் தன் முகத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்தாள். சற்று நேரம் அசையாமல் நின்றாள். பிறகு சிரித்துக் கொண்டாள். தன் பாதங்கள் வரை நீண்டுள்ள அழகிய கூந்தலை அவிழ்த்து விட்டுக் கொண்டாள்....."

இதை நான் பாதிரித் தோட்டத்தின் மரக்கிளையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தேன். அழகற்ற சித்ராவைத் தங்கபாண்டியனின் தங்கை லக்ஷ்மிக்கும், சௌந்தர்யம் பெற்ற சித்ராவை இந்துவுக்கும் என் மனம் ஒப்பிட்டுப் பார்த்தது. 'சே! இது என்ன பைத்தியக்கார எண்ணம்? பெண்களைப் பற்றியெல்லாம் நான் எதற்காக நினைக்க வேண்டும்?' என்று அந்த எண்ணத்தை நெட்டித் தள்ளிவிட்டு மேலே வாசித்தேன். மறுபடியும் அர்ஜுனன் நினைப்பதுதான் புத்தகத்தில் தொடர்ந்தது. "ஆசையின் பரிபூரண நினைவு எப்படியிருக்கும் என்று எனக்கு உணர்த்தி விட்டு மறைந்து விட்டாற்போல் பிரமை ஏற்பட்டது."

இதைப் படித்துக் கொண்டும், நடுநடுவே மனோ ராஜ்யத்தில் ஈடுபட்டுக் கொண்டும் இருந்தவனுக்கு எதிரே திடீரென்று ஒரு திவ்ய சௌந்தரியவதியான பெண் நின்றால் எப்படி யிருக்கும்? இந்துமதி சித்ராவாகவும் நான் அர்ஜுனனாகவும் என் கற்பனை உருவாயிற்று. நான் அவளைப் பார்த்த அதே கணத்தில் அவளும் என்னை பார்த்தாள். 'அவள் முகத்தில் ஏற்பட்ட பிரகாசத்துக்கு என்ன பொருள்?' அந்தத் தோட்டத்தின் சூழ்நிலையும் நான் படித்துக் கொண்டிருந்த விஷயமும், அவளுடைய லாவண்யமும் சேர்ந்து என்னையே மெய்மறந்து போய் விடச் செய்தன.

அவளுடைய திகைப்பைப் பார்த்து, நான் குரங்கை பார்த்துச் சொன்னதை அவள் தன்னிடம் கூறியதா

நினைத்துக் கொண்டு விட்டாளோ என்ற சந்தேகம் எனக்குத் தோன்றியது. ஆகவே அவசரமாக, " மன்னிக்க வேண்டும். நான் உன்னுடன் பேசவில்லை. இந்தக் குரங்கினிடம் பேசினேன் " என்று கூறினேன்.

அவள் முகத்திலிருந்த ஆச்சரியம் மறைந்து, முகம் சிவந்து விட்டது. பதில் சொல்லாமல் மேலே நடந்தாள். ' நான் பரிகாசம் செய்வதாக நினைத்துக் கொண்டு விட்டாளோ என்னமோ ? ஒருவேளை, " உன்னைப் பார்த்துத்தான் கூறினேன் " என்று சொல்லியிருந்தால் அவளுடைய முகம் மலர்ந்திருக்குமோ என்னமோ !' என்று நினைத்தேன். அவள் போகிறாளே ! எப்படிக் கூப்பிடுவது ? எப்படியாவது நான் பரிகாசம் செய்யவில்லை என்பதை அவளுக்குத் தெரிவித்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டே மரத்திலிருந்து இறங்கி, விழுந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு இரண்டு அடிகள் எடுத்து வைத்தேன்.

அவள் புன்னை மரத்தடியில் நின்றாள். உடனே எனக்கு நானும் அர்ஜுனனைப் போல் அவள் என்ன செய்கிறாளென்று பார்க்கவேண்டுமென்று தோன்றியது. பக்கத்தில் வளர்ந்திருந்த ஒரு பலாமரத்தின் பின்னல் மறைந்து நின்றேன்.

இந்து குனிந்து கீழே கிடந்த புன்னை மலர்களைப் பொறுக்கத் தொடங்கினாள். பொறுக்குவது போல் பாவனை செய்தாள். பத்துப் பூக்கள்கூடப் பொறுக்கவில்லை. தன் தாவணியின் தலைப்பினால் முகத்தை விசிறிக்கொண்டே நான் உட்கார்ந்திருந்த மரத்தைப் பார்த்தாள். அவள் முகத்தில் ஏமாற்றம் தென்பட்டது. என் மனம் மகிழ்ந்தது. 'அவள் என்னைப் பார்க்க விரும்புகிறாள். அருகில் போய்ப் பேசினால் என்ன ?' என்று தோன்றியது. உடனே விரைந்து அவள் அருகில் சென்று நின்றேன்.

நான் அவளிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தது மறந்துபோய்விட்டது.

என் பார்வையை அவள் முகத்திலிருந்து திருப்பவே முடியவில்லை. "பெண்ணே உனதழகைக் கண்டு மனம் பித்தம்..." என்ற அடி என் மனத்தில் வட்டமிட்டது அதைச் சொல்லத் துணிவு வரவில்லை.

அவளும் பேசாமல் நிற்கவே, 'அர்ஜுனனுக்கு பிரேமை ஏற்பட்டதுபோல் எனக்கும் ஏதேனும் பிரேமை ஏற்பட்டிருக்கிறதோ?' என்றுகூட எண்ணினேன். சுவரில் எழுதிய சித்திரம் மாதிரி ஒரு பெண் அசையாமல், கண்களைக்கூடக் கொட்டாமல் நின்ருல் பின்னே என்ன நினைக்கத் தோன்றும் ?

நல்ல வேளையாக வெகு நேரம் நான் சந்தேகப் படும்படி வைக்கவில்லை இந்துமதி. "ஏன் இப்படி என்னை உற்றுப் பார்த்துக்கொண்டே நிற்கிறீர்கள் ? பேசத் தெரியாதா? திடீரென்று நீங்கள் ஊமையாகி விட்டீர்களா? வழியை விடுங்கள். நான் போகவேண்டும்" என்று மூச்சு விடாமல் பேசினுள்.

அவள் பேசிய விதம் எனக்குச் சிரிப்பூட்டியது. நான் பேச வேண்டுமென்று அவள் எதிர்பார்த்தாளென்பதும், நான் பேசாமல் நிற்கவே அவளுக்குக் கோபம் வந்த தென்பதும் எனக்குத் தெரிந்துவிட்டதல்லவா ? ஆனுல், நான் சிரிக்கவில்லை. அவளை வியப்புடன் பார்த்து, "ஓகோ! பேசும் பெண்மணிதானு நீ ? அஜந்தா சித்திரம் என்றல்லவா நினைத்தேன் ?" என்று கூறினேன்.

அன்று காலை வரையில் யாரேனும் நான் இவ்விதம் ஒரு பெண்ணைப் பார்த்து பேசுவேன் என்று கூறியிருந் தால், நான் ரொம்பக் கோபித்துக் கொண்டிருப்பேன். அந்தக் கணம் வரை நான் என்ன சொல்வது என்று யோசிக்கவே இல்லை. அஜந்தா சித்திரம் என்ற வார்த்தை

என்னையறியாமலேயே உதிர்ந்தது. அதை நினைத்து எனக்கே அதிசயமாக இருந்தது.

இவ்வாறு சற்று நேரம் வாய்ப்பந்தல் போட்ட பிறகு அவளுடைய வீட்டுக்கு வருவதாகக் கூறிவிட்டு நான் திரும்பினேன்.

இந்துமதியைப் பார்த்த பிறகு நான் பாதிரித் தோட்டத்துக்குச் சென்ற காரணம்கூட எனக்கு மறந்து போய்விட்டது. திரும்ப நான் அரண்மனைக்குச் சென்றதும் தங்கபாண்டியன் நேரம் கழித்து வந்ததற்குக் கோபித்துக் கொண்டான். சாப்பிட்டுவிட்டு இரண்டு பேரும் எங்கள் அறைக்குச் சென்றோம்.

பிறகு தங்கபாண்டியன் பாதாளக் கிடங்கைத் திறந்து சுவடிகள் ஏதேனும் கிடந்தால் எடுக்கச் சொல்வதற்காகச் சென்றான். அவன் திரும்பி வந்தபோது மிகவும் சோர்வாக இருந்தான். எப்போதும்போல் கலகலப்பாக இல்லை. முதல் நாள் மாமாவோடு சண்டை போட்டதனால் அப்படி இருக்கிறானென்று நினைத்துக்கொண்டேன்.

அதன் பிறகுகூட தங்கபாண்டியன் கலகலப்பாக இல்லவே இல்லை. சென்னையிலிருந்த மாணவனான தங்கபாண்டியனுக்கும், குங்குமத்துறை ஜமீனின்வாரிசான தங்கபாண்டியனுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதாகத் தோன்றியது.

மாலையில் நான் அவனைப் பார்த்து, "மந்திரமூர்த்திப் பண்ணையாரைப் பார்த்துவிட்டு வரலாமென்று கூறினாயே? போகலாமா?" என்று கேட்டேன்.

"நானே உன்னிடம் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். கட்டாயம் போகவேண்டும். உனக்கும் காரியம் இருக்கிறது. அந்தப் பெண்ணுக்கும் அடியொன்றும் படவில்லையே என்று கேட்டுவிட்டு வருவதுதான் மரியாதை. அந்த மனிதரின் சிநேகத்தை எப்படியாவது நான்

சம்பாதித்துக் கொள்ளவேண்டும்" என்ருன். அவன் பேச்சில் ஒரு சோர்வு காணப்பட்டது.

மத்தியானம் அவனிடம் நான் பாதிரித் தோட்டத்தில் இந்துமதியைச் சந்தித்ததைப் பற்றிச் சொல்ல வேண்டு மென்று இரண்டு தடவைகள் வாயெடுத்தேன். ஆனுல் சொல்ல மனம் வரவில்லை. ஏன் என்பது எனக்கே புரிய வில்லை. பல வருஷ காலமாக ஒவ்வொரு விஷயத்தையும் பகிர்ந்துகொண்ட நண்பனிடம் இந்துவைப் பற்றிப் பேசத் துணிவு வரவில்லை. ஏதோ ஒன்று அதைத் தடைசெய்தது. 'நான் தங்கபாண்டியனிடம் சொன்னுல் அவளுக்குப் பிடிக்காதோ என்னமோ?' என்ற எண்ணம் தோன்றியது. 'அவளுக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ என்பதைப் பற்றி நான் ஏன் கவலைப்படுகிறேன்?' என்று வியப்பாக இருந்தது. சில சமயங்களில் நம்முடைய மனப்போக்கு நமக்கே புரிவதில்லை அல்லவா?

# 22. யுத்தம் நடந்தது

அன்றிரவு பெரிய யுத்தம் ஒன்று காத்துக்கொண் டிருந்ததென்று எங்கள் இருவருக்கும் தெரிந்திருக்கவில்லை. பிற்பகலில் நாங்கள் இந்துமதியின் வீட்டுக்குப் போவதற்கு முன்னுல் பாதாளக் கிடங்கைத் திறக்கச் சொல்லி, அதில் ஏதேனும் சுவடிகள் முதலியன கிடைத்தால் எடுக்கும்படி தங்கபாண்டியன் தன் ஆட்களிடம் கூறினுன் அல்லவா? அந்தக் கிடங்கின் சாவி சின்னம்மாவிடம் இருந்தது. அவர் ரொம்பத் தயங்கிவிட்டுப் பின்னர்தான் சாவியைக் கொடுத்தாராம். தங்கபாண்டியன் ரொம்ப வற்புறுத்தி னுனும். "பார், ரங்கதுரை. என் வீட்டில் எனக்குச் சிறிதுகூடச் சுதந்திரமில்லை. என்னை நம்பிச் சாவியைக்

கூடக் கொடுக்க மாட்டேனென்கிறார்கள். இதை எத்தனை நாட்களுக்குப் பொறுத்துக்கொண்டிருப்பது ?'' என்று முறையிட்டான், தங்கபாண்டியன்.

'' சின்னம்மா மீது தவறு சொல்லாதே, பாண்டியா ! உன்னிடம் சாவியைக் கொடுத்துவிட்டால் உன் மாமா அவரைச் சண்டை பிடிக்கலாமல்லவா ? அந்தப் பயம்தான் காரணம் '' என்று கூறிச் சமாதானப்படுத்தினேன்.

பின்னர் அவன் மட்டும் கிடங்குவரை சென்று திறந்து பார்த்துவிட்டு வந்தான். நானும் போனால் ஏதேனும் சந்தேகத்து இடமாகுமென்று நான் போகவில்லை. சில சுவடிக் கட்டுகள் கிடைத்ததாகவும், அவைகள் ரொம்ப அழுக்கடைந்து கிடப்பதால் வெய்யிலில் போட்டுத் துடைத்துவிட்டு மறுநாள் பார்க்கலாமென்றும் கூறியிருந்தான்.

அன்றிரவு சொக்கையாவுக்கு இந்த விஷயம் எப்படியோ தெரிந்துவிட்டது.

நான் வாசகசாலையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தேன். திடீரென்று யாரோ கத்தும் சத்தம் கேட்டது. உடனே தங்கபாண்டியனின் குரலும் கேட்டது. எனக்கு வெளியே போய் என்ன விவரமென்று தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆவலாக இருந்தது. ஆனால், அதை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். என்னைப் பார்ப்பதால் சொக்கையாவின் கோபம் அதிகமாகி விடலாம். பிறகு தங்கபாண்டியனைக் கேட்டுத் தெரிந்து கொண்டால் போகிறது என்று நினைத்துக்கொண்டு வாசகசாலையை விட்டு நான் வெளியே போகவில்லை. ஆனால் எனக்குப் படிக்கவும் ஓடவில்லை.

நான் தங்கபாண்டியன் விஷயத்தில் தலையிட்டுக் கொண்டது சரிதானா என்று மூளையைக் குழப்பிக் கொண்டேன். ஒரு சமயம் ரொம்ப நியாயமான விஷயமென்று

தோன்றியது. ஒரு சமயம் கொஞ்சங்கூடச் சரியில்லை என்று தோன்றியது. கடைசியில் ஆப்த நண்பனுக்கு உதவி செய்வதைப்போல் நல்ல காரியம் எதுவும் இருக்க முடியாதென்ற தீர்மானத்துக்கு வந்தேன். அவனுடைய கட்சி ரொம்ப நியாயமானது. அவனோ உதவியற்ற நிலையில் தன்னந் தனியாகத் தவிக்கிறான். அந்தச் சமயத்தில் நான் என்னுடைய கௌரவத்துக்குப் பங்கம் நேர்ந்துவிட்டதே என்று வருந்துவது ரொம்பக் கேவலம் என்று தோன்றியது. சீமைக்குப் போவதற்கு முன்னால் எப்படியாவது வக்கீலைச் சந்தித்துப் பேசித் தங்க பாண்டியன் விஷயத்தை ஒரு முடிவு செய்துவிட்டுத்தான் போகவேண்டும் என்று தீர்மானம் செய்தேன்.

என் யோசனைகள் முடிவதற்கு முன்பே சந்தடி அடங்கிவிட்டது. புத்தகத்தை மேஜைமீது போட்டுவிட்டு எழுந்து என் அறைக்குச் சென்றேன். தங்கபாண்டியன் படுத்துக்கொண்டிருந்தான். அவன் முதுகுப் பக்கம்தான் எனக்குத் தெரிந்தது. ஒருவேளை தூங்கிவிட்டானோ என்று நினைத்துக்கொண்டே அருகில் போய்ப் பார்த்தேன். "பாண்டியா!" என்று மெதுவாகக் கூப்பிட்டேன். அவன் கண்களைத் திறந்தான். நான் பயந்தே போனேன். கண்கள் கோவைப் பழமாகச் சிவந்திருந்தன. என்னைப் பார்த்ததும் அவன் கண்களில் கண்ணீர் பொங்கி வந்தது.

"என்ன தங்கபாண்டியா? என்ன நடந்தது? ஏன் அழுகிறாய்? சே! சே! நீ இப்படி உணர்ச்சிக்கு இடங் கொடுக்கலாமா? எழுந்திரு. என்ன நடந்ததென்று சொல்லு" என்றேன்.

தங்கபாண்டியன் கண்களைத் துடைத்துக்கொண்டே, "என்னைச் சொக்கையா சண்டை பிடித்ததற்காக அழ வில்லை, துரை! நான் அப்படிப்பட்ட கோழை அல்ல.

அவர் என் அருமைத் தந்தையைப் பற்றி இழிவாகப் பேசியதை என்னால் பொறுக்க முடியவில்லை. அகாலத்தில் துப்பாக்கியால் சுடப்பட்டு இறந்துபோன அவரை நினைத்து நான் அழுதேன். அவர் மட்டும் உயிரோடு இருந்திருந்தால் சொக்கையா இப்படியெல்லாம் பேசு வதைக் கேட்டுக்கொண்டு அவர் பேசாமலிருப்பாரா? அல்லது இவன்தான் இப்படிப் பேசத் துணிவானோ ?" என்று கூறினான்.

அவனுடைய குரலில் தொனித்த ஏக்கம் என் நெஞ்சை உருக்கியது. "இன்று பாதாளக் கிடங்கிலிருந்து ஓலைச் சுவடிகள் எடுக்கச் சொன்னேன் அல்லவா ? அதை யாரோ அவரிடம் கூறியிருக்கிறார்கள். சின்னம்மாவிடம் போய் 'ஏன் சாவியைக் கொடுத்தாய்' என்று சத்தம் போட்டாராம். இதைக் காரியஸ்தர் என்னிடம் வந்து கூறினார். உடனே நான் பின்கட்டுக்குப் போனேன். வழியில் மாமா வந்து கொண்டிருந்தார்.

'எதற்காக என்னைக் கேட்காமல் கிடங்கைத் திறந் தாய் ? இந்தத் திருட்டுத்தனத்தையெல்லாம் என்னிடம் காட்ட முடியாது, தெரியுமா !' என்றார்.

'என் வீட்டில் என்னுடைய சொத்தை நீங்கள் திருடு கிறீர்கள். என் அப்பா இருந்தபோதிலிருந்தே செய்து வருகிறீர்கள். நான் என்னுடைய வீட்டுச் சாமான்களை எடுப்பது திருட்டுத்தனமா ? அதை நீங்கள் பூட்டி வைப்பது திருட்டுத்தனமா ?' என்று கோபத்தில் கேட்டு விட்டேன்.

'உங்கப்பா வம்ச பரம்பரையாக வந்த சொத்தை யெல்லாம் சூதாட்டத்திலும், குடியிலும் தொலைத்தார். நீ ஒருவனைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறாயே. அதே மாதிரி அவரும் ஒருவனைப் பிடித்துக்கொண்டு வந்திருந் தார். அந்தக் காசிலிங்கம் வேறு எத்தனையோ கொள்ளை

அடித்தான். அந்தப் பரதேசிப் பயலுக்காக ஊரி லுள்ள கௌரவமான மனிதர்கள் அத்தனை பேரையும் விரோதம் செய்துகொண்டார். ஈசுவர மூர்த்தியையும் விரோதம் செய்து கொண் டார். காசிலிங்கத்தை அவர் வீட்டில் போய்க் கலாட்டா செய்யச் சொன்னார். அவன் கடைசியில் உன் அப்பாவையே கொன்று விட்டுப் போய்விட்டான். அப்படிப்பட்டவனுடைய அருமை மனைவி யையும், பெண்ணையும் பார்க்கத்தான் இன்று நீ போய்விட்டு வந்திருக்கிறாய். அப்பனுக்கு ஏற்ற பிள்ளை நீதான்! நம் முடைய மரியாதை, கௌரவம் எல்லா வற்றையும் தொலைத்து விடுங்கள்!' என்று இரைந்தார்.



'எதற்காக அனாவசியமாக யார் மீதோ பழி சுமத்து கிறீர்கள்? அவர்கள் வீட்டுக்குப் போவது ஒன்றும் எனக்குத் தவறாகப் படவில்லை. பண்ணையார் ரொம்பப் படித்தவர். என் சிநேகிதனுக்கு வேண்டிய விஷயங்களைச் சொல்வார் என்பதற்காகப் போனேம். இவ்வுலகில் சிலர் தன் குற்றத்தை மறைப்பதற்காகத்தான் மற்றவர்கள்மீது குற்றம் சுமத்துவார்கள்!'

'ஓஹோ! பண்ணையாரைப் பார்ப்பதற்காகத்தான் அவர் இல்லாத சமயத்தில் போய்விட்டு இரண்டு மணி நேரம் இருந்துவிட்டு வந்தீர்களாக்கும்? அயோக்கியத் தனமாய்ப் பேசுகிறாயே. இதற்குத்தான் உன்னைப் பட்டணத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்தேனா? உன்னை அனுப்பியதே பெரிய தவறு. சகவாச தோஷம் உன்னை அப்படிக் கெடுத்துவிட்டது!'

'நான் படிக்க வேண்டுமென்பதற்காகவா நீங்கள் என்னை அனுப்பினீர்கள்? இங்கே நான் இருந்தால்

உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று அனுப்பி னீர்கள். என்னுடைய நடத்தையைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். என் தகப்பனரைப் பற்றியும் அவதூறு சொல்ல வேண்டாம். அவரவர்கள் தாங்கள் ஒழுங்காக இருக்கிறோமா என்று பார்த்துக் கொண்டாலே போதும்.........'

'டேய்! என்னை என்னவென்று நினைத்துக் கொண் டிருக்கிறாய்? போனால் போகிறதென்று நீ சொல்லுவதை யெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தால் ரொம்பத் துள்ளு கிறாயே. காசிலிங்கத்தின் பெண்ணைப் பார்த்து இளித்து விட்டு வந்தவனுக்கு இந்தப் பேச்சு வேறு கேடா? என்னைப் பார்த்துப் பேச உனக்கு என்ன துணிச்சல்?' என்று என்மீது பாய்ந்தார். என்னை அவர் அடித்திருந் தால் நானும் ஒரு கை பார்த்திருப்பேன்.

அதற்குள் காரியஸ்தரும் சின்னம்மாவும் ஓடி வந்து அவரைப் பிடித்துக் கொண்டு விட்டார்கள். பிறகு சின்னம்மா என்னைச் சமாதானப்படுத்தினாள். 'பெரிய வர்களுடன் சண்டை போடாதே, அப்பா. உன் அறைக்குப் போய்விடு' என்றார். உடனே நான் இங்கே வந்து விட்டேன். அவர் பேசிய பேச்சு என் நெஞ்சைப் பிழிந்தெடுக்கிறது. என்னைப் பற்றி அவர் கூறியதுகூட அவ்வளவாக என்னைப் பாதிக்கவில்லை. ஆனால் அவர் எப்போதோ இறந்து போன என் தந்தையைப் பற்றிக் கேவலமாகப் பேசியதை நினைக்கும்போதுதான் ரத்தம் கொதிக்கிறது" என்றான்.

"இவ்வளவு பெரிய ரகளையாகும் என்று தெரிந் திருந்தால் அதைத் திறக்கச் சொல்லியே இருக்க மாட்டேன். இப்போது அப்படி என்ன சரித்திர ஆராய்ச்சி தட்டுக்கெட்டுப் போகிறது? நீயும் இப்படி அவரிடம் எதிர்த்துச் சண்டை போட்டிருக்க வேண்டாம், பாண்டியா" என்று கூறினேன்.

"என் சொத்தைக் கொள்ளையடித்துவிட்டு இவன் என்னைத் திருடன் என்றால் மனம் பொறுக்குமா, துரை ?"

"உண்மைதான். ஆனாலும் அவரோடு இப்போது சண்டை போட்டுக் கொள்வதால் ஒரு பலனும் இல்லை. சட்டம் நம் பக்கத்தில்தான் தீர்ப்புச் சொல்லும். ஆகவே உனக்கு இந்த ஜமீன் கட்டாயம் வந்து சேர்ந்துவிடும். போனது போகட்டும். இருப்பதை நாம் காப்பாற்றிக் கொண்டால் போதுமானது. நீ கவலைப்படாமல் தூங்கு !" என்று கூறி அவனைச் சமாதானப்படுத்திவிட்டுப் படுத்துக் கொண்டேன்.

படுத்துக் கொண்டால் தூக்கம் உடனே வந்து விடுகிறதா ? சொக்கையா கூறியவையெல்லாம் எழுத்தெழுத்தாகக் கண்முன் வந்தன. ஞாபக சக்தி சற்றுக் குறைவாக இருப்பதே மிகவும் நல்லதென்று எனக்குப் பல சமயங்களில் தோன்றியிருக்கிறது.



அதுவும் இங்கிலாந்தில் நான் வசித்தபோது, இந்துமதியை மறக்க முடியாமல் கஷ்டப்பட்டபோது, ஞாபக சக்தி இல்லாமலிருந்தால் எவ்வளவோ நல்லது என்று அடிக்கடி தோன்றிக்கொண்டே இருக்கும்.

சொக்கையா கூறியதில் 'காசிலிங்கத்தின் பெண்ணைப் பார்த்து' என்ற வார்த்தைகள் என் நெஞ்சை வட்டமிட்டன. என் விஷயத்தில் அது உண்மைபோலல்லவா தோன்றுகிறது. 'திடீரென்று அந்தப் பெண்மீது எனக்கு இப்படி மனம் ஈடுபடுவானேன் ? எனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம் ? நானோ வெகு சீக்கிரத்தில் சீமைக்குப் போகப் போகிறேன். கல்யாணத்தைப் பற்றி நினைப்பதற்கே என் வாழ்க்கையில் இப்போது இடமில்லாமலிருக்கிறது. நான் போய்விட்டுத் திரும்பி வருவதற்குள் அவளை

யாருக்காவது கல்யாணம் செய்து கொடுத்து விடுவார்கள். அப்படி இருக்கும்போது இந்த எண்ணத்தை வளரவிடக் கூடாது. நாளைக்கு மந்திரமூர்த்திப் பண்ணையாரைப் பார்க்கப்போனால் சரித்திர விஷயமாகப் பேசி விட்டு உடனே திரும்பிவிட வேண்டும். அவளிடம் ஒன்றும் அதிகமாகப் பேசக் கூடாது. சாதாரணமாகப் பேச வேண்டியது. அவளுடைய அழகைப் பற்றியெல்லாம் ஒன்றுமே சொல்லக்கூடாது' என்று தீர்மானம் செய்து கொண்டே தூங்கிப் போனேன்.

ஆனால் கனவுலகில் இந்துமதியுடன் பேசாமலிருக்க முடியவில்லை. எங்கள் கல்லூரியில் வருஷாந்திரக் கொண்டாட்டம் வருகிறது. அதற்கு நாங்கள் நாடகம் போடுகிறோம். சித்ரா நாடகத்தை நடிப்பதாகத் தீர்மானம் செய்கிறோம். நான் அர்ஜுனனாகவும், மன்மதனிடமும், வஸந்தனிடமும் வரம் பெற்ற சித்ராவாக இந்துமதியும் அதில் சேர்ந்து நடிக்கிறோம்.

மலர்கள் பூத்துக் குலுங்கும் கொடிகளுக்கடியில் நான் தூங்குகிறேன். அப்போது, சர்வாபரண பூஷிதையாக இந்துமதி வருகிறாள். நான் நடிப்பதை மறந்து, "இந்து!" என்று கூப்பிட்டு விடுகிறேன். சபையோர் கொல்லென்று சிரிக்கும் சத்தம் கேட்கிறது.

நான் விழித்துக் கொண்டேன். 'சே! என்ன அசட்டுக் கனவு? இந்துமதி இப்படி என்னையறியாமல் என் மனத்தில் புகுந்து விட்டாளே! இதற்கு இடமே கொடுக்கக் கூடாது' என்று நினைத்துக் கொண்டே மறுபடியும் தூங்கிப் போனேன். ஆனால், அந்த உறுதியை என்னால் காப்பாற்றவே முடியாமல் போய் விட்டது.

இந்துவைப் பார்க்கப் பார்க்க என் மனோதிடம் குறைந்து வந்தது. கடைசியில் நான் சீமை சென்ற போது என் இதயத்தை அவளிடம் கொடுத்து விட்டுத் தான் சென்றேன்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் மறுபடியும் பண்ணை யார் மந்திரமூர்த்தியைப் பார்க்கப் போகவேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. காலையில் சுவடிக் கட்டுகளைப் பரிசோதிக்கச் சென்றேன். பாதிக்கு மேல் தொட்ட உடனே தூள் தூளாக உதிர்ந்து விட்டன. பூதக் கண்ணுடியின் உதவியால் சுவடிகளிலிருந்து சில விஷயங் களைக் கூர்ந்து பார்த்து எழுதிக் கொண்டேன். அதி லிருந்து ஒரு முக்கியமான விஷயம் எனக்குத் தெரிய வந்தது

தங்கபாண்டியனின் குடும்பத்தில் தலைமுறை தலை முறையாக ஒரு சாபம் இருந்து வந்தது போலும். அந்த ஓலைச்சுவடிகளில் காணப்பட்ட வரிகள் அதைத் தெளிவாகப் புலப்படுத்தின. தங்கபாண்டியனின் பாட்டனுக்குப் பாட்டனான முத்துவீரப்பப் பாண்டியர் காலத்தில் எழுதப் பட்ட சில சுவடிகளும், அவருடைய பிள்ளையான சொக்கப்பத்தேவ பாண்டியர் காலத்தில் எழுதப்பட்டவை களும் கிடைத்தன.

இதில் மிக விந்தையான விஷயம் என்னவென்றல் முத்துவீரப்பப் பாண்டியர், ஊமைத்துரையைச் சிறையி லிருந்து விடுவித்து, குங்குமத்துறை மலைமீது கோட்டை யில் வைத்து ஆதரவு காட்டியதை அவருடைய உறவினன் ஒருவன்தான் வெள்ளைக்காரர்களுக்குக் காட்டிக் கொடுத் தான். அவன் பெயரும் சொக்கையாப் பாண்டியன்தான். முத்துவீரப்பப் பாண்டியரின் பிள்ளையான சொக்கப்பத்தேவ பாண்டியரும் கொலையுண்டு இறந்து போனர். இந்த விவரங்களுக்கு மேல் அதில் ஒன்றும் கிடைக்கவில்லை. நான் இதைத் தங்கபாண்டியனிடம் கூறவில்லை. கூறினல் அவனுடைய மனே நிலையில் அது அவனுக்கு இன்னும் வேதனை அளிக்குமென்று பட்டது.

ஆனல், அதிலிருந்து எனக்கு இன்னும் ஊக்கம் அதிகமாயிற்று. எப்படியாவது அந்த ஆறு தலைமுறைகளில்

நடந்த விஷயங்களைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டேன். மறுபடியும் பாதாளக் கிடங்கைத்தான் சோதிக்கவேண்டும். சொக்கையா அதற்கு அனுமதி அளிக்க வேண்டுமே ? என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

மறுபடியும் நான் மந்திரமூர்த்திப் பண்ணையாரின் வீட்டுக்குப் போனபோது தங்கபாண்டியனும் வருவதாகக் கூறினான். நான் தடுக்கவில்லை. ஆனால் நான் போய்ச் சிறிது நேரம் கழித்து வருவதாகக் கூறினான்.

அன்று மந்திரமூர்த்திப் பண்ணையார் எங்களுடன் மிகவும் பிரியமாகப் பேசிக் கொண்டிருந்தார். அன்று இந்துமதியின் தந்தையைப் பற்றிப் பேச்சு திரும்பியது. அவரைப் பற்றிப் பண்ணையார் சொல்லும்போது எனக்கு அவரைப் பார்க்க வேண்டும் போலிருந்தது.

மேலும் தங்கபாண்டியன் கூறிய விஷயங்களை யெல்லாம் சேர்த்து ஒட்டவைத்து நான் இன்னொரு விஷயத்தை ஊகித்திருந்தேன். என் ஊகம் வெறும் கற்பனையா அல்லது நிஜமா என்று தெரிந்து கொள்ள ஆவலாக இருந்தது. தங்கபாண்டியன் திருநந்திபுரம் மிராசுதார் ஈசுவரமூர்த்திக்கும் இந்துமதியின் தந்தைக்கும் இருந்த விரோதபாவத்தைப் பற்றிக் கூறியிருந்தான். தன் தகப்பனுருக்கும் ஈசுவரமூர்த்திக்கும் இருந்த விரோதத்தைப் பற்றிக் கூறிய போது அதையும் குறிப்பிட்டான். சொக்கையாவும் அதே விஷயத்தைக் கூறவே எனக்கு அந்தசந்தேகம் ஏற்பட்டது. என் மனம் அதை நிரூபித்துக் கொள்ளத் துடித்தது.

அதனுல் அன்று காசிலிங்கத்தைப் பற்றிப் பேச்சு வந்தபோது நான் தூண்டித் துருவிக் கேள்விகள் கேட்டேன். அவருடைய போட்டோஇருந்தால் காட்டும்படி கேட்டேன். அதன் பிறகு எனக்குச் சரித்திர ஆராய்ச்சியில்

கூட ஊக்கம் குன்றிவிட்டது. மந்திரமூர்த்திப் பண்ணையார் நான் முதல்நாள் ரொம்ப ரஸித்த நாட்டுப் பாடலை விளக்கியபோதெல்லாம் நான் பொறுமையாக உட்கார்ந்திருக்க வேண்டியதாயிற்று.



தங்கபாண்டியன் போகலாமா என்று கேட்டபோது எனக்குக் கிளம்ப மனம் வரவில்லை. இந்துவின் தந்தையினுடைய படங்களைப்பார்த்து விட்டுத்தான் போவது என்று தீர்மானித்துக் கொண்டிருந்தேன். ஆகவே அவனைப் பார்த்து, " நீ வேண்டுமானால் முன்னால் போ. நான் அந்தப் போட்டோ ஆல்பங்களைப் பார்த்துவிட்டு அரை மணியில் வந்து விடுகிறேன் " என்று கூறினேன்.

அவன் கொஞ்சம் கோபமாகப் பார்த்துவிட்டுப் போய் விட்டான். 'எதற்காகத் தங்கபாண்டியனுக்கு நான் அங்கே இருப்பது பிடிக்கவில்லை?' என்ற கேள்வி என் மனத்தில் எழுந்தது. பிறகு சொக்கையா கோபித்துக் கொள்வாரென்று அவனுக்குப் பயமிருப்பது இயல்புதானே என்று தோன்றியது. மேலும் அந்தச் சமயத்தில் அவன் கோபத்தைப் பொருட்படுத்தும் மனோநிலையில் நான்

# 23. இந்துவின் தந்தை

போட்டோ ஆலபத்தைக் கொண்டுவரச் சொல்லி ஆவலுடன் பிரித்துப் பார்த்தேன். என் ஊக்கம் உடனேயே ஊர்ஜிதமாகிவிட்டது. என்னைக் காப்பாற்றியவரும், இந்துவின் தந்தையும் ஒரே மனிதர்தான் என்று எனக்குத் தெரிந்து போய்விட்டது. அந்த நிமிடம் முதல் எனக்கு

அந்தக் குடும்பத்தில் ஒரு பந்தம் ஏற்பட்டுவிட்டது. நான் யாருமில்லாதவன் என்ற எண்ணம் என் நெஞ்சைவிட்டு விலகிப் போய்விட்டது. என்னைக் காத்த உத்தமரின் குடும்பம் என் குடும்பமாகிவிட்டது. இந்த மானஸீகமான பிணைப்பு எனக்கு இந்துமதியை நேசிக்க ஒரு பலம் கொடுத்தது.

இதையெல்லாம் நான் உடனே அவர்களிடம் கூற வில்லை. யோசித்துக் கொண்டு சொல்லலாம் என்று பேசாமலிருந்துவிட்டேன். இந்துமதி, "என் தந்தையைப் போன்ற முக ஜாடையுடையவரை எங்கேயாவது பார்த் திருக்கிறீர்களா?" என்று கேட்டபோதுகூட, "இதோ உன்னைப் பார்க்கிறேனே" என்று கூறிச் சமாளித்து விட்டேன். ஆனால், அவள் அவ்வளவு நுட்பமாக என்னைக் கவனித்து விஷயத்தை ஊகித்ததுபற்றி ரொம்ப ஆச்சரியப் பட்டேன்.

சற்றைக்கெல்லாம் நான் பண்ணையாரிடம் ஊமையன் கோட்டைக்குப் போவது பற்றிக் கேட்டேன். பண்ணையார் நான் ஏற்கெனவே ஓலைச் சுவடியில் பார்த்து வைத்திருந்த விஷயத்தைக் கூறினார். ஆனால், அவர் சொன்னவிதம் எனக்கு மிகவும் வியப்பை அளித்தது.

ஊமைத்துரைக் கோட்டையில் முத்துவீரப்பப் பாண்டியனுடைய ஆவி அலைந்துகொண்டு இருப்ப தாகவும், 'கொண்டு வா, சொக்கையாப் பாண்டியனை!' என்று அது கூச்சல் போடுவதாகவும் ஒரு வதந்தி இருப்பதாகக் கூறினார்.

முத்துவீரப்பனைக் காட்டிக் கொடுத்தது சொக்கையா என்ற பாளையக்காரன் என்பது எனக்கு முன்னமேயே தெரிந்திருந்தாலும் இந்த விஷயம் எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இப்படி அலைகிறது என்றால் நம்ப முடியுமா? அது

முதல் ஊமையன் கோட்டைக்குப் போக வேண்டுமென்ற ஆவல் இன்னும் தீவிரமாகிவிட்டது.

நான் கண்டுபிடித்திருந்த விஷயம் ஒன்றே என் உள்ளக்கிளர்ச்சிக்குப் போதுமானது. இதில் புதிதாக ஒரு விஷயத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆவலும் சேரவே அன்று முதல் எனக்குச் சரியான தூக்கமே இல்லாமல் போய்விட்டது. இந்துமதியைப் பற்றி நினைக்கக் கூடாது என்ற எண்ணமும் எங்கோ ஒளிந்துகொண்டு விட்டது. அன்றிரவு வெகுநேரம் யோசனை செய்த பிறகு இந்துவின் அன்னை சந்திரமணியிடம் மாத்திரம் காசிலிங்கம் என்னைக் காப்பாற்றிய விவரங்களைச் சொல்லிவிட வேண்டும் என்று தீர்மானித்தேன். அதற்கு ஒரு சந்தர்ப்பத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

தங்கபாண்டியனுடைய குடும்பத்திலிருந்த ஒரு சாபக் கேட்டைப் பற்றிக் குறிப்பிட்டேன் அல்லவா ? மறுபடியும் பாதாளக் கிடங்கைத் திறக்கச் சொல்லிப் பார்க்க எனக்குத் துணிவு வரவில்லை. அதனால் ஏதேனும் விபரீதம் ஏற்படலாம். சொக்கையாவும் தங்கபாண்டியனும் சண்டை போட்டுக்கொண்டால், ஜமீன் அதிகாரம் மாறுவதற்குப் பல தொல்லைகள் ஏற்படலாம். ஆகவே, சரித்திர ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட வேலைகளையெல்லாம் குமரன் கோயிலிலும், ஊமையன் கோட்டையிலும் பார்த்துக் கொள்ளலாம். தங்கபாண்டியனின் குடும்பத்தைப் பற்றிய விஷயங்களை ரொம்ப ஆராயவேண்டும். வாய்ப்புக் கிடைத்தால் பார்த்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்து விட்டேன்.

ஆகவே, ஊமையன் கோட்டைக்குப் போவதில் மிகவும் ஆர்வம் காட்டினேன். பண்ணையாரும் உற்சாகமாக இருந்தார். இந்துமதி தானும் வருவேன் என்று கூறினாள். எல்லோரும் ஒரு நாள் கட்டுச்சாத மூட்டைகளுடன்

போவதாகத் தீர்மானித்தோம். நான் குங்குமத்துறைக்குச் சென்ற வேளேயே சரியான வேளே இல்லே போலிருக்கிறது. அங்கே நான் ஆரம்பித்த ஒரு வேலேயும் ஒழுங்காக நடைபெறவில்லே. தங்கபாண்டியனுக்கும் உருப்படியாக ஒரு உதவியும் செய்ய முடியவில்லே. சரித்திர ஆராய்ச்சியும் நடுவில் நின்றுவிட்டது. ஓலேச்சுவடிகளும் கிடைக்கவில்லே. கடைசியில் குமரன் கோயிலுக்கும், கோட்டைக்கும் கூடப் போக முடியாமல் போய்விட்டது. இந்துவின் விஷயத்தைப் பற்றிதான் சொல்லவே வேண்டாம்.

நாங்கள் கோட்டைக்குப் போகத் தீர்மானித்திருந்த தினத்தன்று தங்கபாண்டியனிடமிருந்து காமிராவை வேறு வாங்கிக்கொண்டு கிளம்பினேன். நான் காமிராவைக் கேட்ட உடனேயே தங்கபாண்டியன் என்னே ஒருமாதிரி பார்த்துவிட்டுச் சிரித்தான். "கோட்டையைப் படம் பிடிக்கப் போகிருயா ? அல்லது......" என்று இழுத்தான்.

நான் உடனே, "ஏன் பாண்டியா! உனக்கு நான் அவர்களோடு பழகுவது பிடிக்கவில்லேயா ? ஏதேனும் தவருன எண்ணம் எனக்கு ஏற்பட்டிருக்கிறதா ?" என்று கேட்டேன்.

நான் கேட்ட கேள்வியைத் தங்கபாண்டியன் எதிர் பார்க்கவில்லே. சற்று நேரம் தலேயைக் குனிந்துகொண்டு பேசாமல் இருந்தான். பிறகு, "உண்மையாகச் சொல்லுகிறேன் துரை! நீ அவர்கள் வீட்டுக்குப் போவது எனக்கு ஒரே ஒரு காரணத்திஞல்தான் பிடிக்கவில்லே. என் தங்கையை உனக்குக் கொடுத்து உன்னே இந்த வீட்டு மாப்பிள்ளேயாகச் செய்து கொள்ள வேண்டுமென்பது என் ஆசை. நான் ஜாடையாக இரண்டொரு தடவைகள் கூறினேன். நீ புரிந்து கொள்ளாதது எனக்கு வருத்தமாக இருந்தது. உனக்கு இந்துமதியைப் பிடித்திருப்பது போல எனக்குத் தோன்றியது. அப்படி இருந்தால் என்

ஆசை நிராசையாகிவிடுமல்லவா ? அதைத் தவிர உன் மீது வேறு எந்த விதமான தவருன அபிப்பிராயமும் எனக்கு ஏற்படவில்லை. உனக்கு இந்துமதியைப் பிடித் திருப்பதும் பிடிக்காமலிருப்பதும் உன் விஷயம். அதில் குறுக்கிட நான் யார் ?" என்ருன்.

என் மனம் இதைக் கேட்டு உருகிப் போய்விட்டது. எனக்குப் பதிலே சொல்ல முடியவில்லை. என்னைப் போன்ற ஒன்றுமே இல்லாத வாலிபனுக்குத் தன் தங்கையைக் கொடுப்பதாகக் கூறும் தங்கபாண்டியனுடைய பிரியத்தைக் கண்டு வியப்பு ஏற்பட்டது. ஒரு பக்கம் அவன் இஷ்டப்படி என்னல் நடந்துகொள்ள முடியாதே என்று வருத்தம் ஏற்பட்டது. ஆனல், அவனுடைய மனத்தில் அந்த எண்ணம் வளருவதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்ற நினைப்பும் எழுந்தது.

ஆகவே, "தங்கபாண்டியா ! என் மனத்துக்குச் சரி என்று படாத விஷயத்தை நான் செய்யமாட்டேனென்று உனக்குத் தெரியும். நீ சொல்வது போல் என்னல் நடந்துகொள்ள முடியாவிட்டாலும் உனக்கு உன் தங்கை விஷயத்தில் எவ்வளவு பொறுப்பும் கவலையும் உண்டோ அவ்வளவு எனக்கும் உண்டு. அதை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள் !" என்றேன்.

"துரை ! உன் விருப்பத்துக்கு விரோதமாக ஒரு நாளும் உன்னை நான் வற்புறுத்த மாட்டேன். நீ இந்து மதியை மணந்து கொள்ள விரும்பினல் அதற்கும் நான் உற்சாகமாக ஏற்பாடு செய்வேன். என் மனத்தைப் புண் படுத்துவதாக நீ நினைத்துக்கொண்டு கஷ்டப்படப் போகிருயே என்றுதான் இதைச் சொல்லுகிறேன். என் தங்கையின் விஷயத்தில் எனக்கு எவ்வளவு கவலை உண்டோ, அவ்வளவு கவலை உன் விஷயத்திலும் உண்டு " என்ருன்.

நான் தங்கபாண்டியனை அப்படியே தழுவிக் கொண்டேன். "இவ்வளவு சுயநலமற்ற ஒரு நண்பன் எனக்குக் கிடைத்திருப்பதற்காக நான் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்" என்று கூறினேன்.

"சரி, சரி! மணி ஆறடித்து விட்டது. சீக்கிரம் போ. பிறகு மலைமேல் ஏறும்போது ரொம்ப வெய்யிலாகி விடும்" என்று சொல்லி என்னை அனுப்பினான் தங்கபாண்டியன்.

அவனுடன் மனம் விட்டுப் பேசியதனால் உண்டான மனத் தெளிவோடும், கனிந்த இதயத்துடனும் நான் இந்துமதியின் வீட்டை அடைந்தேன். அதுவரை எனக்கு இருந்த தயக்கமெல்லாம் அன்று போய்விட்டது. என் தந்தைக்கு நண்பரும், என்னை ஒரு நெருக்கடியான சம்பவத்திலிருந்து காப்பாற்றியவருமான உத்தமரின் பெயர் காசிலிங்கம் என்பதும், அவருடைய மகள் இந்துமதி என்றும் தெரிந்ததிலிருந்து எனக்கு ரொம்ப உற்சாகம் ஏற்பட்டிருந்தது. தங்கபாண்டியனிடமும் ஒருவாறு என் கருத்தை தெரிவித்த பிறகு இந்துமதியிடம் அன்போடு பழகுவதற்கு ஏதும் தடையிருந்ததாக எனக்குப் படவில்லை. இந்துவின் தந்தை அதை விரும்புவார் என்றே எனக்குப் பட்டது. இந்துவின் அன்னையிடம் மட்டும் என் கருத்தைத் தெரிவித்து அவருடைய சம்மதத்துடன் நான் அவளிடம் பழக வேண்டும். சீமை சென்று இரண்டே வருஷங்களில் படிப்பை முடித்துக்கொண்டு வந்து விட்டால் பிறகு மணம் செய்து கொண்டு இன்பமாக வாழ்க்கை நடத்தலாம். ஒரு மனிதனுக்கு அதைவிட வேறு என்ன வேண்டும்? என்றெல்லாம் பலவாறு மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டே சென்றேன்.

நான் வருவது தெரிந்து இந்துமதி உள்ளேயிருந்து ஓடி வந்தாள். காலை இளஞ் சூரியனின் கிரணங்கள் அவளுடைய மாம்பழ வர்ணப் பட்டுச் சேலையில் பட்டுப்

பிரதிபலித்து அவளுடைய முகத்தைப் பொன் முகமாகப் பிரகாசிக்கச் செய்தது. அவளுடைய முகத்தில் தோன்றிய புன்னகையைக் கண்டதும் என் உடல் சிலிர்த்தது. அந்தக் களங்கமற்ற புன்னகையில், அவளுடைய இதய ஊற்றிலிருந்து பொங்கிய அன்பு என்னும் அமுததாரை பெருகிப் பாய்ந்து ஓடியது. நான் சீமையிலிருந்த போதும், பின்னல் கல்கத்தாவில் வேலையிலிருந்தபோதும், கப்பலில் பிரயாணம் செய்தபோதும், யுத்தத்தில் அகப்பட்டுத் திண்டாடிய போதும் இந்துவின் உள்ளத்திலிருந்து பெருகிய அன்பு வெள்ளம் என்னை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்து கொண்டேதான் இருந்தது என்பதை என் உள்ளுணர்வு தெரிந்து கொண்டிருந்தது. இந்துவைக் கட்டாயம் காண்பேன் என்ற தைரியத்தை அந்த உள்ளுணர்வுதான் எனக்கு அளித்துக் கொண்டிருந்தது.

அன்று எங்களுக்குக் குமரன் கோயிலுக்கும், ஊமையன் கோட்டைக்கும் போக அதிருஷ்டமிருக்கவில்லை. நாங்கள் புறப்படத் தயாரானதும் இந்துவின் அன்னையின் குரல் கேட்டது. நாங்கள் உள்ளே சென்று பார்த்தபோது அவர் பொறுக்க முடியாத மார்பு வலியினுல் துடித்துக் கொண்டிருந்தார். நான் டாக்டரை அழைத்துக்கொண்டு ஓடி வந்தேன். டாக்டர் அவரைப் பரிசோதித்து விட்டு, " இதயம் மிகவும் பலஹீனமாக இருக்கிறது. இன்னும் ஒரு தடவை இந்தமாதிரி வலி வந்தால் பிழைக்க மாட்டார்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

இதை இந்துவிடமும், மந்திரமூர்த்திப் பண்ணையாரிடமும் தெரிவிக்கும் பொறுப்பு எனக்கு வந்து வாய்த்தது. அப்போதுதான் எவ்வளவு தூரம் நாங்கள் ஒன்ருகி விட்டோம் என்பது எனக்கே புரிந்தது.

இந்துவுக்குத் தைரியம் சொல்லிவிட்டு அன்றையப் பயணத்தையும் நான் நிறுத்தி விட்டேன். நான் எதிர்

பார்த்த வாய்ப்பு அன்று எனக்குக் கிடைத்தது. இந்துவின் கையால் செய்த சித்ரான்னங்களைச் சாப்பிட்ட பிறகு பண்ணையார் வெளியே போய்விட்டார். இந்து வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.



இந்துவின் அன்னையைத் தனியாகச் சந்தித்து எனது உள்ளக் கிடக்கையைத் தெரிவித்துவிட வேண்டும் என்று தீர்மானித்திருந்த படியால் அவரருகில் சென்று உட்கார்ந்தேன். அவரே அன்று வெகு நாட்களாக இறக்கி மூடிவைத்திருந்த தம் இதயத்தை என்னிடம் திறந்து காட்டத் தயாராக இருந்தாரென்று நான் நினைக்கவில்லை.

# 24. சந்திரமணியின் இதயம்

இந்துமதியின் அன்னை சந்திரமணியின் இதயம் பலஹீனமாக இருந்தது என்று டாக்டர் சொன்னாரே தவிர, எனக்கு ஒன்றும் அப்படித் தோன்றவில்லை. அவர் பட்டிருக்கும் மனோவேதனைகளைச் சாதாரண இதயத்தால் அவ்வளவு நாட்கள் தங்கியிருக்கவே முடியாது.

தான் பிறந்த நாள் முதல் பட்ட கஷ்டங்களையெல்லாம் சுருக்கமாகக் கூறி விட்டு, தான் நேசித்து மணந்து கொண்ட காசிலிங்கத்தைப்பற்றியும், தங்கள் வாழ்க்கைக்கு இடையூறாக வந்தவர்களைப் பற்றியும் சந்திரமணி எடுத்துக் கூறினார். அவர் இப்படி ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் பேசுகிறாரே என்று எனக்குக் கவலையாக இருந்தது.

"அம்மா! நீங்கள் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டு மென்று டாக்டர் சொல்லியிருக்கிறார். தயவு செய்து பேசாதீர்கள். இரண்டு நாட்கள் கழித்துக் கூறலாம்" என்றேன்.

"இல்லை, துரை! என்னைத் தடுக்காதே! நான் எத்தனையோ நாட்களாய் உள்ளத்தில் இவைகளையெல் லாம் ஒளித்து வைத்திருந்தேன். என் வளர்ப்புத் தந்தை மந்திரமூர்த்திப் பண்ணையார் என்னிடம் எவ்வளவோ அன்பைப் பொழிந்த போதிலும் எனக்கு அவரிடம் மனம் விட்டுப் பேசக் கூச்சமாக இருக்கிறது. இந்துமதியோ குழந்தை. எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? உன்னிடம் சொல்வதற்கும் இனிமேல் சந்தர்ப்பம் கிடைக்குமோ கிடைக்காதோ? எனக்கே சொல்ல வேண்டாமென்று தோன்றினாலும் தோன்றிவிடும். நான் என் கணவரோடு சேர்ந்து அனுபவித்த இன்ப துன்பங்களையும், அவரைப் பிரிந்து பட்ட வேதனையையும் யாரிடமாவது கூற வேண்டும்போல இருக்கிறது" என்றார்.

அதன் பிறகு அவரை நான் தடுக்கவில்லை. அவரும் இதயத்தை நன்றாகத் திறந்து பேசினார். அந்தமாதிரி யாரிடமும் நான் அந்தரங்கத்தைப் பகிர்ந்து கொண்டதே கிடையாதாகையால் உணர்ச்சி வசப்பட்டு அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தேன்.

கடைசியில் அவர், "என் கண்மணி இந்து தன் மண வாழ்க்கையில் பரிபூரண இன்பத்தை அடையவேண்டு மென்பதுதான் என்னுடைய ஒரே ஆசை!" என்றார். பிறகு அவரே தொடர்ந்து, "ஒன்று மட்டும் பதில் சொல்லு. என்னைப் பற்றியோ அல்லது நாங்கள் மணந்துகொண்ட விதத்தைப் பற்றியோ உனக்கு எவ்விதத் தப்பெண்ணமும் இல்லையே?" என்று கேட்டார்.

அவர் அப்படிக் கேட்டதை என்னால் தாங்க முடிய வில்லை. அவருடைய கணவரின் மீது எனக்கு

அலாதியான அன்பு ஏற்பட்டிருந்தது. ஆகவே, நான் தழுதழுத்த குரலில், "அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் அம்மா! இந்து என்னை மணந்துகொள்ள விரும்பினால் அதைவிட ஆனந்தத்தை அளிக்கும் விஷயம் எனக்கு ஒன்றுமே கிடையாது" என்றேன். நான் சொல்ல வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்த விஷயத்தைக் கூறிவிட்டதால் மனத்தில் அமைதி ஏற்பட்டது. அவரும் அதை ஆமோதிக்கிறார் என்று தெரிந்தபடியால் எனக்குச் சந்தோஷமாக இருந்தது.

பிறகு அவர் மந்திரமூர்த்திப் பண்ணையாரின் கஷ்டங்களையெல்லாம் கூறிவிட்டு, "எனக்கும் உடம்பு சரியில்லை. அப்பாவுக்கும் வயதாகிவிட்டது. அவருக்கும் ஏதாவது நேர்ந்துவிட்டால் குழந்தை இந்துமதியின் கதி என்னவாகும் என்பதை நினைப்பதற்கே என் மனம் நடுங்குகிறது. என்ன கஷ்டம் வந்தபோதிலும் அவளை நீ கைவிட்டுவிட மாட்டாயே?" என்று கேட்டார்.

"அம்மா! இந்துமதியை நான் என்ன கஷ்டம் வந்தாலும் கைவிட மாட்டேன். அவள் என்னை மணந்து கொள்ள விரும்பினால் ஆனந்தத்தோடு மணந்து கொள்வேன். இல்லையென்றால் அவளுடைய மனத்துக்கு உகந்தவனை மணம் முடித்து வைப்பேன். இது சத்தியம். நீங்களும் இருந்து நான் என் வார்த்தையைக் காப்பாற்றுவதைக் காண்பீர்கள். தைரியமாக இருங்கள்" என்று ஆவேசத்தோடு கூறினேன்.

அந்தக் கணம் முதல் நான் இந்துவோடு ஒன்றாகப் பிணைந்துவிட்டேன். அன்று முதல் நான் இந்துவுக்காகவே வாழ்ந்து வருகிறேன். பின்னால் ஏற்பட்ட எவ்வளவோ சோதனைகளைத் தாங்குவதற்கு எனக்கு அந்த வாக்குறுதிதான் பலம் அளித்து வந்தது. அந்த மாதரசியின் ஆத்மா எங்களுடனேயே இருந்து

எங்கள் இதயங்களின் பிணைப்பு விட்டுப் போகாமல் பாதுகாத்து வந்திருக்கிறது.

அதன் பிறகு நானும் மனம் திறந்து பேசினேன். என் பிறப்பு வளர்ப்பைப் பற்றியெல்லாம் அவரிடம் விவரமாகக் கூறினேன். என் அன்னையும் நானும் பட்ட துன்பங்களையெல்லாம் பரிவுடன் கேட்டார். என் அன்னை இறந்து போனதைக் கூறியபோது அவருடைய கண்களும் கலங்கின.

முக்கியமாக ஈசுவரமூர்த்தி என் தந்தையைச் சிறைக்கு அனுப்பியதைக் கூறியபோது அவர் திகைத்துப் போனார்.

"எத்தனை பேருடைய வாழ்க்கையைக் கெடுத்திருக்கிறான் அந்தப் படுபாவி? அவனால் நீ அனாதையாகும்படி நேர்ந்ததே. என்ன கொடுமை?" என்றார்.

நான் மெதுவாக என் சந்தேகத்தை அவரிடம் தெரிவித்தேன். திடீரென்று கூறினால் அவருக்கு மனஅதிர்ச்சி ஏற்படலாமென்று பல விஷயங்களைப் பற்றிப் பேசிவிட்டுப் பிறகு அதைக் கூறினேன். என் தந்தை சிறையிலிருந்த போது ஈசுவரமூர்த்தி என்னை அழைத்து வரச் சொன்னதையும், அதிலிருந்து நடந்த ரகளையைப் பற்றியும் அவரிடம் எடுத்துக் கூறினேன்.

"அம்மா! அன்று ஈசுவரமூர்த்தியிடம் சிக்கிக் கொண்டு திண்டாடியபோது ஒரு உத்தமர் வந்து என்னைக் காப்பாற்றினார். இல்லாவிட்டால் அன்று சாட்டை அடியால் என் உயிரே போயிருக்கும். அந்த உத்தமரை நான் இன்றுவரை என் குலதெய்வமாகப் போற்றி வருகிறேன்" என்றேன்.

"அப்படியா? அவர் யாரப்பா? எங்கே இருக்கிறார்? ஈசுவரமூர்த்திக்கு விரோதமாகக் காரியம் செய்ய இந்துவின் தந்தை ஒருவருக்குத்தான் துணிவு இருந்தது என்று

நான் நினைத்துக் கொண்டிருந்தேன். தங்கபாண்டியனின் தகப்பனுருக்கே அந்தத் தைரியம் இருக்கவில்லையே!" என்றார்.

"அவர் அன்று மாத்திரம் எனக்கு உதவி செய்ய வில்லை அம்மா! அதன் பிறகு என்னைச் சென்னைக்கு அனுப்பிப் படிக்க வைத்ததும் அவர்தான். பிறகு பல சமயம் பணம் அனுப்பி உதவியிருக்கிறார். என் தந்தைக்கும் அவருக்கும் நட்பு ஏற்பட்டதே ஒரு விசித்திரம்தான். இருவரும் சிறையில் நண்பர்களானார்களாம். இருவரு மாகத் தப்பி வரும் சமயத்தில் என் தந்தையைச் சுட்டு விட்டார்கள். அந்த உத்தமர் மாத்திரம் தப்பிவிட்டார். அதனால் என்னைக் காப்பாற்றுவதை அவர் தம்முடைய பொறுப்பாகத் தாமே ஏற்றுக் கொண்டார். அப்படிப்பட்ட வர்களை இந்த உலகத்தில் பார்க்கவே முடியாது!"

சந்திரமணியின் கண்களில் ஒரு பிரகாசம் ஏற் பட்டது. "சிறையிலா இருவரும் சந்தித்தார்கள் என்று சொன்னாய்? எந்தச் சிறையில்?" என்று வியப்புடன் கேட்டார்.

"அம்மா! நீங்கள் நினைப்பது உண்மைதான். அதையே தான் நானும் ஊகித்திருந்தேன். போட்டோ ஆல்பங் களைப் பார்க்க நான் அவ்வளவு ஆவலாக இருந்ததற்குக் காரணம் அதுதான். அவருடைய புகைப் படத்தைப் பார்த்ததும் எனக்குக் கொஞ்சநஞ்சமிருந்த சந்தேகமும் தீர்ந்து போய்விட்டது. என்னை வளர்த்து உருவாக்கிய உத்தமர் இந்துமதியின் தந்தையான காசிலிங்கம்தான்."

சந்திரமணி தன் கண்களை மூடிக்கொண்டு சற்று நேரம் பேசாமல் இருந்தார். அவருடைய முகத்தில் புன்னகை தவழ்ந்தது. மறுபடியும் அவர் தம் கண்களைத் திறந்தபோது கண்களின் ஓரங்களில் கண்ணீர் தேங்கி இருந்தது.

" அம்மா! நான் உங்களை மிகவும் சிரமப்படுத்தி விட்டேன். இன்று நான் உங்களிடம் இவ்வளவு பேசியிருக்கக் கூடாது " என்றேன்.

" இல்லை ரங்கா! உனக்குத் தெரியாது. நீ இப்போது கூறிய விஷயம் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியளிக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளவே உன்னால் முடியாது. அவர் என்னை விட்டுச் சென்ற பிறகு என்ன நடந்ததென்பதைத் தெரிந்துகொள்ள நான் எவ்வளவு ஆவலாக இருந்திருப்பேன். இப்போது கொஞ்சமாவது அவரைப் பற்றித் தெரிந்ததல்லவா? இதைவிட எனக்கு வேறெதுவும் இன்பம் அளிக்க முடியாது. இன்னும் சொல்லு ரங்கா. அவர் எப்படி இருந்தார்? என்னென்ன பேசினார் என்பதையெல்லாம் விவரமாகச் சொல்லேன் " என்று கேட்டார்.

வறண்ட பாலைவனத்தில் மழைத்துளிகள் விழும் போது, அதைக் காய்ந்த மணல் என்ன ஆவலாகப் பருகுமோ, அம்மாதிரி இருந்தது அவருடைய மனோநிலை. அந்த மழையினால் அவருடைய தாகம் தீரவாப் போகிறது?

ஆயினும் அவர் விடவில்லை. நானும் ஒன்று விடாமல் ஞாபகப்படுத்திக்கொண்டு சொன்னேன். அவர் முகமூடி அணிந்துகொண்டு முற்றத்தில் குதித்ததிலிருந்து எங்கள் வீட்டுக்கு வந்தது வரை எல்லாவற்றையும் கூறினேன். காசிலிங்கம் என்னிடம், 'எனக்கு ஒரு குழந்தை இருக்கிறாள். அவளை ஒரு வீரப் பெண்மணியாக வளர்க்க வேண்டுமென்பது என் ஆசை. ஆனால், அவளை என்னால் பார்க்கவே முடிவதில்லை!' என்று குறைப்பட்டுக் கொண்டதைக் கூறியபோது சந்திரமணியினுடைய கண்களில் தாரை தாரையாக நீர் பெருகி வழிந்தது.

" துரை! என் மனத்திலிருந்த ஒரு பெரும் சுமையை இன்று நீ நீக்கிவிட்டாய். அதற்கு நான் அளிக்கும் பரிசு

என் அருஞ்செல்வம் இந்துமதிதான். அவர் எங்களை அடியோடு மறந்துவிட்டாரோ என்ற சந்தேகம் எனக்குத் தோன்றித் தோன்றி என்னை வதைத்திருக்கிறது. நீ கூறுவதிலிருந்து அவர் மறக்கவே இல்லை என்பதும், அவருக்கும் எங்களைப் பிரிந்திருந்தது கஷ்டமாகத்தான் இருந்ததென்பதும் எனக்குத் தெரிந்துவிட்டது. இதனால் என் மனம் ரொம்ப அமைதி அடைந்திருக்கிறது. ஆனால், ஒரே ஒரு விஷயம் மட்டும் கூற விரும்புகிறேன்."

"என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள் அம்மா! என்னிடம் கூறத் தயங்க வேண்டியதே இல்லை."

"இந்த விஷயங்களை நீ இந்துவிடமும் பண்ணையாரிடமும் இப்போது சொல்ல வேண்டாம். அவர் முகமூடி அணிந்து வந்தாரென்பதை நீ கூறினால் பண்ணையார் அவர் ஏதோ கொள்ளைக் கூட்டத்தில் சேர்ந்துவிட்டார் என்று நினைப்பார். இந்துவுக்கும் அது மன வருத்தத்தை அளிக்கலாம். அது உண்மையாகவே இருந்துவிட்டால் பரவாயில்லை. நானே சொல்லி விடுவேன். ஆனால், அவர் அப்படிப்பட்டவர் இல்லை, துரை! நீயாவது நான் சொல்வதை நம்பு. அவர் வேறு ஏதோ காரணத்தால்தான் இப்படித் தலைமறைவாகத் திரியும்படி நேரிட்டிருக்கிறது. அவர் ஒருநாளும் கொள்ளையடிப்பது போன்ற விஷயங்களில் ஈடுபடவே மாட்டார். அவருடைய இதயம் எவ்வளவு விசாலமானதென்பது யாருக்கும் தெரியாது, துரை. பூமியில் நாம் நிற்கும்போது நமது கண்ணுக் கெட்டிய தூரம்வரைதான் பார்க்கிறோம். அதற்கு அப்பால் பூமி எவ்வளவு விசாலமானது என்று நாம் ஒவ்வொரு தடவையும் நினைத்துப் பார்ப்பதில்லை. இந்துவின் தந்தையின் உள்ளம் அவ்வளவு விசாசலமானது. அன்பு என்னும் ஒரே வஸ்துவால் ஆனது. நீ இதை ஒரு நாள் நிச்சயமாக உணர்ந்து கொள்வாய்" என்று கூறினார்.

"நான் கண்டிப்பாய் இதை யாரிடமும் சொல்லவில்லை அம்மா. இந்துவுக்குக்கூட அவசியம் நேர்ந்தால் பின்னால் சொல்லுகிறேன். இப்போது சொல்லவில்லை. நீங்கள் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். நான் சீமை சென்று திரும்பி வரும்வரையில் என்னுடைய இந்துவைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பை இப்போது நான் உங்களிடம் ஒப்படைக்கிறேன்" என்று சிரித்துக்கொண்டே கூறினேன்.

அவரும் சிரித்தார். அன்று முதல் சில நாட்கள் ஒரே இன்பமயமாக இருந்தன. இந்துவும் கூச்சத்தை விட்டுப் பழகினாள். என் தயக்கமும் நீங்கிவிட்டது. தங்க பாண்டியன் என்னைப் புரிந்துகொண்டு, சந்தோஷமாகவே இருந்தான். அந்த மாதிரி நான் எப்போதுமே அவ்வளவு சந்தோஷமாக இருந்ததில்லை.

நாங்கள் மறுபடியும் ஊமையன் கோட்டைக்குப் போவதென்று தீர்மானித்து ஏற்பாடுகள் செய்தோம். அன்று நான் வீட்டினுள் காலை எடுத்து வைத்தபோது இந்து அலறும் சத்தம் கேட்டது. ஓட்டமாக ஓடிச் சென்று பார்த்தேன். இந்து தன் அன்னையை மடியில் எடுத்துப் போட்டுக் கொண்டாள். உடனே அவர் தலை சாய்ந்தது. இந்துவின் அன்னை மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

# 25. மன மாற்றம்

சந்திரமணியின் பிரிவினால் மிகவும் கஷ்டப்பட்டவர் பண்ணையார் மந்திரமூர்த்திதான். அந்தப் பெரியவர் சந்திரமணியிடமும் இந்துமதியிடமும் வைத்திருந்த அன்புக்கு உதாரணமே கூற முடியாது. சுயநலமென்ற ரேகையைக்கூட அவருடைய கருத்தில் காண முடியாது.

சந்திரமணியின் பிரிவினால் திடீரென்று அவர் ரொம்ப வயதானவராகக் காணப்பட்டார். நான் தனிமையில் அவரைத் தேற்றினேன். அவருடைய துணை இந்துவுக்கு எவ்வளவு அவசியமென்றும், நான் சீமை சென்று திரும்பி வரும் வரையில் இந்துவைக் கவனித்துக்கொள்ளும் மகத்தான பொறுப்பு அவருக்கு இருப்பதால் உடம்பை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறினேன். அதன் பிறகு அவர் கொஞ்சம் மனம் தேறி வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தார்.

பின்னர் சில நாட்கள் விசேஷமாக ஒன்றும் நடக்கவில்லை சொக்கையாவின் ஆர்ப்பாட்டங்கள் ஓய்ந்து விட்டனபோல் தோன்றியது. எங்கள் வழிக்கே அவர் வரவில்லை. அவரைச் சில சமயங்களில் பார்க்கும்படி நேரிட்டபோதெல்லாம் கூடச் சாதாரணமாக இருந்தார். அவருடைய மனம் மாறிவிட்டதோ என்றுகூட நான் சந்தேகப்பட்டேன்.

ஒரு நாள் திடீரென்று தங்கபாண்டியன் ஒரு விஷயத்தைச் சொன்னான். "துரை! மாமா மாறிப் போய் விட்டார் என்று நினைத்தோமே. இரண்டு நாட்களுக்கு முன்னால் கிழக்குப் பக்கத்தில் இருந்த பத்து வேலி நிலத்தை விற்றுவிட்டாராம். இதை நாம் எதற்காகப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டும்? வக்கீலிடம் கலந்து கொண்டு வழக்குப் போட்டால் என்ன?" என்று படபடப்போடு கூறினான்.

"அவசரப்பட்டு எதையும் செய்யக் கூடாது, பாண்டியா. வழக்குப் போடுவதனால் நியாயம் உடனே கிடைத்துவிடுமென்பது நிச்சயம் இல்லை. அப்படியே வெற்றி கிடைத்தாலும் சொக்கையாவின் தீராத பகைக்கு நாம் ஆளாக நேரிடும். நமக்குப் பணத்தைவிட மனிதர்களுடைய நல்லெண்ணமே பெரிய செல்வம்."

" பெரிய தத்துவ ஞானி மாதிரி பேசுகிருயே? சொக்கையா மாமாவிடம் நல்லெண்ணத்தை எதிர்பார்க்கச் சொல்கிருயா ? நல்ல வேடிக்கை !"

" ஏன், அதில் வேடிக்கை என்ன இருக்கிறது? நீ வேண்டுமானுல் பார். சொக்கையா மாமா இனிமேல் நம்மிடம் சரியாக நடந்துகொள்வார். அன்றையச் சம்பவத்துக்குப் பிறகு இது வரையில் நம்மிடம் ஏதேனும் தகராறு செய்தாரா ? ஆகவே, அவர் தன் நிலையை உணர்ந்துகொண்டு விட்டாரென்றே நினைக்கிறேன். நம் கட்சியில்தான் நியாயம் இருக்கிறதென்று அவருக்குத் தெரியாதா ? உன்னிடம் விரோதித்துக் கொண்டால் அவருக்குக் கஷ்டம்தான் ஏற்படும். இந்த விஷயம் போனுல் போகிறதென்று விட்டுவிட்டால் மேலே நாம் செய்யவேண்டிய காரியங்களுக்கு அநுகூலமாக இருக்கும். இதில் நாம் மனக் கசப்பைத் தேடிக்கொண்டோமென்ருல் பின்னுல் ரொம்ப இடைஞ்சல்கள் ஏற்படும்."

" நானும் ஏதோ ஒரு கொதிப்பில் சொல்கிறேனே தவிர அவரிடம் எதிர்த்து நிற்க எனக்குத் துணிவு வராது, துரை! நீ இருக்கும்போது ரொம்பத் தைரியமாக இருக்கிறது. நீ இந்த வீட்டைவிட்டுத் தாண்டிப் போய்விட்டால் அதைரியம் வந்து சூழ்ந்துகொள்கிறது. நீ சீமை செல்வதற்கு முன்னுல் எல்லாவற்றையும் முடித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் சொக்கையா என்ன வேண்டுமானுலும் செய்து கொள்ளட்டும் என்று விட்டுவிட்டு நான் எங்கே யாவது போய்விடுவேன்."

" நீ இப்படிப் பேசுவது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை, பாண்டியா! நீ பொறுமையாக இருக்க வேண்டும் என்று சொல்கிறனே தவிர, அதைரியப்படச் சொல்லவில்லையே. ஆத்திரப்பட்டுக் காரியங்களைக் கெடுத்து விடுவது. இல்லையெனருல் ஓடிப் போய் விடுவது.

இதுதான் உன் சித்தாந்தமா ? உன்னுடைய நலத்துக்காக மாத்திரம்தான் நீ வாழ்கிருயா ? மாமாவினுல் கஷ்டப்படும் அத்தனை பேரையும் நீதான் விடுதலை செய்யவேண்டும். ஆனுல், அதற்குப் பொறுமையும் முன் யோசனையும் வேண்டும். எதற்கும் நம்முடைய வக்கீலைச் சீக்கிரம் வரச் சொல்லிக் கடிதம் எழுது. அவரைக் கலந்து கொள்ளலாம்" என்றேன்.

அன்று மாலை இந்துமதியைப் பார்த்தபோது அவள், சுசீலாதேவி புதுச்சேரி போகும் விஷயத்தைக் கூறினுள் அப்போதுதான் எனக்குச் சொக்கையா சிவப்புப் பங்களா வையும், பாதிரித் தோட்டத்தையும் வாங்கியிருக்கும் விஷயம் தெரிய வந்தது. அதைக் கேட்டதும் சொக்கையா இப்போது எதற்காக ஜமீன் நிலத்தை விற்றிருக்கிரு ரென்ற விஷயம் தெரிந்துவிட்டது. எனக்கே அது கொஞ்சம் அதிர்ச்சியாகத்தான் இருந்தது. ஒருவருடைய சொத்தை விற்றுத் தனக்குப் பகிரங்கமாக உபயோகித்துக் கொள்வதற்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் வேண்டும்? ஆயினும் உடனே ஒன்றும் செய்வதற்கு இயலாத நிலையில் நாங்கள் இருந்தோம்.

இதை நான் தங்கபாண்டியனிடம் கூறியபோது ரொம்ப ஆத்திரப்பட்டான். நான் வெகுநேரம் சமாதானப் படுத்தினேன்.

"உனக்கு அதிகாரங்கள் வந்துவிடுமென்று அவ ருக்குத் தெரிந்திருப்பதால்தான் அவர் இப்போது அவசர மாக இப்படி ஒரு காரியம் செய்திருக்கிருர். இதை நாம் பொறுத்துக்கொண்டிருக்க வேண்டியதுதான். இனிமேல் ஒன்றும் செய்ய முடியாதல்லவா ? அவர் நம்மிடம்கூட இனிமேல் இன்னும் சரியாக நடத்து கொள்வார் பார் மேலும் அவருக்கென்ன ? மனைவி மக்கள் இருக்கிருர் களா ? அவருடைய காலத்துக்குப் பிறகு எல்லாம்

உன்னைத்தானே சேரும். நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டியதில்லை " என்றேன்.

நான் எதிர்பார்த்தபடியே நடந்தது. சொக்கையா அதன் பிறகு என்னிடம்கூடப் பேச ஆரம்பித்தார். எங்களோடு சேர்ந்து சாப்பிட்டார். அதைக் கண்டு நானும் சந்தோஷப்பட்டேன்.

ஒரு நாள் திடீரென்று என் சீமைப் பயணத்தைப் பற்றியெல்லாம் அக்கறையுடன் விசாரித்தார். நானும் அதையெல்லாம் மகிழ்ச்சியுடன் சொன்னேன்.

" எனக்கும் சீமைக்கு வந்து பார்க்கவேண்டுமென்று ரொம்ப ஆசை " என்று கூறினார்.

" ஏன் நீங்கள் மனம் வைத்தால் உல்லாஸப் பிரயாணம் செய்யலாமே ?" என்றேன் நான்.

" எல்லாவற்றுக்கும் அதிர்ஷ்டம் வேண்டாமா ? தங்கபாண்டியனுடைய அப்பாகூட வெளிநாடுகளுக்குப் போகவேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால், அது நிறைவேறாமலேயே போய்விட்டது " என்றார்.

தங்கபாண்டியனுடைய முகம் சிவந்தது. எனக்கு அது வியப்பை அளித்தது. சொக்கையா ஒன்றும் தவறாகச் சொல்லவில்லையே என்று நினைத்தேன்.

பிறகு அதைப்பற்றி அவனைக் கேட்டபோது, " சொக்கையா மாமா ரொம்பப் பொல்லாதவர், துரை. அவர் நம்மிடம் சகஜமாக இருக்க இருக்க எனக்குக் கவலை தான் அதிகமாகிறது !" என்றான்.

அவனுடைய முகபாவம் அவன் எதையோ மழுப்புவது போலத் தோன்றியது. ஆனால், நான் அதற்குமேல் ஒன்றும் கேட்கவில்லை. தானாகச் சொல்லுவான் என்று விட்டு விட்டேன்.

ஒரு நாள் இந்துவின் வீட்டில் நான் இருந்தபோது ஒரு புதிய மனிதர் விஜயம் செய்தார். அய்யாக்குட்டி

என்ற பெயருள்ள ராஜாராம், மந்திரமூர்த்திப் பண்ணையாருக்கு உறவினரென்று தெரிந்து கொண்டேன். முதலில் அவரைப்பற்றி எனக்கு நல்ல எண்ணம் ஏற்படவில்லை. நாளடைவில் பழகிவிட்டார். சீமையைப் பற்றியும், மற்ற இடங்களைப் பற்றியும் அடிக்கடி பேசி ரொம்பப் 'போர'டித்தார். ஆனால், பின்னால் அவர் இந்துமதிக்குச் செய்திருக்கும் உதவிகளை நினைத்து நான் அதையெல்லாம் மறந்துவிட வேண்டும்.

அய்யாக்குட்டியின் வரவினால் நானும் இந்துமதியும் வீட்டில் நிம்மதியாகப் பேசுவதற்கு முடியாமல் போய் விட்டது. நான் கூடிய சீக்கிரம் சீமை சென்றுவிட வேண்டியிருக்குமாதலால் இந்துவோடு எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பினேன். அவளுக்கு என் விருப்பு வெறுப்புக்களையெல்லாம் கூறவேண்டும். அவளுடைய மனோபாவங்களையெல்லாம் புரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் பொங்கிக்கொண்டே இருந்தது.

ஆகவே, இந்துவைப் பாதிரித் தோட்டத்துக்கு வரச் சொல்லி வற்புறுத்துவேன். பாதிரித் தோட்டம்தான் இந்துவின் வீட்டுக்கு அருகில் இருந்தது. நாங்கள் இருவரும் நேரம் போவதே தெரியாமல் பேசிக்கொண்டிருப்போம். என்ன விஷயம் பேசினோம் என்பது நினைவே இல்லை. சில சமயங்களில் இந்துவின் மிருதுவான பட்டுப்போன்ற கரத்தை என் கையில் எடுத்துக் கொள்வேன். பிறகு பேசவே வராது. ஒரு வார்த்தை கூடப் பேசாமல் வெகுநேரம் உட்கார்ந்திருப்போம்.

ஒரு நாள் இந்துமதி, பாதிரித் தோட்டத்தில் நாங்கள் சந்தித்தபோது, சுசீலாதேவி தன்னைச் சொக்கையாவின் கண்களில் படாமல் ஜாக்கிரதையாக இருக்கச் சொன்னதாகக் கூறினாள். எனக்கு அது ஒரு பெரிய விஷயமாகத்

இந்துவுக்குப் பாரதியாரின் காதல் கீதங்களைப் பாடிக் காட்டும்போது எனக்கு அளவிலாத ஆனந்தம் உண் டாகும். அவள் கவிதைகளின் பொருளை உணரும்போது, வெட்கத்துடன் புன் முறுவல் தவழ, நிற்கும் காட்சி இப் போதுகூடக் கண் முன்னுல் நிற்கிறது.



பாதிரித் தோட்டத்தில் அன்று நான், "இந்து! எனக்காக நீ இன்னும் இரண் டரை வருஷங்கள் என்ன நேர்ந்தாலும் சமாளித்துக் கொண்டு காத்திருப்பாயா ?" என்று கேட்டேன். மந்திரமூர்த்திப் பண்ணையார் தமது பொறுப்பைச் சீக்கிரம் நிறைவேற்றிவிட வேண்டும் என்று அவளுக்கு விவாகம் செய்துவிட விரும்பலாமல்லவா ? அதை நினைத்துக் கொண்டுதான் கேட்டேன்.

இந்துவின் இதழ்கள் துடித்தன. விசாலமான கண் களினுல் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். சிவந்த மாதுளை மொட்டு மடலவிழ்வதுபோல அவளுடைய அதரங்கள் மலர்ந்தன. மாதுளை முத்துக்கள் பொல பொலவென்று உதிர்வதுபோல, "யுகம் யுகமாய் உங்களுக்காகக் காத் திருப்பேன் !" என்ருள்.

இன்றுவரை பாவம், எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளித்துக்கொண்டு, எனக்காகக் காத்திருக்கிருள். சொல்ல முடியாத மனோவேதனைகள், பொறுக்க முடியாத வறுமை, வக்கீல் பத்மநாபனின் கொடுமை இவைகளுக் கெல்லாம் ஈடு கொடுத்திருக்கிருள். இதையெல்லாம் அறி யாமல் நான் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தேன். அதை நினைத்தாலே எனக்கு அவமானமாக இருக்கிறது. 'இந்து ஒருவேளை வேறு யாரையாவது மணந்துகொண்டிருப் பாளோ ?' என்ற எண்ணம் எழும்போதெல்லாம் என் நெஞ்சம் எத்தனை வேதனைப்பட்டிருக்கிறது. இதயத்தை

நெருப்பில் போட்டுவிட்ட மாதிரி இருக்கும். ஆனால், உடனே இந்துவின் குளிர்ந்த மதிமுகம் முன்னால்தோன்றி, ' நான் யுகம் யுகமாய்க் காத்திருப்பேன் என்று கூறினேனே. மறந்துவிட்டீர்களா ?' என்று கேட்பது போலிருக்கும். என் வேதனையும் தணிந்துவிடும்.



நானும் இந்துவும் இதயம் கலந்து நெருங்கிப் பழக ஆரம்பித்தவுடனேயே பிரியும்படியும் நேரிட்டுவிட்டது. திடீரென்று ஒரு நாள் சீமை செல்ல உத்தரவு வந்துவிட்டது என்று தலைமைப் பேராசிரியரிடமிருந்து தந்தி வந்தது.

தந்தியைப் பார்த்ததும் தங்கபாண்டியன் கலங்கிப் போனான். " துரை ! உன்னை நம்பியிருந்தேனே ? ஒரு ஏற்பாடும் செய்யவில்லையே. வக்கீல் நேற்று வந்து விட்டார் என்று சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தேன். நீ போய்விட்டால் நான் என்ன செய்வேன் ?" என்று அழ மாட்டாத குறையாக அவன் கேட்டான்.

" நீ கவலைப்படாதே, பாண்டியா ! இன்றே வக்கீலைச் சந்திப்போம். நான் போவதற்குள் என்னென்ன செய்ய முடியுமோ எல்லாவற்றையும் செய்து விடுவோம். இன்னும் நான்கு நாட்கள் இருக்கிறதே " என்றேன். சொன்னபடியே முழு மனத்துடன் காரியத்திலும் ஈடுபட்டேன்.

எனக்குத் தந்தி வந்த விஷயம் தெரிந்ததுமே சொக்கையா மாமா என்னிடம், " உனக்கு நான் ஒரு உபசார விருந்து கொடுக்க வேண்டியதுதான் " என்று கூறினார்.

நானும், " விருந்து சாப்பிட எனக்கு ஒரு ஆக்ஷேபணையும் கிடையாது " என்று பதிலளித்தேன்.

இந்துவுக்கு விஷயம் தெரிந்ததும் ஒரே சோக மயமாகக் காட்சி தந்தாள். அவள் முகம் பனிப் படலத்தால் மறைத்ததுபோல் பொலிவிழந்து காணப் பட்டது. இன்னொரு முறை அவளுக்கு நான் என்றென்றும் மறக்கமாட்டேனென்று வாக்குறுதி கொடுத்தேன்.

# 26. பம்பாய் நகரம்

இந்துவிடம் நான் குங்குமத்துறையை விட்டுப் புறப்பட இரண்டு நாட்கள் இருக்கும்போது விடை பெற்றுக்கொண்டு விட்டேன். அதன் பிறகு இரண்டு நாட்களும் சந்திக்க முடியவில்லை. தங்கபாண்டியனும் நானும் திருநந்திபுரத்தில் வக்கீல் வீட்டிலேயே இருந்து விட்டோம். இரண்டொரு தடவை தங்கபாண்டியன் சில முக்கியமான தஸ்தாவேஜுகளுக்காக குங்குமத்துறைக்குப் போய்விட்டு வந்தபோதுகூட நான் வக்கீல் வீட்டிலேயே இருந்து சட்ட நுணுக்கமான பல விஷயங்களை அலசி ஆராய்ந்து கொண்டிருந்தேன்.

வக்கீலுடன் கலந்து பேசிய பிறகுதான் தங்கபாண்டிய னுடைய தந்தை இறந்துபோன பிறகு எவ்வளவு மோசடிகள் நடந்திருக்கக் கூடுமென்று தெரிய வந்தது. ஆனால், எதையும் நிரூபிக்கவே முடியாத நிலையில் இருந்தது. இரண்டாயிரம், மூவாயிரம் பெறுமானமுள்ள நன்செய் நிலங்களையெல்லாம் ஆயிரம், ஆயிரத்தைந்நூறு ரூபாய்க்கு விற்றதாகக் கணக்கு இருந்தது. அது சுத்தப் பொய்யாக இருக்கவேண்டுமென்று எங்களுக்குத் தெரிந்த போதிலும், அது விஷயமாக ஒன்றும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியாமல் இருந்தது.

எத்தனையோ விதமான தஸ்தாவேஜுகளைப் படித்து அர்த்தம் செய்துகொள்ள வேண்டியிருந்தது. ஜமீன்

நிலங்களில் ஏறக்குறைய முக்கால் பாகம் விற்கப்பட்டிருந்ததைக் கண்டதும் எனக்கே ரத்தம் கொதித்தது. தங்கபாண்டியனைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

இத்தனைக்கும் பிறகு ஜமீன் காரியஸ்தரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, மீதியிருந்த நிலங்களின் மீது கடன் வாங்கப்பட்டிருக்கிறது என்ற விஷயமும் தெரிய வந்தது. அதைக் கேட்டதும் எனக்கே அதிர்ச்சியாக இருந்தது.

வக்கீல் கூறியபடி ஜமீன் அதிகாரம் கைக்குவருவதற்கு ஏற்பாடுகள் முதலில் செய்துகொள்வதென்றும், கடன்களை அடைக்கத் தங்கபாண்டியன் பொறுப்பாளி இல்லையென்று பின்னல் சட்டபூர்வமாக வழக்குப் போட்டுத் தீர்மானித்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தோம். தங்கபாண்டியனைப் பொறுமையாக இருக்கும்படி கூறினேன். சொக்கையாவும் ஒன்றும் தகராறு செய்யவில்லை. நாங்கள் நேரில் அவரிடம் இவைகளைப் பற்றிப் பேசவில்லை. வக்கீலை விட்டே பேசும்படி சொன்னோம்.

வக்கீலிடம் அவர், "தங்கபாண்டியனுக்கு வயது வந்து விட்டது. ஆகவே எல்லாம் அவனைச் சேரவேண்டியது தானே. நானே எல்லா ஏற்பாடுகளையும் செய்வதாகத் தான் இருந்தேன். அவனும் தன்னுடைய பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ள வேண்டியது நியாயம்தானே" என்று கூறினராம்.

தங்கபாண்டியன் இதைக் கேட்டதும் சீறினன். "சொல்லமாட்டாரா பின்னே ? இவர் கடன் வாங்கிச் செலவழித்தார். நான் அதை அடைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுதானே ஆகவேண்டும் ?" என்ருன்.

நான் அங்கே இருந்தபோது எல்லா விஷயங்களையும் யோசித்து என்னென்ன செய்ய வேண்டுமென்று நாங்கள் முடிவு செய்தோமே தவிர, காரியம் உடனே நடைபெற

வில்லை. அதற்குள் பிரின்ஸிபால் இன்னொரு தந்தியடித்து விட்டார். எல்லாம் சரியாக நடக்குமென்று எல்லாருக்கும் தோன்றியபடியால் நான் திருநந்திபுரத்திலிருந்தபடியே ரயிலேறிப் புறப்பட்டு விட்டேன்.

நான் ரயில்வே ஸ்டேஷனில் உட்கார்ந்திருந்தபோது இந்துமதியைப் பார்க்காமல் போவது பெரிய குற்றமென்று பட்டது. ஆனால் என் பெட்டி படுக்கைகளைக் கொண்டு வரக் குங்குமத்துறைக்குச் சென்றிருந்த தங்கபாண்டியன் வந்து சேரவில்லை. கார் இருந்திருந்தால் போய் விட்டுக் கூட வந்திருப்பேன். ரயில் புறப்பட இரண்டு நிமிடம் இருக்கும்போதுதான் தங்கபாண்டியன் வந்தான். அவன் வந்திருக்காவிட்டாலும் நான் ரயிலேறிப் போயிருப்பேன். இரண்டு நாட்களில் அவனும் சென்னை வருவதாகக் கூறியிருந்தான்.

ரயிலில் போய்க் கொண்டிருக்கும் போதெல்லாம் இந்துவின் பீதி நிறைந்த முகம் என் கண் முன்னால் தோன்றி என்னை வதைத்தது. எதையோ கண்டு அவள் பயப்படுவது போலவும், என்னால் அவளுக்காக ஒன்றும் செய்ய முடியாமலிருப்பது போலவும் ஒரு எண்ணம் தோன்றி என்னைச் சித்திரவதை செய்தது. படித்தவனான நான்கூட அந்தமாதிரி எண்ணங்களுக்கு மனத்தில் கொஞ்சமும் இடம்கொடுக்கக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டு அதை மறந்துவிட முயற்சி செய்தேன்.

நான் சென்னை சென்ற மறு நாள் மாலை ஒரு தந்தி வந்தது. 'சொக்கையா கொலை செய்யப்பட்டு இறந்து போனார்' என்று தங்கபாண்டியன் அடித்திருந்தான். எனக்கு அப்படியே புத்தி ஸ்தம்பித்து விட்டது என்று சொல்ல வேண்டும். தங்கபாண்டியனுடைய நிலையை எண்ணியபோது ரொம்பக் கவலையாக இருந்தது. அவர் இறந்து போனபடியால் அவர் பெயரிலிருந்த சொத்துக்க

ளெல்லாம் சட்டபூர்வமாகத் தங்கபாண்டியனைச் சேரும். ஆகவே அவனே இதைத் தூண்டியிருக்கலாமென்று சந்தேகம் எழ இடமிருந்தது.

தங்கபாண்டியன் என்னை வழியனுப்புவதற்குப் பம்பாய் வரையில் வருவதாக இருந்தான். இதனால் அவன் வரவில்லை. ஆனால் சென்னைக்கு வந்து என்னுடன் இரண்டு நாட்கள் இருந்து என்னை ரயிலேற்றி விட்டுத்தான் திரும்பிப் போனான். எத்தனையோ கஷ்டங்களுக்கு இடையில் அவன் வந்ததை நினைத்து நான் பூரித்துப் போனேன். அவனை ஜாக்கிரதையாக இருக்கும்படி கூறினேன். நல்ல வேளையாக வக்கீல் நாங்கள் இருவரும் அன்று திருநந்திபுரத்திலேயே இருந்ததாகச் சாட்சி சொல்லுவார் என்ற தைரியம் எங்கள் இருவருக்கும் இருந்தது.

மற்றப்படி சென்னையில் எங்களுக்குக் கோலாகலமாகப் பொழுது போயிற்று. அருமை நண்பர்கள் பலரும் சூழ்ந்து கொண்டு உபசரித்தார்கள். என்னென்ன சாமான்கள் பிரயாணத்துக்கு வேண்டுமோ அவற்றையெல்லாம் தேடித் தேடி எடுத்து வந்தார்கள்.

கோதண்டராமன் அவர்கள் எனக்குச் செய்ததை என்னால் மறக்கவே முடியாது. குளிர் காலத்துக்கு என்றும், கோடை காலத்துக்கு என்றும் இரண்டு இரண்டு உடுப்புகள் தைத்துக் கொடுத்தார். அதன் மதிப்பை நான் அப்போது அறிந்திருக்கவில்லை. பின்னால் சீமையில் நான் உடை தைக்க நேர்ந்தபோதுதான், கோதண்டராமன் அவர்கள் எவ்வளவு செலவழித்திருக்க வேண்டும் என்று எனக்குத் தெரிய வந்தது. அப்போது அவரிடமிருந்த நன்றி பல மடங்காகப் பெருகியது.

இத்தனைக்கும் இடையில் இந்துவுக்குக் கடிதம் எழுதினேன். அவளிடமிருந்து பதில் வரும் என்று எதிர்

பார்த்துக் காத்திருந்தேன். புறப்படும் தினம் வரையில் பதில் வரவில்லை. ரொம்ப ஏமாற்றமாக இருந்தது. ஒரு வேளை தபாலில் தவறிப் போயிருக்கலாம் என்று எண்ணிக் கொண்டு புறப்பட்டேன். பம்பாய் சேர்ந்ததும் இன்னொரு கடிதம் எழுதினேன். பம்பாயில் இருந்த ஒரு வாரம் இந்துவிடமிருந்து கடிதம் வரும் வரும் என்று எதிர்பார்த்து ஏமாந்தேன். பம்பாயின் அமர்க்களத்தில்கூட என்னால் அதை மறக்க முடியவில்லை.

என்னுடன் ஒரு வங்காள மாணவனும், இன்னொரு தமிழ் மாணவனும் வந்தார்கள். எங்களோடு வருவதாக இருந்த மற்ற இரண்டு மாணவர்கள் ஏதோ ஒரு காரணத்தால் அடுத்த கப்பலில் புறப்படுவதாகச் செய்தி வந்தது. என்னோடு வந்த தமிழ் நாட்டு மாணவன் ரகு ரொம்ப வேடிக்கையாகப் பேசிக்கொண்டும், சிரித்துக்கொண்டும் இருந்தான். ஆனால், வங்காளி மாணவனை அரவிந்த் நேர்விரோதமான பிரகிருதி. வாயைத் திறப்பதே இல்லை. பேசினாலும் இரண்டொரு வார்த்தைகள் நிறுத்திப் பேசுவான். நான் ரகுவோடு கலகலப்பாகப் பேசிக் கொண்டும், அரவிந்தோடு அளவாகப் பேசிக்கொண்டும் சமாளித்துக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாக எனக்கு எப்படிப்பட்டவர்களோடும் பழகுவதற்கு என் வாழ்க்கை நன்றாகப் பழக்கமளித்திருந்து.

பம்பாயில் நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலைப் பார்த்தவுடனேயே நான் மலைத்துப் போய்விட்டேன். ரகுவோடு அவன் தந்தை வந்திருந்தார். அவனுக்கு யாரோ உறவினர் இருந்தபடியால் அவன் அவர்கள் வீட்டுக்குச் சென்றுவிட்டான். நானும் அரவிந்தும்தான் ஹோட்டலில் ஒரே அறையில் இருந்தோம். நான் அவ்வளவு பெரிய ஹோட்டலை அதுவரை பார்த்ததே இல்லை. அந்த ஆடம்பரங்களைப் பார்த்து வியந்த போதிலும், அவைகள் ரொம்ப அனுவசியம் என்று

தோன்றிக் கொண்டிருந்தது. கப்பல் புறப்பட ஏழு நாட்கள் இருந்தபடியால் பம்பாய் நகரத்தைச் சுற்றிப் பார்க்க நேரம் இருந்தது. ரகு, அரவிந்த், நான் மூவருமாக எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்தோம். பம்பாய் நகரமே இப்படி இருந்தால் லண்டன் மாநகரம் எப்படி இருக்கும் என்று நான் வியந்தேன். 'இவைகளை இந்து பார்த்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்? சீமையிலிருந்து திரும்பி வந்ததும் இந்துவுக்கு மாலையிட்ட உடனே, 'ஹனிமூ'னுக்கு இங்கே அழைத்து வரவேண்டும். எலிபெண்டா குகைகளுக்கு அழைத்துச் செல்ல வேண்டும். 'மலபார் ஹில்' தோட்டதில் உட்கார்ந்து நேரம் போவது தெரியாமல் இந்துவின் மதிமுகத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கவேண்டும். 'மரீன் டிரைவில்' ஒரே மாதிரியான பொம்மைக் கொலு வைத்தமாதிரி இருக்கும் வீடுகளைக் காட்டவேண்டும். சௌபாத்திக் கடற்கரைக்குக் காற்று வாங்க அழைத்துச் செல்ல வேண்டும்.'—இப்படியெல்லாம் பலவிதமான ஆசைக் கோட்டைகள் கட்டினேன்.

பம்பாய் நகரம் சேர்ந்தது முதல் என் இதயம் வேகமாகவே அடித்துக் கொண்டிருந்தது. ஒரு கணம்கூட சும்மாயிருக்க முடியவில்லை. ஒரே பரபரப்பாக இருந்தது. இரவில் தூக்கம் வரவில்லை. கடல் கடந்து தூர தேசத்துக்குச் செல்லப் போகிறோம் என்று ஒரு மகிழ்ச்சி. 'நன்றாகப் படித்துத் தேற வேண்டுமே, தேறாவிட்டால் வாழ்க்கையே குட்டிச் சுவராகிவிடுமே' என்ற கவலை எல்லாம் என் நெஞ்சை அரித்துக்கொண்டே இருந்தது. என்ன நேருமோ, எப்படிப்பட்டவர்களுடனெல்லாம் பழகச் சந்தர்ப்பம் கிடைக்குமோ என்றெல்லாம் அலை அலையாக நெஞ்சின் அடிவாரத்திலிருந்து எண்ணங்கள் எழுந்து எழுந்து வந்துகொண்டே இருந்தன.

நான் தன்னந் தனியாக எங்கேயோ செல்வதைக் குறித்து நானே கவலைப்பட்டுக் கொள்ளும்படி இருப்பது

வேறு சில சமயம் வேதனையாக இருந்தது. ரகுவின் தந்தை அவனை 'அப்படி இரு! இப்படி இரு' என்று ஆயிரந் தடவைகள் கூறியதும், அவர் பட்ட கவலையும் என் வேதனையை இன்னும் மிகைப்படுத்தின. ஆனால் எனக்காக இந்துமதி கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள். நான் திரும்பும் வரையில் அவள் கவலைப்பட்டுக் கொண்டே தான் இருப்பாள் என்று தோன்றியதும் அந்த வேதனை சிறிது குறைந்தது.

எனக்கும் நிறையச் செல்வம் இருந்ததானால் இந்துவை மணந்துகொண்டு, அவளையும் அழைத்துக் கொண்டு போகலாமே என்று ஒரு சமயம் தோன்றிற்று. கற்பனை உலகில் வெகு நேரம் சஞ்சரிக்க என் மனத்துக்கு நான் ரொம்ப இடம் கொடுப்பதில்லை. அதனால் அந்த எண்ணங்கள் ஓடி ஒளிந்துகொண்டன.

ஆனால், கப்பலில் ஏறி 'டெக்கில்' நின்றுகொண்டிருந்தபோது, சங்கு ஊதிக் கப்பல் புறப்பட்டபோது என் அங்கங்களெல்லாம் பதறத் தொடங்கிவிட்டன. கப்பலிலிருந்து குதித்து இந்துமதியிடம் போய்விட வேண்டும் என்ற ஆவேசம் எழுந்தது. இரத்தத்தில் ஒவ்வொரு துளியும், ' இந்துவை விட்டுப் போகக் கூடாது ' என்று கதறியது. என்னுடைய உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும், 'இந்து ! இந்து !! இந்து !!!' என்று அலறியது.

# 27. கப்பல் பயணம்

இரண்டு மூன்று நாட்கள்வரை என் மனம் கலங்கிப் போய் இருந்தது. கடல் பிரயாணம் எனக்குப் புத்தம் புதிய அனுபவமானாலும் என்னால் அதை அனுபவிக்கவே முடியவில்லை. இந்துமதியின் பீதி நிறைந்த முகம் என்னை வட்டமிட்டுக்கொண்டே இருந்தது. ஏதோ தவறு செய்து

விட்டது போன்ற உணர்ச்சி என்னைப் பற்றிக்கொண்டது. இரவில் என் படுக்கையில் படுத்ததும் நினைவுகள் குமுறிக் கொண்டு எழும். கண்களில் நீர் கசியும். உள்ளத்தில் கல்லை வைத்து விட்டது போலிருக்கும். வேதனை பொறுக்க முடியாமல் நான் புரண்டு கொண்டே இருப்பேன்.



கப்பல் மேல் தளத்தில் உட்கார்ந்து கொண்டு இந்துமதியுடன் கழித்த ஒவ்வொரு நாளையும் மனக்கண் முன்னால் கொண்டு வந்து திரும்ப அனுபவித்துக்கொண்டு இருந்தேன்.

பம்பாயில் நடந்த விஷயங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன. பேராசிரியர் கோதண்டராமனின் அன்பும், தலைமைப் பேராசிரியருக்கு என்னிடமிருந்த நம்பிக்கையும் சிரத்தையும் ஞாபகத்துக்கு வந்தன. நண்பர்கள் எல்லாம் சூழ்ந்து கொண்டு பிரிவுபசாரம் கூறியது நினைவு வந்தது.

பாஸ் போர்ட்டுக்காக அலைந்தது, புதிய துணிமணிகள் தைத்தது இப்படி விதம் விதமான எண்ணங்கள் அலையலையாக எழும்பி வந்து உள்ளத்தில் மோதிக்கொண்டிருந்தன.

அன்னை சந்திரமணி திடீரென்று இறந்து போனது நினைக்கு வந்து உள்ளத்தைக் கனக்கச் செய்தது.

அதே சமயத்தில் வெகு நாட்களாக நான் ஆசைப் பட்டுக் கொண்டிருந்த கனவு நிறைவேறுவதைக் குறித்து ஆனந்தமும் உண்டாயிற்று. அந்த ஆசையை ஊட்டிய என் அன்னை இருந்து பார்க்கவில்லையே என்று துயரமும் உண்டாயிற்று.

கப்பலின் மேல் தளத்தில் உட்கார்ந்துகொண்டு நாலா பக்கமும் தூய்மையான நீல நிறமுடைய வானத்தையும் கடலையும் பார்க்கும்போது உண்டாகும் பரிசுத்தமான

உணர்ச்சிக்கு உதாரணமே கூற முடியாது. எங்கும் நிறைந்த இறைவனை நீல வண்ணமுடையவராக உருவகப் படுத்துவதிலுள்ள பெரிய உண்மை அப்போது தெரியும்.

எஸ். எஸ். விக்டோரியா என் எண்ணங்கள் ஒன்றையும் தெரிந்து கொள்ளாமலேயே, சமுத்திர ஜலத்தைக் கிழித்துக்கொண்டு வேகமாகச் சென்றுகொண்டிருந்தது.

கப்பலில் எனக்காகக் கொடுக்கப்பட்டிருந்த அறையில், மூன்று பேர் இருந்தோம். வங்காளி நண்பர் அரவிந்தும், இன்னொரு ஆங்கிலோ இந்தியரும் என்னோடு இருந்தார்கள். ரகு வேறு அறையில் இருந்தன். ரகுவோடு இன்னும் இரண்டு இந்தியர்களும் இருந்தனர். அவர்களில் ஒருவர் பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்தவர். மற்றவர் பம்பாயிலிருந்து வருபவர். என் வாழ்க்கையில் முதன் முறையாக நான் இத்தனை விதமான மனிதர்களுடன் பழக நேரிட்டது. நமது தேசத்து மனிதர்களையே நாம் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறோமே என்று அவமானமாக வேறு இருந்தது.

அதைத் தவிர, கப்பலில் ஆங்கிலேயரும், பிரஞ்சுக் காரர்களும், போர்த்துகீசியரும் 'இருந்தனர். அரேபியா தேசத்தைச் சேர்ந்தவர் ஒருவரும் இருந்தார். அவர் போகும்போதும், வரும்போதும் எல்லோரும் அவரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவருடைய உடை அவ்வளவு விநோதமாக இருந்தது.

பம்பாய்த் துறைமுகத்தில் கப்பல் புறப்பட்ட தினத்தன்று நடந்ததெல்லாம் மறுபடியும் நினைவுக்கு வந்தது. ரகுவின் தந்தை கண்ணீர் விட்டு அழுதார். அரவிந்தினுடைய சகோதரி விம்மினாள். மற்றவர்கள் விடை கொடுப்பதும் விடை பெறுவதுமாக இருந்தார்கள். கப்பல் புறப்பட்டதும் துறைமுகத்தில் நின்றிருந்தவர்கள்

எல்லாரும் கைக்குட்டைகளை வீசினார்கள். கப்பலில் இருந்தவர்களும் வீசினார்கள். நானும் என்னுடைய கைக்குட்டையை எடுத்தேன். உடனே எனக்குப் பிரியா விடை கொடுக்க யாரும் வரவில்லை என்பது நினைவுக்கு வந்தது. அதுவரையில் உற்சாகமாக இருந்த எனக்கு ஏதோ தொண்டையை அடைத்தது. இந்துவின் நினைவு என் இதயம் முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டது. உடனே இந்துவிடம் ஓடிச் சென்றுவிட வேண்டும் என்று நெஞ்சம் துடித்தது.

இந்துவின் ஞாபகம் வந்தபோது கூடத் தொண்டையை அடைத்தது. இந்துவுக்கு மூன்று கடிதங்கள் எழுதினேன். எதற்கும் பதில் இல்லை. நான் பம்பாயிலிருந்து புறப்பட்ட தினத்தன்று தங்கபாண்டியனிடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது. அதில் பண்ணையாரையும், இந்துமதியையும் போய்ப் பார்த்ததாகவும், இந்துவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லாமலிருந்து இப்போது நன்றாகத் தேவலை என்றும் எழுதியிருந்தான். அவனுடைய சமாதானம் எனக்குப் போதவே இல்லை. இந்துவால் எழுத முடியாவிட்டால் பண்ணையாராவது விவரமாக எழுதியிருக்கக் கூடாதா என்று வருத்தமாக இருந்தது.

ஒருவேளை இந்துமதிக்கு நோய் அதிகமாக இருக்கிறதோ, என்னவோ? எனக்குத் தெரிவிக்கக் கூடாதென்று தங்கபாண்டியன் இப்படி எழுதியிருப்பானோ? என்றெல்லாம் கவலையாக இருந்தது. இந்த வேதனையினால் எனக்கு ரொம்ப இன்பமளித்திருக்க வேண்டிய பிரயாணம் உற்சாகமே இல்லாமலிருந்தது. படிப்பதற்குக்கூட ஓடவில்லை. இந்துவைப் பற்றிய மனோராஜ்யங்களிலேயே பொழுதைக் கழித்தேன். அவளைப் பற்றி எண்ணிக்கொண்டே இருக்கும்போது நேரம் போவதே தெரியாது. திடீரென்று நான் இருக்கும்

இடமும் சீமை செல்வதும் நினைவுக்கு வரும்போது தலையை ஒரேயடியாகக் கனப்பது போலிருக்கும்.

கப்பலின் ஓரத்தில் நின்று, கப்பல் ஜலத்தைக் கிழித்துக்கொண்டு போகும் அற்புதத்தைப் பார்த்துக் கொண்டே மனோராஜ்யங்களில் ஆழ்ந்திருந்தேன். தண்ணீர் சுழன்று, சுழன்று பொங்குவதையும், கருமையான நீரில் கோடிக்கணக்கான வெண் முத்துக்கள் சொரிவதுபோல நீர்த்திவலைகள் விழுந்து மறைவதையும் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்தக் காட்சி என் உடலைச் சிலிர்க்கச் செய்தது. அந்த அழகிய காட்சி எனக்கு இந்து கலகலவென்ற இனிமையான ஒலியுடன் சிரிப்பதை நினைவூட்டியது. பொங்கிவரும் நீரிலிருந்து இந்து சிரித்துக்கொண்டே எழும்பி வருவது போன்ற பிரமை ஒரு கணம் ஏற்பட்டது.

*" நெரித்தத் திரைகடலில் நின்முகம் கண்டேன்*
*நீல விசும்பினிடை நின்முகம் கண்டேன்*
*திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்*
*சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன் "*

என்று வாய்விட்டுப் பாடினேன்.

பின்னலிருந்து, " அடேயப்பா! நீ இவ்வளவு ஜோராகப் பாடுகிறுயே! உனக்குப் பாடத் தெரியும் என்றே எனக்குத் தெரியாதே! இந்தக் கப்பலில் தமிழ்ப் பாட்டைக் கேட்பது என்ன இனிமையாக இருக்கிறது, தெரியுமா?" என்று ரகுவின் குரல் ஒலித்தது.

நான் பொங்கி வரும் நுரையிலிருந்து கண்களை எடுக்காமலேயே, " அதற்குள் உனக்கு இந்தக் கப்பலும், புதிய மனிதர்களும் அலுத்துவிட்டதா ரகு? மூன்று நாட்களுக்குள் 'ஹோம்ஸிக்'காகிவிட்டால் மூன்று வருஷங்கள் நீ எப்படிச் சீமையில் இருக்கப் போகிறுய்?" என்றேன்,

"ரங்கதுரை ! உண்மையைச் சொல்லு. நானு வீட்டுக்காக அழுகிறேன் ? நீதான் எப்போது பார்த் தாலும் முகத்தைத் தூக்கிக் கொண்டிருக்கிறாய். பம்பாயி லிருந்த ஒரு வாரமும் எவ்வளவு கலகலப்பாக இருந்தாய் ? கப்பலில் ஏறியதும் உன் தோற்றமே மாறிப் போய் விட்டதே, ஏன் அப்படி ?" என்று ரகு என்னையே மடக்கினான்.

அவன் கூறுவதில் உண்மை இருந்தபடியால், என்னால் உடனே அவனுக்குப் பதில் சொல்ல முடிய வில்லை.

பிறகு அவனே தொடர்ந்து, "என்ன விஷயம் என்றுதான் சொல்லேன். ஏன் இப்படி ஏங்குகிறாய் ? உனக்குத்தான் கவலைப்படும்படி யாரும் இல்லையென்று சொன்னாயே !" என்றான்.

நான் சிரித்தேன். "உன்னைப் பற்றிக் கவலைப்பட உன் தந்தை இருக்கிறார். உன் மனைவி இருக்கிறாள். ஆகவே, நீ கவலைப்பட வேண்டியதில்லை. என்னைப் பற்றி நான்தானே கவலைபட்டுக்கொள்ள வேண்டும் ? அது தான் கவலையாக இருக்கிறது" என்றேன்.

"துரை ! நீ இப்படிச் சொன்னால் நான் ஏமாந்து விடுவேன் என்று நினைத்தாயோ ? எனக்கு நன்றாகத் தெரியும். நீ எதற்காகக் கவலைப்படுகிறாய் என்று. எனக்குக் கொஞ்சம் ஜோஸியம் தெரியும். நீ இப்போது உன் காதலியை நினைத்துக் கவலைப்படுகிறாய்."

"ஆகா ! பிரமாதமான விஷயத்தைச் சொல்லி விட்டாய். அடாடா !"

"எனக்கு இன்னும் கூடத் தெரியும். அவள் பெயர் இந்துமதி."

எனக்கு மூச்சே ஒரு கணம் நின்று விட்டது. இந்து வின் பெயரை இன்னொருவன் சொல்லிக் கேட்பதே எனக்கு மகிழ்ச்சியை அளித்தது.

" உனக்கு எப்படித் தெரியும் ?"

" அதுதான் ஜோஸியம் தெரியும் என்று சொன்னேனே !"

" விளையாடாதே ரகு. எப்படித் தெரிந்தது என்று சொல்லேன்."

" என்ன ஆவல் ? அவளைப் பற்றிப் பேசினாலே இனிக்கிறதாக்கும். சோர்ந்து கிடந்த முகம் மலர்ந்து விட்டதே. சற்று முன்னால் உன்னைத் தேடிக்கொண்டு உன் அறைக்குச் சென்றேன். ஒரு தமிழ் சஞ்சிகை உன் படுக்கைமீது கிடந்தது. அதை எடுத்துப் புரட்டினேன். இங்கே வேறு யார் தமிழ் படிக்கிறார்கள், உன்னைத் தவிர ! அதில் நீ பக்கத்துக்குப் பக்கம் ' இந்துமதி, இந்துமதி ' என்று எழுதி வைத்திருக்கிறாய்."

" ரொம்ப கெட்டிக்காரன்தான். போ !"

" சந்தேகமென்ன ? நானும்தான் என் மனைவியை விட்டுப் பிரிந்து வந்திருக்கிறேன். உன்னைப்போல் அழுது கொண்டிருக்கிறேனா ? எனக்கு மாத்திரம் இதயம் இல்லையா ? என் மனைவி சின்னஞ் சிறு பெண். அவள் கண்ணீர் ததும்ப விடை கொடுத்தது என் உள்ளத்தையும் தான் உருக்கியது. அதற்காக உன்மாதிரி இருக்கிறேனா?"

அவன் சொல்வது நியாயமென்று எனக்குப் பட்டது. பாவம் ! கல்யாணமாகி ஒரு வருடம் ஆவதற்குள்ளேயே பிரிந்து வந்திருக்கிறான். அவனுக்கு இல்லாத வருத்தம் எனக்கு மட்டும் என்ன ? நான் ரொம்ப உணர்ச்சி வசப் பட்டு விடுகிறேன் போலிருக்கிறது. இனிமேல் திடமாக இருக்க வேண்டும்.

" ரகு ! நீ சொல்வது உண்மைதான். ஆனால், உனக்கும் எனக்கும் ஒரே ஒரு வித்தியாசம். உனக்கு விவாகமாகிவிட்டது. உன் மனைவியைக் கவனித்துக் காப்பாற்ற உன் தந்தையும் இருக்கிறார். அவளுடைய பெற்றோரும் இருக்கிறார்கள். ஆனால், இந்துவுக்கு அவ

ளுடைய வளர்ப்புத் தந்தை ஒருவர்தான் இருக்கிறார். வேறு யாருமே கிடையாது. அவரும் வயதானவர். நான் திரும்பிப் போக இன்னும் இரண்டரை வருஷங்கள் ஆகும். அதற்குள் என்னென்னவெல்லாம் நேருமோ யார் கண்டது ? அதிலும் அவள் உலகமே அறியாதவள். குழந்தையைப் போன்ற கபடமில்லாத உள்ளம் படைத்தவள்."

" ஆமாம் ! என் மனைவியைப் பற்றியும் எனக்கு அதே அபிப்பிராயம்தான். நீ கவலைப்படக் காரணமிருக் கிறது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், நீ கவலைப்படுவதனால் பிரயோசனம் இல்லை. உற்சாகமாக இருந்து சீக்கிரம் படிப்பை முடித்துக்கொண்டு திரும்பி ஊருக்குப் போய்ச் சேருவதற்கு வழியைப் பார் " என்று கூறினேன்.

அன்று முதல் நானும் ரகுவும் அடிக்கடி கப்பல் முனையில் சந்தித்துப் பேசுவது வழக்கமாகி விட்டது. தமிழ் பாஷையே தெரியாதவர்கள் மத்தியில் வாழும்போதுதான் நம்முடைய தாய் மொழியைப் பேசுவதில் நமக்கு ஏற்படும் இன்பம் தெரிகிறது. நானும் அவனும், அமுதத் தமிழ் மொழியில் பேசிக் கொள்வதற்காகவே அங்கே சென்று நிற்போம். மேலும் இந்துமதியைப் பற்றிப் பேசும்போது எனக்கு ஒருவித இன்பம் ஏற்பட்டது.

# 28. புதிய சூழ்நிலை

ரகுவின் நட்புக் கிடைத்த பிறகு எனக்குக் கடல் பிரயாணத்தில் உற்சாகம் உண்டாகிவிட்டது. அவனுக்கும் மற்ற இந்திய நண்பர்களுக்கும் பாரதி பாடல்களைப் பாடிக் காட்டினேன். நான் பாடுவதைக் கேட்ட சில கப்பல் மாலுமிகள் என்னை இன்னும் பாடச் சொன்னார்கள்.

இப்படியே அவர்களுடைய நட்பையும் சம்பாதித்துக் கொண்டேன்.

இன்னொரு முக்கியமான பயனும் அப்போது அடைந்தேன். ஒரு நாள் அரவிந்தோடு பேசிக் கொண்டிருந்தபோது விளையாட்டாக, “ரவீந்திரநாத் டாகூரின் புத்தகங்களை நான் பிரியத்துடன் படித்திருக்கிறேன். ஆனால், மொழிபெயர்ப்பில் எப்படி அவற்றின் பூரண எழில் பிரகாசிக்கும் ? நீ எனக்கு வங்காளி பாஷை கற்றுக் கொடுத்தால் அவற்றை அந்த பாஷையிலேயே படித்து ரஸிக்க முடியுமல்லவா ?” என்று கூறினேன்.

அரவிந்துக்கு ஒரே உற்சாகம் உண்டாகி விட்டது. “நீ நல்ல ரஸிகனாக இருக்கிறாயே. எங்கள் பாஷை ரொம்ப இனிமையானது. பாஷைகளின் ஒலி இனிமையை ரொம்பப் பேர் உணர்ந்து பாராட்டுவதில்லை. ஏதோ தங்கள் எண்ணங்களை வெளியிடுவதற்கு ஒரு கருவி யாகவே உபயோகப்படுத்துகிறார்கள். இவ்வளவு தூரம் நீ அதன் ஒலியின் இனிமையைப் பற்றி உணர்ந்திருப்பது எனக்கு வெகு சந்தோஷமாக இருக்கிறது. இப்போதே கற்றுக் கொடுக்கிறேனே” என்றான்.

உடனேயே அவனிடம் வங்காளி பாஷை கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். வெகு சீக்கிரத்தில் பேசக் கற்றுக் கொண்டேன். இங்கிலாந்தில்கூட அதைத் தொடர்ந்து படித்து வந்தேன்.

எங்களைக் கவனித்துக் கொள்வதற்காக இருந்த கப்பல் ‘ஸ்டுவர்ட்’ ரொம்ப நல்லவராக இருந்தார். மாணவர்களாகிய எங்களிடம்கூட மிக மரியாதையோடு பேசினார். கப்பலில் ஏறியது முதல் நான் நினைத்து நினைத்து அதிசயித்த விஷயம் அவர்கள் காட்டும் மரியாதைதான். அதிலும் மாணவர்கள் என்றால் தனியான அபிமானத்துடன் பழகுவார்கள். இங்கிலாந்து தேசத்தில்

அனைவரும் மாணவர்களுக்கென்று விசேஷ சலுகை காட்டுகிறார்கள்.

இந்த 'ஸ்டுவர்ட்' கோவாவைச் சேர்ந்தவர். ரொம்பத் தமாஷாகப் பேசிக்கொண்டிருப்பார். கப்பல் தலைவரிடம் சொல்லி எங்களையெல்லாம் கப்பலில் எல்லா இடங்களுக்கும் அழைத்துச் சென்று காட்டினார்.

"எல்லோரிடமும் நீங்கள் எப்படி இவ்வளவு சுமுகமாகப் பழகுகிறீர்கள் ?" என்று கேட்டேன்.

"இது என்ன கஷ்டம் ? வேறு விதமாக எப்படிப் பழகுவது ?"

"கப்பலில் நீங்கள் எத்தனையோ விதமான மனிதர்களைச் சந்தித்திருப்பீர்கள் அல்லவா ?" என்று கேட்டேன்.

"அடேயப்பா ! அதற்குக் கணக்கு வழக்கே இல்லை. திருடர்கள், மோசடிக்காரர்கள், வியாபாரிகள், பணக்காரர்கள், மகாராஜாக்கள், பிரபல நடிகர்கள், மாணவர்கள் இப்படிப் பலதரப்பட்ட மனிதர்களோடு பழகியிருக்கிறேன். அதிலும் பல தேசங்களைச் சேர்ந்தவர்கள், பல பாஷைகள் பேசுகிறவர்கள், பல மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாம் கப்பலில் செல்வார்கள். நான் இருபத்தைந்து வருஷங்களாகக் கப்பலில் வேலை பார்க்கிறேன். எவ்வளவு விஷயம் தெரிந்து கொண்டிருக்கிறேன் தெரியுமா ?" என்றார்.

"அடேயப்பா ! அவ்வளவு வருஷங்களா ? உங்களுக்குக் குழந்தைகள் மனைவி எவரும் இல்லையா ? அவர்களைப் பிரிந்து இருப்பது உங்களுக்குக் கஷ்டமாக இருக்குமே ?"

"இருக்கிறார்கள். ஆனால், என்ன செய்வது ? எங்கள் ஜீவனம் இதன் மூலம்தானே நடைபெற்று வருகிறது. மாதக் கணக்காகப் பிரிந்திருக்கும்படிதான்

நேருகிறது. ஆனால், திரும்ப நாங்கள் ஒன்று கூடும் போது என்ன ஆனந்தமாக இருக்கும் தெரியுமா ?"

" நீங்கள் ஏன் இந்த வேலைக்கு வந்தீர்கள் ? நாட்டிலேயே செய்யக் கூடியதான வேறு ஏதாவது வேலையை ஏன் தேடிக் கொள்ளவில்லை ?" என்று ரகு அவரிடம் கேட்டான்.

" இந்த வேலையையும் யாராவது செய்துதானே ஆக வேண்டும் ? எல்லோரும் பயந்து கொண்டிருந்தால் நீங்கள் எல்லோரும் எப்படி இங்கிலாந்துக்கும், அமெரிக்கா வுக்கும் பிரயாணம் செய்வீர்கள் ?" என்று கேட்டார் அவர்.

" ஆம் ! சிலர் கப்பல் ஓட்டவும், விமானம் ஓட்டவும் செய்வதால்தானே உலகத்தில் எத்தனையோ பேர் பிரயாணம் செய்ய முடிகிறது ? அவர்களுக்கு மனித சமுதாயம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறது, தெரியுமா ?"

எஸ். எஸ். விக்டோரியாவில் ஒரு நல்ல வாசகசாலை இருந்தது. அதில் எனக்குப் பொழுது நன்றாகப் போயிற்று. இன்னொரு அறையில் ஒரு " பியானோ " வாத்தியம் இருந்தது. ஐரோப்பியர்கள் சிலர் அங்கு வந்து அதை வாசித்துக் கொண்டும், பாடிக் கொண்டும் பொழுது போக்கினார்கள்.

நான் அவர்களிடமெல்லாம் சீக்கிரம் பேசிப் பழக ஆரம்பித்து விட்டேன். அவர்களில் மிஸ்டர் பிரெடிரிக் என்னும் பிரஞ்சுக்காரர் என்னிடம் சீக்கிரத்தில் பழகி விட்டார். அவரிடமிருந்து பிரான்ஸ் தேசத்து நாகரிகங் களைப் பற்றியெல்லாம் தெரிந்து கொண்டேன்.

கப்பல் ' ஏடன் ' துறைமுகத்தை அடைந்தது. அரேபியா தேசத்தை நான் உலகப் படத்தில் பார்த்திருக் கிறேனே தவிர அதன் மண்மீது காலை வைப்போம் என்று எண்ணிப் பார்த்ததேயில்லை. துறைமுகத்தை அடைவ

தற்கு முன்பே உலகப் பிரசித்தி பெற்ற அரபிக் கதைகளின் நினைவு வந்தது. வித விதமான வர்ணப் பட்டுக்கள் உடுத்திய அரசர்களும், அரசிளங் குமரிகளும் உலவும் கற்பனை உலகில் சஞ்சரிக்கத் தொடங்கி விட்டேன். உண்மையில் ஏடனை அடைந்ததும் சற்று ஏமாற்றமாகக் கூட இருந்தது.

அங்கே கண்ட ஒரு அதிசயம் எனக்கு ரொம்ப வியப் பளித்தது. நாங்கள் ஊரைச் சுற்றிப் பார்ப்பதற்காகக் கப்பலிலிருந்து படகுகளில் கரைக்குப் போனோம். படகில் போய்க் கொண்டிருந்தபோது சில சிறுவர்கள் மீன்களைப் போல் நீந்திக் கொண்டு படகினருகில் வந்தார்கள். எங்க ளுடன் வந்த அரேபியா தேசத்து மனிதர் ஏடனில் இறங்கினர். அவர் இன்னொரு படகில் வந்து கொண் டிருந்தார். அவர் சில நாணயங்களைக் கடலில் போட்டார். தெள்ளத் தெளிந்த ஸ்படிகம் போன்ற நீரில் அவை அமிழ்வது நன்ருகத் தெரிந்தது. அந்தச் சிறுவர்கள், காசுகள் அடிவாரத்தை அடைவதற்குள் ஒரு முங்கு முங்கி அவைகளைப் பற்றிக் கொண்டார்கள். அவர்களுடைய வேகம் என்னைப் பிரமிக்கச் செய்தது. எனக்கு நீந்தவே தெரியாது. ஆகவே, பிரமிப்பு ரொம்ப அதிகமாக இருந்தது !

ஏடன் நகரத்தில் அப்படியொன்றும் பிரமாதமாகப் பார்ப்பதற்கு விசேஷமான வஸ்து இல்லை. எங்கு பார்த்தாலும் ஒட்டகங்கள் நின்றன. அதுதான் அதிசய மாக இருந்தது. ஒட்டகத்தின் பாலை அங்கே உணவுப் பொருளாக உபயோகிக்கிருர்களென்று தெரிந்து கொண்டேன்.

ஏடனிலிருந்து கப்பல் புறப்பட்டு 'ஸூயஸ்' கால் வாயைத் தாண்டிச் சென்றது. மத்தியதரைக் கடலின் வழியாக நாங்கள் சென்றபோது பெரிய புயல் அடித்தது.

அடேயப்பா ! அதிலிருந்து பிழைப்போம் என்ற நம்பிக்கையையே நாங்களெல்லாரும் இழந்து விட்டோம். 'சுழற் காற்றில் அகப்பட்ட மரக்கலம் போல்' என்று உவமையணி கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். அதை அனுபவித்த போதுதான் அந்தக் கஷ்டம் என்னவென்று புரிந்தது.

சுழல் காற்று சுழன்று சுழன்று அடிக்கும்போது சாதாரணமாகக் கப்பல்கள் பல மைல் தூரம் வழியை விட்டு விலகிச் சென்றுவிடக் கூடும். சுழல் காற்று அடிக்கும் போது, ஒரு சூன்யப் பிரதேசம் நடுவில் உண்டாகும். அதைச் சுழலின் 'கண்' என்று கூறுவார்கள். அதில் போய்க் கப்பல் சிக்கிக் கொண்டு விட்டால், நாலா பக்கமும் காற்று அடித்துக் கப்பலைச் சின்னுபின்னப் படுத்திவிடும். எங்கள் கப்பல் அந்தக் 'கண்ணில்' அகப்பட்டுக் கொண்டு விட்டதோ என்ற சந்தேகம் கப்பல் தலைவருக்கு ஏற்பட்டு விடவே எல்லோருக்கும் ரொம்பக் கவலையாகப் போய் விட்டது.

அந்தச் சமயத்தில் ரகுதான் ரொம்பக் கலங்கிப் போனுன். அவனை நான் தேற்றிக் கொண்டிருந்தேன். என்னைப் பரிகாசம் செய்த ரகுதானு என்று நான் சந்தேகப்படும்படி அவன் அன்று நடந்து கொண்டான். தெய்வாதீனமாக நாங்கள் எப்படியோ அந்தக் கண்டத்தி லிருந்து தப்பி பிரான்ஸ் தேசத்திலுள்ள "மார்ஸெயில்ஸ்" என்ற துறைமுகத்தை அடைந்தோம்.

மார்ஸெயில்ஸ் நகரத்திலிருந்து உலகப் பிரசித்தி பெற்றதான 'பாரிஸ்' நகருக்குச் சென்றோம்.

பாரிஸ் நகரத்தில் ஒரே ஒரு நாள்தான் இருந்தோம். அந்த ஒரு நாளில் சுற்றிப் பார்த்துவிட்டு பாரிஸ் நகரம் தான் பூலோக சுவர்க்கம் என்று எண்ணினேன். பூலோக நரகமும் அந்தப் பிரும்மாண்டமான நகரத்தில் இருக்கிறது

என்பது பின்னுல் தெரிந்தபோது மனத்துக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது.

அங்கிருந்து 'கலே' என்ற ஊருக்குச் சென்று கப்பலில் இங்கிலீஷ் கால்வாயைத் தாண்டினேம். டோவர் என்ற துறைமுகத்தில் இறங்கி நாங்களெல்லோரும் லண்டன் மாநகரத்தை அடைந்தோம்.

நான் சீமை சென்ற விவரங்களையெல்லாம் இதில் எழுத வேண்டியது அவசியமா என்ற எண்ணம் என் உள்ளத்தில் எழுந்தது. சுருக்கமாக முடித்துவிட நினைத்தேன். ஆனுல், என் இந்துவுக்கு விவரமாக எழுதித் தருவதாக வாக்களித்திருப்பதால் கூடியவரை எல்லாச் சம்பவங்களையும் எழுதி விடுவதென்று தீர்மானித்தேன்.

எனக்கும் அந்த நாட்களைப் பற்றி எழுதுவதற்கு ரொம்ப உற்சாகமாக இருக்கிறது. அங்கு நடந்த எல்லாச் சம்பவங்களையும் எழுதும் போதுதான் இந்துவுக்கு எவ்வளவு தூரம் அவள் என் வாழ்க்கையில் ஒன்றிப் போயிருக்கிருள் என்பது தெரிய வரும். எத்தனையோ வேலைகள், புதிய புதிய மனிதர்கள், புதிய தேசம், புதிய நாகரிகம், புதிய படிப்பு இவைகளுக்கு மத்தியில் இந்துவின் நினைவு ஒன்றுதான் என்னைப் பழைய ரங்கதுரையாகப் பாதுகாத்து வந்தது என்பதை அவள் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? என் நடையுடை பாவனைகள், பாஷை எல்லாம் மாறிவிட்ட போதும் இந்து என் இதயத்தை மாற விடவே இல்லை. என் இதயம் மட்டும் இந்துவுக்காகவே வாழ்ந்து வந்தது.

# 29. லண்டன் மாநகர்

நான் இங்கிலாந்தை அடைந்தபோது டிஸம்பர் மாதம். ஆகவே குளிர் தாங்கமுடியாமல் இருந்தது. அந்தக் குளிரை விவரிக்கவே முடியாது. எலும்புக்குள்ளே யெல்லாம் உறைந்து விட்டது போலிருந்தது. 'டோவரி' லிருந்து லண்டனுக்குப் போகும் வழியில் ஒரு அற்புத மான காட்சியைக் கண்டேன். அந்தப் பிரதேசம் பூராவும் ஒரே தூய்மையான வெள்ளைப் பரப்பாக இருந்தது. மரங்கள், செடி கொடிகள், வீடுகள் எங்கு பார்த்தாலும் ஒரே வெண்மை நிறம். அதைக் கண்டு நான் வியந்து கொண்டிருக்கும்போதே பனி மழை பொழிய ஆரம்பித்தது. ஆகாயத்திலிருந்து தேவதைகள் எல்லாருமாகச் சேர்ந்து கோடிக்கணக்கான வெண்ணிற மலர்களைப் பொழிகிறார் களோ எனத் தோன்றியது அக்காட்சி.

இல்லை! இல்லை! தெய்வலோகத்துப் பறவைகளான ராஜ ஹம்ஸங்கள் தங்களது தூய வெண்ணிற இறகுகளை உதிர்க்கின்றன. அவைதான் இப்படி பூமியில் உதிர் கின்றன என்று தோன்றியது. அடுத்த நிமிஷம் இரவு வந்து கவிந்து கொள்ளும் வேளையில் கருநீல நிற ஆகாயத்திலிருந்து பஞ்சு உதிர்வதுபோல உறைந்த பனி உதிர்வது பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. இதை இந்துமதி பார்த்தால் எப்படி ரஸிப் பாள்? இதைப் பற்றி அவளுக்கு எழுதவேண்டும். 'இந்தத் தூய வெண்மை நிறத்தைப் பார்த்ததும் உன் வெண்மை யான பரிசுத்த இதயம் எனக்கு ஞாபகம் வந்தது' என்று எழுதவேண்டும்.

இப்படித் தோன்றியதும் பெட்டியைத் திறந்து காகிதத்தையும் பேனாவையும் எடுத்தேன். ரகு எதிர்ப் பக்கத்திலிருந்து புன்னகையுடன் என்னைப் பார்த்தான்

பிறகு அவனும் பேனாவையும், காகிதத்தையும் எடுத்துக் கொண்டான்.

பம்பாயிலிருந்து புறப்பட்டது முதல் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை யெல்லாம் கடிதத்தில் விவரித்தேன். புயலில் சிக்கிக்கொண்டு தெய்வாதீனமாகத் தப்பியதைப் பற்றி எழுதினேன். பிரான்ஸ் தேசத்தில் ஆங்கில பாஷை யாருக்கும் புரியாமல் நாங்கள் திண்டாடியதைப் பற்றி எழுதி னேன். பாஷை தெரியாதபடியால் சாப்பிடுவதற்கு ஏதாவது வேண்டு



மென்றுகூடக் கேட்கமுடியாமல் தவித்ததைப் பற்றி வரைந்தேன். இன்னும் எத்தனையோ விவரங்கள் இந்து வுக்குப் பிடிக்குமென்று எழுதினேன். பாரிஸ் நகரத்தைப் பற்றியும், எனக்கு எப்படி அதெல்லாம் கொஞ்சம் விநோத மாகவும், ஏன் அதிர்ச்சியாகவும் கூட இருக்கிறதென் பதையும் எழுதினேன். கடைசியாக உறைபனி கொட்டும் அழகையும் விவரித்து விட்டு அவளைத் தைரியமாக இருக்கும்படி எழுதி முடித்தேன். கடிதத்தைக் கவரில் போட்டு ஒட்டுவதற்கும் ரயில் வண்டி பிரசித்தி பெற்ற லண்டன் மாநகரின் 'விக்டோரியா' ஸ்டேஷனை அடை வதற்கும் சரியாக இருந்தது.

ரகு லண்டனிலேயே தங்கி, லண்டன் யூனிவர் ஸிடியில் படிப்பதாக இருந்தான். நானும் அரவிந்தும் தான் 'கேம்பிரிட்ஜு'க்குப் போய்க்கொண்டிருந்தோம். என்னுடைய கல்லூரியின் தலைமையாசிரியர், லண்டனில் படித்துக்கொண்டிருந்த ஒரு மாணவருக்கு நான் வரு வதைப்பற்றிக் கடிதம் எழுதியிருந்தார். அனந்த கிருஷ்ணன் என்ற அந்த மாணவருக்கு நான் பாரிஸ் நகரத்திலிருந்து கடிதம் எழுதியிருந்தேன். ஆகவே

அவர் ஸ்டேஷனுக்கு வருவாரென்று நாங்கள் எதிர் பார்த்தோம்.

ரயில் நின்றதும் சாமான்களையெல்லாம் இறக்கிக் கொண்டே யாராவது எங்களைத் தேடி வருகிறார்களா என்று பார்த்தேன். இரண்டு, மூன்று இந்திய முகங்கள் தென்பட்டன. எனக்கு யாரிடம் விசாரிப்பது என்று புரிய வில்லை. கடைசியில் ஒரு உயரமான மனிதர் என்னிடம் வந்து, "நீங்கள் சென்னையிலிருந்து வருகிறீர்களா ?" என்று கேட்டார்.

நான் உடனே அவரிடம், "நீங்கள்தான் அனந்த கிருஷ்ணனா ?" என்று கேட்டேன்.

"ஆம் ! நீங்கள் ரங்கதுரைதானே ?" என்று வினவினார்.

"ஆமாம். நான் 'பாரிஸ்' நகரிலிருந்து எழுதிய கடிதம் கிடைத்ததா ?"

"கிடைத்தது. உங்களுக்கு வேண்டிய ஏற்பாடுக ளெல்லாம் செய்திருக்கிறேன். நீங்கள் இங்கே ஒரு வாரம் இருக்க வசதிகள் செய்திருக்கிறேன்."

"ரொம்ப வந்தனம். மறந்துவிட்டேனே. இவர்தான் அரவிந்த். என்னோடு கேம்பிரிட்ஜுக்கு வந்து படிக்கப் போகிறார். இவர் ரகுநாதன். இங்கேயே லண்டன் சர்வ கலாசாலையில் சேர்ந்து படிக்கப் போகிறார்" என்று இரண்டு பேரையும் அறிமுகப்படுத்தி வைத்தேன்.

"பிரயாணமெல்லாம் சௌகரியமாக இருந்ததா ? இப்போது குளிர்காலம். கொஞ்சம் கஷ்டப்பட்டிருப்பீர்கள்" என்றார் அனந்தகிருஷ்ணன்.

"இல்லை. சுகமாகவே இருந்தது. இந்தக் குளிரில் தான் கம்பளியைப் போர்த்திக்கொண்டு தூங்கும் சுகம் நன்றாகத் தெரிகிறது. கப்பலில் முதலில் வந்தபோது ரொம்ப சுகமாக இருந்தது. ஆனால், 'கலே'யிலிருந்து

'டோவர்' வரும்போது இங்கிலீஷ் கால்வாயில் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போய்விட்டோம். உடம்பே சரியாக இல்லை. ஒரே தலை சுற்றலாக இருந்தது. கப்பல் ரொம்ப ஆடிற்று. சில சமயம் பயமாகக்கூட இருந்தது " என்றேன்.

" ஆமாம். இங்கிலீஷ் கால்வாய் எப்போதும் கொஞ்சம் கொந்தளிப்பாகவே இருக்கும். இப்போது நாம் டாக்ஸியில் நேரே 'இந்திய மாணவர் சங்கத்'துக்குப் போய்விடுவோம் " என்றார் அனந்தகிருஷ்ணன்.

நாங்கள் எல்லோரும் சாமான்களை ஒரு வண்டியில் ஏற்றிவிட்டு டாக்ஸியில் இந்திய மாணவர் சங்கத்தை அடைந்தோம். டாக்ஸியில் போகும்போதே அனந்த கிருஷ்ணன் லண்டன் நகரத்தின் பல பகுதிகளைப் பற்றி எங்களுக்குச் சொன்னார். அரவிந்த்கூட உற்சாகமாக இருந்தான்.

அனந்தகிருஷ்ணன் எங்களிடம், " உங்களில் யாருக்காவது கல்யாணமாகி யிருக்கிறதா ?" என்று கேட்டார்.

நான், " ரகுவுக்குக் கல்யாணமாகி விட்டது " என்றேன்.

" நான்கூட என் மனைவியை இந்தியாவில் விட்டு விட்டு வந்திருக்கிறேன், நல்ல வேளையாக இன்னும் மூன்று மாதத்தில் நான் போய்விடலாம். என் படிப்பு அதற்குள் முடிந்து விடுகிறது. இந்தியாவுக்குப் போக லாம் என்று நினைத்தாலே குதூகலமாக இருக்கிறது. எவ்வளவுதான் சௌகரியமாக இருந்தாலும் நம்முடைய தேசத்துக்கு ஈடாகுமா ?" என்றார் அனந்தகிருஷ்ணன்.

" உங்களுக்கு எந்த ஊர் ?" என்று கேட்டான் ரகு.

" ஏன் ? அவரிடம் உன் மனைவிக்கு ஏதாவது அனுப்ப இப்போதே திட்டம் போடுகிறாயா ?" என்று கேட்டேன் சிரித்துக்கொண்டே.

"நான் திருவனந்தபுரத்தைச் சேர்ந்தவன். ஆனால், என் தாய் தந்தையர்கள் மதராஸில்தான் இருக்கிறார்கள். ரகுநாதன் அவருடைய மனைவிக்கு ஏதாவது கொடுத்தால் எடுத்துக்கொண்டு போக எனக்கு ஒரு ஆட்சேபணையும் கிடையாது" என்றார் அனந்தகிருஷ்ணன்.

இதற்குள் வண்டி இந்திய மாணவர் சங்கத்தை அடைந்தது.

வண்டியிலிருந்து இறங்கி உள்ளே பிரவேசித்தோம்.

சாப்பிடும்போது நான் அனந்தகிருஷ்ணனைப் பார்த்து, "இங்கே சைவ உணவுடன் காலந்தள்ள முடியாது என்று சொல்கிறார்களே, உண்மையா? கப்பலில் பலபேர் என்னிடம் எச்சரிக்கை செய்தார்கள். நானும் ரகுவும் கப்பலில் சரியான சைவ உணவு கிடைக்காமல் ரொம்பக் கஷ்டப்பட்டோம். அரவிந்த் பரவாயில்லை. அவனுக்கு எல்லாம் பழக்கம்" என்று கூறினேன்.

"அப்படியொன்றும் கஷ்டமில்லை. இங்கே ருசியான இந்திய உணவுகள் கிடைக்கும் இடங்கள் இருக்கின்றன. ஆனால், விலையைக் கேட்டால் பயந்து விடுவீர்கள். நிறையப் பால் சாப்பிட்டுச் சமாளித்துக் கொள்ளலாம்" என்று அவர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே நான் கொஞ்சம் காய்கறிக் குழம்பை மேலே கொட்டிக் கொண்டேன்.

அனந்தகிருஷ்ணன் புன்முறுவலுடன், "மிஸ்டர் துரை! இந்த மாதிரி நீங்கள் மேலே கொட்டிக்கொண்டால் எல்லாரும் பரிகாசம் செய்வார்கள். நீங்கள் ஏன் இந்தத் துணியை மடியில் போட்டுக் கொள்ளவில்லை? இங்கே சாப்பிடும் முறையைப் பார்த்து ஒரு மனிதனை மதிப்பிட்டு விடுவார்கள். நீங்கள் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஸ்பூனை உபயோகிக்க உங்களுக்குத் தெரிய வில்லையே? சரியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்றார்.

நான் சங்கோசத்துடன், "இவைகள் எனக்கு வழக்கமில்லை" என்றேன்.

"நீங்கள் சங்கோசப்பட வேண்டிய அவசியமில்லை. நானும் உங்களைவிடத் திண்டாடி இருக்கிறேன். உங்களுக்காவது நான் இதைக் கூறினேன். நான் இங்கே வந்தபோது யாரையுமே எனக்குத் தெரியாது. இந்தச் சங்கத்தை நிர்வகிக்கும் மிஸ். ஜேன் எட்மண்ட் என்பவர் எனக்கு இவைகளையெல்லாம் சொல்லிக் கொடுத்தார். வெண்ணெய் தடவும் கத்தியை வைத்துக்கொண்டு நான் ரொட்டியை வெட்ட முடியாமல் ஒரு சமயம் தவித்தேன். பக்கத்தில் யார் என்ன செய்கிறார்கள் என்று அரைக் கண்ணால் சங்கோஜத்துடன் பார்த்து விட்டுத்தான் சாப்பிட ஆரம்பிப்பேன். அதுகூடச் சில சமயம் ஆபத்தாகப் போய்விடுவதுண்டு. அவர்கள் செய்யும் தவறை நாமும் செய்து நகைப்புக்காளாகிவிடுவோம்" என்றார்.

நாங்கள் எல்லோரும் சிரித்தோம். அத்தச் சமயத்தில் மிஸ். எட்மண்ட் அங்கே வந்தார். எங்களை விசாரித்தார். அவர் பேசிய விதமும், காட்டிய மரியாதையும் எனக்கு ரொம்ப வியப்பாக இருந்தன. அனந்தகிருஷ்ணன், மிஸ். எட்மண்டைப் பார்த்து, "நான் இங்கு வந்த புதிதில் பட்ட கஷ்டங்களையெல்லாம் இவர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எனக்குச் சொல்லிக் கொடுத்த விஷயங்களை எல்லாம் அவர்களுக்கும் கூறினேன்" என்றார்.

மிஸ். எட்மண்ட் எங்களோடு உட்கார்ந்து கொண்டார். "உங்களைப்போல் எத்தனையோ மாணவர்களுக்கு நான் மேஜையில் எப்படிச் சாப்பிடுவது என்று கற்றுக் கொடுத்திருக்கிறேன். அது ஒன்றும் கஷ்டமே இல்லை. மிஸ்டர் ராங்...... உங்கள் பெயரென்ன ?"

" ரங்கதுரை."

" ராங் டூ ராய். சரிதானே ? நீங்கள் புதியவராக இருப்பதால் சொல்கிறேன். மன்னித்துக் கொள்ளுங்கள். சாப்பிட வரும்போது ரொம்பச் சரியான உடைகளை உடுத்திக்கொண்டு வரவேண்டும். உங்களுடைய 'டை' ரொம்பக் கசங்கியிருக்கிறது. நன்றாக இஸ்திரி பண்ணிய உடைகளைத்தான் அணிந்துகொண்டு வரவேண்டும். உங்கள் 'பூட்ஸ்' நன்றாகப் 'பாலிஷ்' செய்திருக்க வேண்டும். எங்கள் குழந்தைகளுக்கு மேஜையில் உட்கார்ந்து சரியாகச் சாப்பிடத் தெரியும் வரையில் பெரியவர்களோடு சேர்ந்து சாப்பிட அனுமதி கிடைக்காது."

" கையாலேயே சாப்பிட்டு வழக்கமான எங்களுக்கு இத்தனை ஸ்பூன்களை வைத்துக் கொண்டு எப்படிச் சாப்பிடுவது என்று புரியவே இல்லையே!' என்று பரிதாப கரமாகக் கூறினார் ரகு.

"சீக்கிரத்தில் புரிந்துகொள்வீர்கள். பக்கத்தில் சாப்பிடு கிறவர் என்ன செய்கிறாரென்று கவனித்தால் புரிந்து விடும். சாப்பிடும்போது உங்களுக்கு ஏதாவது வேண்டு மென்று எடுத்துக் கொண்டால், முதலில் பக்கத்திலிருப் பவருக்கு வேண்டுமா என்று கேட்டுவிட்டுத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். தட்டில் கடைசியில் ஒன்றே ஒன்று மீதியிருக்குமானால் அதை யாரும் எடுக்க மாட்டார்கள்" என்றார் மிஸ். எட்மண்ட்.

ஒருவாறு சாப்பிட்டு முடித்தோம். " நீங்கள் எங்க ளுக்குச் சொன்ன விவரங்களுக்காக ரொம்ப வந்தனம்" என்று சொன்னேன்.

மிஸ். எட்மண்ட் புன்னகையுடன், " எனக்கு உங்களை யெல்லாம் ரொம்பப் பிடித்துவிட்டது. இங்கே இன்னும் சில நாட்கள் இருப்பீர்கள் அல்லவா ?" என்று கேட்டார்.

“ நாங்கள் நாளை கேம்பிரிட்ஜ் போகிறோம் ” என்றான் அரவிந்த்.

“கூடவே கூடாது. கிறிஸ்துமஸுக்கு இன்னும் நான்கு நாட்கள்தான் இருக்கின்றன. நீங்கள் இங்கே இருந்து லண்டன் நகரில் கிறிஸ்துமஸ் விழா கொண்டாடப்படும் அழகைப் பார்த்துவிட்டுத்தான் போக வேண்டும் ” என்றார் மிஸ். எட்மண்ட்.

பிறகு, மேஜைமீதிருந்த ஒரு பெரிய பாட்டிலை எடுத்து அதிலிருந்த சிவந்த திரவத்தைக் கோப்பைகளில் ஊற்றிக் கொண்டே, “ நீங்கள் பானங்கள் சாப்பிடுவதுண்டா ?” என்று கேட்டார்.

நாங்கள் மூன்று பேரும் ஒரே சமயத்தில், “ இல்லை ” என்றோம்.

“ உண்மையாகவே சொல்கிறீர்களா ? இங்கே வரும் இந்திய மாணவர்கள் எல்லாரும் முதலில் அப்படித்தான் சொல்கிறார்கள். முட்டையைக்கூடத் தொடமாட்டேன் என்று கூறுகிறார்கள். நாலைந்து மாதங்களுக்குப் பிறகு எல்லாவற்றையும் சகஜமாகச் சாப்பிடுகிறார்கள். நீங்களும் இவற்றையெல்லாம் வழக்கம் செய்து கொள்வது நல்லது. இல்லாவிட்டால் உங்கள் ஆரோக்கியம் ரொம்பக் கெட்டுப் போய்விடும் !”

நான் அனந்தகிருஷ்ணனைப் பார்த்தேன். அவர் இன்னொரு பாட்டிலில் இருப்பதை எடுத்துக் கோப்பைகளில் ஊற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அதில் ‘ லெமனேட் ’ என்று எழுதியிருந்ததைப் பார்த்த பிறகுதான் எனக்கு மூச்சு வந்தது. பாட்டிலை வைத்துவிட்டு அவர், “ மிஸ். ஜேன் ! என்னையும் சேர்த்து விடாதீர்கள் ” என்றார்.

“ நீங்கள் ஒருவர்தான் எனக்குத் தெரிந்து மூன்று வருஷங்களாகப் பானம் அருந்தவில்லை. மிஸ்டர் ராகு !

நீங்கள் இவரைப் பொருட்படுத்த வேண்டாம். கொஞ்சம் கொஞ்சம் சாப்பிடுங்கள். ஒன்றும் செய்து விடாது!" என்றார்.

நாங்கள் மறுபடியும் மறுக்கவே, "வேண்டாமென்றால் நான் வற்புறுத்தவில்லை" என்று கூறிவிட்டு எழுந்து விட்டார் மிஸ். ஜேன் எட்மண்ட்.

அவர் சென்ற பிறகு அனந்தகிருஷ்ணன் எங்களைப் பார்த்துக் கூறினார்: "நான் கூறும் ஐந்து விஷயங்களை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். எல்லோரும் நம்மைக் குடிக்கச் சொல்லியும், ஸிகரெட் புகைக்கச் சொல்லியும் வற்புறுத்துவார்கள். நாம் மரியாதையாக மறுத்துவிட வேண்டும். இவைகளை நாம் செய்யாமலிருப்பதில் பெருமை கொள்ள வேண்டும். பிரிட்டிஷ்காரர்கள் அப்போது நம்மை ரொம்ப மதிப்பார்கள். ஆனால், அதற்காக அவர்களுக்குப் புத்தி சொல்ல ஆரம்பித்து விடாதீர்கள்.

"அவர்களுடைய விஷயத்தில் தலையிட்டால் கொஞ்சம் கூடப் பிடிக்காது.

"அவரவர்கள் காரியத்தைக் கவனியுங்கள். மரியாதை யாகவும், அடக்கமாகவும் நடந்து கொள்ளுங்கள்.

"நம்மைப் பார்த்து அவர்கள் இந்தியாவை மதிப்பிடு கிறார்கள் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

"பெண்களுடன் பழகுவதில் மிகவும் ஜாக்கிரதையாக இருங்கள்" என்றார்.

அவருடைய குரலிலிருந்து அவர் உண்மையான சிரத்தையுடன் கூறுகிறார் என்பது தெரிந்தது. அவர் கூறிய விஷயங்கள் எங்களுக்கு எவ்வளவோ உபயோகமாக இருந்தன.

# 30. கிறிஸ்துமஸ் விழா

நான் கேம்பிரிட்ஜுக்குச் சீக்கிரம் சென்று கலா சாலையில் சேர்ந்துவிட வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தேன். ஆனால், அனந்தகிருஷ்ணன் எங்களைப் புறப்பட விடவில்லை. கிறிஸ்துமஸ் சமயத்தில் வந்து விட்டு அந்தப் பண்டிகையை லண்டனிலிருந்து பார்க்காமல் போகக் கூடாது என்று சொல்லிவிட்டார். மிஸ். ஜேனும் எங்களை இருக்கச் சொல்லி வற்புறுத்தினர். நான் அரை மனத்துடன்தான் இருக்கச் சம்மதித்தேன். நாட்கள் வீணாகின்றனவே என்று ரொம்பக் கவலையாக இருந்தது.

ஆனால், பிறகு இருந்ததற்காக வருந்தவில்லை. இயேசு பிரான் அவதரித்த புனித தினத்தை லண்டன் மாநகரில் கொண்டாடும் அழகுக்கு ஈடாக எதைச் சொல்ல முடியும்? முதன் முதலில் பார்த்ததனால்தானோ என்னவோ தெரியவில்லை. அந்தக் காட்சிகள் அப்படியே மனத்தில் பதிந்து போய் விட்டன. எப்போதுமே லண்டன் நகரத்தில் தீபாலங்காரங்கள் பிரமாதமாக இருக்கும். இயேசு மகானின் பிறந்த தினத்துக்கு முதல் நாளிரவு, ஆகாயத்து நட்சத்திரங்கள்கூட அந்த அலங்காரத்தின் முன்னால் போட்டியிட முடியாது.

இயேசு பிரான் அவதரித்தபோது மூன்று வியாபாரிகளுக்கு ஒரு பிரகாசமான நட்சத்திரம் வானத்தில் தோன்றி அவர் பிறந்த இடமான 'பெத்தலெம்' என்னும் ஊரைக் காட்டியதாகப் புனித பைபிள் கூறுகிறது. ஆனால் அவர் நல்ல வேளையாக இங்கிலாந்தில் பிறக்கவில்லை. டிசம்பர் மாதத்தில் அவர் அங்கே பிறந்திருந்தால் எந்த நட்சத்திரமும் அவர்களுக்கு வழி காட்டியிருக்க முடியாது.

வாரக்கணக்கில் விண்மீன்களைக் கண்ணால் பார்க்க முடிவதேயில்லை. சில சமயங்களில் ரொம்ப மனச் சோர்வு ஏற்படும்போது கண்களை மூடிக்கொண்டு அரேபியா தேசத்தில் இருப்பதாகவும், ஒரு மேகம்கூட இல்லாத நிர்மலமான ஆகாயத்தில் ஜ்வலிக்கும் கோடிக்கணக்கான நட்சத்திரங்களைப் பார்த்து ஆனந்தப் படுவதாகவும் கற்பனை செய்து கொள்வதுண்டு. மூடுபனியும், மழையும் நிற்கவே நிற்காதோ என்று தோன்றும்படி தொடர்ந்து பெய்துகொண்டே இருக்கும்.

வானத்து நட்சத்திரங்களுக்குப் போட்டியாக மின்சார நட்சத்திரங்கள் எங்கு பார்த்தாலும் ஜகஜ்ஜோதியாய் மின்னிக் கொண்டிருந்தன. அதிலும் அவர்கள் கிறிஸ்து மஸ் மரத்தை அலங்கரிக்கும் அழகு உண்டே, அதற்கு இணையே கிடையாது. விதம் விதமான வர்ணங்களில் ரிப்பன்களும், குஞ்சலங்களும், சின்னஞ்சிறு மின்சார விளக்குகளுமாக மிக அழகாக இருக்கும். மெழுகுவர்த்திகள் அவற்றின் குளுமையான இளஞ் சிவப்பு நிற ஜ்வாலை யோடு அடக்கமாக எரிந்து கொண்டிருக்கும்.

உலகமெங்கும் பண்டிகைகள் வேறுபட்டாலும், விளக்குகளை ஏற்றிக் கொண்டாடும் வழக்கம் ஒன்றாக இருக்கிறதல்லவா என்று எண்ணி வியந்தேன். நீரூற்றுக் களைப் பல வர்ண விளக்குகளால் அலங்கரித்திருந்தார்கள். "வெஸ்ட் மினிஸ்டர் அபே" என்ற பிரஸித்தி பெற்ற தேவாலயத்தைப் பார்த்துப் பிரமித்துப் போனேன். இந்திய மாணவர் சங்கமும் சும்மா இருக்கவில்லை. மிஸ். ஜேன், ஒரு கிறிஸ்துமஸ் மரத்தை அழகாக அலங்கரித் திருந்தார். அதன் அடியில் ஏகப்பட்ட பொட்டலங்கள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் அநேகமாக எல்லாம் மிஸ். ஜேனுக்காக மாணவர்கள் வாங்கி வைத்திருந்தார்கள். அதையெல்லாம் ஒரு குழந்தையைப்போல் அவர் பார்த்துப் பார்த்து ஆனந்தப்பட்டார்.

அன்று பிரமாதமான விருந்துகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. என்ன ஏற்பாடு செய்தாலும் என்னையும், ரகுவையும் பொறுத்த வரையில் ஒன்றுதானே? 'ஸாலாட்' என்று சொல்லப்படும் பச்சைக் காய்கறிகளுடனும், வெண்ணெய் தடவிய ரொட்டியுடனும் நாங்கள் திருப்தியடைய வேண்டியதாயிற்று.

"நீங்கள் கட்டாயம் 'கேக்' சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும். இன்று சாப்பிடாமல் இருக்கக்கூடாது" என்றார் மிஸ். ஜேன் எட்மண்ட்.

நான் முதலில் மறுத்தேன். பிறகு எல்லாரும் வற்புறுத்தியதின் பேரில் கொஞ்சம் சாப்பிட்டேன்.

மறுநாள் காலை எழுந்திருக்கும்போது குளிர் தாங்க முடியவில்லை. மணி ஆறாகிவிட்டது. எனக்குச் சீக்கிரம் எழுந்து வழக்கமாதலால் படுத்திருக்கப் பிடிக்கவில்லை. ஆனால், குளிரோ தாங்க முடியவில்லை. சற்று நேரம் ஸஹாரா பாலைவனத்தில் இருப்பதாக நினைத்துக் கொண்டு மனத்தை உஷ்ணப்படுத்திக் கொண்டேன்.

கடைசியில் கேம்பிரிட்ஜுக்குப் புறப்பட்டுவிட்டோம். ரகுவும், அனந்தகிருஷ்ணனும் எங்களை வழியனுப்ப ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்கள்.

கேம்பிரிட்ஜ் லண்டனிலிருந்து ஐம்பத்துமூன்று மைலில் இருக்கிறது. சீக்கிரத்தில் நாங்கள் அங்கே போய்ச் சேர்ந்துவிட்டோம். ரயிலிலிருந்து இறங்கி ஸ்டேஷன் ரோடு வழியாக டாக்ஸியில் வந்தபோது எனக்கு நான் கேம்பிரிட்ஜின் அழகைப் பற்றிப் படித்ததெல்லாம் ஞாபகம் வந்தது. ஸ்டேஷன் ரோடு முடியுமிடத்தில் யுத்தத்தில் இறந்தவர்களின் நினைவுக்காகக் கட்டிய கட்டடம் நிற்கிறது. அதைத் தாண்டியதும் "ஹில்ஸ் ரோட்" என்று டாக்ஸி டிரைவரிடமிருந்து தெரிந்துகொண்டேன். ஹில்ஸ் ரோடு சாதாரணமாகத்

தான் இருந்தது. லண்டனைவிடச் சிறியதாக இருக்கும் போலிக்கிறது. இங்கும்தான் கூட்டமாகவும், இரைச்சலா கவும் இருக்கிறது என்று எண்ணினேன். கடைகளும், உணவு விடுதிகளும், கார்களும்தான் காணப்பட்டன. இது எனக்குச் சற்று ஏமாற்றமாகவே இருந்தது. ஆனால், அங்கே காணப்பட்ட கிறிஸ்துவ தேவாலாயத்தின் கம்பீர மான கோபுரம் மனத்தைக் கவர்ந்தது.

ஹில்ஸ் ரோடில் கொஞ்ச தூரம் போனதும், ஆகா ! அந்தக் காட்சியைப் பார்க்கக் கண்கள் இரண்டு போதவே போதாது. ஒரே வெண்மை நிற மைதானங்கள். நடு நடுவே கம்பீரமான கட்டடங்கள். என்ன அழகு ! முதல் கட்டடத்தைப் பார்த்ததும் நான், "இது என்ன கட்டடம்?" என்று கேட்டேன். " இதுதான் டௌனிங் காலேஜ் " என்று பதில் வந்தது.

ஸெயின்ட் ஆண்ட்ரூஸ் ரோடில் எமானுவல் காலேஜ் இருந்தது. அதைத் தாண்டியதும் கிரைஸ்ட்ஸ் காலேஜ் தென்பட்டது. இதன் தோற்றம் பழைய காலத்துக் கோட்டையைப் போல இருந்தது. வாசலில் ஒரு பெரிய தூணும் அதன்மீது ஒரு சிலுவையும் கம்பீரமாகக் காணப் பட்டன. அதன் பிறகு 'ஸிட்னி ஸஸ்ஸெக்ஸ்' காலேஜின் கட்டடம் தென்பட்டது.

பிறகு நாங்கள் சேருவதாக இருந்த " ஸெயின்ட் ஜான்ஸ் " காலேஜுக்குப் போய்ச் சேர்ந்தோம். அதன் அருகில் இருந்த "டிரினிடி காலேஜ் " என்கிற பிரசித்தி பெற்ற கல்லூரியைப் பார்த்ததும் எனக்கு மயிர்க்கூச்சல் எடுத்தது.

" நாம் எவ்வளவு அதிர்ஷ்டசாலிகள் ?" என்று அரவிந்திடம் கூறினேன்.

" ஆம். இப்படியெல்லாம் நடக்கிறது என்று என்னால் நம்பவே முடியவில்லை. ஒருவேளை கல்கத்தாவில்

என் வீட்டிலிருந்து கொண்டு கனவு காண்கிறேனோ என்று சந்தேகமாக இருக்கிறது" என்றான் அரவிந்த்.

"இந்த டிரினிடி கல்லூரியைப் பாரேன். மகா மேதாவியான ஸர் ஐஸக் நியூடனும், மகா கவிஞரான ஆல்பிரட் லார்ட் டென்னிஸனும் இங்கே படித்தவர்கள் என்று எண்ணும்போதே உடல் சிலிர்க்கிறதல்லவா?" என்றேன்.

இப்படியெல்லாம் பேசிக்கொண்டே துடிக்கும் உள்ளத்துடன் ஸெயின்ட் ஜான் கல்லூரியின் உள்ளே சென்றோம். கல்லூரியின் நிர்வாகி எங்களை அன்போடு விசாரித்தார். "பிரயாணம் எப்படி இருந்தது?" என்று கேட்டார். பிறகு "லண்டன் நகரம் பிடித்ததா?" என்று கேட்டார். கிறிஸ்துமஸின் போது லண்டனில் இருந்ததையும், அங்கே பார்த்து அனுபவித்த விஷயங்களையும் பற்றிப் பேசினோம்.

"உங்களுடைய விண்ணப்பத்தில் இருவரும் தனி அறைகளில் வசிக்க விரும்புவதாக எழுதியிருக்கிறீர்கள். கல்லூரியில் கொஞ்சம் செலவு அதிகம்தான். ஆனாலும், உங்களுக்கு இதுதான் இன்னும் சௌகரியமாக இருக்கும். இப்போதுகூட உங்களுக்கு வேண்டுமானால் இங்கேயே இருக்கலாம்" என்றார்.

"எனக்கும் அரவிந்துக்கும் தனி அறைகளே சௌகரியமாக இருக்கும். அரவிந்த் தனிமையை விரும்புகிறவன். எனக்கும் படிப்பு முக்கியம். செலவைக் கூடிய வரையில் குறைத்துக் கொள்ள விரும்புகிறேன்" என்றேன்.

அவர் புன்சிரிப்போடு, "சரி! ஆனால், உங்கள் இருவருக்கும் ஒரே வீட்டில் இடம் கிடைக்காதென்று நினைக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஒரு புத்தகத்தைப் பிரித்துப் பார்த்தார். என்னைப் பார்த்து,

" மிஸஸ். ஆலிஸ் ஹார்வி, நம்பர் 17, பிரிட்ஜ்லேன் " என்ற விலாசத்தைக் கூறினர். அரவிந்துக்கு இன்னொரு விலாசத்தைக் கூறினர். நாங்கள் உடனே கிளம்பி எங்கள் இடங்களைத் தேடிக்கொண்டு சென்றோம்.

அரவிந்தை அவனுடைய விலாசத்தில் கொண்டு விட்டு விட்டு நான் மிஸஸ். ஆலிஸ் ஹார்வியின் வீட்டைத் தேடிக் கண்டு பிடித்ததும் டாக்ஸியிலிருந்து இறங்கிச் சென்று கதவைத் தட்டினேன். பேச்சு மூச்சே இல்லை. இரண்டு மூன்று தடவை தட்டினேன். பிறகும் கதவு திறக்கவில்லை. டாக்ஸி டிரைவர், " மணியை அடியுங்கள், ஸார்" என்றான். சுற்று முற்றும் பார்த்தேன். கதவின் அருகில் ஏதோ நீட்டிக்கொண்டிருந்தது. அதை அழுத்தினேன். சத்தம் கேட்கவில்லை. பிறகு அதைப் பிடித்து ஒரு இழுப்பு இழுத்தேன். உள்ளேயிருந்து மணி அடிக்கும் சத்தம் கேட்டது.

ஒரு நிமிடத்துக்கெல்லாம் கதவு திறந்தது. கதவு இருந்த இடத்தில் நடுத்தர வயதுடைய ஒரு மாது நின்றார். அவரைப் பார்த்த உடனே, " நீங்கள்தானே மிஸஸ். ஹார்வி ?" என்று தயக்கத்துடன் கேட்டேன்.

" ஆமாம் ! உங்களுக்கு என்ன வேண்டும் ?"

" என்னை 'ஸெயின்ட் ஜான்' கல்லூரியின் தலைவர், இங்கு அனுப்பினர். உங்கள் வீட்டில் அறை காலியாக இருக்கிறதாமே ?"

" ஆமாம்! ஆமாம்! உங்களை நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன் " என்று வரவேற்புக் கூறினர் மிஸஸ். ஹார்வி.

# 31. புதிய அனுபவம்

ஸ்ரீமதி ஹார்வியின் வீடு மிக நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. உள்ளே நுழைந்தவுடனேயே அறையின் தோற்றம் என் மனத்தைக் கவர்ந்தது. ஒரு ஆங்கிலேயருடைய வீட்டை நான் பார்ப்பது அதுதான் முதல் தடவையாதலால் சற்றுப் பிரமிப்பாகக்கூட இருந்தது. கதவுகள், ஜன்னல்கள், மேஜை நாற்காலிகள் எல்லாம் அப்பழுக்கின்றிப் பளபளவென்று மின்னின.

அழகிய பூ வேலைகள் செய்த திண்டுகள் நாற்காலி களை அலங்கரித்தன. கிறிஸ்துமஸ் பண்டிகை கொண் டாடியதற்கு அடையாளமாக அறையின் மேலிருந்து வான வில்லின் பல வர்ணங்களையுடைய ரிப்பன்களும், பலூன்களும் தொங்கின. நான்கு மூலைகளிலும் சிறிய மேஜைகளின் மீது பல அலங்காரப் பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன.



ஒரு பக்கத்தில் வெண்கல நடராஜர் உருவமும், ஒரு அழகிய குத்துவிளக்கும் வைக்கப்பட்டிருந் தன. இன்னொரு பக்கம் சலவைக் கல்லால் செய்த ஒரு 'தாஜ் மஹால்' பொம்மை வைக்கப்பட்டிருந்தது. நான் அவை களைப் பார்ப்பதை ஸ்ரீமதி ஹார்வி கவனித்திருக்க வேண்டும்.

"இவை இரண்டும் இங்கே எப்படி வந்தன என்று தானே யோசிக்கிறீர்கள்? போன வருஷம் இங்கே ஸ்ரீநிவாஸ் என்று ஒரு மாணவர் தங்கி இருந்தார். அவர் போகும்போது நடராஜ விக்கிரகத்தையும், குத்து விளக் கையும் கொடுத்து விட்டுப் போனார். அதற்கும் முன்னால்

ஒரு முஸ்லிம் மாணவர் என் வீட்டிலேயே இருந்தார். அவர் இந்தத் தாஜ்மஹாலை எனக்கு இந்தியாவுக்குச் சென்றதும் அனுப்பினார். பாருங்கள்! என் வீட்டில் நிறைய இந்திய மாணவர்கள் இருந்திருக்கிறார்கள். அதனால் நீங்கள் கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம். உங்களுக்கு எப்படியெல்லாம் வேண்டுமோ அப்படி யெல்லாம் வசதிகள் செய்து கொள்ளலாம். நாம் மாடிக்குப் போய்த் தங்களுடைய அறையைப் பார்க்கலாமா?" என்றார்.

நான் நேரே அவர் பின்னால் சென்றேன். ஸ்ரீமதி ஹார்வி திரும்பிப் பார்த்துவிட்டு, "கோட்டையும் ஹாட் டையும் கழற்றி அங்கே இருக்கும் 'கோட் ஸ்டாண்'டில் மாட்டிவிட்டு வாருங்கள்" என்றார். அவர் அப்படிக் கூறும்படி நான் மெய்மறந்திருந்தது எனக்குக் கொஞ்சம் கூச்சமாக இருந்தது.

பிறகு அவருடன் மேலே ஏறிச் சென்றேன். மாடிப் படி மிகச் சுத்தமாக இருந்தது. அங்கெல்லாம் கூட அழகுப் பொருள்களை வைத்திருந்தார் ஸ்ரீமதி ஹார்வி. வீடே கிட்டத்தட்ட ஒரு பொருட்காட்சி மாதிரி இருந்தது. அழகழகான கண்ணாடிச் சாமான்களும், பொம்மைகளும், ரத்னக் கம்பளங்களும் எங்கும் காட்சியளித்தன.

என்னுடைய, அதாவது என்னுடையதாக இருக்கப் போகிற அறைக்குள் நுழைந்தேன். அங்கு அதிக சாமான்கள் இல்லை. ஒரு கட்டில், ஒரு அலமாரி முதலிய அவசியமான சாமான்கள்தான் இருந்தன. அதைச் சேர்ந்தாற்போல் இன்னொரு சிறிய அறையும் இருந்தது. ஒரு பக்கத்தில் அறையை உஷ்ணப் படுத்துவதற்காக, நெருப்பு உண்டாக்க ஒரு இடம் இருந்தது. அறை ஒரேயடியாக 'ஜில்'லென்று இருந்தது.

"ஒரு கணத்தில் நான் இங்கே உஷ்ணப்படுத்தி விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே ஸ்ரீமதி

ஹார்வி வெளியே போய் ஒரு வாளியை எடுத்து வந்தார். பளபளவென்று அது சுத்தமாக இருந்தது. அதிலிருந்து அவர் அடுப்பில் கரியை எடுத்துப் போட்டதும் நான் உண்மையிலேயே ஆச்சரியப்பட்டேன். அதை என்னால் வெளியிடாமலிருக்க முடியவில்லை.

"மிஸஸ் ஹார்வி! நீங்கள் உங்கள் சாமான்களை வைத்துக் கொண்டிருக்கும் அழகையும், உங்களுடைய சுத்தத்தையும் பார்த்தால் எனக்கு ஒரு பக்கம் ஆச்சரியமாக இருக்கிறது. இன்னொரு பக்கம் பயமாக இருக்கிறது" என்றேன்.

நான் கூறியதைக் கேட்டு அவருடைய முகம் மலர்ந்ததைப் பார்த்ததும், வீட்டை நன்றாக வைத்துக் கொள்வதில் அவருக்கு எவ்வளவு பெருமை என்பது புலப்பட்டது. இதை நான் தெரிந்து கொண்டது பின்னால் எனக்கு ரொம்பச் சௌகரியமாக இருந்தது. அவருடைய திறமையைப் பற்றிப் புகழ்ந்து விட்டு நான் எத்தனையோ காரியங்களைச் சாதித்துக் கொண்டிருக்கிறேன்.

"என்ன பயம்?" என்று கேட்டார்.

"உங்களுடைய அழகான வீட்டில் நான் ஒருவன் அவலக்ஷணமாக வந்து சேர்ந்து விட்டேனே என்றுதான் பயமாயிருக்கிறது."

ஏதோ பிரமாதமான ஹாஸ்யத்தைக் கேட்டு விட்டது போல் அவர் சிரித்துக் கொண்டே என் அருகில் வந்து மெல்லிய குரலில், "இல்லை! இல்லை! நீங்கள் என் வீட்டை இன்னும் அழகு படுத்தவே செய்கிறீர்கள். பக்கத்து அறையில் ஒரு ஜெர்மனிக்காரன் இருக்கிறான். அவன்தான் என்னுடைய வீட்டின் அழகைக் கெடுத்துக் கொண்டிருக்கிறான். எனக்கென்னவோ இந்திய மாணவர்களைத்தான் ரொம்பப் பிடிக்கிறது. மற்றவர்களாவது தேவலை. ஆனால், இந்த ஜெர்மனிக்காரர்களை எனக்கு அடியோடு பிடிப்பதில்லை" என்று கூறினார்.

எனக்கு உடனே ஒரு ஊக்கம் பிறந்தது. அந்த ஜெர்மனி தேசத்து மாணவனுடன் பழக்கம் செய்து கொள்ள வேண்டுமென்று ஆவலாக இருந்தது. ஆனால், அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. நான் 'அந்த மாணவன் எப்படி இருப்பான் ? என்ன படித்துக்கொண்டிருப்பான் ?' என்று யோசித்துக்கொண்டிருக்கும்போதே ஸ்ரீமதி ஹார்வி நன்றாக நெருப்புப் பற்றவைத்து விட்டார். இருண்டிருந்த அறையில் ஒளி விளையாடத் தொடங்கியது. நெருப்பின் ஒளியில் ஸ்ரீமதி ஹார்வியின் சிவந்த தலை இன்னும் சிவப்பாகத் தெரிந்தது.

அவர் என்னைப் பார்த்து, "எனக்குப் பழைய காலத்து விஷயங்கள்தான் பிடிக்கின்றன. நெருப்பை மூட்டியதும் இங்கே என்ன பிரகாசமாக இருக்கிறது பார்த்தீர்களா ? அந்த அறையே எவ்வளவு அழகாக இருக்கிறது. நெருப்புக் கொழுந்துகள் எரிவதைப் பார்த்துக் கொண்டே நாம் பகற்கனவு காணும் இன்பம் வேறு எதிலாவது கிடைக்குமா ? ஆனால், இப்போதெல்லாம் எதற்காகவோ சிலர் வாயு அடுப்பு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அது பார்க்க அழகாகவா இருக்கிறது?" என்று கேட்டார்.

எனக்கு வாயு அடுப்பைப் பற்றி என்ன தெரியும் ? ஆனாலும், ஸ்ரீமதி ஹார்வி கூறியதை நான் முழு மனத்துடன் ஆமோதித்தேன். "ஆமாம், ஆமாம். இந்த நெருப்பு எரிவதைப் பார்க்கும்போது இந்தியாவிலிருப்பது போலவே எனக்குத் தோன்றுகிறது. எனக்கு வீட்டை விட்டு வெளி தேசத்துக்கு வந்திருக்கிறோம் என்றே தோன்றவில்லை" என்று கூறினேன்.

"ஆமாம். நீங்கள் வேண்டுமானாலும் பாருங்கள், உங்களுக்குச் சாப்பாடெல்லாம் நான் இந்திய முறையிலேயே சமைத்துப் போடுகிறேன். இங்கே வேண்டிய

காய்கறிகள் கிடைக்கும். தக்காளி, உருளைக்கிழங்கு, வெங்காயம், பூண்டு .....” என்று அடுக்கினர்.

‘ அட கடவுளே ! இங்கு பூண்டுகூடக் கிடைக்குமா ?’ என்று மனத்துக்குள் வருத்தப்பட்டேன். எனக்குப் பூண்டின் வாசனையே பிடிக்காது.

பிறகு, “ நீங்கள் ரொம்பச் சிரமப்பட வேண்டாம் மிஸஸ் ஹார்வி ! எனக்குச் சுத்த சைவ உணவு கொடுத்தால் போதும். அதில் உங்களுக்குத் தொந்தரவு ஒன்றும் இருக்காதே” என்றேன்.

“தொந்தரவா ? அதெல்லாம் கிடையவே கிடையாது. உங்களுக்கு முன்னல் இங்கே இருந்த ஸ்ரீநிவாஸனுக்கு நான் சுத்த சைவ உணவுதான் தயார் செய்து கொடுத்தேன். நான் இந்தியச் சமையல் செய்யக்கூடக் கற்றுக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள், ராங் டு ராய். அந்த நாற்காலியை அப்படி நகத்தால் கீருதீர்கள். அதன்மீது கோடுகள் விழுந்துவிடும். என்ன சொல்லிக்கொண்டிருந்தேன் ? ஆமாம். சமையலைப் பற்றிச் சொன்னேன். இப்பொழுதே போய் நான் நல்ல சூடான மணமான ‘ டீ ’ கொஞ்சம் கொண்டு வருகிறேன். இந்த அறை உஷ்ணமாகி விட்டது. இனிமேல் உள்ளே சூடேற வேண்டும். நன்ருகப் படிக்கவேண்டுமல்லவா ? முன்பு ஸ்ரீனிவாஸன்கூட நான் ‘டீ’ போட்டுக் கொடுத்தால் தான் படிக்க ஓடுகிறது. என்று கூறுவார். ரொம்ப நல்லவர். ஆனல், சுத்தமாகவே இருக்கவே தெரியாது. எங்கு பார்த்தாலும் ஆரஞ்சுத் தோல்களைப் போட்டு வைப்பார். பூட்ஸிலிருக்கும் மண்ணைத் துடைக்காமல் உள்ளேயெல்லாம் வந்து வீட்டையெல்லாம் மண்ணுக்கி விடுவார். (நான் என்னுடைய பூட்ஸைப் பரிதாபமாகப் பார்த்தேன் !) அவர் வீட்டை விட்டுக் கிளம்பிய பிறகும், வந்த பிறகும் எனக்கு ஒரு மணி நேரம் வேலை இருக்கும் ”

என்று மூச்சுவிடாமல் பேசிவிட்டு வெளியே சென்றார். மழை பெய்து ஓய்ந்த மாதிரி இருந்தது எனக்கு.

அவர் சென்றதும், ' இவர் இவ்வளவு கண்டிப்புக் காரராக இருக்கிறாரே, எப்படித்தான் இரண்டு வருஷங்கள் இந்த வீட்டில் காலந்தள்ளப் போகிறோம் ?' என்று எனக்குக் கவலையாக இருந்தது. உரலுக்குள் தலையிட்டுக் கொண்டாகிவிட்டது! இனிமேல் உலக்கைக்குப் பயந்தால் முடியுமா என்று சமாதானப்படுத்திக் கொண்டேன்.

" தேனீர் " வந்தது. நல்லவேளையாக நன்றாகவே இருந்தது. அதைச் சாப்பிடும்போது வேறு பேசிப் பேசி என்னைத் திணறடித்து விட்டார் மிஸஸ் ஹார்வி.

நான் அந்த ஜெர்மனி தேசத்து மாணவனைப் பார்க்க விரும்பினேன். ஆனால் அவரிடம் அதைச் சொல்லத் தயக்கமாக இருந்தது. அவனைப் பற்றிப் பேசும்போதே அவர் எவ்வளவு வெறுப்புடன் பேசுகிறார் ?

கடைசியில் துணிந்து, " பக்கத்து அறையில் இருப் பவரின் பெயர் என்ன ?" என்று கேட்டு விட்டேன்.

" அவர் பெயர் ஸ்டிபான் ஹிம்மெல். கவான்டிஷ் ஆராய்ச்சி நிலையத்தில் ஆராய்ச்சி செய்யும் மாணவர். எனக்கு இந்த ஆராய்ச்சி செய்யும் மாணவர்களைப் பிடிப்பதே இல்லை. இலக்கியமோ அல்லது என்ஜினீயரிங் படிப்போ படிக்கிறவர்களைத்தான் எனக்குப் பிடிக்கிறது. ஆராய்ச்சி செய்து என்ன கண்டு பிடித்துவிடப் போகி றார்கள் ? இன்னும் அழிவுக்குத்தான் வழி தேடுகிறார்கள் " என்று கூறினார்.

" அப்படிச் சொல்லிவிட முடியுமா ? உலகத்தில் இப்போது மோட்டாரும், விமானமும், பெரிய பெரிய தொழிற்சாலைகளும் நடப்பது ஆராய்ச்சி செய்வதினால் தானே ?" என்றேன்.

" ஏரோப்ளேன் கண்டு பிடித்திருக்காவிட்டால் என்ன குறைந்து போய்விடும் ? உலகம் இன்னும் கொஞ்சம் நிம்மதியாக இருந்திருக்கும். என் சகோதரர்கள் எல்லாரும் யுத்தத்தில் இறந்து போகாமல் இருந்திருப்பார்கள் !'' என்றார்.

எனக்கு உடனே அவருக்கு ஜெர்மனிக்காரர்கள்மீது ஏன் கோபம் என்பது புரிந்துவிட்டது. யுத்தம் நடந்த போது (அதாவது முதல் உலக மகா யுத்தம் நடந்தபோது) அவருடைய சகோதரர்கள் ஜெர்மானியரோடு சண்டை செய்து இறந்திருக்க வேண்டும். நான் ஊகித்தது சரிதானென்று உடனே தெரிந்தது.

" எனக்கு இரண்டு அண்ணன்மார்களும், ஒரு தம்பியும் இருந்தார்கள். மூன்று பேரும் யுத்தம் நடந்த போது பட்டாளத்தில் சேர்ந்து யுத்தத்துக்குப் போனார்கள். எனக்கு அப்போது கல்யாணமாகியிருக்கவில்லை. என் தந்தைக்கு வயதாகி விட்டது. மூன்று பேரும் யுத்தத்தில் இறந்து போய்விட்டார்கள். என் தகப்பனார் மனம் உடைந்து இறந்து போனார். நானும் என் தாயாரும் பட்ட கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமல்ல. பிறகு நான் ஹார்வியைக் கல்யாணம் செய்துகொண்டேன். அதன் பிறகுதான் நிம்மதியாக வாழ்கிறேன் '' என்றார்.

எனக்கு முதன் முறையாக அவருடைய கணவரைப் பற்றி நான் ஒன்றும் கேட்கவில்லை என்பது அப்பொழுது தான் மூளையில் உறைத்தது.

" மிஸ்டர் ஹார்வி இப்போது வேலைக்குப் போயிருப்பார் அல்லவா ?'' என்று அவரிடம் கேட்டேன்.

" ஆம். அவர் லண்டனுக்குச் சாமான்களை ஏற்றிச் செல்லும் லாரியை ஓட்டிக்கொண்டு போயிருக்கிறார். நாளை தான் திரும்பி வருவார் '' என்றார்.

பிறகு நான் ஸ்டிபான் ஹிம்மெல்லைப் பார்த்துப் பேச விரும்புவதாகக் கூறினேன். மிஸஸ் ஹார்வி அரை

மனத்துடன் என்னைப் பக்கத்து அறைக்கு அழைத்துச் சென்றார்.

ஸ்டிபான் ஹிம்மெலுடன் நான் வெகு சீக்கிரத்தில் பழகிவிட்டேன். அவனுடன் பழகப் பழக அவனுடைய தேச பக்தியும், வீர உணர்ச்சியும் புலனாகத் தொடங்கிற்று. அவனும் நானும் ஒரே வீட்டிலிருந்தது எனக்கு எவ்வளவோ பயன் அளித்தது. அதுவரை எனக்குத் தேசத் தொண்டு செய்வது முதலியவற்றில் அதிக ஊக்கம் இருந்ததில்லை. அதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று நினைத்திருந்தேன். ஹிம்மெலுடைய நட்பின் பயனாக ஒவ்வொருவருக்கும் தன் தேசத்தின் வளர்ச்சியில் எவ்வளவு பொறுப்பும் கடமையும் உண்டென்பதைத் தெரிந்து கொண்டேன். இத்தனை நாட்களாய் இதைத் தெரிந்து கொள்ளாமலிருந்து விட்டோமே என்று அவமானமாகக்கூட இருந்தது.

# 32. பனி நீங்கியது

நான் கல்லூரியில் சேர்ந்த ஒரு வாரத்துக்கெல்லாம் என்னுடைய உபாத்தியாயரான பேராசிரியர் மைக்கேல் ஆண்ட்ரூஸிடம் ஒரு கட்டுரை எழுதிக் கொண்டுபோய்க் கொடுத்தேன்.

பேராசிரியர் ஆண்ட்ரூஸ் வயதானவர். முகம் குழந்தையைப்போல் களங்கமற்று இருக்கும். ஆனால் அவருடைய கண்களில் அறிவொளி வீசும். அவரைப் பார்த்த உடனேயே எனக்கு ரொம்ப மரியாதையும், அன்பும் ஏற்பட்டன. அவரிடம் என் கட்டுரையைக் கொடுத்துவிட்டுப் பேசிக் கொண்டிருந்தேன்.

பேச்சு முதலில் இங்கிலாந்தைப்பற்றித் தொடங்கி இந்தியா வரையில் சென்றது. பிறகு அவர் என்னைப்

பற்றிக் கேட்டார். நான் தாய் தந்தை இல்லாதவன் என்று தெரிந்து அனுதாபத்துடன் பேசினர். ஆகவே நானும் மனம் விட்டுப் பேசினேன்.

அவர் பரிவோடு, " உலகத்தில் கஷ்டங்கள் அனுபவிக்கும்போதுதான் நமக்குப் பக்குவம் உண்டாகிறது. மனம் பண்படுகிறது. நமக்குச் சோதனைகள் வரும்போது கடவுள் நமக்கு நன்மை செய்கிருர் என்று சந்தோஷப்பட வேண்டும் " என்ருர்.

பிறகு என்னைத் தம் வீட்டுக்கு வரும்படி அழைத்தார். ஒரு பேராசிரியர் ஒரு மாணவனுடன் பழகுவது போலவே அவர் பழகவில்லை. பொதுவாகவே கேம்பிரிட்ஜில் அது எனக்கு வியப்பாக இருந்தது. மாணவர்களும், ஆசிரியர்களும் ரொம்ப நெருங்கிப் பழகுகிருர்கள். இந்தியாவில் இருப்பது போல் அவர்கள் தயங்குவதில்லை.

பிறகு, " நீ ஐ. ஸி. எஸ். பரீட்சை எழுதப் போவதாகச் சொன்னுயே. அதற்கு வேண்டிய புத்தகங்களெல்லாம் படிக்கிருயா ? என்ன ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிருய் ?" என்று அவர் என்னிடம்

" நான்தான் சரித்திர ஆராய்ச்சியைக் கல்லூரியில் பாடமாக எடுத்துக் கொண்டிருக்கிறேனே ? ஆகவே, அதையே ஐ. ஸி. எஸ். பரீட்சையிலும் எழுதி விடுவேன். அரவிந்திடம் இப்போது வங்காள பாஷை கற்றுக் கொள்கிறேன். பரீட்சை எழுதுவதற்கு முன்னல் லண்டனில் கொஞ்சநாள் யாரிடமாவது தீவிரமாக வங்காள பாஷையைக் கற்றுக் கொள்ளலாமென்று உத்தேசம். மற்றப்படி பொதுவான விஷயங்களுக்கு வாசகசாலைகளில் நிறையப் புத்தகங்கள் படித்து விருத்தி செய்து கொள்கிறேன்."

" உன் ஆங்கில நடை நன்ருக இருக்கிறது. அதனல் கட்டுரை எழுத நீ சிரமப்படமாட்டாய் என்று நினைக்

கிறேன். நீ இன்னும் எழுதிப் பழகினால் சரியாகிவிடும். உலக விஷயங்கள் எல்லாவற்றையும் நிறையப் பத்திரிகைகளும், புத்தகங்களும் படித்துத் தெரிந்து கொள். ஐ. ஸி. எஸ். பரீட்சைக்கு என்னவிதமான கேள்விகள் கேட்பார்களென்று சொல்ல முடியாது" என்று கூறினார்.

நான் அவருடைய யோசனைகளுக்கு நன்றி தெரிவித்து விட்டுக் கிளம்பினேன். மறுபடியும் அவர் தம் வீட்டுக்கு வரும்படி கூறினார்.

இரண்டு நாட்கள் கழித்து நான் அவர் வீட்டுக்குச் சென்றேன். நான் சென்றபோது அவர் வீட்டிலில்லை. அவரது மனைவியாரிடம் நான் யாரென்று தெரிவித்தேன்.

"இப்போது வந்துவிடுவார். உள்ளே வா. உனக்காக என் மகளும், மகனும் காத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறிக் கொண்டே உள்ளே அழைத்துச் சென்றார்.

மிஸ். மிரியம் ஆன்ட்ரூஸும், மிஸ்டர் ஜான் ஆன்ட்ரூஸும் எனக்கு அன்றே மிகவும் சிநேகமாகி விட்டார்கள். இரண்டு பேரும் என்னை மாற்றி மாற்றி இந்தியாவைப் பற்றிக் கேள்விகள் கேட்டுத் துளைத்து விட்டார்கள். அவர்களுடைய மாமா இந்தியாவில் வேலை பார்த்தவராம். அவர் இந்தியாவைப் பற்றித் தப்புந் தவறுமாகப் பல விஷயங்கள் கூறியிருந்தார். அவற்றையெல்லாம் கேட்டபோது எனக்கு ரொம்ப வேதனையாக இருந்தது.

அதிலும் ஒரு பேராசிரியரின் மகனும், மகளும், "'இந்தியாவில் நாகப்பாம்புகள் எங்கு பார்த்தாலும் சுற்றிக்கொண்டிருக்குமாமே? யாராவது யோகிகளும், சாமியார்களும் மந்திர வித்தைகள் செய்து கொண்டே இருப்பார்களாமே? முள்ளின் மீது படுத்துக் கொள்வார்களாமே? நெருப்பை மிதிப்பார்களாமே?" என்பது

போன்ற கேள்விகளைக் கேட்டது ரொம்பச் சங்கடமாக இருந்தது. இந்தியா என்றதும் முள் படுக்கையும், நல்லபாம்புகளும்தான் அவர்களுக்கு ஞாபகம் வருகின்றன என்றால் கொஞ்சம் கஷ்டமாக இல்லையா? அதற்கும் ஒரு படி மேலே போனால் சுதேச சமஸ்தான மன்னர்களைப் பற்றி அவர்களுக்குத் தெரிந்து இருந்தது. அவர்களுடைய மாமாவுக்குச் சில மன்னர்கள் புலித் தோல்களும், யானைத் தந்தங்களும் பரிசளித்திருந்தார்களாம். அதனால் அவர்களுக்கு இந்தியாவில் யானைகளும், புலிகளும், சுதேச சமஸ்தான மன்னர்களும் உண்டு என்பது தெரிந்

அன்று நான் அவர்கள் வீட்டிலிருந்து புறப்பட்ட போது சற்று மனக் குறையுடன்தான் புறப்பட்டேன். அவர்கள் எல்லோரும் ரொம்ப நல்லவர்களென்று எனக்குத் தெரிந்தது. ஆயினும் இந்தியாவைப் பற்றி அவர்கள் கொண்டிருந்த அபிப்பிராயங்கள் என் மனத்தைப் புண்படுத்தின. நான் அரசியல் வாழ்க்கையில் ஈடுபடாதவன்தான். ஆனாலும், நம் தேசத்தின் மீது எனக்கு ரொம்பப் பாசம் உண்டு. நமது இலக்கியச் செல்வங்களைப் பற்றியும், நமது இந்து மதத்தின் சிறப்பைப் பற்றியும் ரொம்பப் பெருமை உண்டு. மிரியமும், ஜானும் இவைகளையெல்லாம் கொஞ்சங்கூடத் தெரிந்து கொள்ளாமலிருந்தது எனக்கு வேதனையாக இருந்தது.

நான் வீடு திரும்பியபோது ஸ்டிபான் ஹிம்மெலும் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும், “ஹல்லோ! டு ராய்! இந்தக் குளிரில் நீ இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்” என்று கூறிக் கொண்டே மாடிப்படி ஏறிச் சென்றான். நானும் அவன் பின்னாலேயே சென்றேன். என் அறையில் நுழையப் போகும் சமயத்தில், “இங்கு வாயேன். நெருப்பு எரிகிறது. உஷ்ணப்படுத்திக்

கொள்ளலாம்" என்று கூப்பிட்டான். நானும் அவனைத் தொடர்ந்து அவன் அறைக்குச் சென்றேன்.

ஹிம்மெலுடைய அறையே ஒரு ஆராய்ச்சிச் சாலையாக இருந்தது. ஏதேதோ விசித்திரமான வடிவமுடைய கண்ணாடிக் குழாய்களும், பாட்டில்களும், ஜாடிகளும் அறை நிறைய அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒரு கணம்கூட அவன் சும்மா இருக்கமாட்டான்.

"நீ இந்த ஆராய்ச்சி முடிந்ததும் என்ன செய்யப் போகிறாய்?" என்று அவனைக் கேட்டேன்.



"நான் என் தேசத்துக்குப் போய் சேவை செய்வேன். எங்கள் நாட்டுக்கு இப்போது விஞ் ஞானிகள்தான் ரொம்ப முக்கியம். ஜெர்மனி, யுத்தத்தின்போது பட்ட கஷ்டங்களுக்குக் கணக்கு வழக்கு இல்லை. இப்போது நாங்கள் எங்கள் தேசத்தைப் புதிதாக நிர்மாணித்துக் கொண்டு வருகிறோம். அதற்கு நான் செய்யக் கூடிய சேவை இதுதான்" என்று கூறினான்.

"இவ்வளவு உயர்வாக உங்கள் நாட்டைப்பற்றிப் பேசுகிறாயே? உங்கள் தேசத்தில் யூதர்களை மட்டும் அவ்வளவு கஷ்டப்படுத்துகிறாரே ஹிட்லர். அது நியாயமா? அவர்கள் மட்டும் மனிதர்கள் இல்லையா?" என்று கேட்டேன்.

"உண்மைதான். ஆனால், யூதர்களால் நாங்கள் அடைந்திருக்கும் தொல்லைகளை நீங்கள் உணர முடியாது. ஜெர்மனியின் பணத்தையெல்லாம் அவர்களே எப் போதும் சுரண்டிக்கொண்டு விடுகிறார்கள். நியாயமாகக் கேட்டால் கொடுப்பதில்லை. எல்லா விதங்களிலும் ஜனங்களை ஏமாற்றிப் பணம் சேர்த்துவிடுகிறார்கள். ஹிட்லர் அவர்களை ஒழிப்பதனால் ஜெர்மனிக்கு மொத்

தத்தில் நல்லதுதான். யூதர்களைச் சும்மா விட்டுவிட்டால் ஜெர்மனிக்கு மேலும் கெடுதல்கள் ஏற்பட்டுக் கொண்டே இருக்குமே. இரண்டு கெடுதல்களில் எது குறைவான கெடுதல் என்றுதானே நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. உங்கள் தேசத்தில் நீங்களும்தான் சுதந்திரத்துக்காகப் போராடுகிறீர்கள். போராடினால் ஒன்றுமறியாத ஜனங்கள் சில சமயம் மடிய நேரிடுகிறது. அதனால் சுதந்திரத்துக் காகப் போராடுவது தவறா ?"

" அப்படி நான் சொல்லவில்லை. எங்கள் மஹாத்மாஜி அஹிம்சா தத்துவம் போதிக்கிறார். ஆனால், ஹிட்லர் சர்வாதிகாரத்தையல்லவா செலுத்தி வருகிறார் ? சர்வாதி காரம் குடியரசாக முடியுமா ?"

" உங்கள் தேசத்துக்கு அது சரியாக இருக்கலாம். இந்தியாவிடம் எனக்கு மிகுந்த பற்றுதல் உண்டு. ஆத்மீக வளர்ச்சியில் இந்தியா ரொம்ப உயர்ந்து விட்டது. ஆகவே, அஹிம்சா தத்துவம் இந்தியாவுக்குப் பொருந்தும். எங்கள் நாட்டில் அப்படி இல்லையே ! ஹிட்லரால்தான் எங்கள் நாடு மறுபடியும் தேசமாக உருவாகி இருக்கிறது. அவருடைய கண்டிப்பினால்தான் எல்லோரும் சரியாக வேலை செய்கிறார்கள். இல்லாவிட்டால் எங்கள் தேசம் தேசமாகவே இருக்காது. மேலும், காந்திஜி தெய்விக புருஷர் " என்றான்.

எனக்கு அவன் அவ்வளவு தூரம் இந்தியாவைப் பற்றித் தெரிந்து கொண்டிருப்பதும், காந்திமகானைப் பற்றி மரியாதையுடன் பேசியதும் மிகுந்த சந்தோஷத்தை அளித்தன ஆகவே நான் ஆசிரியர் வீட்டு அனுபவத்தை அவனிடம் கூறினேன்.

" இங்கு அநேகமாக எல்லோரும் அப்படித்தான் இருப்பார்கள், துரை. இவர்களுக்கு மற்ற நாடுகளை ஆண்டு வழக்கமாகிப் போய் விட்டது. ஆகவே மற்ற

தேசங்களைப் பற்றி எவ்வளவு கொஞ்சமாகத் தெரிந்து கொள்ள முடியுமோ அவ்வளவு குறைவாகத்தான் தெரிந்து கொள்வார்கள்.''

" ஆமாம் ! உனக்கு எப்படி இந்தியாவின் அரசியலைப் பற்றியும், இந்தியத் தலைவர்களைப் பற்றியும் தெரியும் ?''

" நான் தவருமல் உலக விவகாரங்களைப் படிக்கும் வழக்கமுண்டு. மேலும் இந்தியா ஒரு பெரிய தேசம் அல்லவா ? பகவத் கீதை ஒன்று போதுமே, அதை நிரூபிக்க " என்ருன்.



" நீ பகவத் கீதை படித்திருக்கிருயா, என்ன ? உனக்கு சம்ஸ்க்ருதம் நன்ருகத் தெரியுமா ?''

" எனக்கு ஸம்ஸ்க்ருதம் அதிகமாகத் தெரியாது. இப்போது கல்லூரியில் படிக்கிறேன். ஆனல், பகவத் கீதைக்கு ஜெர்மன் பாஷையில் மொழிபெயர்ப்பு இருக்கிறது. அதை முழுதும் படித்திருக்கிறேன் " என்ருன்.

எனக்கு ஹிம்மெலின் பேச்சு ஆறுதல் அளித்தது. அவனுக்கு இந்தியாவின் மீது இருந்த நன்மதிப்பு எனக்கு ஒரு தென்பை அளித்தது. ஜெர்மனியில் யூதர்களைக் கொடுமைப்படுத்துவதற்கு அவன் ஆதரவாக இருப்பது கூட மறந்துபோய் விட்டது.

ஹிம்மெலுடன் பேசிவிட்டு நான் என் அறைக்குச் சென்றேன். ஸ்ரீமதி ஹார்வி அங்கே ஏதோ சுத்தம் செய்து கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும், " ரொம்ப நேரமாய் ஹிம்மெலின் அறையில் பேசிக் கொண்டு இருந்தீர்கள் போலிருக்கிறதே !'' என்ருர்.

" ஆமாம், அவன் எவ்வளவு கெட்டிக்காரன் தெரியுமா ? அவனுக்கு அசாத்ய மூளை !'' என்றேன்.

" எனக்கென்னமோ இந்த வெறும் மூளை வேலை செய்கிறவர்களை அவ்வளவாகப் பிடிப்பதில்லை. அவ

களுக்கு இதயமே இருப்பதில்லை. வெறும் அறிவுமட்டும் இருந்து என்ன பிரயோஜனம் ? அதை உபயோகிக்க நல்ல வழி தெரிய வேண்டாமா ? இதயம் இல்லாதவர் களுக்கு அறிவு எதற்கு ? இந்த ஜெர்மனி தேசத்து மனிதர்களுக்கே மூளை மட்டும் உண்டு. இதயமே கிடையாது.''

நான் சிரித்துவிட்டுப் பேசாமலிருந்து விட்டேன்.

மறுபடியும் நான் ஜானைப் பார்த்தபோது, அவன் என்னை மறுபடியும் வீட்டுக்கு வரும்படி கூப்பிட்டான். இரண்டாவது தடவை பேச்சு இன்னும் சுவாரஸ்யமாக இருந்தது. நாலைந்து தடவைகள் அவர்களோடு பழகிய பிறகு எனக்கு அவர்களையும் ரொம்பப் பிடித்து விட்டது. இந்தியாவைப் பற்றி அவர்கள் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லையென்பதும், அவர்கள் ஆட்சித் திமிறினால் பேசவில்லை என்பதும் தெரிந்த பிறகு ரொம்ப நிம்மதி ஏற்பட்டது. ஜான் எனக்குப் பல உதவிகள் செய்தான்.

கேம்பிரிட்ஜ் முழுவதையும் சுற்றிக் காட்டினான். அவனும் படித்துக் கொண்டிருந்தபடியால் எனக்கு ரொம்பச் சௌகரியமாக இருந்தது. எனக்குப் பலரை அறிமுகம் செய்து வைத்தான். மிரியமும் படித்துக் கொண்டிந்தாள். அவளும் ரொம்பப் பிரியமாகப் பழகினாள். என்னை இருவருமாக 'வெஸ்லீ ஹவுஸ்' தேவாலயத்துக்கு ஒரு நாள் அழைத்துச் சென்று காண்பித்தார்கள்.

ஒரு நாள் நான் அவர்கள் வீட்டுக்குப் போயிருந்த போது ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ் என்னைப் பார்த்து, " உங்கள் பெயர் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. சின்னப் பெயராக ஒன்று சொல்லுங்களேன். ஞாபகம் வைத்துக் கொள்ளச் சௌகரியமாக இருக்கும் " என்றார்.

" என் பெயரே ரொம்பச் சின்னதுதானே ? வேண்டு மானால் ' ரை ' என்று கூப்பிடுங்கள் " என்றேன்.

அது முதல் அவர்கள் எல்லோரும் என்னை, " மிஸ்டர் ராய் " என்றே அழைக்கத் தொடங்கினர்கள். முதலில் வேடிக்கையாக ஆரம்பித்துப் பிறகு அதுவே நிலைத்து விட்டது. அரவிந்த் கூட என்னைப் பார்த்து, " நான் ஒரு வங்காளி இருக்கும்போது உன்னை இப்படி வங்காளியாக்கி விட்டார்களே " என்று பரிகாசம் செய்தான். ஹிம்மெலும் என்னை ராய் என்று அழைக்க ஆரம்பித்தான். ஆகவே மிஸஸ் ஹார்வியும் அப்பெயரையே கூப்பிடத் தொடங்கினர்.

இதற்குள் பனிகாலம் நீங்கி வஸந்த ருது உல்லாச மாகப் பவனி வரத் தொடங்கியது.

# 33. வசந்தம் வந்தது !

நானும் சிறு வயது முதல் நம் நாட்டில் பருவங்கள் மாறுவதைப் பார்த்திருக்கிறேன். ஆனல், சீமையில் குளிர் காலம் நீங்கி வஸந்த காலம் வருகிறதே அதன் அழகுக்கு ஈடாக எதையும் வைத்துக் கூறவே முடியாது.

குச்சி குச்சியாக மழையும், மாவு மாவாகப் பனியும் பெய்து கொண்டிருக்கும் குளிர்காலம் ஒருநாள் திடீரென்று போய் விடும். முதன் முதலில் " பனித் துளி " என்ற பெயருள்ள வெண்ணிற புஷ்பங்கள் தலையை நீட்டி எட்டிப் பார்க்கும். இயற்கை அன்னையின் தூதர்கள் இந்தப் புஷ்பங்கள் என்று நான் நினைக்கிறேன். பனி முழுதும் கரைந்து விட்டதா ? இனிமேல் எல்லா விதைகளும் முளைக்கலாமா ? எல்லாச் செடிகளும் பூக்க ஆரம் பிக்கலாமா ? என்று தெரிந்துகொள்வதற்காக இந்தப் பனித் துளியை முதன் முதலில் இயற்கை அன்னை வெளியே அனுப்பிப் பார்க்கச் சொல்லுவாள் போலும்.

இவை புஷ்பிக்க ஆரம்பித்த பத்து நாட்களுக்கெல்லாம் வான வில்லின் அழகிய வர்ண ஜாலங்களைக் குழைத்துப் பூசிய விதம் விதமான புஷ்பங்களைப் பூமிதேவி வெளியே அனுப்புவாள். மஞ்சளில்தான் எத்தனை வித்தியாசமான மஞ்சள்கள் ? ' டாபிடில் ' மலர் ஒருவித மஞ்சள். 'பட்டர் கப்' மலர் இன்னொரு விதமான மஞ்சள். சிவப்பில்தான் எத்தனை விதங்கள் ! 'பாப்பி' புஷ்பத்தின் சிவந்த இதழ்களும், கறுத்த உட்புறமும் பார்க்கத் தெவிட்டாத அற்புதம். ரோஜாக்களில் விதம் விதமான சிவப்புக்கள். ' பிரிம்ரோஸ் ' என்னும் புஷ்பம்தான் எத்தனை அழகு ! ' ப்ளூ பெல் ' என்னும் புஷ்பம் பார்க்க ஒரு சின்னஞ் சிறு மணியைப் போலவே இருக்கும்.

தன் மணாளனைப் பார்க்கச் செல்லும் மங்கை தன்னைக் கவனத்துடன் அலங்கரித்துக் கொள்வதுபோல் பூமிதேவி வஸந்த காலத்தில் புஷ்ப ஆபரணங்களாலும், பசுமை நிற ஆடைகளாலும் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள் என்று தோன்றும்.

இளவேனிற் காலத்தில் மன்மதனும் ரதியும் மலர்க் கணைகளுடன் பவனி வருவார்களாம். அது உண்மையோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால், இந்துவைப் பற்றிய ஞாபகம் எனக்கு அளவிலாத வேதனையை அளித்தது என்பது மட்டும் உண்மை.

' ஸெயின்ட் ஜான் ' கல்லூரிக்குப் பின்னால் " ப்ரிட்ஜ் ஆப் ஸை " என்று ஒரு அழகிய பாலம் இருக்கிறது. கேம்பிரிட்ஜில் எல்லாக் கல்லூரிகளும் அனேகமாக ' கேம் ' நதியின் கரையில் கட்டப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்குப் பின்னாலும் நதியைக் கடப்பதற்குப் பாலம் இருக்கும். கேம் நதியில் எப்போதும் யாராவது படகு ஓட்டிப் போய்க்கொண்டே இருப்பார்கள். மாணவர்களுக்குப் படகு ஓட்டுவது என்றால் தனி உற்சாகம்.

வஸந்த காலத்தில் அந்தக் காட்சியின் அழகை வர்ணிக்கவே முடியாது. " ப்ரிட்ஜ் ஆப் ஸை " பாலத்திலிருந்து பார்த்தால் கேம் நதியின் இரு கரைகளும் மிக அழகாக இருக்கும். " வீப்பிங் வில்லோ " என்ற மரங்களும், " பீச் " மரங்களும், " எல்ம் " மரங்களும் ஓங்கி வளர்ந்திருக்கும். நானும் ஹிம்மெல்லும் இந்தப் பாலத்தின் மீது தனியாக நடந்து கொண்டிருந்தோம்.

" எத்தனை அழகான பாலம் பார்த்தாயா ? இதற்கு ஏன் இப்படி ஒரு விசித்திரமான பெயர் வைத்திருக்கிருர்கள் என்று தெரியவில்லை. பெருமூச்சுப் பாலம் என்ருல் என்ன பொருள் ?" என்று ஹிம்மெல்லைக் கேட்டேன்.

" இது தெரியாதா உனக்கு ? ' வெனிஸ் ' நகரத்தில் இதேபோல ஒரு பாலம் இருக்கிறது. அது சிறைக்குப் போகும் வழியில் இருக்கிறது. ஆகவே சிறை செல்லும் கைதிகள் பெருமூச்சு விட்டுக் கொண்டே அதைத் தாண்டிப் போவார்கள் என்று அந்தப் பெயர் வழங்கி வருகிறது. பார்ப்பதற்கு அதைப் போலவே இதுவும் இருப்பதால் இதற்கும் அதே பெயர் வந்துவிட்டது " என்ருன் ஹிம்மெல்.

நான் என்னையும் அறியாமல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்.

" பேஷ் ! பேஷ் ! இந்தப் பாலத்தில் வந்து நின்றதும் உனக்குக்கூடப் பெருமூச்சு வருகிறது. அது இந்தப் பெயரின் குற்றம் என்றுதான் நினைக்கிறேன். நீ இப்போது ஒன்றும் சிறைக்குப் போகவில்லையே ?" என்ருன்.

" இந்த ' வீப்பிங் வில்லோ ' மரங்களைப் பார்த்தால் தன்னையறியாமல் பெருமூச்சு வருகிறது. ஹிம்மெல் ! ஒரு பெண் தலையை விரித்துப் போட்டுக்கொண்டு விம்மி

அழுவது போல இல்லையா? அதைப் பார்க்கும்போது நெஞ்சில் வேதனை உண்டாகிறது" என்று கூறினேன்.

"ராய்! இது நல்ல அறிகுறி இல்லை. வீப்பிங் வில்லோவைப் பார்த்து இப்படிப் பெருமூச்சு விடுகிறவன் இங்கே படித்துப் பரீட்சை எழுத முடியாது. அதெல்லாம் காதலர் உலகத்துக்கு விட்டு விடுவோம். நாம் மாணவர்கள் உலகத்திலேயே இப்போது இருப்போம். அதற்கு வேண்டிய அவகாசம் பின்னால் கிடைக்கும்" என்றான் ஹிம்மெல் சிரித்துக் கொண்டே.

"இரண்டும் வேறு உலகமா? எனக்கு அப்படித் தெரியவில்லையே. இந்தக் கல்லூரிகளில் காதல் விவகாரத்தில் ஈடுபடாதவர்கள் நீ, நான், அரவிந்த் மூன்று பேர்களுந்தான் என்றல்லவா தோன்றுகிறது" என்றேன்.

ஹிம்மெல் மறுபடியும் சிரித்துவிட்டு, "எனக்குப் போதுமான காரணம் இருக்கிறது. ஒரு ஜெர்மனிக் காரனால் இங்கிலீஷ் பெண்களை விரும்ப முடியாது. இரண்டாவதாக ஏற்கனவேயே ஜெர்மனியில் நான் மணந்து கொள்ளப் போகும் பெண்ணைத் தேர்ந்தெடுத்து விட்டேன். இந்த இரண்டு காரணங்களும் போதாதா? ஆனால் உன் விஷயம் என்ன?" என்றான்.

"எனக்கும் அப்படித்தான் என்று வைத்துக் கொள்ளேன்."

"அப்படியா? ஆனால், இந்தியாவில் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வழக்கம் கிடையாதென்று கேள்விப்பட்டிருக்கிறேனே?"

"உண்மைதான். ஆனால், எனக்கு யார் தேர்ந்தெடுப்பார்கள்? நான்தான் பெற்றோர் இல்லாதவனாயிற்றே. ஆகவே, நானாகவே தீர்மானித்து விட்டேன்."

"அப்படியானால் பெண் வீட்டார் சம்மதித்து விட்டார்களா?"

" சம்மதித்து விட்டார்கள். அவளுடைய தாயார் என்னிடம் தன் மகளை மணந்துகொள்ள வேண்டுமென்று வாக்குறுதி பெற்றுக் கொண்டு இறந்து போனாள். அவளுடைய வளர்ப்புத் தந்தையும் சம்மதித்துவிட்டார். நான் திரும்பிச் சென்றதும் திருமணம் நடைபெறும்" என்றேன்.

" ஆனால் உனக்கு யாரிடமிருந்தும் கடிதம் வருவதே இல்லையே. உன் கல்லூரிப் பேராசிரியர் எழுதியதாக ஒரு தடவை கூறினாய். அதைத் தவிர வேறு ஏதும் கடிதம் வந்ததாக எனக்குத் தெரியவே இல்லையே. மிஸஸ். ஹார்விகூட ' உனக்கு வாரத்துக்கு மூன்று கடிதங்கள் வருகின்றன. ராய்க்கு அவன் வந்ததிலிருந்து ஒரு கடிதம்தான் வந்திருக்கிறது ' என்று கூறினார். ஏன் அப்படி ?" என்று கேட்டான்.

என் நெஞ்சத்தை எந்தக் கேள்வி உறுத்திக் கொண்டு இருந்ததோ அதை ஹிம்மெல் கேட்டு விட்டான். ' நான் தவறாமல் எழுதிக் கொண்டிருக் கிறேனே. ஏன் கடிதம் வரவில்லை ? உடம்பு சரியாக இல்லை என்று கப்பல் புறப்பட்ட தினத்தில் தங்கபாண்டிய னிடமிருந்து கடிதம் வந்ததே. அதன் பிறகு ஒன்றும் வரவில்லையே. இந்துமதிக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ ? ஒருவேளை இந்த உலகத்தை விட்டே போய் விட்டாளோ ? எனக்குத் தெரிவித்தால் மனமுடைந்து போய் விடுவேனென்று யாரும் கடிதமே எழுதாமலிருக் கிறார்களோ ? கடவுளே ! இது என்ன வேதனை ? இதை எப்படிப் பொறுத்துக் கொள்வது ? இன்னும் எத்தனை நாட்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும் ? தங்கபாண்டிய னாவது எழுதக் கூடாதா ?' என்றெல்லாம் ஒரே கேள்வி மயமாக உள்ளத்தில் எழுந்தது.

இவைகளையெல்லாம் என்னால் ஹிம்மெலிடம் விவரித்துக் கூற முடியவில்லை. " நாங்கள் கடிதம் எழுதிக்

கொள்ளும் வழக்கமில்லை" என்று கூறிச் சமாளித்துக் கொண்டேன். இந்த விஷயங்களையெல்லாம் அவனிடம் விவரித்துக் கூறினால் அழுகை வந்து விடுமோ என்று பயமாக இருந்தது. ரொம்பத் திடசாலியான ஹிம்மெலின் முன்பு நான் கோழை மாதிரி நடந்துகொள்ளச் சிறிதும் விரும்பவில்லை.

"உன் முகத்தைப் பார்த்தால் வஸந்த காலத்தில் உலாவ வந்தவனைப் போலவே இல்லையே. லண்டன் நகரில் மழைக் காலத்தில் தெருவில் நடந்து செல்லுபவன் முகம் மாதிரியல்லவா இருக்கிறது" என்றான் ஹிம்மெல்.

"இங்கே இப்படி நேரத்தை வீணாக அடிக்க வேண்டாம். போய்ப் பாடங்களைப் படிக்கலாம் வா" என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குக் கிளம்பினேன்.

"இன்று எனக்கு ஓய்வு இருக்கிறது. நாம் 'பிட்ஸ் வில்லியம்' பொருட்காட்சிசாலைக்குப் போகலாம். ரொம்ப முக்கியமான விஷயங்களையெல்லாம் அங்கே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அற்புதமான கலைப் பொக்கிஷங்களெல்லாம் அங்கே இருக்கின்றன. சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. வருகிறாயா?" என்றான் ஹிம்மெல்.

"இன்று ஒன்றும் வேண்டாம். வீட்டுக்குப் போகலாம் வா. எனக்குப் படிக்கவேண்டும்" என்று நான் வேகமாக நடந்தேன்.

ஹிம்மெல் என் கையைப் பிடித்துக்கொண்டு, "எனக்குத் தெரிந்துவிட்டது. உன் மனம் இந்தியாவுக்குப் போய்விட்டது. அதுதான் காரணம்" என்று கூறிக்கொண்டே வந்தான்.

வீட்டை அடைந்ததும் நேரே அறைக்குப் போய் என் படுக்கையில் விழுந்தேன். உடம்பெல்லாம் வலித்தது. தலையை வேறு வலித்தது. என்னென்னவோ கற்பனைகள்

எழுந்தன. இந்துமதி இறந்துவிட்டது போலவும், மந்திர மூர்த்தி கதறுவது போலவும் கற்பனை செய்து கொண்டேன்.

'இந்துவின் 'பீதி' நிறைந்த முகம் நான் குங்குமத் துறையிலிருந்து புறப்பட்ட போது தோன்றியதே. அவளுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படுமென்றுதான் அப்படித் தோன்றியதோ ? நான் மறுபடியும் ஒரு தடவை எப்படியாவது இந்துவைப் பார்த்துவிட்டுத்தான் வந் திருக்க வேண்டும். பார்க்காமல் வந்தது எவ்வளவு பெரிய பிசகு ? இனிமேல் எப்போதேனும் பார்க்க முடியப் போகிறதா ?'

திடீரென்று நான் இப்படித் துயரப்படுவது எவ்வளவு பைத்தியக்காரத்தனமென்று தோன்றியது. 'இப்போது என்ன நடந்து விட்டது ? இந்துவுக்கு ஏதாவது நேர்ந் திருந்தாலும் தெரிவித்துவிடும்படி எழுதுகிறேன்' என்று நினைத்து உடனே தங்கபாண்டியனுக்கு என் மன வேதனையை விவரித்து ஒரு கடிதம் எழுதினேன். அதைத் தபாலில் சேர்த்த பிறகுதான் கொஞ்சம் மன அமைதி உண்டாயிற்று.

சில நாட்கள் கழித்துக் கல்லூரியிலிருந்து எனக்கு ஒரு சிறிய கடிதம் வந்தது. அதில் தங்கபாண்டியன் படிப்பை நிறுத்தி விட்டதாகவும், அவன் எங்கே இருக்கிரு னென்று தெரியவில்லை என்றும் குறிப்பிட்டிருந்தது. மேலும் நான் அவனுக்கு எழுதிய கடிதத்தைக் குங்குமத் துறைக்கு அனுப்பியதாகவும், அங்கும் அவன் இல்லை என்று கடிதம் திரும்பி வந்து விட்டதாகவும் கல்லூரித் தலைவர் எழுதச் சொல்லியிருந்தார். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்துக்கு அளவே இல்லை. எல்லாம் ஒரே புதிராக இருந்தது. இந்துவிடமிருந்து கடிதம் வரவில்லை. தங்க பாண்டியனைப் பற்றித் தகவலே யாருக்கும் தெரியவில்லை. ஒரே மர்மமாக அல்லவா இருக்கிறது. துப்பறியும் நாவல்

களில் வருவது போல் அல்லவா இருக்கிறது என்று எண்ணி எண்ணி வேதனைப்பட்டேன். படிப்பே புத்தியில் ஏறமாட்டேனென்கிறது. மனம் ஒரேயடியாகக் குழம்பிப் போயிற்று. "என்ன ஆகியிருக்கும்? என்ன ஆகி யிருக்கும்?" என்ற கேள்விகள் சுழன்று சுழன்று வந்த போதிலும் விடை என்னமோ கிடைக்கவில்லை.

நான் அந்தக் கடிதம் வந்த தினம் எனது ஆசிரியர் ஸ்ரீ ஆன்ட்ரூஸ் அவர்களிடம் போயிருந்தேன். நான் ரொம்பச் சோர்வாக இருப்பதைப் பார்த்துவிட்டு அவர் அன்போடு என்ன விஷயம் என்று விசாரித்தார். அதைப் பற்றி என்னவென்று அவரிடம் சொல்ல முடியும்?

"என் நண்பனைப் பற்றி விசாரித்து எழுதி யிருந்தேன். அவன் படிப்பையும் விட்டு விட்டானும். அவனுடைய வீட்டிலும் இல்லையாம். என்ன ஆயிற்று என்றே தெரியவில்லையாம். இப்படி என் கல்லூரியி லிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. எனக்கு அது கொஞ்சம் வருத்தமாக இருக்கிறது. வேறொன்றுமில்லை" என்றேன்.

"இவ்வளவுதானே? எப்போதும் தூர தேசத்தி லிருப்பவர்களுக்குத் தன் தாய்நாட்டைப் பற்றியும், உறவினர்களைப் பற்றியும் அதிகமாகக் கவலை ஏற்படும். இதே விஷயம் நீ இந்தியாவில் இருந்தால் உனக்கு இவ்வளவு கவலை அளிக்காது. எங்கேயாவது வேலை பார்த்துக் கொண்டிருப்பான், அல்லது உல்லாஸப் பிரயாணம் போயிருப்பான் என்று நினைத்திருப்பாய். தூரத்தில் இருப்பதால் கவலைகள் இரண்டு மடங்கு அதிக மாகத் தெரியும். நீ கவலைப்படாதே. தானுகவே விஷயம் தெரியும் பார். இப்போது என்னோடு வீட்டுக்கு வந்து 'டீ' சாப்பிட்டுவிட்டுக் கொஞ்சம் உற்சாகப்படுத்திக் கொண்டு போகலாம் வா!" என்று அழைத்தார்.

# 34. இந்துவின் படம்

நாங்கள் அனைவரும் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் வீட்டுத் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தோம். பச்சைப் பசேலென்று பசும் புல் தரை மிருதுவாகக் கண்ணுக்குக் குளுமையாக இருந்தது. தோட்டத்தில் ரோஜாச் செடிகளும் இன்னும் பலவிதமான வர்ணச் செடிகளும் மிக நேர்த்தியாக வளர்க்கப்பட்டிருந்தன. இளவேனிற் காலமாதலால் எல்லாம் பூத்துக் குலுங்கின.

அவற்றின் அழகை அனுபவித்துக் கொண்டே நான் மௌனமாக இருந்தேன். என் எதிரில் மேஜையின் மீது ரொட்டிகளும், டீயும் இருந்தன. ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ் கிண்ணங்களில் டீயை விட்டுக் கொண்டிருந்தார். மிரியம் தன் தகப்பனுருடன் ஏதோ வாதாடிக் கொண்டிருந்தாள். ஜான் தன்னுடைய காதலியை அழைத்து வந்திருந்தான். நான் அவர்கள் பேச்சை அதிகமாகக் கவனிக்கவில்லை. எனக்கு இந்துமதியைப் பற்றிய கனவுலகில் சஞ்சரிப்பது அதைவிட இன்பமாக இருந்தது.

ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ், "மிஸ்டர், ராய்! டீ சாப்பிடுங்கள்" என்று கூறியதும்தான் நான் விழித்துக் கொண்டேன்.

"இன்று ராய் ரொம்பத் தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்" என்றான் ஜான் சிரித்துக்கொண்டே.

நான் டீ கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு சாப்பிடத் தொடங்கினேன். சற்று நேரத்துக்கெல்லாம் ஜானும் எலிஜாவும் எங்கோ வெளியே சென்று விட்டார்கள்.

நான் பேச வேண்டுமே என்பதற்காக, "உங்கள் தோட்டத்தை மிக நன்றாக வைத்துக் கொண்டிருக்

கிறீர்களே !" என்று ஸ்ரீமதி ஆன்ட்ரூஸைப் பார்த்துக் கூறினேன்.

" எனக்குப் புஷ்பங்கள் என்றால் ரொம்பப் பிரியம் " என்றார் அவர்.

" இது என்ன பிரமாதமான தோட்டம் ? இயற்கை அன்னையின் அற்புதமான தோட்டங்களை விட உயர் வானது எங்குமே கிடையாது."

" அது உண்மைதான். யார் இல்லை என்றார்கள். அதற்காகத் தோட்டத்தில் ஒரு செடியும் வைக்க வேண்டாம் என்று சொல்கிறீர்களா ?"

" நீங்கள் எதற்குச் சண்டை போட வேண்டும் அம்மா ? அப்பாவுக்கு நம் தோட்டம் ரொம்ப அழகாக இருக்கிறது என்று மிகவும் பெருமை. ஆனால், சும்மா அப்படிச் சொல்கிறார்."

" அதெல்லாம் ஒன்றுமில்லை. ஜீஸஸ் காலேஜ் தோட்டம் எவ்வளவு அழகாக இருக்கிறது, நீ பார்த்த தில்லையா ?"

" இங்கே வரும் வழியில் மிக உயரமாக சுவர்களுடன் ஒரு பெரிய காலேஜ் இருக்கிறதே, அதுதானே ? அதில் தோட்டம் ஒன்றும் இருப்பதாகவே தெரியவில்லையே !"

" ஆமாம், அதுதான். உங்களைப் போல இங்கே எல்லாரும் அதன் சுவர்களைப் பார்த்து விட்டு அதற்குப் ' புகை போக்கி ' என்று விளையாட்டாகப் பெயரிட்டு அழைக்கிறார்கள்."

" பொருத்தமான பெயர்தான்."

" இப்போது நாம் என்ன செய்யலாம் ? ஜானும் எலிஜாவும் சினிமாவுக்குப் போய்விட்டார்கள். எனக்கு இன்று ஒரு வேலையும் இல்லை. நாம் எங்கேயாவது போவோமா ?" என்று என்னைக் கேட்டாள் மிரியம்.

எனக்குக் கூச்சமாக இருந்தது. “இல்லை, நான் வரவில்லை !” என்றேன்.

ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ் என்னைப் பார்த்துப் புன்னகையோடு, “ஒரு பெண்மணி ஒருவரைப் பார்த்து, ‘வெளியே அழைத்துக் கொண்டு போகிறீர்களா ?’ என்று கேட்டால் மாட்டேனென்று சொல்லலாமா மிஸ்டர் ராய் ? எங்கேயாவது போய் விட்டு வாருங்கள். சும்மா படித்துக் கொண்டே இருந்தாலும் பிரயோஜனமில்லை. எல்லோருடனும் கலகலப்பாகப் பழகவும் தெரிந்து கொள்ள வேண்டாமா ?” என்றார். அவர் அன்போடு கூறிய விதம் எனக்குப் பிடித்திருந்தது. ஆனாலும், அழைத்துப் போவதற்குத் தயக்கமாக இருந்தது.

“பாவம் ! அவனுக்குக் கூச்சமாக இருக்கிறது. நமது வழக்கங்கள் அவனுக்கு முற்றிலும் புதிதல்லவா ?” என்றார் பேராசிரியர்.

அவர் அப்படிக் கூறியது எனக்கு இன்னும் சங்கடமாக இருந்தது.

“ஆமாம் ; ஆனால், எத்தனை நாள் அந்த ஓட்டுக்குள் பதுங்கிக் கொண்டிருப்பது ? என்றைக்காவது ஒரு நாள் வெளியே வந்துதானே தீரவேண்டும் ?” என்றார் ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டே இருக்கப் போகிறார்களே என்ற பயத்தில், “சரி ! போகலாம் !” என்றேன்.

“நல்லது ! நல்லது !” என்று ஆமோதித்தார் ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ்.

நாங்கள் அன்று ஏதோ ஒரு சினிமா பார்த்து விட்டுத் திரும்பி வந்தோம். அதன் பிறகு நான் எப்போதாவது சமயம் நேர்ந்தால் மிரியத்தைச் சினிமாவுக்கோ அல்லது டீ சாப்பிடுவதற்கோ அழைத்துச் சென்றிருக்கிறேன்.

மிரியம் கபடமில்லாத பெண். மனத்தில் தோன்று வதைப் பளிச்சென்று சொல்லி விடுவாள். அவளும் சரித்திரப் பாடம் படிப்பவளாதலால் நாங்கள் இருவரும் அதைப் பற்றித் தர்க்கம் செய்வோம்.

" நீங்கள் சரித்திர ஆராய்ச்சி மட்டும் செய்து அதையே உங்கள் வேலையாகவும் செய்து கொண்டீர்க ளானால் ரொம்ப உன்னத ஸ்தானத்தை அடைவீர்கள்! எதற்காக ஐ. ஸி. எஸ். படிப்பை எடுத்துக் கொண்டீர்கள் ?" என்பாள் மிரியம்.

" எனக்கு அதனால்தானே உபகாரச் சம்பளம் கிடைத்தது. இல்லாவிட்டால் யார் கொடுத்திருப்பார்கள் !" என்று பதில் கூறுவேன் நான்.

ஒரு சமயம் என் அனுபவங்களைப் பற்றி மிரியத்திடம் கூறியபோது, " நீங்கள் இப்படிப்பட்ட துயரங்களை அனு பவித்தும் இவ்வளவு பண்பாடு உடையவராக இருப்பதைப் பார்த்தால் எனக்கு வியப்பாக இருக்கிறது. உங்கள் மனோ திடத்தை நான் மிகவும் போற்றுகிறேன் " என்றாள்.

நாங்கள் ஒரு நாள் அரண்மனைக் குன்றைப் பார்க்கச் சென்றோம். அது ஒரு செய் குன்று. அதன்மீது ஏறிப் பார்த்தபோது கேம்பிரிட்ஜ் நகரம் மிக அழகாக இருந்தது.

" நீங்கள் சரித்திர ஆராய்ச்சி மாணவராயிற்றே. இந்த இடத்தின் வரலாற்றைக் கூறுங்கள் பார்ப்போம் " என்றாள் மிரியம்.

" எனக்குத் தெரியவில்லை. ஆனால் இது பழைய காலத்தில் கேம்பிரிட்ஜ் நகரத்துக்குப் பாதுகாப்புக்காகக் கட்டப்பட்டிருக்கலாமென்று ஊகிக்கிறேன். ஆனால் இதற்கு அரண்மனைக் குன்று என்று ஏன் பெயர் வந்தது ?"

" இந்தச் செயற்கைக் குன்றைக் கட்டுவதற்கு முன்னால் ' வில்லியம் தி காங்கரர் ' என்ற அரசர்

காலத்தில் இங்கே ஒரு அரண்மனை கட்டப்பட்டிருந்ததாம். இருபத்தேழு வீடுகளை இடித்துத் தள்ளி விட்டு அதை அவர் கட்டினாராம். அதை ஒரு சிறையாக உபயோகப் படுத்தினார்களென்று தெரிகிறது. ஆறாவது ஹென்றி காலத்தில் இது ‘ கூரை இடிந்து பாழடைந்து ’ கிடந்ததாக ஒரு சாசனத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரசித்தி பெற்ற மந்திரி ஆலிவர் க்ராம்வெல் பதினேழாம் நூற்றாண்டில் இதைப் புதுப்பித்துக் கட்ட ஆரம்பித்தாராம். ஆனால் முடியவில்லை. இங்கே ஆராய்ச்சி செய்ததில் ரோமானியர்கள் இங்கே வந்திருந்ததற்குத் தடயங்கள் கிடைத்தன.''

நான் சரித்திர ஆராய்ச்சி மாணவனாதலால் எனக்கு அந்த விவரங்கள் மிகவும் சுவாரஸ்யமாக இருந்தன.

“ நீங்கள் இந்தியாவைப் பற்றித்தான் தெரிந்து கொள்ளவில்லை. நல்ல வேளையாக உங்கள் தேசத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களே. எனக்கு அளவில்லாத சந்தோஷமாக இருக்கிறது !'' என்றேன்.

“ இந்த இடத்திலிருந்து பார்த்தால் பழைய காலத்தில் கேம்பிரிட்ஜ் நகரம் எப்படியிருந்திருக்கும் என்று கற்பனை செய்துகொள்ள முடிகிறதல்லவா ?''

நான் நகரத்தைப் பார்த்தேன். வரிசை வரிசையாக கம்பீரமான கல்லூரிக் கட்டடங்களும், ஒவ்வொரு கல்லூரியிலுமுள்ள தெய்வீகமான தேவாலயக் கட்டடங்களும் மிக அழகாகக் காட்சியளித்தன. இளவேனிற் காலத்தின் கடைசியாதலால் எங்கும் ஒரே புஷ்ப மயமாகக் காட்சியளித்தது. மொட்டையாக நின்ற மரங்களிலெல்லாம் பசுமையான இலைகள் அடர்ந்திருந்தன.

நாங்கள் ஏறி நின்ற குன்றிலும் ஒரே புஷ்ப மயமாக இருந்தது. ‘ இங்கே மிரியத்துக்குப் பதில் இந்து இருந்தால்.........’ என்ற எண்ணம் என் நெஞ்சில் எழுந்தது.

அதை நான் அமுக்கப் பார்த்தேன். நான் அமுக்க அமுக்க அதன் வேகம் அதிகமாயிற்று.

" என்ன ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டீர்கள் ?" என்று மிரியம் என் சிந்தனையைக் கலைத்தாள்.

" பழைய காலத்தில் இந்த நகரம் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பார்த்துக் கொண்டிருந்தேன் " என்று மழுப்பினேன்.

மிரியம் சிரித்துவிட்டு, " அதை நான் நம்பவில்லை " என்றாள்.

" மணியாகி விட்டது. போவோமா ?" என்று கேட்டுக்கொண்டே எழுந்தேன்.

" என்ன அவசரம் மிஸ்டர் ராய் ?"

" இப்படி நான் உட்கார்ந்து கனவும் கற்பனையும் கண்டு கொண்டிருந்தால் என் பரீட்சையின் கதி என்ன ஆவது ? நேரம் பறக்கிறது மிஸ். மிரியம் " என்று புறப்பட்டேன்.

நான் கேம்பிரிட்ஜ் போய்ச் சேர்ந்த சில நாட்களுக்கெல்லாம் ஒரு காரியம் செய்தேன். குங்குமத்துறையில்



ஒரு நாள் தங்கபாண்டியனுடைய காமிராவை எடுத்துக்கொண்டு இந்துவின் வீட்டுக்குப் போனேனல்லவா ? அன்று இந்துவைச் சில படங்கள் எடுத்தேன். அவற்றை நான் சீமை செல்லும் அவசரத்தில் ' டெவலப் ' செய்ய முடியவில்லை. ஒரு நாள் இதைக் குறித்து ஸ்ரீமதி ஹார்வியிடம் கூறியபோது, தானே அதைச் செய்து தருவதாகக் கூறி வாங்கிக் கொண்டார்.

ஸ்ரீமதி ஹார்வி ஒரு வாரத்திற்கெல்லாம் அவற்றைக் கொண்டு வந்தார். பிறகு, "நான் பார்க்கலாமா?" என்று கேட்டார்.

எனக்கு ஒரே கூச்சமாக இருந்தது. ஆயினும் மாட்டேனென்று எப்படிச் சொல்ல முடியும்? "பாருங்களேன்" என்று கூறிவிட்டுக் 'கவரி'லிருந்து ஒவ்வொரு படமாக எடுத்தேன்.

# 35. தாபம் பெருகியது

படங்களை எடுக்கும்போது எனக்கு ஆவலினால் இதயம் விரிந்து பெரிதாகி மேலே எழும்புவதுபோல் இருந்தது. இந்துவின் படங்களில் மூன்று மிக நன்றாக இருந்தன. பாக்கியெல்லாம் காமிரா அசைந்து விட்டதால் சரியாகவிழவில்லை. ஸ்ரீமதி ஹார்வி என் உணர்ச்சிகளைக் கவனித்து விடக் கூடாதே என்ற கவலையினால் மனத்தை ரொம்பக் கட்டுப் படுத்திக் கொண்டேன்.



இந்து விளையாட்டாக "அஜந்தா சித்திரம்" மாதிரி சண்பக மரத்தில் சாய்ந்துகொண்டிருந்தாள். அது ரொம்ப அழகாக இருந்தது.

அதை ஸ்ரீமதி ஹார்வி பார்த்ததும், "இது யார்?" என்று கேட்டார்.

நான் சிறிது தயங்கினேன். பிறகு, "என்னுடைய வருங்கால மனைவி" என்றேன். அதைச் சொல்லும்போது எனக்கு, 'இவ்வளவு உறுதி

யாகச் சொல்லுகிறேனே ' என்றும் தோன்றியது. அந்த எண்ணத்திஞல் என் நெஞ்சில் உண்டான வேதனே முகத்திலும் பிரதிபலித்திருக்க வேண்டும்.

" அட ! நிஜமாகவா ? ஆனல், உங்கள் முகம் ஏன் இப்படிச் சின்னதாகப் போய்விட்டது மிஸ்டர் ராய் ? குதூகலமாக அல்லவா இருக்கவேண்டும் ?" என்ருர் ஸ்ரீமதி ஹார்வி.

" ஒன்றுமில்லேயே !" என்றேன்.

" இவ்வளவு நீங்கள் கூச்சப்படக் கூடாது, மிஸ்டர் ராய் ! இவ்வளவு அழகான பெண்ணேக் காதலியாகப் பெற்ற நீங்கள் எவ்வளவு பெருமைப்பட வேண்டும் தெரியுமா ? சினிமா நட்சத்திரம் மாதிரியல்லவா இருக்கிருள் ? நீங்கள் ரொம்ப அதிருஷ்டசாலி !" என்று மிகவும் உற்சாகமாகக் கூறிஞர்.

அந்தப் படங்கள் எனக்குச் சில சமயம் ஆறுதலாக இருந்தன. சில சமயங்களில் அளவிலாத வேதனேயைக் கிளறி விட்டுக் கொண்டிருந்தன.

ஒரு நாள் ஸ்ரீமதி ஹார்வி என்னிடம், " மிஸ்டர், ராய்! நீங்கள் எனக்கு ஏதேனும் இந்திய உணவு செய்வதற்குக் கற்றுத் தரவேண்டும்" என்ருர்.

" எனக்குச் சமையலேப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. ஏதோ கலாசாலேயில் விளேயாட்டாக நண்பர்கள் எல்லாம் சேர்ந்து சில நாட்கள் தித்திப்புப் பண்டங்கள் செய்திருக்கிருேம். நான் எவ்வாறு உங்களுக்குச் சொல்லித் தர முடியும் ?" என்றேன்.

" அதெல்லாம் பரவாயில்லே. நீங்கள் செய்யும் விதத்தைச் சொன்ஞல் நான் புரிந்துகொண்டு விடுவேன். பெண்களுக்குச் சமைக்கும் விதத்தைப் பற்றிச் சீக்கிரம் புரிந்துகொள்ளும் சக்தி உண்டு " என்ருர் அவர்.

" அப்படியாஞல் சரி. நாம் இருவரும் சேர்ந்தே முயற்சி செய்து பார்ப்போம் " என்றேன்.

" அதைச் சாப்பிடுவதற்கு நீங்கள் யாராவது சினேகிதர்களை அழைத்துக் கொண்டு வரவேண்டும்!"

" நம்மால் அதைச் சாப்பிட முடியாது என்று இப்போதே தீர்மானித்து விட்டீர்களா?" என்று கேலியாகச் சிரித்துக்கொண்டே கேட்டேன்.

" இல்லை, இல்லை. நம்முடைய திறமையை இன்னும் சிலர் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் சொல்கிறேன்!"

" அப்படிப் பெருமைப்படும்படி இருக்குமா என்பது சந்தேகம்தான். அப்படி இருந்தாலும் அது முழுதும் உங்களைத்தான் சேருமென்று இப்போதே கூறி விடுகிறேன் " என்றேன்.

பிறகு பாதாம் ஹல்வா செய்வதற்கு வேண்டியவைகளை அவரிடம் கூறினேன். மறுநாளே எல்லாம் தயாராக இருந்தது. நான் மிரியத்தையும், ஜானையும் மாலை 'டீ'க்கு வரவேண்டுமென்று அழைத்தேன். ஜானுக்கு ஏதோ வேலை இருந்ததென்று மறுத்துவிட்டான். மிரியம் உடனேயே, " கட்டாயம் வரப் போகிறேன் " என்று கூறி விட்டாள்.

நான் ஸ்டிபான் ஹிம்மெலையும் வரச் சொல்லியிருந்தேன். அன்று பிற்பகல்முழுதும் நானும் ஸ்ரீமதி ஹார்வியும் பாதாம் ஹல்வா தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தோம். ஒருவாறு அது முடிந்ததும் நான் உடைமாற்றிக்கொள்ள என்னுடைய அறைக்கு வந்தேன். பட்டன்களை எடுப்பதற்காகமேஜைடிராயரைத் திறந்தேன். அதிலிருந்து இந்துவின் படம் வெளியே வந்து விழுந்தது.



அதைக் கையில் எடுத்துக் கொண்டேன். என் இதயத்தையே ஊடுருவிப் பார்ப்பது

போல் இருந்தது அவளுடைய பார்வை. ' இந்து எப்படி யெல்லாம் கஷ்டப்படுகிருளோ ? நான் இப்படி ஹல்வா பண்ணிக்கொண்டு விளையாட்டாகக் காலம் கழிக்கிறேனே ' என்று தோன்றிற்று. ஏனே எனக்கு இந்து சௌக்கிய மாக இருக்கக்கூடும் என்றே தோன்றவில்லை. ஏதோ கஷ்டத்தில் அவள் அகப்பட்டுக் கொண்டிருக்கிருள் ; அவளைக் காப்பாற்ற முடியாமல் நான் இங்கே வந்திருக் கிறேன் என்றே தோன்றிக் கொண்டிருந்தது.

இந்துவின் அழகிய கண்களைப் பார்த்துக்கொண்டே வெகுநேரம் உட்கார்ந்திருந்துவிட்டேன். கீழே மணி யடிக்கும் சத்தம் கேட்டது. ' ஓ ! மிரியம் வந்துவிட்டாள் போலிருக்கிறது ' என்று தலையை அவசரமாக வாரிக் கொண்டு கீழே சென்றேன். ஹிம்மெலும் அங்கே தயா ராக இருந்தான். கலகலவென்ற சப்தம் அறையை நிறைத்ததே தவிர எனக்கு ஒன்றிலும் சுவாரஸ்யம் ஏற்பட வில்லை. மூன்று பேரும் ஹல்வா செய்யும் விதத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர்.

" மிஸ்டர் ராய்க்கு நம் பேச்சு ருசிக்கவில்லை என்று தோன்றுகிறது " என்ருள் மிரியம் நகைத்தபடியே.

" இல்லை. அவர் ஹல்வாவின் ருசியை அனுபவித்துக் கொண்டிருக்கிருர். அதைச் சாப்பிடும்போது தாய் நாட்டின் நினைவு வருமல்லவா ? அதில் மெய்மறந்து விட்டார் போலிருக்கிறது " என்ருர் ஸ்ரீமதி ஹார்வி.

ஹிம்மெலுக்கு அன்று மாலை ஏதோ வேலை இருந்த படியால் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டான். மிரியம் கிளம்பும் வழியாக இல்லை. ஸ்ரீமதி ஹார்வியும் அவளும் மிகவும் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

மறுபடியும் மிரியம் என்னைப் பார்த்து, " உங்களுக்கு உடம்பு சரியில்லையா, மிஸ்டர் ராய் ? இன்று பேசவே மாட்டேனென்கிறீர்களே ?" என்று கேட்டாள்.

" ஒன்றுமில்லை. எனக்கு உங்கள் பேச்சில் கலந்து கொள்ளத் தெரியவில்லை. பெண்களுக்குரிய விஷயமாகவே நீங்கள் பேசுகிறீர்கள் " என்றேன்.

ஸ்ரீமதி ஹார்வி குறுக்கிட்டு, " அதெல்லாம் ஒன்று மில்லை. நீங்கள் உங்களுடைய நாட்டைப் பற்றியும், அந்தப் பெண்ணைப் பற்றியுந்தான் நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள். நான் மத்தியானம் உங்கள் அறைக்குப் போனபோது என் கண்ணாடியை உங்கள் அறையில் வைத்துவிட்டு வந்துவிட்டேன். அதை எடுத்துக்கொண்டு வருவதற்காகச் சற்று முன்னால் உங்கள் அறைக்குச் சென்றேன். கட்டிலின்மீது உங்கள் வருங்கால மனைவியின் 'போட்டோ' கிடந்தது. என்னை நீங்கள் ஏமாற்ற முடியாது " என்றார்.

என் முகத்தில் அசடு வழிகிறதோ என்ற அச்சம் என் மனத்தில் உண்டாயிற்று. நான் அவசரமாகக் கைக் குட்டையை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டேன்.

மிரியம் ஆச்சரியமும் ஆவலும் தொனிக்கும் குரலில், " மிஸ்டர் ராய் ! நீங்கள் என்னிடம் இதுவரை சொல்லவே இல்லையே. அவளுடைய போட்டோவை எனக்குக் காட்டு கிறீர்களா ? அவள் பெயர் என்ன ?" என்று கேட்டுக் கொண்டே போனாள்.

"கொஞ்சம் பொறு ! கேள்விகளை அடுக்கினால் எப்படிப் பதில் சொல்வது ? ஒவ்வொன்றாகப் பதில் சொல்கிறேன் " என்றேன் சிரித்துக்கொண்டே. அதற்குள் நிலைமை யைச் சமாளிக்க எனக்குத் தெம்பு உண்டாகி விட்டது.

ஸ்ரீமதி ஹார்வி உற்சாகமாக, " அவள் ஒரு சினிமா நட்சத்திரம் மாதிரி அவ்வளவு அழகாக இருக்கிறாள். மிஸ்டர் ராய் இப்படி எப்போதும் மெய்மறந்திருப்பதில் ஒரு அதிசயமும் இல்லை. மிஸ்டர் ராய் ! அந்தப் படங்களை

யெல்லாம் மிரியத்துக்கு நீங்கள் கட்டாயம் காட்ட வேண்டும் '' என்ருர்.

" அவள் பெயரென்ன ?" என்று கேட்டாள் மிரியம்.

" இந்துமதி '' என்றேன்.

" என்ன இனிமையாக ஒலிக்கிறது '' என்ருள் மிரியம்.

அவள் அப்படிக் கூறியதுகூட எனக்கு இன்பத்தை அளித்தது.

" நீங்கள் இருவரும் உங்களுடைய அறைக்குச் சென்று படங்களைப் பார்த்துக் கொண்டிருங்கள். நான் என் வேலைகளை முடித்துக்கொண்டு வருகிறேன் '' என்ருர் ஸ்ரீமதி ஹார்வி.

நான் மிரியத்துக்குப் படங்களைக் காட்டியபோது அவள் அவ்வளவு தூரம் இந்துவைப் பற்றிக் கேட்பாள் என்று நான் நினைக்கவே இல்லை. அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் திணறிப் போனேன். புத்தம் புது மலர் போன்ற இந்துவின் அழகும், கபடமற்ற சிரிப்பும், ஊடுருவிப் பார்க்கும் ஆழ்ந்த பார்வையும் மிரியத்துக்கு மிகவும் வியப்பாக இருந்தன போலும்.

" இவ்வளவு நீளம் தலைப்பின்னல் தொங்குகிறதே. நிஜமாகவே இத்தனை நீளமா ?" என்று கேட்டாள்.

" அவள் பதினைந்து வயதுச் சிறுமி. நகரத்தையே பார்த்தறியாத பெண். அவளுக்குச் செயற்கையாக அலங்கரித்துக் கொள்ளவே தெரியாது."

" உண்மையாகவா ? அவள் முகத்தில் ஏதோ ஒரு வசீகரம் இருக்கிறது மிஸ்டர் ராய். ஒரு தடவை பார்த்தால் மறக்கக்கூடிய முகம் அல்ல. அவளுடைய கண்களில் குழந்தை உள்ளம் பிரகாசிக்கிறது. அவள் படித்திருக்கிருளா ?"

" கொஞ்சம் படித்திருக்கிருள்."

" ஆங்கிலம் தெரியுமா ?"

" ரொம்பத் தெரியாது. படித்தால் புரிந்து கொள் வாள். எதற்காகக் கேட்கிருய் ?"

" நான் அவளுக்குக் கடிதம் எழுதிச் சிநேகம் செய்து கொள்ள விரும்புகிறேன். எனக்குக் கடித நண்பர்கள் உலகம் முழுதும் இருக்கிருர்கள். இந்தியாவில் மட்டும் ஒருவர்கூட இல்லை. அவளுக்கு எழுதட்டுமா ?"

இந்தக் கேள்வி என் மனத்தை எவ்வளவு தூரம் புண்படுத்தியிருக்குமென்று படிப்பவர்கள்தான் புரிந்து கொள்ளவேண்டும். மிரியத்திடம் நான் என் வேதனையைச் சொல்ல முடியாமல் தவித்தேன். இவ்வளவு தூரம் இந்து மதியைப்பற்றி அவளுக்குத் தெரிந்த பிறகு, இந்து இருக்கு மிடம் தெரியவில்லை என்று எந்த முகத்தோடு சொல்வது ?

என் முகம் மாறியதைக் கவனித்து விட்டாள் மிரியம். " ஏன் உங்கள் முகம் இப்படி வாடிவிட்டது ? நான் அவளுக்கு எழுதக் கூடாதா ? அதற்கு ஏதேனும் காரணம் இருக்கிறதா ? என்னிடம் மனம் விட்டுச் சொல்லுங் களேன் " என்று கேட்டாள்.

அதன் பிறகு என்னுல் பேசாமலிருக்க முடியவில்லை. விஷயத்தைக் கூறினேன்.

மிரியம் மிகுந்த அனுதாபத்துடன் கேட்டுக் கொண் டிருந்தாள்.

" அவளுக்கு அவள் தந்தை கல்யாணம் செய்து விட்டிருக்கலாமென்று நினைக்கிறீர்களா ?" என்று கேட்டாள்.

" அப்படி நினைக்கவில்லை. அவள் தந்தையும் அவளுடைய இஷ்டமில்லாமல் ஒன்றும் செய்யக் கூடியவரல்ல. என்ன காரணம் என்றே ஊகிக்க முடியாமல் திண்டாடுகிறேன்."

" நண்பர்கள் யாருக்காவது எழுதிக் கேட்பது தானே ?"

" நான் அவ்வாறு செய்யாமலா இருப்பேன் ? எழுதினேன். ஆனால் அவளைப் பற்றி விவரம் தெரிந்த ஒரே நண்பனும் எங்கோ போய்விட்டானாம். ஒன்றுமே தெரியவில்லை. ஒரே குழப்பமாக இருக்கிறது."

" பாவம் ! கவலைப்படாதீர்கள், மிஸ்டர் ராய். எப்படியும் நீங்கள் படிப்பில் கவனம் செலுத்துங்கள். இதைப் பற்றிப் பிறகு யோசிக்கலாம்."

" என்ன யோசிப்பது ? நான் திரும்பிச் சென்றுதான் விசாரிக்க வேண்டும். அதுவரை எனக்கு விஷயம் தெரி விக்கக்கூடியவர்கள் யாரும் இல்லை."

" எதற்கும் ஒரு முடிவு வந்துதான் தீரவேண்டும், மிஸ்டர் ராய் ! நம்மால் தவிர்க்க முடியாத விஷயத்தைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. உங்கள் துயரத்தை நான் நன்றாக உணர்கிறேன். அவளைப் பற்றி பேசும்போதே உங்கள் குரல் கனிந்து விடுகிறது. அவளை ஒரு குழந்தை மாதிரி நீங்கள் நேசிக்கிறீர்கள் என்பது அதிலிருந்தே தெரிகிறது."

இந்துமதியிடம் நான் வைத்திருந்த அன்பை அவள் எவ்வளவு சீக்கிரம் அழகாகப் புரிந்துகொண்டு விட்டா ளென்று நான் வியந்தேன். மற்றவர்களுக்கு அது சிரிக்கும்படியான விஷயமாக இருந்தது. ஹிம்மெலுக்கு விளையாட்டாக இருந்தது. மிரியம் அதன் உண்மையை உடனே தெரிந்துகொண்டு விட்டாள். அது எனக்கு ரொம்ப ஆறுதலாக இருந்தது.

பிறகு அவளைப் பார்க்கும்போதெல்லாம் நான் இந்துவைப் பற்றிப் பேச ஆரம்பித்தேன். மிரியமும் அலுக்காமல் கேட்பாள். என்னுடைய கவலைகளையும், கற்பனைகளையும் கூறுவேன். அவள் அவற்றுக்குச் சமாதானம் கூறுவாள்.

காலண்டரில் தினமும் நான் நாட்களைக் கிழித்துக் கொண்டே வந்தேன். பரீக்ஷை நெருங்கி வந்தது. நான் சரித்திர ஆராய்ச்சியில் பட்டம் பெறவும் படித்துக்கொண் டிருந்தேன். ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் தேருவிட்டால் ஏதேனும் படிப்பு வேண்டுமல்லவா? ஆகவே, சரித்தி ரத்தில் பட்டம் பெறுவதற்கு எழுத வேண்டிய 'தியஸிஸ்' எழுதிக் கொடுத்தேன். தேறியும் விட்டேன்.

லண்டன் சென்று ஐ. ஸி. எஸ். பரீட்சைஎழுதினேன். அதிலும் தேறினேன். பிறகு 'ஒரு வருஷம் அங்கேயே இருந்து வேலை கற்றுக்கொண்டு, இன்னொரு பரீட்சை யிலும் தேறவேண்டும்.

அதற்காக கேம்பிரிட்ஜ் நகருக்கே திரும்பி வந்தேன். குதிரை சவாரி முதல் பல விஷயங்கள் கற்றுக் கொண்டேன்.

இத்தனை நான் செய்துகொண்டிருந்த போதிலும் இந்துவின் நினைவு என் நெஞ்சை விட்டுக் கணமும் அகல வில்லை. "இந்து! நான் இப்படித் தவிக்கிறேனே! உன்னை எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கிறேனே! நீ என்ன செய்கிறாய்? எங்கே இருக்கிறாய்? எனக்கு ஒரு கடிதம் எழுதக் கூடாதா? எப்படியாவது நீ இருக்கும் இடம் எனக்குத் தெரிந்துவிடக் கூடாதா? என்னுடைய இதயத் தின் அடிவாரத்திலிருந்து பொங்கி எழும் அன்பின் ஒலி உன் நெஞ்சத்தில் எதிரொலியை எழுப்பவில்லையா?" என்று இந்துவின் உருவத்தைக் கற்பனை செய்துகொண்டு நானே பேசிக் கொள்வேன்.

என் தாபத்தைச் சிறிது குறைக்க ஒரு விந்தையான சம்பவம் நிகழ்ந்தது. ஆனால், அது உண்மையில் தாபத்தைக் குறைக்கவா செய்தது? அதிகப் படுத்தியது என்றுதான் கூறவேண்டும்.

# 36. கொந்தளிப்பு

நான் இங்கிலாந்து சென்ற சமயம் உலகம் முழுதும் ஒரே கொந்தளிப்பாக இருந்தது. 1938-ம் ஆண்டு ஆரம்பத்திலிருந்தே இன்னொரு உலக மஹா யுத்தம் ஆரம்பமாகலாம் என்பதற்கான அறிகுறிகள் தோன்றிக்கொண்டிருந்தன. இங்கிலாந்து தேசம் ஒரே பரபரப்பான நிலையில் இருந்தது.

ஜெர்மனியில் ஹிட்லர் படைபலத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தார். அவர் ஆஸ்திரியா தேசத்தின் மீது படையெடுத்து அதை ஆக்ரமித்துக்கொண்டதும் இங்கிலாந்தில் உள்ள சிலர் இங்கிலாந்தின் படை பலத்தைப் பெருக்க வேண்டுமென்று நினைத்தார்கள். ஆனால், சமாதானப் பிரியரான பிரதம மந்திரி சேம்பர்லின் அதற்கு எதிராக இருந்தார். யுத்தத்தைத் தவிர்ப்பதற்காக ஹிட்லரைச் சந்தித்துப் பல தடவைகள் பேசினார். அப்போதெல்லாம் இந்தக் குழப்பம் எதில் போய் முடியப் போகிறது என்று உலகம் முழுவதும் ஒரே வாதப் பிரதி வாதங்களாக இருந்தது.

ஒரு நாள் நானும் ஹிம்மெலும் மிஸ்டர் சேம்பர்லின் ரேடியோவில் பேசுவதைக் கேட்பதற்காக ரேடியோவின் அருகில் உட்கார்ந்திருந்தோம். நான் ஹிம்மெலைப் பார்த்து, "ரொம்ப அழகாக இருக்கிறது, உங்கள் ஹிட்லரின காரியம்! ஸுடட்டன் லாண்டிலிருந்து செக்கோஸ்லோவாகியா ஜனங்கள் உடனே வெளியேறி விடவேண்டுமென்று சொல்கிறாரே. இது ஏகாதிபத்திய வெறியில்லையா?" என்று கேட்டேன்.

"இல்லவே இல்லை. அங்கே வசிப்பவர்களில் ஜெர்மானியர்கள்தான் மிக அதிகம். ஆகவே, அது நியாயமாக ஜெர்மனியைச் சேரவேண்டியதுதான். அது

எவ்வாறு ஏகாதிபத்திய வெறியாகும்? அங்குள்ள ஜனங்களே அதைத்தான் விரும்புவார்கள்."

"அப்படியென்றால் தேர்தல் நடத்தி அந்தப் பிரதேசம் ஜெர்மனியைச் சேர்ந்தது என்று நிரூபிக்கட்டுமே? குறிப்பிட்ட தினத்துக்குள் எல்லோரும் வெளியேறவில்லையானால் படை எடுத்து வருவேன் என்று பயமுறுத்துவது நியாயமாகுமா?"

"ஐரோப்பாவின் விஷயம் உனக்குத் தெரியாது. இங்கிலாந்தும், பிரான்சும் ஜெர்மனியை நசுக்குவதற்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன. யுத்தம் முடிந்தபோது நாங்கள் பட்ட கஷ்டங்களையும், எங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளையும் பற்றி உனக்கு எவ்வாறு தெரியும்? ஹிட்லர் இவ்வளவு கண்டிப்பாகவும் உறுதியாகவும் இருக்காவிட்டால் ஐரோப்பா கண்டத்தில் ஜெர்மனி என்ற பெயரே இல்லாமல் அழிந்து போயிருக்கும். மேலும்..."

அப்போது பிரதம மந்திரி சேம்பர்லின் ரேடியோவில் பேச ஆரம்பித்தார். அவர், "நான் ஒரு சமாதான மனிதன். தேசங்களுக்கு இடையே யுத்தம் மூள்வது என்றாலே எனக்கு நடுக்கமாக இருக்கிறது. ஆனால், எந்த நாடாவது உலகத்தைத் தன் ஆயுத பலத்தால் ஆக்கிரமித்துக் கொள்ள நினைக்கிறது என்று உறுதியாகத் தெரியுமானால் அதைத் தடுக்கவேண்டுமென்றுதான் நான் கருதுவேன். சுதந்திரத்தில் நம்பிக்கை உள்ள ஜனங்களுக்கு அப்படிப்பட்ட அதிகாரத்தின் கீழ் வாழ்க்கையே உபயோகமற்றதாகத் தோன்றும். ஆனால்..."

ஹிம்மெல் சடாரென்று ரேடியோவின் சப்தத்தைக் குறைத்தான்.

"பார்த்தாயா ராய்? இவர் பேசுவதைக் கேட்டாய் அல்லவா? உலகம் முழுவதிலும் அதிகாரத்தில் இருப்பவர்கள் ஒரே மாதிரிதான் பேசுகிறார்கள். ஜெர்மனி, ஜெர்

மானியர் வாழும் பிரதேசத்தை விரும்பக் கூடாது. ஆனல், நாற்பது கோடி மக்கள் வாழும் இந்தியா தேசத்தை இவர்கள் கட்டி ஆளலாம். சுதந்திரத்தைப் பற்றிப் பேசவும் பேசலாம். அதற்குப் பெயர் ராஜதந்திரம்."

"இவர்கள் ஒரு தவறு செய்கிருர்கள் என்பதற்காக உங்கள் தவறு சரியாகி விடுமா? இவர் சொல்லுகிற விஷயம் என்னவோ சரியானதுதானே" என்று கூறி விட்டு நான் மறுபடியும் ரேடியோவைப் பெரிதாக வைத்தேன்.

"பார், பார்! ஹிட்லரால்தான் உலகத்துக்கே விமோசனம் பிறக்கப் போகிறது."

"சற்றுப் பொறு, ஹிம்மெல்! பிரதம மந்திரியின் பேச்சு முடிந்த பிறகு உன் பேச்சைக் கேட்கிறேன்" என்றேன்.

இது நடந்த ஒரு மாதத்துக்கெல்லாம் நான் காலேஜ் மாணவர்களுடன் எங்கேயோ போய்விட்டு ஒரு வாரம் கழித்துத் திரும்பி வந்தேன். வந்ததும் ஸ்ரீமதி ஹார்வி எனக்குத் திடுக்கிடும் செய்தி ஒன்றைச் சொன்னுர். ஸ்டீபான் ஹிம்மெல் அறையைக் காலி செய்துவிட்டுப் போய்விட்டதாகத் தெரிவித்தார். அவருக்கு ஹிம்மெலைப் பிடிக்காது என்று எனக்குத் தெரிந்திருந்தபடியால், "நீங்கள் போகச் சொல்லிவிட்டீர்களா?" என்று நான் கேட்டேன்.

அவர் என்னை ஒரு மாதிரி பார்த்துவிட்டு, "உங்கள் நண்பர் ஒரு விசித்திரப் பேர்வழி. என்னிடம்கூடச் சொல்லாமல் கிளம்பிவிட்டார். ஆராய்ச்சி செய்து ஏதோ ரகசியம் கண்டுபிடித்து விட்டார் போலிருக்கிறது. அதனல் படித்தது போதும் என்று கிளம்பிவிட்டார். என் அறைக்குப் புதிய ஆள் தேடும் வேலை எனக்கு நேர்ந்திருக்கிறது. அது எவ்வளவு கஷ்டமான காரியம் என்று உங்களுக்குத் தெரியாது" என்ருர்.

"எனக்கு ஏதேனும் கடிதமாவது கொடுத்திருக்கிருரா?"

"இல்லே. கொடுக்க வேண்டிய பணத்தை எல்லாம் ஒரு நாள் கொடுத்தார். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் ஒரு டாக்ஸி வந்து நின்றது. 'நான் எங்கள் ஊருக்குப் போகிறேன்' என்று திடீரென்று கூறிவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார். அப்பொழுது அவரை ஒன்றும் கேட்கவே முடியவில்லே."

இந்த விஷயம் எனக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. நாங்கள் எவ்வளவு காரசாரமாக விவாதம் செய்த போதிலும் எங்களுக்குள் ஒரு பாந்தவ்யம் ஏற்பட்டிருந்தது. இரண்டு பேரும் தாய்நாட்டை விட்டு வந்தவர்கள் என்ற எண்ணத்திஞல் அந்த உறவு ஏற்பட்டது போலும்! அவனுடைய வீர உணர்ச்சியும், தேசப்பற்றும், நல்ல நடத்தையும், ஒளிவு மறைவு இல்லாத பேச்சும் எனக்கு அவன்மீது மதிப்பை உண்டாக்கியிருந்தன. என் நெஞ்சத்து உணர்ச்சிகளே எல்லாம் நான் அவனிடம் பகிர்ந்து கொள்ளாவிட்டாலும் அவன் இருந்தது எனக்குத் தென்பாக இருந்தது. ஒரு அருமை நண்பனேத் திடீரென்று பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் ஏமாற்றமடைந்தேன்.

ஹிம்மெலின் திடீர் மறைவுக்குக் காரணம் எனக்குப் பின்ஞல்தான் தெரிய வந்தது. உலக மகா யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்ஞல் வெளி தேசங்களிலிருந்த ஜெர்மானியர்களேயெல்லாம் திரும்பத் தங்கள் தேசத்துக்கு வரவழைத்து விட்டார்களாம்.

ஒரு நாள் நான் புத்தகங்கள் வாங்குவதற்காக ஒரு கடைக்குச் சென்றிருந்தேன். ஏதோ ஒரு பத்திரிகையின் மேல் இந்தியாவைப் பற்றி ரஸமான விவரங்கள் உள்ளே வெளியாகி இருப்பதாக எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அந்த ரஸமான தகவல்கள் என்னவாக

இருக்கும் என்று பார்க்க ஆவல் எழுந்தது. உடனே அதற்கு உரிய விலையைக் கொடுத்து வாங்கி, அங்கேயே பிரித்துப் பார்த்தேன். முதல் பக்கத்தில் தஞ்சைக் கோவிலின் படமும், தாஜ்மகாலின் படமும் காணப்பட்டன. யாரோ ஒரு பேராசிரியர் அந்தக் கட்டுரையை எழுதி இருந்தார். நான் அசுவாரஸ்யமாக அடுத்த பக்கத்தைத் திருப்பினேன். திடீரென்று என் இதயத்திலிருந்து ரத்தம் பொங்கி உடலெங்கும் பாய்ந்தது. உடலிலுள்ள ஒவ்வொரு நரம்பும் படபடவென்று துடித்தது. நின்று கொண்டிருந்தவன் சடாரென்று பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். என்ன ஆயிற்று என்று தெரிவதற்கு எனக்கே இரண்டு நிமிஷங்கள் பிடித்தன. மறுபடியும் அந்தப் படத்தைக் கூர்ந்து பார்த்தேன். 'மகாபலிபுர சிற்பங்களுக்கு மத்தியில் நிற்பது இந்துமதி தானா? அவள் அருகில் இருக்கும் பெண்மணி யார்? இவ்வளவு நாகரிகமாக அலங்கரித்துக் கொள்ள அவளுக்கு எப்படித் தெரிந்தது? ஒரு வேளை......' அதைப்பற்றி நினைக்கவே என் மனம் இடம் தரவில்லை.

எனக்கு ரொம்பத் தலை சுற்றியது. புத்தகத்தை எடுத்துக் கொண்டு என் அறைக்குப் போனேன்.

மறுபடியும் மறுபடியும், இந்துமதி எப்படி இந்தப் படத்தில் வந்திருக்க முடியும் என்று யோசித்தேன். கட்டுரை முழுவதையும் பரபரப்போடு படித்தேன். அதில் இந்துவைப் பற்றிய குறிப்பு ஒன்றும் காணவில்லை. ஒரு வேளை இது இந்துவாக இருக்க முடியாதோ என்று தோன்றியது. சின்னஞ் சிறு படத்தைக் கொண்டு எப்படி நிரூபிக்க முடியும்? இந்துவைப் போல வேறு யாராவது இருக்கலாமல்லவா? இந்துவின் படத்தை டிராயரிலிருந்து எடுத்தேன். இரண்டையும் எதிரில் வைத்துக்கொண்டு வெகுநேரம் பார்த்தேன். சந்தேகமில்லாமல் அது இந்து தான் என்று தோன்றிற்று.

ஒரு விதத்தில் மனத்துக்கு இந்துவின் படத்தைப் பார்த்தது ஆறுதலாக இருந்தது. இந்து உயிரோடு தான் இருக்கிருள். அவளுக்கு நண்பர்களும் இருக் கிருர்கள். மகாபலிபுரம் போன்ற இடங்களுக்குச் செல்லும் படியான சந்தோஷமான சூழ்நிலையில்தான் இருக்கிருள் என்ற இத்தனை விஷயங்களும் அந்தப் படத்தின்மூலம் புலப்பட்டன. ஆனுல், இத்தனையும் அவளுக்கு எப்படிக் கிடைத்தது என்ற கேள்வி எழுந்தது. அவளுக்குக் கல்யாணமாகியிருக்கக்கூடும் என்ற எண்ணத்தை என்னுல் தாங்க முடியவில்லை. அப்படி இருக்காது. இந்து ஒரு நாளும் சம்மதித்திருக்க மாட்டாள். அய்யாக்குட்டியின் மூலம் யாராவது சினிமா நக்ஷத்திரத்தின் அறிமுகம் கிடைத்திருக்கலாம். ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும். இந்தக் கட்டுரையை எழுதியவரிடம் விசாரித்து இந்துமதி இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து விடலாம்.

கட்டுரையின் முதல் பக்கத்தைப் பார்த்தேன். பேரா சிரியர் தாம்ஸன் எழுதிய கட்டுரை என்று போட் டிருந்தது. அவர் கேம்பிரிட்ஜில்தான் ஆசிரியர் என்று தெரிந்ததும் என் சந்தோஷம் அளவு கடந்துவிட்டது. அவரை எனக்கு அதிகமாகப் பரிச்சயம் கிடையாது. ஆயினும், பல தடவைகள் புத்தகசாலைகளில் பார்த்திருக் கிறேன். அவர் இந்தியா சென்ற விவரமும் எனக்குத் தெரியும். அவரைத் தேடிக் கண்டு பிடித்து இந்த விவரங் களைக் கேட்க வேண்டுமென்று துடிக்கும் உள்ளத்துடன் கிளம்பினேன்.

# 37. ஏமாற்றம்

அந்தப் புத்தகத்தையும், இந்துவின் படத்தையும் எடுத்துக்கொண்டு நேரே மிரியத்தின் வீட்டுக்குப் போனேன். அவளுக்கு 'கேம்பிரிட்ஜி'ல் எல்லோரையும் தெரியும். அவள் மூலம் பேராசிரியர் தாம்ஸன் இருக்குமிடம் தெரிந்துவிடும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. என் நம்பிக்கையும் வீண் போகவில்லை.

மிரியத்திடம் அவரைப் பற்றி விசாரித்த உடனேயே தானே அவரிடம் அழைத்துப் போய் அறிமுகம் செய்து வைப்பதாக முன் வந்தாள். "எதற்காகத் திடீரென்று அவரைச் சந்திக்க விரும்புகிறீர்கள்? இந்தியாவைப் பற்றி அவரிடம் விசாரிப்பதற்காகவா?" என்று கேட்டாள்.

"இந்தியாவைப் பற்றி அல்ல. இந்துவைப் பற்றி!" என்றேன்.

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு மிரியத்துக்குப் படத்தைக் காட்டி விவரமாக விளக்கினேன். அவளும் ஆச்சரியப்பட்டாள். என்னிடமிருந்த இந்துவின் படத்தையும் பத்திரிகையில் வந்த படத்தையும் வெகு நேரம் கூர்ந்து பார்த்து விட்டு அது இந்துதான் என்று அவளும் தீர்மானித்தாள். மறு நாள் நாங்கள் இருவரும் தாம்ஸனைச் சந்திக்கப் போவதாகத் தீர்மானித்தோம்.

தாம்ஸன் தம்பதிகள் மிகவும் அனுதாபத்தோடு, என் நிலையைப் புரிந்து கொண்டு பிரியமாகப் பேசினார்கள்.

"அவர்களை நான் மஹாபலிபுரத்தில் சந்தித்தது உண்மைதான். அவர்கள் வீட்டுக்குப் போய் ஒரு நாள் 'டீ' கூடச் சாப்பிட்டோம். அந்த இன்னொரு பெண் மிக நன்றாக ஆங்கிலம் பேசினாள். அவர்கள் சென்னையில் தான் இருக்கிறார்கள். ஆனால், அவர்களுடைய விலாசம் என்னிடமில்லை. எப்படியோ கெட்டுப் போய் விட்டது.

உங்களுக்கு இந்த உதவி செய்ய முடியாமல் இருப்பதற்கு மிகவும் வருந்துகிறேன். மஹாபலிபுரத்தில் எடுத்த படங்கள் என்னிடம் இருக்கின்றன. வேண்டுமானுல் அவற்றைத் தருகிறேன்" என்று கூறி, இரண்டு மூன்று படங்களை என்னிடம் கொடுத்தார் மிஸ்டர் தாம்ஸன்.

ஏமாற்றமடைந்த உள்ளத்துடன் என் அறைக்குத் திரும்பி வந்தேன்.

இந்தச் சமயத்தில்தான் அரவிந்தின் படிப்பு முடிந்து அவன் இந்தியா திரும்பிக் கொண்டிருந்தான். அவன் என்னுடைய தேசத்துக்குத்தான் சென்றுன். ஆனுல் தாய் நாட்டுக்குச் செய்தியனுப்ப எனக்கு அங்கே யார் இருந்தார்கள்? அரவிந்த் சென்ற தினத்தன்று எனக்கு ரொம்ப மனம் சோர்ந்துவிட்டது.

அன்று முதல் நான் இந்தியா செல்லும் நாளை மிக ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினேன். ஒவ்வொரு நாள் முடியும் போதும், 'அப்பா! ஒரு நாள் கழிந்து விட்டது' என்று ஆறுதலுடன் பெருமூச்சு விடுவேன்.

இரண்டாவது பரீக்ஷையும் முடிந்து நான் இந்தியா புறப்பட ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தேன். கப்பல் பயணத்துக்கு டிக்கட் கிடைப்பது சிரமமாக இருந்தது. ஆகஸ்ட் மாதம் பரீட்சை முடிந்தது. நான் இந்தியாவுக்கு உடனே திரும்பக் கூடாதென்று விதி சதி செய்துவிட்டது. 1939-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று உலக மகா யுத்தம் ஆரம்பமாகியது. அப்போது நான் அடைந்த வேதனையை எழுத்திஞல் விவரிக்க முடியாது. எந்தக் கப்பலிலும் இந்தியா திரும்ப இடம் கிடைக்கவில்லை.

இந்துவுக்கு நான் வாக்குறுதி கொடுத்ததும், அவள் எனக்காக யுகம் யுகமாய்க் காத்திருப்பேன் என்று கூறியதும் நினைவுக்கு வந்து தென்பூட்டி வந்தன.

ஒரு விதத்தில் யுத்தத்தின்போது நான் இங்கிலாந்தில் இருக்க நேர்ந்தது என்னுடைய அதிர்ஷ்டமென்றுதான்

சொல்ல வேண்டும். எனக்கு அந்த மாதிரி அனுபவங்கள் வாழ்நாளில் வேறு எப்படிக் கிட்டியிருக்க முடியும்? அந்த அனுபவங்களையெல்லாம் இப்போது நினைக்கும்போது ஒருவித ஆனந்தம்கூட உண்டாகிறது. ஒரு போர் வீரன் தான் ஈடுபட்டிருந்த யுத்தத்தைப் பற்றிப் பின்னால் நினைத்துப் பார்க்கும்போது அவனுக்கு மகிழ்ச்சிதானே உண்டாகும். தான் அடைந்த காயங்களைப் பற்றி நினைக்கும்போதுகூட வருத்தம் உண்டாகாது. பெருமையே உண்டாகும். அந்த மாதிரி லண்டன் நகரில் வெடி குண்டுகளின் பயங்கரங்களுக்கு மத்தியில் காலம் கழித்ததை நினைக்கும்போது எனக்குப் பெருமைதான் உண்டாகிறது.

மேலும் அப்போது இங்கிலாந்தில் நடந்த யுத்தம் பழைய கால யுத்தம் மாதிரி படை வீரர்களுடைய சண்டை அல்ல. ஒவ்வொரு பிரஜையும் யுத்தத்தில் நேர்முகமாகச் சம்பந்தப்பட்டிருந்தார்கள். எந்தச் சமயத்தில் எங்கே குண்டு விழும்? எங்கே நெருப்புப் பற்றிக் கொள்ளும் என்பதை யாரால் கூற முடியும்?

யுத்தம் ஆரம்பித்த புதிதில் எனக்கு இதெல்லாம் தெரிந்திருக்கவில்லை. எங்கேயோ ஐரோப்பாக் கண்டத்தில் மகத்தான சண்டை நடந்து கொண்டிருந்தது. அதற்காக எனக்கு இந்தியா திரும்பக் கப்பலில் இடம் கிடைக்க வில்லை என்னும் விஷயம் புதிராகவே இருந்தது.

அக்டோபர் மாதத்திலிருந்து பரபரப்பான செய்திகள் வரத் தொடங்கின. ஸ்காட்லாந்தில் உள்ள கப்பல் படைத் துறைமுகத்தில் "ராயல் ஓக்" என்னும் பெரிய கப்பல் ஒரு ஜெர்மானியக் கப்பலினால் மூழ்கடிக்கப்பட்டது. அதிலிருந்த எழுநூறுக்கு அதிகமான கடற்படை வீரர்கள் இறந்துவிட்டார்கள்.

இங்கிலாந்து முழுதும் பரபரப்பு ஏற்பட்டது. தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எல்லோரும் விழித்துக் கொண

டார்கள். என்னைப்போலவே யுத்தம் இங்கிலாந்தை நெருங்கிவிட்டது என்பதை அதுவரை அறிந்து கொள்ளாதவர்கள் எல்லாம், யுத்தத்துக்கு தயாராக ஆரம்பித்தார்கள்.

" இங்கிலாந்தின் கடற்படை என்ன செய்கிறது ?" என்று கேள்வி கேட்டுப் பத்திரிகைகள் அரசாங்கத்தைக் காரசாரமாகத் தாக்கித் தலையங்கங்கள் எழுதின.

நான் அப்போது லண்டனில் பரீட்சை எழுதிவிட்டுத் திரும்ப கேம்பிரிட்ஜுக்கே வந்திருந்தேன். ஸ்ரீமதி ஹார்வியும் நானும் இந்த யுத்த நிலையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்.

" இங்கே யுத்தம் நடப்பதால் நான் இந்தியா திரும்ப இடம் கிடைக்கவில்லை. இன்னும் எத்தனை நாட்கள் நான் இப்படித் திண்டாட வேண்டுமோ தெரியவில்லை. ஒன்றும் செய்யாமல் இங்கே எப்படி இருப்பது !" என்று கூறினேன்.

" நீங்கள் ரொம்பச் சுயநலக்காரர் மிஸ்டர் ரங்கதுரை. நீங்கள் உங்கள் ஒருவரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களைப் பிரிந்து உங்கள் காதலி கஷ்டப் பட்டுக்கொண்டிருப்பாள் என்பதைத் தவிர வேறு எதையும் நீங்கள் யோசிக்கவில்லை. இங்கே உள்ள நிலையைச் சிறிது எண்ணிப் பாருங்கள். எத்தனை பெண்கள் தங்கள் கணவன்மார்களையும், பிள்ளைகளையும், தந்தைகளையும் இழக்கப் போகிறார்களோ ? ' ராயல் ஓக் 'கிலிருந்த எழுநூற்றைம்பது பேருடைய குடும்பத்தினரின் நிலையை நினைத்தால் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது" என்றார் அவர்.

நான் மௌனமாக இருந்தேன். ஒரு தேசம் முழுதும் கஷ்டப்படும்போது ஒரு தனி மனிதனின் கஷ்டங்களுக்கு மதிப்பில்லைதான் என்று நினைத்தேன். போகப் போக இந்த எண்ணம் உறுதியாயிற்று.

இரண்டு நாட்களுக்குப் பின் இங்கிலாந்தின் கடற்படைமீது ஜெர்மானிய விமானங்கள் குண்டுகளைப் பொழிந்தனவென்றும் 'ஸௌதாம்டன், எடின்பர்க், மோஹாக்' என்னும் கப்பல்கள் சேதமடைந்த போதிலும் நான்கு எதிரி விமானங்கள் வீழ்த்தப்பட்டன என்றும் செய்திகள் பத்திரிகைகளில் பிரசுரமாயின. ஸ்ரீமதி ஹார்விக்கு இந்த விவரம் சற்று மன ஆறுதலை அளித்தது.

நான் மிரியத்துடன் ஒரு நாள் என் நிலையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது பேராசிரியர் ஆன்ட்ரூஸ் அங்கே வந்தார். அவர் என் கஷ்டத்தை உணர்ந்துகொண்டார்.

"போகப் போக யுத்த நிலை இன்னும் தீவிரமாகத் தானே இருக்கும்? இப்போதே என்னால் திரும்ப முடியா விட்டால் இன்னும் கொஞ்ச நாட்களானால் எப்படிப் போக முடியும்? கடலில் வேறு அபாயங்கள் அதிகமாகிவிடும் அல்லவா?" என்றேன்.

"ஆம்! இப்போதே கப்பலில் பிரயாணம் ரொம்ப அபாயகரமாகிவிட்டது. நீ ஒன்று செய். லண்டன் சென்று 'இந்தியா ஹவுஸில்' உன் நிலையைப் பற்றிச் சொல்லு. அவர்கள் உனக்கு ஏதேனும் ஏற்பாடு செய்வார்கள்" என்று யோசனை கூறினார்.

இது எனக்குச் சிறந்த யோசனையாகப் பட்டது. மறுபடியும் நான் லண்டன் நகருக்குச் சென்ற பிறகு என்னுடைய கவலைகளை நான் மறக்கும்படி நேரிட்டது. லண்டன் நகரில் அனைவரும் இங்கிலாந்தை எப்படிக் காப்பது என்ற கவலையில் மூழ்கியிருந்தார்கள். பிரிட்டன் அந்தச் சமயத்தில் யுத்தத்துக்குச் சிறிதும் தயாராயில்லை. விமானங்கள் கிடையாது. தளவாடங்கள் இல்லை. வீரர்கள் போதுமான அளவு இல்லை. பணம் இல்லை.

இப்படி எல்லாம் 'இல்லை'யாகவே இருந்தது. அந்தச் சமயத்தில் என்னைப் பற்றி யார் கவலைப்படுவார்கள் ? உண்மையில் எனக்கு 'இந்தியா ஹவுஸு'க்குப் போய் என் நிலையைச் சொல்லிக் குறைபட்டுக் கொள்ள வெட்கமாக இருந்தது. ஆனால், இந்துமதியின் முகம் எதிரே வந்து நின்று, "சீக்கிரம் வரமாட்டீர்களா ?" என்று கேட்பதுபோலத் தோன்றி என்னைத் தூண்டியது.

அவர்கள் தான் என்ன செய்ய முடியும் ? தங்களால் இயன்றதைச் செய்ய உறுதி கூறினார்கள், நான் அந்த உறுதிமொழியுடன் திரும்ப கேம்பிரிட்ஜ் சென்றேன். லண்டனுக்கே வந்து அங்கேயே இருக்கவேண்டுமென்று நினைத்தேன். ஆனால், அங்கு அறைகளே கிடைக்கவில்லை. ஹோட்டல்களில் தங்குவதென்றால் செலவைச் சமாளிப்பது அசாத்தியம். இப்படி நான் தத்தளித்துக் கொண்டிருந்தபோது ஐரோப்பா முழுதுமே யுத்த பயத்தினால் நிலை கலங்கித் தவித்துக் கொண்டிருந்தது.

கேம்பிரிட்ஜிலும் வியக்கத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. படித்துக்கொண்டிருந்த இளைஞர்களில் பெரும்பாலோர் படை வீரர்களாகச் சேர்ந்து விட்டனர். ஜான் ஆன்ட்ரூஸும் படையில் சேர்ந்து விட்டான். அவர்கள் வீட்டில் அதைப் பற்றிப் பெருமையாகவே பேசிக்கொண்டார்கள். கவலைபட்டதாகவே தெரியவில்லை அவர்களுடைய தீர உணர்ச்சி என்னையும் பிடித்துக்கொண்டு விட்டது. அதன் பிறகு நான் அதிகமாகக் கவலைப்படுவதை விட்டுவிட்டேன்.

ஆனால், இது உண்மையா ? கவலைப்படாமல் நான் இருந்தேனா ? எப்போதும் சிரித்துக் கொண்டிருந்தேனா ? நெஞ்சில் வேதனை ஏற்பட்டபோதெல்லாம் அதைச் சிரிப்பு என்னும் இரும்புக் கவசத்தால் அழுத்தி மூடியதன் சிரமம் எனக்கல்லவா தெரியும் ! இந்துவின் நினைவு

இடைவிடாமல் என் மனத்தைத் தின்று கொண்டிருந்ததே அதை வெளியில் காட்டாமல் மறைத்துவைக்க என்ன பாடு பட்டேன். ஏன்? எனக்கே அது தெரியக்கூடாதென்று மூடி வைத்தேன். காயம் பட்டுவிட்டால் அதைப் பார்க்கப் பயந்து கட்டுப் போட்டுக் கொள்வதில்லையா? அந்த மாதிரி என் வேதனையை நானே பார்க்காமல் கட்டி வைத்திருந்தேன்.

வேலையும் இல்லாமல் நேரத்தை வீணாக அடித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது எனக்கு முள்ளின் மேலிருப்பதுபோல இருந்தது. இன்னும் சில மாதங்கள் சென்றால் செலவுக்குப் பணம்கூட இருக்காது.

இந்தச் சமயத்தில் ஒரு வரப்பிரஸதம் போல 'இந்தியா ஹவுஸி'லிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் எனக்குக் கப்பலில் இட வசதி செய்து தரமுடியவில்லை என்று வருத்தம் தெரிவித்திருந்தார்கள். அதற்குப் பதிலாக உடனே லண்டனுக்கு வந்தால் ஒரு சிறிய வேலை தருவ தாகவும் அங்கிருந்தபடியே இந்தியா செல்லக் கப்பலில் இடத்துக்கு முயற்சி செய்யலாமென்றும் தெரிவித்திருந் தார்கள். எனக்கு இது உற்சாகமளித்தது. சரி! சாப் பாட்டுக் கவலையாவது இல்லாமலிருக்கலாம் என்ற சந்தோ ஷத்துடன் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் குடும்பத்தினரிடமும், ஹார்வி தம்பதிகளிடமும் விடை பெற்றுக்கொண்டு லண்டனுக்குச் சென்றேன்.

அதிர்ஷ்டவசமாக ஒரு அறையும் எனக்குக் கிடைத்தது.

நான் அங்கே சென்ற பிறகு நான்காவது கிறிஸ் துமஸ் வந்தது. நான் பார்த்த முதல் கிறிஸ்துமஸுக்கும், இதற்கும் எவ்வளவு வித்தியாசம்? முதல் கிறிஸ்துமஸ் விழாவில் லண்டன் நகரம் ஒரே ஒளி வெள்ளத்தில் மூழ்கி இருந்தது. இந்த விழாவின் போதோ "இருட்டடிப்பு"

வைபம் நடந்துகொண்டிருந்தது. தெருக்களிலும் வீதிகளிலும் இருட்டடிப்பு நடந்ததே தவிர லண்டன் நகரத்து மக்களின் உள்ளத்தில் வீர ஒளி சுடர் விட்டு எரிந்தது.

அந்த வருஷம் டிசம்பர் மாதத்தில் ரஷ்யா பின்லாந்தின் மீது படையெடுத்தது. இத்தாலியில் முஸோலினி வேறு இங்கிலாந்துடன் சண்டையைத் துவக்க ஆயத்தமாக இருந்தார். அப்படியும் புது வருஷப் பிறப்பின்போது ஜனங்கள் உற்சாகமாகவே காணப்பட்டார்கள். ஆனால், பாவம்! அவர்களுக்குப் புது வருஷம் இன்னும் கடினமான வருஷமாக இருந்தது!

நானும் ரகுவும் ஒரு நாள் எங்கள் அறையில் பேசிக்கொண்டிருந்தோம். நான் லண்டன் வந்த பிறகு செலவைக் குறைத்துக் கொள்ளுவதற்காக நாங்கள் இருவரும் ஒரே அறையில் வசிக்க ஏற்பாடு செய்து கொண்டோம். நான் பட்ட கஷ்டங்களை அவனும் பட்டுக் கொண்டிருந்தான்.

"ரங்கதுரை! இப்படி எத்தனை நாள் இங்கே இருப்பது? பாழாய்ப்போன ஹிட்லர் நாம் போன பிறகு யுத்தத்தை ஆரம்பித்திருக்கக் கூடாதோ? அவன் தலையில் இடி விழ!" என்று சுத்தத் தமிழில் சாபம் கொடுத்தான்.

"ஏனப்பா இப்படி ஆத்திரப்படுகிறாய்? அவன் தலையில் ஒரு குண்டு விழ வேண்டுமென்று கூறினாலும் நடக்கக் கூடியதாக இருக்கும். நீ என்னமோ இடியை விழச் சொல்கிறாய். இந்த இங்கிலீஷ்காரர்களைப் பார்த்து நீ கொஞ்சம் பொறுமையாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். பாரேன்! எத்தனை வீரர்கள் யுத்தத்துக்குப் போயிருக்கிறார்கள்? அவர்கள் குடும்பத்தினரெல்லாம் எப்படி அதைச் சகித்துக்கொள்கிறார்கள்? நீயும் நானும் ஆண் பிள்ளைகளாகப் பிறந்துவிட்டு இப்படிக் கோழைகளாக இருக்கலாமா?"

"ஆமாம்! அவர்களுக்குத் தங்கள் தேசத்துக்காக உயிரை விடுகிறோமென்ற சந்தோஷமாவது இருக்கிறது. நாம் எங்கேயோ ஒரு கண்காணாத தேசத்துக்கு வந்து விட்டு இங்கே செத்துப்போவதில் என்ன பயன்?"

"இங்கே செத்துப்போய் விடுவோம் என்று நீ ஏன் தீர்மானித்து விட்டாய்? உன்னைத் தேற்றுவதே எனக்கு வேலையாகிவிட்டது. சே! சே!"

"இல்லை துரை! நீயே சொல்லு. இங்கிருந்து கப்பலில் இடம் கிடைத்து நாம் போனாலும் நமது கப்பல் யுத்தக் கப்பல்களால் தாக்கப்படாது என்பது என்ன நிச்சயம்? என் மனைவி கடிதத்துக்குக் கடிதம் கண்ணீர் விட்டு எழுதுகிறாள். பாவம்! அவளுடைய கதியை நினைத்துப் பார்."

"ரகு! நீ என் நிலையை நினைத்துப் பார். உனக்காவது கடிதம் வருகிறது. எனக்கு அதுவும் இல்லை. நான் பொறுத்துக் கொண்டுதானே இருக்கிறேன். இப்படிக் கவலைப்படுவதால் நிலையைச் சீர்திருத்திவிட முடியுமா?" என்றேன்.

அதன் பிறகு ரகு அப்படியெல்லாம் பேசுவதை நிறுத்திக் கொண்டான்.

## 38. கப்பல் கிளம்பியது

டென்மார்க், நார்வே இரண்டு தேசங்களும் 1940-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஜெர்மனிக்குப் பணிந்து விட்டன. யுத்த நிலைமை இன்னும் சீர்கேடடைந்து வந்ததே தவிர, நின்றுவிடுமென்பதற்கு ஆதாரமே காணவில்லை. கப்பல்களில் இட நெருக்கடி மிகவும் அதிகரித்தது. எங்களுக்கு விமோசனம் இருப்பதாகவே தெரியவில்லை.

ஒரு நாள் என் மனம்கூட ரொம்பத் தளர்ந்துவிட்டது. ரகுவைப் பார்த்து " நீ சொன்ன மாதிரிதான் நடக்கும் போலிருக்கிறது. இந்தியா திரும்பப் போகிருேமென்ற எண்ணம் என்னை விட்டுப் போய்விட்டது " என்றேன்.

" அந்த ஹிட்லர் மட்டும் என் எதிரில் வந்தால் அவன் சிண்டைப் பிடித்து......" என்று ரகு ஹிட்லரைத் திட்டத் தொடங்கினுன். இதைக் கேட்டு என் காது புளித்துப் போயிருந்தது.

" நீ என்னிடம் சொல்வதோடு நிறுத்திக் கொள்ளாதே. ஹிட்லரைத் தேடிக்கொண்டு போக ஏற்பாடு செய். உனக்குத் துணையாக நானும் வருகிறேன். இருவருமாக ஹிட்லரின் சிண்டைப் பிடிக்கலாம் " என்றேன். உடனே அவனுடைய உணர்ச்சிப் பிரவாகமும், சொற்பிரவாகமும் தடைப்பட்டு நின்றுவிட்டன.

நான் பத்திரிகையைப் புரட்டிக்கொண்டே, " இந்த ஸ்காண்டினேவியாவைப் பற்றிப் பத்திரிகைகளில் படிக்கும் போதெல்லாம் எனக்கு அய்யாக்குட்டி என்னை நார்வே தேசத்துக்குப் போய்விட்டு வரச் சொன்னது நினைவுக்கு வருகிறது " என்றேன்.

" ஆமாம் ! நானுந்தான் ஸ்விட்ஜர்லாந்துக்கும், பிரான்ஸ் தேசத்துக்கும் போய் வேடிக்கை பார்த்து விட்டு இந்தியா திரும்பவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதையெல்லாம்தான் இந்த ஹிட்லர் பாழடித்துவிட்டானே. நீதான் அவரை ஒன்றும் சொல்லக் கூடாதென்கிருய் !"

நான் சிரித்தேன். அவனுடைய தர்க்கம் எனக்கு விளங்கவில்லை.

" என்னென்னவோ சொல்கிருயே, ரகு ! ' நார்விக் ' நகரத்துக்காக நடந்த கப்பல் சண்டையில் ஆங்கிலேயர் காண்பித்த தீரம் உன் மனத்தைக் கவரவில்லையா ?

எனக்கு அவர்களுடைய வீரத்தைப் பார்க்கும்போது அவர்களோடு நானும் ஒருவஞக இருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது......"

"போதும்! போதும்! கப்பல் கப்பலாக மனிதர்களை ஏமாற்றி அனுப்பிச் சாகச் சொல்வதற்கு வீரம் என்றும் தீரம் என்றும் பெயரா? ஒரு செய்தி படித்தேன். கடலில் மூழ்கிக் கொண்டிருந்த கப்பலிலிருந்து கப்பல் தலைவர் தப்பிச் செல்பவர்களுக்குக் கைகளை ஆட்டி விடை கொடுத்தாராம். தப்பி வந்தவர்களில் ஒரு வீரர் அந்தக் கப்பலின் தலைவர் கடைசியாக ஒரு சிகரெட்டைக் கொளுத்துவதைப் பார்த்தாராம். எவ்வளவு சத்தம் போட்டும் அவர் உயிர் தப்ப மறுத்து விட்டாராம். இந்த மாதிரி தற்கொலை செய்து கொள்வதற்கு இந்த ஜனங்களெல்லாம் ஏதோ பிரமாதப்படுத்துகிருர்கள்!"

"தன் கப்பல் மூழ்கிய பிறகு அவருக்குப் பிழைத்து வர இஷ்டமில்லை. காயம் பட்டுக் குற்றுயிராகக் கிடப்பவர்கள் நீரில் மூழ்கும் போது தான் மட்டும் பிழைத்துச் செல்வது கோழைத்தனமென்று அவருக்குத் தோன்றியிருக்கும். அவர் உண்மையில் ஒரு மகாவீரர் என்று நான் கருதுகிறேன்."

"அப்படியாஞல் சரி" என்ருன் ரகு.

அந்த வருஷம் மே மாதத்தில் சேம்பர்லினுக்குப் பதிலாக வின்ஸ்டன் சர்ச்சில் பிரதம மந்திரியாஞர்.



பெல்ஜியமும், பிரான்ஸும் ஹிட்லருக்குப் பணிந்துவிட்டன. கடைசியாக உலகப் பிரசித்திப்பெற்ற பிரிட்டிஷ் யுத்தம் தொடங்கி விட்டது. அந்த வருஷம் ஆகஸ்ட் மாதத்திலிருந்து நவம்பர் மாதம் வரையில் நாள்தோறும் இடைவிடாமல் இரவும் பகலும் மழை பொழிவதுபோல ஜெர்மன் விமானங்கள் குண்டு

களைப் பொழிந்தன. தினமும் இரவில் சுமார் இருநூறு எதிரி விமானங்களாவது லண்டன் நகரைச் சுற்றி வட்டமிட்டன.

முதல் மூன்று இரவுகள் அனைவரும் குண்டுகள் விழும் சப்தத்தைக் கேட்டுக் கொண்டு குழிகளில் பதுங்கிக் கொண்டிருந்தோம். எதிரி விமானங்கள் திரும்பத் தாக்கப் படுவதாகவே தெரியவில்லை. இதைக் குறித்து நான் வியந்தேன். ஆனால், பிறகு விமானங்களைத் தேடுவதற்காக ஆகாயம் முழுவதையும் ஒளி வெள்ளமாகச் செய்து கொண்டு சுற்றி வந்த 'ஸர்ச் லைட்'களின் கண்ணைப் பறிக்கும் ஒளியோடு எதிர்த் தாக்குதல் ஆரம்பமாயிற்று. எதிரி விமானங்களுக்கு அதிக சேதம் ஏற்படாவிட்டாலும் ஜனங்களுக்கு அது மிகவும் திருப்தியளித்தது.

ஆரம்பத்தில் சில நாட்கள் குண்டு வீச்சு என்றால் எல்லோருக்குமே பயமாக இருந்தது. பிறகு அதைப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது. அதன் பிறகு வாண வேடிக்கை பார்ப்பது போல் அலட்சியமாகி விட்டது.

குண்டு வீச்சுக்களை அலட்சியம் செய்வதற்காகவே ஜனங்கள் சினிமாக்களுக்கு அதிகமாகச் சென்றார்கள். தெருக்களில் எப்போதும் நடமாட்டம் இருந்து கொண்டே தான் இருந்தது. வழக்கம்போல் வேலைகள் நடந்து கொண்டுதான் இருந்தன. ஒரு சமயம் நாங்கள் ஒரு ஹோட்டலில் இரவு சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அபாய அறிவிப்பு ஒலி எழுந்தது. யாரும் எழுந்து போக வில்லை. எல்லோரும் வழக்கம்போல் சாப்பிட்டு முடித்தோம். எப்போதையும் விட சிரிப்பும் கோலாகலமும் அதிகமாகவே இருந்தன. இரவு வேளைகளில் கசகசவென்று ஈரமாகவும், ஜனங்கள் நெரிந்து கொண்டுமிருந்த குழிகளில் பதுங்கு வதை விட வெளியிலிருந்து வேடிக்கை பார்ப்பதே சௌகரியமாக இருந்தது.

'பால் மால்,' 'ஸெயின்ட் ஜேம்ஸ் ஸ்ட்ரீட்,' 'பிக்க டில்லி' முதலிய இடங்களில் உண்டான சேதங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. தீப் பிடித்ததும் ஜனங்கள் வாய் திறக்காமல் அதை அணைக்க ஏற்பாடுகள் செய்வார்கள்.

ஒரு நாள் நானும் ரகுவும் இந்தியா ஹவுஸிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தோம். ரகுவுக்கும் அங்கே ஒரு சிறிய வேலை கொடுத்திருந்தார்கள். அவனுக்குக் கூட இந்தக் குண்டு வீச்சுக்களின் பயம் தெளிந்துவிட்டது. அப்போது திடீரென்று அபாய அறிவிப்புச் சங்கு ஒலித்தது. நாங்கள் இருவரும் என்ன செய்யலாமென்று யோசனை செய்வதற்குள் மேலே ஆகாய விமானங்கள் பத்துப் பதினைந்து பறந்தன. நாங்கள் திகைத்து நிற்கையிலேயே குண்டுகள் அவற்றிலிருந்து விழ ஆரம் பித்தன. எல்லாம் மூன்று நிமிஷ நேரம் கூட இருக்கா தென்று நினைக்கிறேன். நின்ற இடத்திலிருந்து நகர முடியாமல் கால்கள் தளர்ந்து போனது மட்டும் ஞாபக மிருக்கிறது. எங்களுக்குச் சமீபத்தில் ஒன்று விழுந்து வெடித்தது. அந்த வெடிச் சப்தம் கேட்ட பிறகுதான் ஸ்தம்பித்துப் போயிருந்த என் மூளை வேலை செய்யத் தொடங்கியது. ரகுவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடத் தொடங்கினேன். பத்தடி தூரம் ஓடுவதற்குள் அபாயம் நீங்கி விட்டதென்ற அறிவிப்பு ஒலித்தது.

பிறகு நாங்கள் நின்று வெடி விழுந்த இடத்தில் பற்றிக் கொண்டிருந்த நெருப்பை அணைக்க முயற்சிப்பவர் களுக்கு உதவி செய்தோம். பின்னர் மெள்ள நடந்து எங்கள் அறைக்குச் சென்றோம். இந்துவின் நினைவு எனக்கு அன்று மிக அதிகமாக வந்தது. 'எனக்கு ஏதாவது இன்று ஆகிவிட்டிருந்தால் என் இந்து என்ன பாடு படுவாள். ஒரு முறை அவளைப் பார்த்து அவள் சந்தோஷ மாக இருக்கிறாளென்பதைத் தெரிந்து கொள்ளாமல்

இறந்து போகக் கூடாது. அப்படிப் போனால் என் ஆத்மா சாந்தி அடையாது. கடைமையில் தவறி விட்டதாக எண்ணித் தவிக்கும். இனிமேல் இவ்வளவு அலட்சியமாக இருக்கக் கூடாது. கூடிய வரையில் ஜாக்கிரதையாக இருந்து இந்துவைப் பார்க்கப் போகவேண்டும். ஒரு முறை பார்த்துவிட்டால் போதும். பிறகு என்ன ஆனாலும் மனம் சாந்தி அடைந்துவிடும்' என்று நினைத்தேன். அன்று முதல் ஜாக்கிரதையாகவும் இருந்து வந்தேன்.

ஒரு நாள் பிற்பகலில் ஒரு விமான குண்டு வீச்சு நடைபெற்றது. அன்று பலத்த சேதங்கள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று அபாய அறிவிப்பு ஒலித்த கணக்கிலிருந்து தெரிந்தது. மாலையில் நாங்கள் மாணவர்கள் ஐந்து ஆறு பேராக லண்டனைச் சுற்றி வந்தோம்! அங்கங்கே அடிபட்டிருந்தவர்களுக்கு உதவி செய்தோம்.

லண்டனில் தென் பகுதிக்கு நாங்கள் சென்றபோது அன்று பிற்பகல் 'பெக்ஹாம்' என்ற இடத்தில் ஒரு பெரிய குண்டு விழுந்து வெடித்த இடத்தில் இருபதடி ஆழத்தில் ஒரு பள்ளம் ஏற்பட்டிருப்பதாகவும், கிட்டத்தட்ட முப்பது மூன்றடுக்கு வீடுகள் பொடிப் பொடியாகச் சிதறி விட்டனவென்றும் கேள்விப்பட்டோம்.

நாங்கள் சென்றபோது அங்கே கூட்டமாக இருந்தது. பள்ளத்தைப் பார்த்தபோது, மனித குலத்துக்கு அதே குலம் செய்யும் துரோகத்தை எண்ணி என் நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது.

அங்கே இருந்த ஒரு பெண்மணியிடம், "இது எப்போது ஏற்பட்டது?" என்று திகைப்புடன் கேட்டேன்.

"நாங்கள் மத்தியானம் சாப்பாடு முடிந்ததும் எங்கள் வேலைகளைச் செய்து கொண்டிருந்தோம். அபாய அறிவிப்பு ஒலித்ததும் ஓடிப் போய்ப் பள்ளங்களில் ஒளிந்து கொண்டோம். சற்றைக்கெல்லாம் இது இங்கே விழுந்து

வெடித்தது. வெடித்த பிறகு சில நிமிஷங்கள் என்ன நடந்ததென்று யாருக்கும் தெரியவில்லை. எப்படியோ உயிர் பிழைத்து விட்டோம் என்ற உணர்வு வந்த உடனே இடிந்து விழுந்திருந்த செங்கல் குவியல்களின்மீது கொடிகளை நட்டோம். சற்று நேரத்துக்கெல்லாம் யார் வந்தாரென்று நினைக்கிறீர்கள் ? பிரதம மந்திரி சர்ச்சிலே வந்தார். அவரை ஒரு ஆயிரம் பேர் சூழ்ந்துகொண்டு விட்டார்கள்.

அவர் இந்தப் பள்ளத்தைப் பார்த்ததும் அப்படியே கண்ணீர் விட்டு அழுதுவிட்டார். அவருக்கு நாங்கள் இப்படிக் கஷ்டப்படுவதைப் பார்க்கச் சகிக்க முடியவில்லை. இங்கே எல்லோரும் அவரைக் குதூகலமாக வரவேற்ருர்கள். ஒரு பெரிய ஆபத்திலிருந்து பிழைத்தது போன்ற உணர்ச்சி யாருக்குமே இல்லை. ஏதோ அபூர்வமான காரியத்தைச் செய்துவிட்டது போன்ற பெருமைதான் உண்டாகிறது " என்ருர்.

இதைக் கேட்டதும் என் மனமும் உருகிப் போய் விட்டது. இத்தனை துன்பங்களுக்கு இடையில் தங்கள் தலைவர்களிடம் அளவிலாத நம்பிக்கை காட்டும் ஜனங்களைக் கண்டால் யாருக்குத்தான் மனம் கரையாது ?

பிரதம மத்திரியின் மனம் உருகியதற்குச் சான்ருக யுத்தத்தில் வீடுகள், கடைகள் முதலியவற்றை இழந்தவர்களுக்கு நஷ்ட ஈடு அரசாங்கத்தில் தரவேண்டுமென்ற திட்டம் உருவாயிற்று.

லண்டன் நகரில் இப்படிப்பட்ட சூழ்நிலையில் நான் இந்துமதியின் அன்பு என்னும் துணையினுல் தைரியமாகக் காலம் தள்ளி வந்தேன்.

" இப்படி ஹிட்லர் லண்டனைத் தரைமட்டமாக்குவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு விட்டானே " என்று பொருமினுன் ரகு. தன்னுடைய கவலையிலேயே காலம்

தள்ளின அவனுக்குக்கூட லண்டன் நகரம் தெருத் தெரு வாகப் பற்றி எரியும் காட்சி அளவிலாத வருத்தத்தை அளித்தது.

யுத்தம் ஆரம்பித்து ஒரு வருஷத்துக்குப் பிறகு ஒரு ஒரு நாள் நல்ல செய்தி வந்தது. இந்தியா செல்லும் ஒரு வியாபாரக் கப்பலில் இரண்டு பேருக்கு இடம் இருப்பதாகச் செய்தி வந்தது. இருவரும் அவசரமாகப் புறப்பட்டோம்.

ஆவலினால் வெடித்துவிடும் போலிருந்த இதயத்தைக் கையால் அமுக்கிப் பிடித்துக்கொண்டு கப்பலேறினோம். ஆனால், கடைசியில் இங்கிலாந்தை விட்டு இந்தக் கஷ்ட மான வேளையில் போகிறோமே என்று துயரம்தான் எஞ்சி நின்றது. அந்தத் தேசத்து மக்களிடம் நான் வந்தபோது ஏற்படாத ஐக்கிய உணர்ச்சி, அவர்களோடு சேர்ந்து பட்ட கஷ்டங்களினால் மிகவும் பெருகிவிட்டது. லண்டன் நகரத்துக்குக் குண்டு வீச்சை "வேடிக்கை பார்க்க" ஜனங்கள் வந்து சேர்ந்து கொண்டிருந்தபோது நாங்கள் புறப்பட வேண்டியதாயிற்று. இங்கிலாந்து தேசத்தின் மீது புதியதாக ஏற்பட்ட பரிவு உணர்ச்சியுடன் அதை விட்டுப் பிரிந்தோம்.




# நான்காம் பாகம்

## 1. தாய் நாட்டின் தரிசனம்

அமைதியான கடலைக் கிழித்துக்கொண்டு கப்பல் சென்றுகொண்டிருந்தது. இன்பமாகக் காற்று வீசிக் கொண்டிருந்தது. ஆதவன் தன் நீண்ட யாத்திரையை முடித்துக்கொண்டு கடலில் இறங்கிக்கொண்டிருந்தான். பாதி தெரிந்த சிவந்த தங்கத் தாம்பாளம் போன்ற சூரியனின் கதிர்கள், கடலின் நீல நிறத்தைப் பற்பல வர்ணங்களாக மாற்றி இந்திர ஜால வித்தை செய்து கொண்டிருந்தன.

இதோ, சூரியன் மறைந்துவிடப் போகிறது. அதன் விளிம்புதான் தெரிகிறது. இப்போது அதுவும் மறைந்து விட்டது. வானத்தில் அவன் இருந்ததற்கு அடை யாளமாகச் செந்நிறம் மட்டும்தான் இருக்கிறது. அதுவும் மங்கிக்கொண்டே வந்தது.

நான் கப்பலின் மேல் தளத்தில் நின்றுகொண்டிருந் தேன். வானம் துல்லியமாகக் காட்சி அளித்தது.

‘ பம்பாய்த் துறைமுகம் போய்ச் சேர இன்னும் இரண்டு நாட்கள் இருக்கின்றன ’ என்று மனம் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டிருந்தது. ‘ அங்கிருந்து நேரே வங்காளத்தில் போய் வேலையை ஒப்புக்கொள்ள வேண்டியது. உடனே குங்குமத்துறைக்குப் போய் என் இந்துவைப் பார்க்க வேண்டும். இப்போது இந்து எப்படி இருப்பாள் ? இன்னும் உயரமாகியிருப்பாளா ? அப்படியே இருப்பாளா ? என்னைப் பார்த்ததும் என்ன செய்வாள் ? மகிழ்ச்சியோடு சிரிப்பாளா ? அல்லது உணர்ச்சிப் பிரவாகத்தினால் கண்ணீர் விடுவாளா ? “ நீங்கள் வாக்குறுதி கொடுத்ததை இத்தனை நாட்களாக மறந்துவிட்டுத்தானே இருந்தீர்கள் ?” என்று குற்றஞ் சாட்டுவாள்.

“ மறந்திருந்தால் வந்திருப்பேனா இந்து ? உனக்கு நான் கூறியது ஞாபகமிருக்கிறதா ?” என்று கேட்பேன்.

“ நீங்கள் கூறியதை என்னால் மறக்க முடியுமா ?” என்பாள் இந்து. இந்துவின் அழகிய கண்கள் ...!

அந்தச் சமயத்தில் ரகு என் முன்னால் வந்து நின்று சிந்தனையைக் கலைத்தான். அப்போதுதான் நன்றாக இருட்டிவிட்டதென்பதும், பரிசுத்தமான வானத்தில் கோடிக்கணக்கான வைரங்களை வாரி இறைத்ததுபோல் நட்சத்திரங்கள் பளிச்சென்று மின்னுவதும் என்னுடைய கண்களுக்குப் புலப்பட்டன.

“ பம்பாய் போய்ச் சேர இன்னும் இரண்டு நாட்கள் தான் இருக்கின்றன ” என்றான் ரகு.

“ நானும் அதையேதான் நினைத்துக் கொண்டிருந்தேன் !”

“ எப்படியோ தப்பிப் பிழைத்து உயிரோடு வந்து சேர்ந்துவிட்டோம். வழியில்தான் எத்தனை ஆபத்துக்கள் ஏற்பட்டன ? நீர் மூழ்கிக் கப்பல் தொடர்ந்து வருகிறது என்று பத்து நாட்களுக்கு முன்பு அறிவிக்கப்பட்டபோது

நாம் ஊருக்குப் போய்ச் சேர்ந்து விடுவோமென்ற நம்பிக்கையை நான் அடியோடு இழந்து விட்டேன்!"

"நான் என்ன நினைத்தேன் தெரியுமா? உலகத்தில் நாம் பட்ட கஷ்டங்களுக்கு முடிவு வந்துவிட்டதென்றும், கடலில் மூழ்கினால் கடலின் ஆழத்திலுள்ள அழகிய முத்துக்கள், நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட குகைகளில் வசிக்கும் மச்ச கன்னிகளுடன் ஆனந்தமாய்க் காலம் கழிக்கலாம் என்றும் நினைத்தேன்!"

"போதுமே உன் கற்பனை! எனக்கு இதெல்லாம் அலுத்துப் போய் விட்டது. பெரிய கவிகள் எல்லாம் இப்படிக் கற்பனை செய்தால் கவிதைகளாவது எழுதுவார்கள். நீ கற்பனை செய்வதனால் என்ன லாபம்?"

"இந்த எண்ணத்தினால் தோன்றும் சந்தோஷம் தான் லாபம். அது போதாதா? நீ கலில் கிப்ரானின் 'மச்ச கன்னிகள்' என்ற கதையைப் படித்திருக்கிறாயா?"

"நான் அவருடைய பெயரைக்கூடக் கேள்விப் பட்டதில்லை."

"எனக்குக்கூடத் தெரியாது. ஐ. ஸி. எஸ். முதல் பரீட்சையின் போது என்னைக் கேள்வி கேட்டார்களல்லவா? அப்போது 'கலில் கிப்ரான்' என்பவர் யார் என்று கேட்டார்கள். எனக்கு அப்போது அவரைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஆனால், பெயரின் உச்சரிப்பைக் கேட்டபோது ஒரு அரேபியப் பெயர் மாதிரி இருந்தது. ஆகவே 'அரேபியா தேசத்துக் கவி' என்று சொல்லி வைத்தேன். பின்னால் அது உண்மையென்று தெரிந்து ரொம்பச் சந்தோஷமாக இருந்தது!"

"உன்னைச் சமயத்தில் காப்பாற்றின அவருக்கு நன்றி செலுத்துவதற்காக அவருடைய நூல்களையெல்லாம் வாங்கிப் படித்தாயாக்கும்?"

" ஆமாம். உனக்குக் கூட அவருடைய நூல்கள் ரொம்பப் பிடிக்கும். அவரும் உன்னைப் போலவே யுத்தங்களை அடியோடு வெறுக்கிறார்."

" உண்மையாகவா ? அப்படியானால் நீ அந்தக் கதையைச் சொல்லு."

நான் கையிலிருந்த புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

" ஆழ்கடலுக்கு அடியில் முத்துக்கள் குவிந்திருக்கும் இடத்தில் ஒரு இளைஞனின் உடல் கிடந்தது. அதைச் சுற்றித் தங்க நிறமான கேசத்தை உடைய சில மச்ச கன்னிகள் உட்கார்ந்து பரிதாபமாகப் பார்த்துக் கொண் டிருந்தார்கள்.

ஒரு கன்னி, ' இந்த மனிதன் நேற்று கடல் கொந்தளித்துக் கொண்டிருந்த போது இங்கே வந்து சேர்ந்தான் ' என்று மொழிந்தாள்.

இன்னொரு கன்னி, ' இல்லை. கடவுளின் சந்ததி யார்கள் என்று தன்னைச் சொல்லிக் கொள்ளும் மனிதர்கள் யுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். அதனால் நமது கடல் கூட ஒரே செந்நிறமாகி விட்டது. இவன் அந்த யுத்தத்தில் பலியானவன் ' என்றாள்.

மற்றொரு கன்னி, ' எனக்கு யுத்தமென்றால் என்ன வென்று தெரியாது. ஆனால், மனிதன் பூமியையெல்லாம் வென்று விட்டுக் கடலையும் வெல்ல வேண்டுமென்று பேராசைப்பட்டான். அதனால் நமது கடலரசனுக்குக் கோபம் வந்துவிட்டது. அவனைச் சமாதானப்படுத்து வதற்காக மனிதன் நிறையப் பலிகளையும் நிறையச் செல்வங்களையும் கடல் அரசனுக்கு அளித்தான். நமது கொடூர இதயமுள்ள பேரரசருக்கு மனிதனால் அளிக்கப் பட்ட காணிக்கை இந்த யுவன் ' என்றாள்.

எல்லோரும் அவன் அருகில் சென்று அவனைப் பரிசோதித்தார்கள். அவனுடைய பையில் ஒரு கடிதம் இருந்தது. அதைப் படிக்கத் தொடங்கினார்கள்.

' என் அன்பே !

நள்ளிரவு மறுபடியும் வந்து விட்டது. ஆனால், எனக்கு என் கண்ணீரைத் தவிர வேறு ஆறுதல் கிடையாது. யுத்தத்திலிருந்து நீங்கள் திரும்பி வருவீர்கள் என்ற நம்பிக்கையைத் தவிர எனக்கு ஆதரவாக ஒன்றுமே இல்லை.

எனக்கு என்ன கூறுவதென்றே தெரியவில்லை. பிரிவினால் அவஸ்தைப்படும் என் ஆத்மா, துன்பத்தையே ஒரு இன்பமாகவும், துயரத்தையே ஒரு ஆனந்தமாகவும் செய்யவல்ல அன்பினால் ஆறுதல் பெற்று வருகிறது. நம் இதயங்களைக் காதல் பிணைத்தபொழுது, இறைவன் நம் இதயங்களை ஒன்றாக்கிவிடும் நாளை நாம் எதிர் பார்த்துக் கொண்டிருந்தபொழுது, யுத்தம் தன் பயங்கரக் குரலால் உங்களை அழைத்துக் கொண்டு போய் விட்டது. கடமையை உத்தேசித்து நீங்கள் சென்று விட்டீர்கள்.

அன்பினால் பிணைந்த காதலர்களைப் பிரிக்கும் கடமை என்பது என்ன! பெண்களை நிராதரவாகவும், குழந்தைகளை அனாதைகளாகவும் செய்து விடும் கடமை யாது? அற்ப விஷயங்களுக்காகச் சாம்ராஜ்யங்களையே அழிக்கும் தேச பக்தி என்பது என்ன ? ஒரு உயிருக்கு முன்னால் எந்தக் காரணம்தான் பெரிதாக இருக்க முடியும் ?

கிராமத்து ஏழை மக்களைக் கடமை என்னும் பெயரால், அவர்களை அடக்கி ஆளும் வர்க்கத்தார் தங்களுடைய புகழுக்காக மடியச் செய்கிறார்களே ! அது என்ன கடமை ? தேசங்களுக்கு மத்தியிலுள்ள அமைதியைக் கடமை குலைத்து விடுகிறதென்றால், மனித வாழ்க்கையின் புனிதத் தன்மையைத் தேசபக்தி கலைத்து விடுகிறதென்றால், ' கடமைக்கும், தேச பக்திக்கும் சாந்தி கிடைப்பதாக.'

இல்லை; இல்லை. என் அன்பே! என் வார்த்தைகளைக் கவனிக்காதீர்கள். உங்கள் தேசத்துக்கு நீங்கள் உண்மையாக இருங்கள். தைரியமாக இருங்கள். காதலினால் குருடாகிவிட்ட, தனிமையினால் தன்னையே இழந்து தவிக்கும் ஒரு பெண்ணின் வார்த்தைகளைப் பொருட்படுத்தாதீர்கள். என் காதல் உங்களை இந்த ஜன்மத்தில் என்னிடம் சேர்ப்பிக்காவிட்டாலும், அடுத்த ஜன்மத்தில் கட்டாயம் சேர்த்து வைத்து விடும்.'

கடல் கன்னிகள் அந்தக் கடிதத்தை அவனுடைய சட்டையிலேயே வைத்துவிட்டுத் துயரத்துடன் சத்தம் செய்யாமல் நீந்திப் போய் விட்டனர்.

சற்றுத் தூரத்துக்கப்பால் சென்றதும் ஒரு கன்னி, 'மனித இதயம் நமது கடல் அரசனுடைய கொடூரமான இதயத்தைவிட இன்னும் கொடூரமானது' என்று கூறினாள்."

ரகு மௌனமாகக்கேட்டுக்கொண்டிருந்தான். எனக்கே உணர்ச்சி மிகுதியினால் தொண்டையில் கரகரப்பு உண்டாயிற்று. அந்த வீரனுக்கு அவனுடைய காதலி எழுதிய கடிதம் எனக்கு இந்துவால் எழுதப்பட்டதாகவே தோன்றியது. ஆம்! இந்து அப்படித்தான் எழுதியிருப்பாள். நான் யுத்த சமயத்தில் லண்டனில் இருக்க நேரிட்டதை இனிமேல் கேட்டால்கூடப் பயப்படுவாள். இப்போதே என்னவெல்லாம் எண்ணிக்கொண்டிருக்கிறாளோ? இங்கிலாந்தில் யுத்தம் நடக்கிறதென்ற விஷயம் தெரிந்துதானே இருக்கும். பாவம்! எனக்கு என்ன ஆயிற்றென்று தெரியாமல் தவியாய்த் தவித்துக் கொண்டுதான இருப்பாள். அதை நினைத்தபோது என் கண்கள்கூடக் கலங்கிவிட்டன. சாதாரணமாக எனக்குக் கண்ணீரே வராது. ஆனால், ரகுவுக்கு அக் கதையைப் படித்துக் காட்டிய போது உணர்ச்சிப் பிரவாகத்தில் மூழ்கி விட்டேன்.

அத்தனை நாட்கள் பொறுத்திருந்த போதெல்லாம் அவ்வளவு கஷ்டமாக இல்லை. இந்தியாவை அடைய இன்னும் இரண்டு நாட்கள் இருக்கிறதே என்று கோபம் கோபமாக வந்தது. என்னுல் ஆவலைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. கப்பலில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன்.

கடைசியாகப் பம்பாய்த் துறைமுகமும் வந்தது. எண்ண அலைகள் ஒன்றின்மேல் ஒன்ருய் முட்டி மோதிக் கொண்டு வர, ஒருவாறு கரையை அடைந்தேன். அங்கிருந்து வங்காளத்துக்குச் சென்று முதலில் வேலையை ஒப்புக் கொண்டேன். பிறகு ஒரு மாதம் விடுமுறை பெற்றுக் கொண்டு குங்குமத்துறைக்குக் கிளம்பினேன்.

ரயில் ஆமை வேகத்தில் ஊர்ந்து சென்றது. என் நெஞ்சின் வேகத்துடன் அதனுல் போட்டியிட முடிய வில்லை. விளக்குக் கம்பங்களிலிருந்து ஒளி, ரயில் பெட்டிக்குள் விழுந்து விழுந்து மறைந்து கொண் டிருந்தது. சற்று ஒளி. பிறகு இருள். மறுபடியும் ஒளி. இப்படி மாறி மாறி வந்து கொண்டிருந்தது. என் மனம் அதை மனித வாழ்க்கைக்கு ஒப்பிட்டுப் பார்த்தது.

ஒளியும் இருளும் வாழ்க்கையில் மாறி மாறித்தான் வருகின்றன. இதை உலகம் தோன்றின நாள் முதல் மனித குலம் அறிந்து கொண்டுதான் வந்திருக்கிறது. இருந்த போதிலும் துன்பம் வரும்போது அலறி அழுதும், இன்பம் வரும்போது பேசிச் சிரித்தும் அதைப் பலமடங்கு அதிகமாக்கிக் கொள்கிறோம்.

இப்படி எண்ணிக் கொண்டே நான் தூங்கிப் போயிருக்க வேண்டும். திடீரென்று என் கண் முன்னுல் வீடுகள் பற்றி எரிந்தன. அவற்றினிடையே நான் ஓடி வருகிறேன். நெருப்பைப் பலர் அணைக்கிருர்கள். ஒரே குழப்பம். நெருப்பு அணைந்ததும், குப்பைகளையும்,

கற்களேயும் அகற்றுகிறேன். ஐயோ! அது யாருடைய கை? அந்தச் செங்கற் குவியலின் அடியில் இந்துவின் கரமல்லவா? நான் ஓடிச் சென்று கற்களே அகற்று கிறேன். கைகள் சோர்ந்து போகின்றன. 'இந்து! இந்து!' என்று அலறுகிறேன். அச் சமயத்தில் அபாய அறிவிப்புச் சங்கு ஊதுகிறது. ஜெர்மனி விமானங்கள் பறக்கின்றன. குண்டுகள் விழுந்து நாலாபுறமும் வெடிக் கின்றன. என் தலேயில் ஒன்று விழாதா என்று நான் ஏங்குகிறேன்.

மிகச் சமீபத்தில் ஒன்று வெடிக்கிறது. அந்த வெடி விபத்தினுல் தகர்ந்த அச்செங்கற் குவியலின்மீதே நானும் விழுகிறேன். என்மீது பக்கத்துச் சுவர் இடிந்து விழுகிறது.

நான் சடாரென்று கண் விழித்தேன். உடலெல்லாம் வியர்வை பொழிந்தது. மேலே வைத்திருந்த பெட்டி ஒன்று என்மேல் விழுந்திருந்தது. அதன் பிறகு நான் தூங்கவே இல்லே.

திருநந்திபுரம் ஸ்டேஷனில் இறங்கிப் பிரயாணிகள் அறையில் சமான்களே வைத்துவிட்டுக் குங்குமத்துறை சென்றேன். இந்து என்னேப் பார்த்ததும், கன்றுக் குட்டிக்காக ஓடிஞளே, அந்த மாதிரி துள்ளி ஓடி வருவாள் என்று எண்ணினேன். இந்து என்ன புடவை கட்டிக் கொண்டிருப்பாள்? எப்படிப் பேசுவாள் என்றெல்லாம் பகற் கனவுகள் கண்டு கொண்டே குங்குமத்துறையை அடைந்தேன்.

அங்கேதான் எனக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது!

# 2. உள்ளம் எரிந்தது

குங்குமத்துறைக்கு மாட்டு வண்டியில் நான் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது முதன் முதலில் நானும் தங்கபாண்டியனும் சேர்ந்து வந்ததெல்லாம் ஞாபகம் வந்தது. பாதிரித் தோட்டத்தில் இன்பமாகப் பேசிக் கொண்டிருந்ததும், மந்திரமூர்த்தியின் உபசரிப்புக் களும், அன்னை சந்திரமணியிடம் பேசியதும், காசி லிங்கத்தின் வரலாறுகளும் ஒன்றன் பின் ஒன்ருக நினைவுக்கு வந்தன. அந்த மாட்டு வண்டிப் பிரயாணத்தின் போது நான் முன்பு நடந்த என் வாழ்க்கையை மறுபடியும் மானஸீகமாக வாழ்ந்தேன் என்று சொல்ல வேண்டும்.

இந்து எப்படி வரவேற்பாள் என்று கற்பனை செய்து கொண்டே போனேன். ஒருவேளை அவர்கள் குங்குமத் துறையில் இருக்க மாட்டார்களோ என்ற எண்ணம் தோன்றியபோதெல்லாம் அதை ஒதுக்கித் தள்ளி விட்டு இன்பமான கற்பனையிலேயே மனத்தை ஓடவிட்டேன். நான் செய்தது ரொம்பத் தவறு. அதனலேயே என் ஏமாற்றம் பல மடங்கு அதிக மாகத் தெரிந்தது.



மந்திரமூர்த்திப் பண்ணை யாரின் வீட்டைப் பார்த்த உடனேயே எனக்கு அதில் இந்துமதி இருக்க முடியாது என்று தெரிந்து விட்டது. இருந்தாலும் உள்ளே சென்று கேட்டேன்.

அந்த வீட்டிலிருந்த ஒரு பெரியவர் தாங்கள் அந்த வீட்டுக்கு வந்து வெகு நாட்களாகி விட்டதாகவும், அதற்கு முன்னல் அந்த வீட்டிலிருந்த பெரியவர் இறந்து போய்

விட்டார் என்றும் கூறிய போது எனக்கு வானமே இடிந்து என் தலையில் விழுந்துவிட்டது போலிருந்தது.

'ஐயோ! இந்துவுக்கு என்ன நேர்ந்திருக்கும்?' என் தலை சுற்றியது. 'இவ்வளவு கஷ்டங்களுக்குப் பிறகும் என் துன்பம் தீரவில்லையே. ஐயோ, இந்து! நீ எப்படி யெல்லாம் கஷ்டப்படுகிருயோ? அனுதையாக எங்கே யெல்லாம் சுற்றுகிருயோ? உன்னை விட்டு விட்டு நான் படிப்பு பெரிதென்று போனேனே! என் குற்றத்துக்கு மன்னிப்பு உண்டா? நீ என்னைப் பற்றி என்ன நினைத் திருப்பாய்? நயமாகப் பேசி ஏமாற்றினேன் என்று எண்ணியிருப்பாய். உன்னை எங்கே தேடுவேன்? எப்படி என்னுடைய இதயத்தை உனக்குத் திறந்து காண்பிக்க முடியும்?'

இப்படியெல்லாம் சிறிது நேரம் மனம் குழம்பிக் கொந்தளிக்க மரம் மாதிரி நின்று கொண்டிருந்தேன். பிறகு, "இந்த வீட்டிலிருந்த பெண் என்ன ஆனுள் தெரியுமா?" என்று கேட்டேன். அது தெரியாதென்று கூறிவிட்டார் அந்தப் பெரியவர்.

பிறகு தங்கபாண்டியனின் அரண்மனையை அடைந் தேன். அங்கே இருந்த பழைய காரியஸ்தரைச் சந்தித்தேன். அவரிடம் இந்துமதியின் குடும்பத்தைப் பற்றி விசாரித்தேன். அவருக்குப் பண்ணையாரைப் பற்றி ஏதும் விவரமாகத் தெரிந்திருக்கவில்லை.

பண்ணையார் இறந்து போன பிறகு அந்த வீட்டுப் பெண்ணை யாரோ பெரிய மனிதர்கள் அழைத்துக் கொண்டு போய் விட்டார்களென்று மாத்திரம் தெரியும் என்று சொன்னுர். அவர் தங்கபாண்டியனின் விலாசத் தைக் கொடுத்தார். அவன் பம்பாயில் இருக்கிருன் என்று தெரிந்ததும் எனக்கு, இது முதலிலேயே தெரிந்திருக்கக் கூடாதா என்று தோன்றியது. அங்கேயே என் உணர்ச்சி

களையும், ஏமாற்றங்களையும் விவரித்துத் தங்கபாண்டிய னுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதித் தபாலில் சேர்த்து விட்டுச் சென்னைக்குப் புறப்பட்டேன்.

விவரிக்க முடியாத சோர்வு என்னைச் சூழ்ந்து கொண்டது. திடீரென்று கை கால்களில் உணர்ச்சியே இல்லாமல், சக்தியே இல்லாமல் போய் விட்டது போலிருந்தது. ரயிலில்கூட ஏற முடியவில்லை. வெகு நாட்கள் உடம்பு சரியில்லாமலிருந்து, குணமாகும்போது ஒரு சோர்வும் தளர்வும் உண்டாகுமே அந்த மாதிரிச் சோர்வு உடலெங்கும் பரவியது. உடலில் சோர்வு ஏற்பட்டால் நல்ல ஆகாரமும், மருந்துகளும் சாப்பிட்டுத் தேற்றிக் கொள்ளலாம். மனத்தில் ஏற்பட்ட சோர்வுக்கும், பலஹீனத்துக்கும் என்ன மருந்து இருக்கிறது? அதற்கு வேண்டிய மருந்து இந்துமதிதான். ஆ! அவளை மறுபடியும் எப்போதாவது காணப் போகிறேனா?

தலையை எங்கேயாவது முட்டிக் கொண்டால் தேவலை போலத் தோன்றியது. ரயிலில் இன்னும் சிலர் பிரயாணம் செய்து கொண்டிருந்தபடியால் அந்த எண்ணத்தைக் கை விட்டுத் தூங்க முயன்றேன். அதுவும் வரவில்லை.

காலையில் கண்களில் ஒரே எரிச்சலாக இருந்தது. நான் என்னுடைய கல்லூரியை அடைந்த போது எல்லோரும் திகைத்துப் போய் விட்டார்கள். என்னுடைய கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் ஹாஸ்டலில் தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளும்படி கூறினார். ஒரு மாதம் கல்லூரியில் இருந்து பொழுது போக்கினேன். என்னுடைய யுத்த கால அனுபவங்களைப் பற்றி எல்லோ ருக்கும் கூறினேன். நான் களைத்திருப்பதற்குப் பிரயாண அலைச்சல்தான் காரணம் என்று முதலில் எல்லோரும் கருதினார்கள். நான் முன்போல உற்சாகமாக இல்லாமல் இருப்பதற்குக் காரணம் களைப்பல்ல என்று பிறகுதான் தெரிந்துகொண்டார்கள். நண்பர்களுடைய நானாவிதமான

கேள்விகளுக்குப் பதில் சொல்லி மழுப்புவதில் நான் இன்னும் களைத்துப் போய் விட்டேன்.

தங்கபாண்டியனிடமிருந்து சில நாட்களில் ஒரு கடிதம் வந்தது. சுருக்கமாகவே எழுதியிருந்தான்.

" அருமை நண்பன் ரங்கதுரைக்கு,

நீ திரும்பி வரும் விஷயம் எனக்குத் தெரியாமல் போய் விட்டது. தெரிந்திருந்தால் துறை முகத்திலேயே வந்து சந்தித்திருப்பேன்.

உன்னுடைய நிலையைக் கண்டு எனக்கு ரொம்ப மனத்துக்குக் கஷ்டமாக இருக்கிறது. நான் ஒன்றும் செய்வதற்கில்லையே என்பதை நினைக்கும்போது இன்னும் அதிக வேதனையாக இருக்கிறது.

உண்மையில் பண்ணையார் மந்திரமூர்த்தி இறந்துபோன விஷயம் கூட உன் கடிதத்தி லிருந்துதான் எனக்குத் தெரிந்தது. அவர்கள் சௌக்கியமாக இருப்பார்களென்றே இது வரையில் நினைத்து வந்தேன்.

நான் இதைக் கவனிக்காமல் இருந்தது பெரிய தவறு. என்னை நீ மன்னித்து விடுவா யென்று நம்புகிறேன். என்னுடைய கவலைகளில் நான் மூழ்கியிருந்து விட்டேன் என்பதை நினைக்கும்போதே அவமானமாக இருக்கிறது. மறுபடியும் என்னை மன்னித்து விடு என்று கேட்டுக் கொள்கிறேன்.

உன்னைப் பார்க்க ஆவலாக இருக்கிறது. உனக்குச் சௌகரியப்படும் பொழுது பம்பாய்க்கு வந்து என்னோடு சில நாட்கள் தங்கியிருக்க வேண்டும்.

இப்படிக்கு,

தங்கபாண்டியன்."

இதன் பிறகு எனக்கு இருந்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையும் போய் விட்டது.

இந்துவின் நிலையைப் பற்றி எத்தனையோவிதமான கற்பனைகள் என் மனத்தில் தோன்றின. நிச்சயமாய் இந்து யாரையும் மணந்து கொண்டிருக்கமாட்டாள். அப்படியானல் அவளை அந்தப் படத்தில் பார்த்தேனே ? அதற்கு என்ன பொருள் ? அய்யாக்குட்டியின் மூலம் சினிமா நடிகைகளுடன் பழக்கம் ஏற்பட்டிருக்கலாமென்ருலும், இப்போது அவளை எங்கே போய்த் தேடுவது ?

சென்னையில் பார்த்ததாகப் பேராசிரியர் தாம்ஸன் கூறினரல்லவா ? சென்னை நகரை நான் அந்த ஒரு மாதத்தில் முப்பது தடவைகளாவது சுற்றி வந்திருப்பேன். இந்து எங்கேயாவது கண்களில் தென்படமாட்டாளா என்று ஏங்கிப் போனேன்.

இத்தனைக்கும் நடுவில் ஒரு ஆறுதல் இருந்தது. இந்துவுக்குப் பணக் கஷ்டம் இருக்க முடியாது. அந்தப் படத்தைப் பார்த்து ஒரு வருஷத்துக்கு மேல் ஆகியிருந்த போதிலும் எனக்கு இந்த உறுதி ஏற்பட்டிருந்தது. அய்யாக்குட்டியின் துணை அவளுக்கு இருக்குமானல் நிச்சயமாகப் பணக் கஷ்டம் இருக்க முடியாதென்று தோன்றியது. ஆனல், அது என்ன நிச்சயம் ? அது என்னுடைய ஊகம்தானே ? அய்யாக்குட்டி அவளோடு இருக்கிருரென்பது என்ன நிச்சயம் ? அவருடைய குணதிசயங்களை எண்ணிப் பார்த்தபோது இந்துவுக்கு அவர் உதவி புரிந்திருக்க மாட்டாரென்றும் தோன்றியது. இப்படியெல்லாம் எத்தனையோ எண்ணங்கள் என்னை

கல்கத்தாவுக்கு அருகில் உள்ள சாந்திபூரில் எனக்கு வேலை கொடுத்திருந்தார்கள். அங்கு போய்ச் சேர்ந்தது

முதல் வேலையில் ஈடுபட்டேன். எப்போதும் செய்கிற காரியத்தைக் கவனமாகச் செய்யும் வழக்கம் எனக்கு உண்டாதலால் சீக்கிரத்திலேயே நல்ல பெயரும் பெற்றேன். ஆனால், உள்ளத்தின் அடிவாரத்தில் மட்டும் அக்னிக் குழம்பு குமுறிக் கொண்டிருந்தது.

வேலையைச் செய்து முடித்துவிட்டு இரவில் படுக்கையில் விழும்போதுதான் எனக்கு என் தனிமையும், உள்ளத்தில் எரியும் நெருப்பின் உஷ்ணமும் தெரியவரும். இந்துவைப் பற்றிய கவலைகளிலும், அவள் அருகிலிருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும் என்ற மனோராஜ்யங்களிலும் ஈடுபட்டுக் கொண்டே தூங்கிப் போய் விடுவேன்.

சாந்திபூரிலிருந்து கல்கத்தா அருகில்தான் இருந்தது. குமுறும் என் நெஞ்சத்துக்கு ஆறுதல் சாந்திபூரில் கூடக் கிடைக்கவில்லை. ஆகவே, எனக்கு விடுமுறை நாட்களில் நான் கல்கத்தா சென்று விடுவது வழக்கம். கல்கத்தாவில் அரவிந்த் தன் மனைவியோடு தனி பங்களாவில் வசித்து வந்தான். இந்தியாவுக்கு வந்ததும் அவனுக்கு மணமாகி விட்டிருந்தது. ஒரு சிறு குழந்தைக்குத் தகப்பனாராகவும் ஆகிவிட்டிருந்தான்.

அவன் வீட்டில்தான் நான் முதன் முதலில் ஒரு சிறிய குடும்பத்தின் அழகைக் கண்டேன். அவன் மனைவி உமா படித்தவள். இருவரும் குழந்தையை மாற்றி மாற்றிக் கொஞ்சிக் கொண்டு காலம் கழித்தார்கள். அதைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு ஏதோ ஒரு வேதனை உண்டாகும். இந்துமதியின் வாழ்க்கையும் இப்படி ஆனந்தமாக இருக்க வேண்டுமல்லவா? அப்படி இல்லாமல் நாங்கள் இப்படிப் பிரிந்து இருக்குமிடம் கூடத் தெரியாமல் தவிக்கிறோமே. இந்துவும் தனிமையில்தானே ஏங்கிக் கொண்டிருப்பாள். நான் இல்லாமல் அவளுடைய வாழ்க்கை எப்படி நிறைய முடியும்?

இப்படியெல்லாம் நினைத்தும் அவனைக் கண்டு பிடிக்க வழியில்லாமலிருப்பது எனக்குத் தாங்க முடியாத வேதனையாக இருந்தது. எரியும் வீட்டிலிருப்பவனின் கை கால்கள் கட்டப்பட்டிருந்தால் அவன் என்ன பாடு படுவான்? அந்த மாதிரி இருந்தது என் மனநிலை.

ஒரு நாள் அரவிந்தின் வீட்டில் நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது உமா என்னைப் பார்த்து, "நீங்கள் ஏன் இப்படி எப்போதும் சோர்ந்திருக்கிறீர்கள் மிஸ்டர் ராய்?" என்று கேட்டாள்.

அதற்கு அரவிந்த், "அவனுக்கும் வயதாகி வருகிறது. பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கப் பெரியவர்கள் யாரும் இல்லை. அதனால்தான் இப்படி இருக்கிறான்" என்று கூறினான்.

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"அப்படியானால் நாமே பெண்ணைப் பார்த்து அவருக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவோமே! நான் பெண் பார்க்கட்டுமா மிஸ்டர் ராய்? உங்களுடைய பதவிக்கும், அந்தஸ்துக்கும் எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன் வருவார்கள்!" என்றாள் உமா.

அரவிந்த் சிரித்தான். "ஏன் உமா! படித்த பெண்ணாயிருந்தும் கர்நாடகமாக இருக்கிறாயே. அவன் இங்கிலாந்தில் மூன்று வருஷங்களுக்குமேல் இருந்தவன். அவன் காதல் கல்யாணம்தான் செய்து கொள்வான்" என்று கூறினான்.

"ஓ! அப்படியா? இங்கிலாந்துதான் காதலுக்கு இருப்பிடமோ? இங்குகூட இருப்பதாக எனக்குத் தோன்றுகிறதே. காளிதாஸனும், பவபூதியும் இங்கிலாந்துக்குப் போய்விட்டு வந்துதான் காதலைப் பற்றி எழுதினார்கள் போலிருக்கிறது" என்றேன்.

உமா சிரித்துவிட்டு, "அது இருக்கட்டும். உங்களைப் பார்த்தால் அசல் வங்காளி மாதிரியே இருக்கிறது.

பேசுவதில் கூடச் சிறிதும் வித்தியாசம் தெரியவில்லை. வங்காளிப் பெண்களில் எத்தனையோ பேரை எனக்குத் தெரியும், நீங்கள் சம்மதம் கொடுத்தால்......" என்று கூறினாள்.

"வேண்டாம்! வேண்டாம்! அதைப் பற்றிக் கவலைப் படாதீர்கள்" என்றேன் பயந்து கொண்டே. அந்த எண்ணமே என்னைத் தகித்தது.

# 3. அறிமுகம்

ஒரு நாள் கல்கத்தாவில் நான் அரவிந்துடன் தங்கி யிருந்தபோது இன்னொரு ஐ. ஸி. எஸ். காரர் வீட்டில் விருந்து நடந்தது. அதற்கு என்னையும் அழைத்திருந் தார்கள். அரவிந்த், உமா, நான் மூவரும் அதற்குச் சென்றோம்.

அன்றைய விருந்துக்கு எத்தனையோ பிரமுகர்கள் வந்திருந்தார்கள். மேல் நாட்டு முறையில் மேஜையின் மீதுதான் சாப்பாடு. அறிமுகப் படலங்கள் ஆன பிறகு நான் ஒரு இடத்தில் உட்கார்ந்து கொண்டேன். சற்றைக் கெல்லாம் எனக்கு அடுத்த நாற்காலியில் ஒரு நவ நாகரிகப் பெண்மணி வந்து உட்கார்ந்தாள். எதிர்ப் பக்கத்திலிருந்து உமா அவளைப் பார்த்துச் சிரித்தாள். "சௌக்கியமா?" என்று வங்காளியில் கேட்டாள். பிறகு என்னைப் பார்த்து, "மிஸ்டர் ராய்! உங்களருகில் உட்கார்ந்திருப்பவர் ஸ்ரீமதி சுலோசனா" என்று அவளை அறிமுகம் செய்து வைத்து விட்டு, என்னையும் யாரென்று அவளுக்குத் தெரியப்படுத்தினாள்.

உடனே அந்தச் சுலோசனா திரும்பி என்னைப் பார்த்து, "நமஸ்காரம்! உங்களைச் சந்தித்ததில் மிக சந்தோஷம்" என்று கூறினாள்.

இந்த மாதிரியான உபசாரப் பேச்சுக்கள் எனக்கு ரொம்ப வழக்கமாகிப் போயிருந்தன. உள்ளத்தில் ஈரப் பசையே இல்லாமல், 'சௌக்கியமா', 'சந்தோஷம்', 'அன்பு' என்றெல்லாம் உதடுகளில் இனிமையாகப் பேசுவதைக் கண்டால் எனக்கு அருவருப்பாக இருக்கும். அதை ஓரளவுக்கு நானே பிரயோகம் செய்ய வேண்டி நேர்ந்த போதெல்லாம் ரொம்ப வேதனைப்படுவேன். பழகிப் போன பிறகு அந்த அர்த்தமில்லாத வார்த்தைகள் என்னை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. நானும், "வந்தனம்" என்று கூறிவிட்டு மேலே பேசாமல் சாப்பிடுவதற்கு ஆரம்பித்தேன்.

"ரொம்பக் கவனமாகச் சாப்பிடுகிறீர்களே" என்ற குரல் கேட்டு ஒரு கணம் திகைத்துப் போனேன். அவ்வளவு சுதந்திரமாகச் சுலோசனா பேசியது எனக்கு வியப்பையளித்தது.

"சமையல் நன்றாக இருக்கிறது" என்றேன்.

"உங்களுக்கு எந்த ஊர்?"

"நாராயண் கஞ்ச்" என்றேன். அப்படி ஏன் அப்பொழுது ஒரு பொய் சொன்னேன் என்று இன்னும் எனக்குப் புரியவில்லை. நமது மனத்தின் இயல்பே நமக்குச் சில சமயம் விளங்குவதில்லை, அல்லவா?

"நீங்கள் யுத்தம் உக்கிரமாக நடந்த சமயத்தில் லண்டனில் இருந்தீர்களாமே?" என்று கேட்டாள்.

"ஆம்! யார் கூறினார்கள்?"

"அரவிந்த் சற்று முன்னால் என் சகோதரரிடம் அதைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தார்."

"அப்படியா? சகோதரர் யார்?"

"அதோ நீலச் சட்டை போட்டுக் கொண்டிருக்கிறாரே, அவருக்கு வலது பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்தான் என் அண்ணா ரமேஷ்!" என்று கூறினாள் சுலோசனா.

ரமேஷைப் பார்த்ததுமே எனக்கு அவன் மீது ஒரு நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டது. அவனுடைய சாந்தமான ஆனால், உறுதி தவழ்ந்த முகம் என்னை மிகவும் கவர்ந்தது.

" சாப்பாடு ஆன பிறகு உங்களுக்கு அவரை அறிமுகம் செய்து வைக்கிறேன் " என்றாள் சுலோசனா.

அதற்கு மேல் மறுபடியும் பேசாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

பிறகு எல்லோரும் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தபோது ரமேஷை அழைத்து, " இவர்தான் மிஸ்டர் ராய் ! சற்று முன்னால அரவிந்த் உன்னிடம் சொன்னாரே அவர் " என்றாள்.

" அரவிந்த் உங்களைப் பற்றி ரொம்பப் புகழ்ந்து கூறினான் " என்று என் கையைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே கூறினான் ரமேஷ்.

அன்று வீடு திரும்புவதற்குள் நானும் ரமேஷும் நண்பர்களாகி விட்டோம். தங்கள் வீட்டுக்கு வரவேண்டும் என்று அவன் என்னை வற்புறுத்தினான். நான் சாந்திபூருக்குச் செல்லுமுன்னால் கட்டாயம் வருவதாகக் கூறினேன்.

அன்று காரில் வீடு திரும்பியபொழுது நான் அரவிந்திடம், " என்ன அரவிந்த், நீ என்னைப் பற்றிப் புகழ்ந்தாயாமே. அப்படி என்னப்பா அவர்களிடம் கூறினாய் ?" என்று கேட்டேன்.

" நான் ஒன்றும் புகழவில்லை. நீ ரொம்பக் கெட்டிக்காரன், ரொம்பப் பண்பாடு உடையவன் என்றுதான் அவர்களிடம் சொன்னேன்."

" சுலோசனாவிடம் நான் பிறந்த இடம் 'நாராயண் கஞ்ச்' என்று கூறி வைத்தேன். அவள் நம்பி விட்டாள். அப்படி ஒரு ஊர் இந்த வங்காளத்தில் இருக்கிறதா இல்லையா என்று கூட எனக்குத் தெரியாது."

உமா கலகலவென்று சிரித்துவிட்டு, "நீங்கள்கூட இப்படியெல்லாம் பேச ஆரம்பித்து விட்டீர்களா? இது வரை உங்களுக்கு மறைத்துப் பேசுவதற்கெல்லாம் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருந்தேனே!" என்றாள்.

அரவிந்த் உமாவிடம், "உமா! ரங்கதுரை ரொம்ப நல்லவன்தான். அவனுக்கு யார் யாரிடம் எப்படிப் பழக வேண்டும் என்றெல்லாம் நன்றாகத் தெரியும். ஆனாலும் அதை அவனுடைய பெருந்தன்மையினால் உபயோகிப்ப தில்லை. அவ்வளவுதான்" என்றான்.

"இருந்தாலும் அவர் இன்று சுலோசனாவிடம் இப்படி ஒரு பொய் சொல்லி இருக்கக் கூடாது. நான் உடைத்து விடுகிறேன், பாருங்கள்."

"வேண்டாம். தயவு செய்து சொல்ல வேண்டாம். எனக்குக் கொஞ்ச நாள் ஒரு வங்காளியாகவே இருக்க ஆசையாக இருக்கிறது! நீங்கள்தான் நான் பேசுவதி லிருந்து யாரும் என்னை வங்காளி இல்லையென்று கூறவே முடியாது என்று கூறுகிறீர்களே. இப்படித்தான் சில நாட்கள் இருக்கட்டுமே? என்ன ஆகிறதென்று பார்ப் போம். உங்கள் இருவரையும் தவிர இங்கே யாருக்குமே நான் எந்த மாகாணத்தைச் சேர்ந்தவன் என்று தெரியாது. நான் கூறியதும் இல்லை. யாரும் கேட்டதும் இல்லை. இது வேடிக்கைதானே?" என்றேன்.

உமா அரவிந்த் இருவரும் அதை ஆமோதித் தார்கள்.

உமா திடீரென்று, "சுலோசனா ரொம்ப அழகாக இல்லையா?" என்று என்னிடம் கேட்டாள்.

"எனக்கு அழகைப் பற்றி என்ன தெரியும்?"

"ஆஹா! இப்படிச் சொன்னால் நம்பி விடுவார்க ளாக்கும்? தாகூரின் கவிதைகளைப் படித்து ரஸிப்பவருக்கு அழகு தெரியாமல் போய் விடுமோ?"

"ஹரே ராம்! நீங்கள் தாகூரின் இனிமையான கவிதைகளைச் சுலோசனுவுக்கு ஒப்பிடுகிறீர்களா?"

"ஏன் உமா! நீ ஏன் இப்படித் தாகூரின் கவிதைகளைக் கரிக்கிருய்?"

உமாவுக்கு கோபம் வந்துவிட்டது. "இந்த ஆண்களே இப்படித்தான். ஒரு பெண்ணைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் ஒன்று அளவில்லாமல் புகழ்வார்கள். அல்லது ஒரேயடியாக மட்டம் தட்டிப் பேசுவார்கள். நான் உங்களிடம் பேச ஆரம்பித்ததே தவறு" என்ருள்.



"உமா! என்ன இப்படிக் கோபித்துக் கொள்கிருயே. எங்களுக்குத் தோன்றியதை நாங்கள் சொன்ேனும். உனக்கு அழகு என்று தோன்றினல் அப்படி இருந்து விட்டுப் போகட்டுமே. ராய! சுலோசனு உமாவின் பிரிய சிநேகிதி. அதனல் அவள் அழகாக இருக்கிருள் என்றே நாம் ஒப்புக்கொண்டு விடுவோம்" என்ருன் அரவிந்த்.

இது உமாவின் கோபத்தை அதிகரித்தது. "வேண்டாம். நீங்கள் ஒன்றையும் ஒப்புக்கொள்ளவே வேண்டாம்" என்று கூறினள்.

உமாவும் அரவிந்தும் இந்த மாதிரி தினம் இருபது தடவைகள் சண்டை போட்டுக் கொள்வார்கள். குழந்தைக்கு நெற்றிக்குப் பொட்டு வைத்தால்தான் அழகாக இருக்கிறது என்பாள் உமா. வைக்கவே கூடாது என்பான் அரவிந்த். வாசல் அறையில் நான்கு நாற்காலிகள் இருக்கவேண்டுமென்பாள் உமா. கூடாது. மூன்று தான் இருக்கவேண்டும் என்பான் அரவிந்த். உமா கோபித்துக் கொள்வாள். அரவிந்த் முகத்தைத் தூக்கிக்

கொள்வான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அவர்களுக்கு அது ஞாபகமிருக்காது. மறுபடியும் வேறு எதற்காவது தர்க்கம் செய்து கொண்டிருப்பார்கள். என்னை அவர்கள் அன்னிய மனிதனுகக் கருதாதபடியால் என் எதிரிலேயே சண்டையும் சமாதானமும் செய்து கொள்வார்கள்.

இதெல்லாம் ஒரு பக்கம் எனக்கு வேடிக்கையாக இருந்தபோதிலும் இன்னொரு பக்கம் வேதனையைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தது. இந்து என்னுடன் இருந்தால் இப்படித்தான் சண்டை போடுவாள். நான் சொல்வதற்கெல்லாம் மாறுதலாகச் சொல்லுவாள்.

அவள் இஷ்டப்படி செய்ய நான் விட்டுக் கொடுக்கும் போது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும் ?

இந்து உமாவைவிடக் கெட்டிக்காரி அல்லவா? அதற்கென்ன, அவளுக்கு இவர்களைப்போல் அலங் கரித்துக் கொள்ளத் தெரியாமல் இருக்கலாம். பேச்சிலும் சாமர்த்தியத்திலும் அவள் குறைந்தவள் அல்ல. இந்துவின் சுழலும் விழிகளுக்கெதிரே யார்தான் போட்டி யிட முடியும் ?

உமா கேட்ட கேள்வி என்னை இவ்வளவு தூரம் சிந்திக்கத் தூண்டியது.

" நான் இன்னும் அழகான பெண்ணைப் பார்த் திருக்கிறேன் " என்றேன்.

உமா சிரித்துவிட்டாள். " அப்படிச் சொல்லுங்கள் ! எங்கே ? சீமையில் பார்த்தீர்களா ?"

" இல்லை. இந்தியாவிலேயே பார்த்திருக்கிறேன்."

" அப்படியா ? அவள் யார் ?"

நான் பதில் சொல்லவில்லை. இந்துவின் நினைவு விசுவரூபம் எடுத்து என் நெஞ்சம் முழுவதையும் நிறைத்தது. ஸ்ரீமதி ஹார்வியும், மிரியமும் இந்துவைப் பற்றிக் கேட்ட கேள்விகள் எல்லாம் ஞாபகம் வந்தன.

உலகமெங்கும் பெண்கள் ஒரே விதமாகத்தான் இருக்கிறார்கள் என்று எண்ணினேன்.

"என்ன பதிலையே காணவில்லையே? ரொம்ப ஆழ்ந்த சிந்தனையோ?" என்று கேட்டாள் உமா.

"ஏ! உமா! ராய் காரை ஓட்டுவது உனக்குத் தெரிகிறதல்லவா? அவனுக்கு நீ எதையாவது ஞாபகப் படுத்திக் கொண்டிருக்காதே. நாம் வீடு போய்ச் சேர வேண்டும். அவன் யோசனையில் ஆழ்ந்து விட்டால்......"

"அப்படியெல்லாம் பயப்படாதே, அரவிந்த். என் உயிரின்மீது எனக்கு ரொம்ப ஆசை. என்னுடைய மனோரதம் ஒன்று நிறைவேறும் வரையில் நான் ரொம்ப ஜாக்கிரதையாக இருப்பேன். லண்டன் குண்டுகளுக்கெல்லாம் உயிர் தப்பி வரவில்லையா நான்?"

பேச்சு நல்ல வேளையாக உடனே யுத்த நிலைமைக்குப் போய்விட்டது. யார் ஜெயிப்பார்கள் என்பதைப் பற்றி ஒரே வாக்குவாதம் தொடங்கி விட்டது.

அப்போது வீடு வந்து சேரவே, "அரவிந்த்! எங்கேயோ நடக்கும் யுத்தத்தைக் குறித்து நீங்கள் ஏன் யுத்தம் செய்ய வேண்டும்? ஏதாவது உள்நாட்டு நிலையைக் குறித்துச் சண்டை போட்டாலும் பயன் உண்டு" என்று கூறி அவர்கள் விவாதத்தை முடித்து வைத்தேன்.

மறு நாள் மாலை ரமேஷ் என்னைத் தேடிக்கொண்டு வந்த போது எனக்குச் சந்தோஷமாக இருந்தது.

என்னைப் பார்த்ததும் ரமேஷ், "எங்கே நீங்கள் வீட்டுக்கு வராமல் போய் விடுவீர்களோ என்று நானே உங்களை அழைத்துப் போக வந்து விட்டேன். சுலோசனு வேறு என்னைத் துளைத்தெடுத்து விட்டாள்" என்றான்.

உமா என்னைப் பார்த்துச் சிரித்தாள். அரவிந்த் உமாவைப் பார்த்தான். நான் அதையெல்லாம் கவனிக்காத மாதிரி ரமேஷைப் பார்த்து, "நீங்கள்

ரொம்பச் சுத்தமாக வங்காளி பாஷை பேசுகிறீர்களே !" என்றேன்.

ரமேஷ் புன்னகையுடன், "உங்கள் பாஷைமீது எனக்கு ரொம்பப் பிரியம்" என்று கூறினான்.

நான் இப்போது உமாவையும் அரவிந்தையும் பார்த்துச் சிரித்தேன் !

"ஆம் ! எங்கள் பாஷை ரொம்ப இனிமையானது தான். ஆனால் தமிழ் பாஷையும் ரொம்ப உயர்ந்தது என்று கூறுகிறார்களே ! அதன் இலக்கியத்தைப் பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றேன்.

"உண்மை. ரொம்ப உயர்வானது என்று நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அதிகமாக அதைப் பற்றித் தெரியாது."

"தமிழராகிய நீங்கள் அப்படிச் சொல்லலாமா ? உங்களுக்கே உங்கள் பாஷைமீது அன்பு இல்லை யானால்......"

"அன்பு இல்லையென்று யார் சொன்னார்கள் ? எனக்கு அதன் உயர்வு முழுவதையும் அறிந்து கொள்ளு மளவுக்குப் படிப்பு கிடையாதென்றுதான் கூறினேன். நீங்கள் தமிழைப் பற்றி இவ்வளவு நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களே."

"நான் கேம்பிரிட்ஜில் தமிழ் பாஷை படித்தேன். ஆகவே கொஞ்சம் தெரியும்" என்று கூறினேன். அதன் பிறகும் அதைப் பற்றிப் பேசினால் குட்டு வெளியாகி விடுமென்று பேச்சை மாற்றினேன்.

"நீங்களும் வாருங்களேன். உங்கள் சிநேகிதியைப் பார்த்துவிட்டு வரலாம்" என்று அரவிந்த், உமா இரு வரையும் பார்த்துக் கூறினேன்.

"ஹரீனுக்கு உடம்பு சரியாக இல்லை. அதனால் நான் வரவில்லை. நீங்கள் வேண்டுமானால் போய் விட்டு

வாருங்களேன் '' என்ருள் உமா. அரவிந்த் போவதில் அவளுக்கு இஷ்டமில்லே என்று குரலிலிருந்தே தெரிந்தது.

அரவிந்துக்கு அது தெரியாதா என்ன ? '' நானும் வரவில்லே ராய். மன்னித்துக்கொள். எனக்கு உமாவை விட்டு வர......''

'' போதுமே. விளேயாட்டு !''

'' என்ன விளேயாடுகிறேன் ? நான் இப்போது போனல், திரும்பி வந்ததும் கோபித்துக்கொள்ள மாட் டாயா ?......ராய் ! நீயே சொல் !''

'' இதை ஆராய்ச்சி செய்து வையுங்கள். நான் போய் விட்டு வருகிறேன். வரும்போது விடையும் கொண்டு வருகிறேன் '' என்று கூறிவிட்டு ரமேஷுடன் கிளம்பினேன்.

அந்தத் தம்பதிகளின் பூசலும், கோபதாபங்களும், அன்பு மொழிகளும், குழந்தையை இருவருமாகக் கவனித் துக் கொள்வதும் ஏன் என் மனத்தை இப்படி அலேக் கின்றன என்ற கேள்வி உள்ளத்தில் எழுந்தது. காரில் ரமேஷ் ஏதேதோ பேசிக்கொண்டு வந்தான். நான் கவனிக்காமல் மேலெழுந்தவாரியாகப் பதில் சொல்லிக் கொண்டு வந்தேன்.

திடீரென்று என் தனிமையை இனிமேல் பொறுக்க முடியாதென்று தோன்றியது. கட்டாயம் இந்துவை எப்படியாவது கண்டு பிடித்துவிட வேண்டும் என்று ஒரு வேகம் உண்டாயிற்று. வீட்டுக்குத் திரும்பிச் சென்றதும் இந்துவைத் தேட என்னென்ன முயற்சிகள் செய்ய முடியுமோ அத்தனேயும் செய்ய வேண்டியது. அரவிந் திடம் கூறி யோசனே கேட்கலாம் என்று தீர்மானித்தேன். அதன் பிறகு கொஞ்சம் மனம் சாந்தியடைந்தது. அதற்குள் ரமேஷின் வீடும் வந்தது.

# 4. கல்கத்தா வாசம்

வக்கீல் பத்மநாபன் வீட்டில் எனக்கு வரவேற்பு தடபுடலாக இருந்தது. அவ்வளவு தடபுடலுக்கு நான் அருகதை உள்ளவனு என்பது எனக்கும் சந்தேகமாகவே இருந்தது. சீமை சென்று வந்தவர்களுக்குத் தனியான மதிப்பு உண்டு போலும் என எண்ணினேன்.

ரமேஷ் தன் தந்தைக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தான். சுலோசனுவும் அவரருகில் உட்கார்ந்திருந்தாள்.

சற்று நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகுதான் ரமேஷும், சுலோசனுவும் வேலையிலிருக்கிறுர்கள் என்றும், பத்மநாபன் அவர்களைப் பார்க்கச் சென்னையிலிருந்து வந்திருக்கிறுரென்றும் தெரிந்தன. அண்ணனும் தங்கையும் மாத்திரம்தான் அங்கிருக்கிறுர்களென்று தெரிந்த போது எனக்குக் கொஞ்சம் வியப்பாகக்கூட இருந்தது.

அவர்களுடைய வீடு நேர்த்தியான முறையில் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மேல்நாட்டுப் பாணியில் இல்லாமல், கவர்ச்சிகரமாக இருந்தது. கண்ணைப் பறிக்கும் கவர்ச்சி இல்லை. மனத்தைத் தொடும் கவர்ச்சியை அந்த வீட்டில் கண்டேன். கீழே பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. சுவர்கள் குளுமையான பச்சை நிறம் பெற்று விளங்கின. அதற்கு இசைவாகக் குட்டையான கட்டில்களில் மெத்தைகளின் மீது பசுமை நிறத்தில் பற்பல விதப் பூ வேலைகள் செய்த விரிப்புக்கள் விரிக்கப்பட்டிருந்தன. ஜன்னல்களில் பளபளப்பான பாத்திரங்களில் கொத்துக் கொத்தாக மலர்கள் வைக்கப்பட்டிருந்தன.

ஜன்னல் வழியாகப் பார்த்தால் பற்பல மலர்கள் குலுங்கிய தோட்டம் தெரிந்தது. அதற்கப்பால் வீடுகள் தெரிந்தன. ஜன்னல் வழியாக மிதந்து வந்த தென்றல் காற்று உடலுக்கு ஒருவித சுகத்தை அளித்தது.

அந்த வீட்டின் சூழ்நிலையில் அலைபாயும் என் மனத்துக்கு ஒரு ஆறுதல் கிடைத்தது. அரவிந்தும் உமாவும் ரொம்பப் பிரியமாக இருந்தபோதிலும் அவர்களுடைய வீடு சிறியது. அதில் வேறு யாரோ குடியிருந்தார்கள். ஆகவே, ஒரே சத்தமாக இருக்கும். நிம்மதியாக ஒரு நிமிஷம்கூட இருக்க முடியாது. தோட்டமும் கிடையாது. இறங்கியவுடன் பெரிய தெரு. ஆகவே, சாமான்கள் விற்போரின் கூச்சலும், பஸ், கார் ஓடும் ஓசையும், எப்போதும் ஒரே சத்தமாகவே இருக்கும்.

ஆனால் ரமேஷின் வீட்டைச் சுற்றி ஒரே அமைதியாக இருந்தது. அந்த மாதிரி சூழ்நிலையில் நான் இருந்து வெகு நாட்களாயிற்று. கேம்பிரிட்ஜில் பேராசிரியர் ஆன்ட்ரூஸின் வீட்டில்தான் அப்படிப்பட்ட அமைதியை நான் அனுபவித்திருக்கிறேன். வெளிப்புறத்திலுள்ள அமைதி நமது உள்ளத்துக்கும் சில சமயம் அமைதி அளிக்கிறதல்லவா ? பேசினால்கூட அது கெட்டுப் போய் விடும் என்று பயந்து நான் மௌனமாகவே இருந்தேன்.

ரமேஷ் என்னைப் பார்த்து, "என்ன யோசிக்கிறீர்கள் ?" என்று கேட்டான்.

"உங்கள் வீட்டுக்குள் இருக்கும்போது நான் ரொம்பவும் நிம்மதியாக இருக்கிறேன். ஏன் அப்படி இருக்கிறது என்பதை என்னால் விளக்கிக் கூற முடியாது. ஆனாலும், உங்கள் வீட்டில் நிலவும் அமைதி எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. அதைக் கலைத்துவிட வேண்டாமென்று பேசாமல் இருக்கிறேன்" என்றேன்.

"அப்படியானால் நீங்கள் இனிமேல் கல்கத்தா வரும்போதெல்லாம் இங்கேயே வந்து தங்கியிருக்கலாமே" என்றார் பத்மநாபன்.

"நான் சொல்ல நினைத்ததை அப்பாவே சொல்லி விட்டார்" என்று கூறினாள் சுலோசனா. ரமேஷ் அதை ஆமோதித்தான்.

" நான் கல்கத்தாவுக்கே வந்துவிடும்படி நேரிட்டிருக்கிறது. உங்கள் வீட்டில் நிரந்தரமாகத் தங்க முடியாதல்லவா ? இந்தப் பக்கத்தில் வீடு கொடுத்தார்களானால் சௌகரியமாக இருக்கும்."

" அப்படியென்றால் உங்களுக்கு இங்கே மாற்றலாகி விட்டதா ?" என்று கேட்டான் ரமேஷ்.

" எனக்கு இங்கே உள்ள கோர்ட்டில் மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டிருப்பதாக உத்தரவு வந்திருக்கிறது."

" அப்படியா ? கங்க்ராஜுலேஷன்ஸ் !" என்றார் பத்மநாபன்.

" இன்று இங்கே விருந்து சாப்பிட்டுவிட்டுத்தான் போகவேண்டும். அது தயாராவதற்குள் நாம் ஏதேனும் ஒரு படத்துக்குப் போய்விட்டு வரலாம். வாருங்கள் மிஸ்டர் ராய் !" என்று அழைத்தான் ரமேஷ்.

" இப்போது நேரமாகிவிட்டதே !"

" நேரமானால் என்ன ? படம் பார்க்கவா போகிறோம். உங்களுடைய உத்தியோக உயர்வைக் கொண்டாடத்தானே போகிறோம் ?" என்றான் ரமேஷ்.



' சரி 'யென்று கிளம்பினேன். பத்மநாபன் வரவில்லை என்று கூறிவிட்டதால் நாங்கள் மூவரும் புறப்பட்டுச் சென்றோம். இரவு அவர்கள் வீட்டில் சாப்பிட்டுவிட்டு அரவிந்த் வீட்டை அடைந்தபோது பத்து மணிக்குமேல் ஆகிவிட்டது.

கதவைத் திறந்த அரவிந்த், " என்ன ராய் ! இவ்வளவு நேரம் என்ன செய்துகொண்டிருந்தாய் ? ரமேஷ் வீட்டிலா இருந்தாய் ?" என்றான்.

"சினிமாவுக்குப் போனோம். அவர்கள் வீட்டில் சாப்பிட்டுவிட்டுத்தான் போகவேண்டுமென்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்கள். ஆகவே நேரமாகிவிட்டது" என்றேன்.

"உமா கூறியது சரியாகிவிட்டது. உன்னை அவர்கள் சாப்பிடாமல் விடமாட்டார்கள் என்று கூறினாள். அதனால் தான் நாங்கள் உனக்காகச் சாப்பிடக் காத்துக்கொண்டிருக்கவில்லை."

எனக்குப் பளிச்சென்று ஒரு எண்ணம் உதயமாயிற்று.

"உமா, அப்படிச் சொன்னாரா? ஏன்?" என்று கேட்டேன்.

"எல்லாம் காரணமாகத்தான்!" என்றான் அரவிந்த்.

நான் மௌனமாக இருந்தேன்.

"எதற்காக இப்படி முகத்தைத் தூக்கிக் கொள்கிறாய்? சந்தோஷப்படவேண்டிய விஷயமல்லவா? பத்மநாபன் செல்வந்தர். நல்ல நிலையில் இருக்கிறார். சுலோசனாவும் உனக்குத் தகுந்த பெண்தான்."

"அரவிந்த்! இந்தப் பேச்சை மாத்திரம் தயவு செய்து எடுக்காதே. எத்தனை தரம் உனக்கு இதைச் சொல்வது?"

"நீ உன் மனத்திலிருப்பதைத்தான் என்னிடம் சொல்லேன். அதற்காவது ஏதேனும் முயன்று பார்ப்போம்."

"சமயம் வரும்போது சொல்கிறேன்" என்று கூறிவிட்டு என் அறைக்குச் சென்றேன். அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை.

அதன் பிறகு நான் ரமேஷ் வீட்டுக்குப் போகவில்லை. நேரே சாந்திபூர் சென்று கல்கத்தாவுக்குத் திரும்பி வர ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தேன்.

கல்கத்தாவில் எனக்கு ஒரு சிறிய வீடு அளிக்கப் பட்டது. ரொம்பச் சௌகரியமான வீடு. என்னுடைய பூர்வீக வாழ்க்கையைப் பற்றி நான் நினைத்துப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு இந்த மாறுதல் சொல்லி முடியாத வியப்பை அளிக்கும். என் அன்னை இருந்திருக்கக் கூடாதா என்று வருத்தப்படுவேன். அவருடைய மனோரதம் எப்படியோ நிறைவேறி விட்டது. அதை அவர் சூக்ஷ்ம சரீரத்திலிருந்து பார்த்து மகிழத்தான் செய்வார் என்று எண்ணுவேன்.

வீட்டில் சமையலுக்கு ஒரு ஆசாமியை நியமித்திருந்தேன். அவன் சாதம் போடும்போதெல்லாம் இந்து சமைத்து எனக்கு அன்போடு பரிமாறினது ஞாபகம் வரும். என் அன்னை மோர் சாதம் போட்டாலும் அதில் அன்பையும் கலந்து போடுவார் என்பது நினைவுக்கு வரும். அதன் பிறகு சாப்பிடவே பிடிக்காது.

'எதற்காக உத்தியோகம் பார்க்கிறோம்? எதற்காகப் பெரிய வீட்டில் வாழ்கிறோம்? எதற்காகப் பெரிய மனிதர்கள் என்று கூறப்படுபவர்களிடம் பழகுகிறோம்? எல்லாவற்றுக்கும் மேலாக எதற்காக உயிர் வாழ்கிறோம்?' என்ற கேள்விகள் அடிக்கடி என் மனத்திரையின் முன்னால் நர்த்தனமாடும்.

இரண்டு மூன்று தடவை சென்னை சென்று இந்துவைப் பற்றி விசாரித்துவிட்டு வந்தேன். என்ன செய்தும் பலன் இல்லாமல் போயிற்று. சென்னை போலீஸ் ஸ்டேஷனில் இந்துவின் படத்தைக் கொடுத்துவிட்டு வரலாம் என்ற எண்ணம்கூடத் தோன்றியது. ஆனால், ஏனோ அப்படிச் செய்ய மனம் இடந்தரவில்லை. கைதிகளின் படங்களும், திருடர்களின் படங்களும் உள்ள இடத்தில் இந்துவின் படத்தையும் வைத்துவிட்டால் என்ன செய்வதென்று பயந்தேன். ஆனால், அவளைச் சிறையிலேயே கொண்டு வைத்த பிறகு ஒன்றும் செய்ய முடியாமல்

தவிக்கிறேன். இதை விதி என்று சொல்லாமல் என்ன சொல்வது ?

# 5. தர்மசங்கடம்

ஒரு நாள் மறுபடியும் ரமேஷ் என்னைத் தேடிக் கொண்டு வந்தான்.

"இப்படி நீங்கள் ஒதுங்கியிருப்பது எங்களுக்கு ரொம்ப வருத்தமாக இருக்கிறது" என்று முகத்துக்கு நேரேயே கூறினான். அதன் பிறகு எனக்கு அவனுடைய வீட்டுக்குப் போகாமல் இருக்க முடியவில்லை. நம்மை மீறி என்ன செய்துவிடப் போகிறார்கள், எதற்காகப் பயப்பட வேண்டும் என்று தோன்றியது. மேலும் அதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது ? உமா ஊகித்த விஷயம்தானே ? எல்லாவற்றையும் விட என்னுடைய பொறுக்க முடியாத தனிமையை மறப்பதற்கு நான் ஏதேனும் செய்து கொண்டிருக்க வேண்டியிருந்தது. நான் மட்டும் அப்போது அவர்களுடைய சிநேகிதத்தைக் குறைத்துக் கொண்டிருந்தேனானால் பின்னால் நேர்ந்த சிக்கல்கள் எல்லாம் ஏற்படாமலிருந்திருக்கும்.

சீக்கிரத்தில் அவர்களுக்கு நான் தமிழன் என்பது தெரிந்து போயிற்று. ஆனால் அதற்குமேல் உதைப் பற்றி அவர்கள் என்னிடம் கேட்கவும் இல்லை, நான் சொல்லவும் இல்லை.

ஒரு சமயம் சுலோசனா, ரமேஷ் இருவரும் சென்னைக்குச் சென்றபோது என்னையும் வரச் சொல்லி வற்புறுத்தினார்கள். இந்துவைப் பற்றிய செய்தி ஏதாவது கிடைக்கலாமென்ற ஆவலினால் நான் அவர்களுடன் சென்னையில் வந்து தங்கினேன். ஒரு வாரம்தான் இருந்தேன். இந்துவின் சமாசாரம் ஒன்றும் தெரியாம

லேயே நான் புறப்பட வேண்டியதாயிற்று. அப்போது தான் நான் சினிமா பார்க்கச் சுலோசனுவுடன் வந்திருந்ததை இந்து பார்த்திருக்க வேண்டும். இந்து எனக்கு அவ்வளவு அருகில் இருந்தும் நான் அதை உணர்ந்து கொள்ளாமல் இருந்தேனே, அதை விசித்திரம் என்பதா? அல்லது விதி என்பதா?

நான் கல்கத்தா புறப்படுவதற்கு முன்னுல் பத்மநாபன் வீட்டில் பேசிக்கொண்டிருந்த போது, "எல்லோரும் கல்கத்தாவிலேயே வந்து இருந்து விடுங்களேன். ரமேஷும், சுலோசனுவும் மட்டும் ஏன் தனியாக அங்கே இருக்க வேண்டும்?" என்று சுலோசனுவின் தாயார் கோமளவல்லி அம்மாளிடம் கூறினேன்.

அவருக்கும் வெகு நாட்களாக அதே ஆசையாக இருந்தபடியால், அந்தத் தடவை சுலோசனு திரும்பிய போது அவளுடன் மீராவையும், குழந்தை பாலுவையும் அழைத்துக் கொண்டு கல்கத்தாவுக்கு வந்து விட்டார். பாலு என்னிடம் ஒட்டிக் கொண்டு பிரியமாக இருந்தான். என்னுடன் தன்னுடைய ஆங்கில மழலையால் தட்டுத் தடுமாறிப் பேசுவதைப் பார்க்கும் போது எனக்கு ரொம்ப வேடிக்கையாக இருக்கும்.



அவர்கள் எல்லோரும் கல்கத்தாவுக்கு வந்த பிறகு, நான் இன்னும் அதிகமாக அங்கே போக ஆரம்பித்தேன். மீராவையும், பாலுவையும் அழைத்துக் கொண்டு போய் ஜைனர் கோயில், பொட்டானிகல் கார்டன்ஸ், மிருகக் காட்சிசாலை இவற்றையெல்லாம் காட்டினேன். நியூ மார்க்கெட்டுக்குச் சென்று விளையாட்டுச் சாமான்கள் வாங்கிக் கொடுத்தேன். அவர்களுடைய

சந்தோஷத்தை கண்டு நானும் ஆனந்தப்படுவேன். என்னுடைய சூனியமான உலகத்தில் அவர்கள் இரண்டு பேரும் ஜோதி விளக்குகளாக இருந்தனர்.

சுலோசனாவுடன் நான் சகஜமாகவே பழகி வந்தேன். அதாவது அவள் என்னைப் பழகாமலிருக்க விடவில்லை. எனக்கு இதில் ஏதும் தனியான பொருள் இருந்ததாகத் தெரியவில்லை. அவள் எல்லாருடனும் கலகலப்பாகத்தான் பழகினாள். 'கிளப்'புக்குப் போய் எத்தனையோ பேர்களுடன் டென்னிஸ் விளையாடுவாள். இதெல்லாம் சீமையில் எனக்கு பழக்கமாகியிருந்த விஷயங்களாதலால் சகஜமாக இருந்தது. பொழுது போகாமல் வேதனை என் இதயத்தைப் பிழியும் நேரங்களில் நான் அதை மறப்பதற்காகச் சுலோ, ரமேஷ் இவர்களுடன் படத்துக்கோ, டென்னிஸ் ஆடவோ, ' டீ ' பார்ட்டிகளுக்கோ போவதுண்டு.

ஒரு நாள் சுலோசனாவுக்கு நான் இங்கிலாந்திலிருந்து வாங்கிக் கொண்டு வந்திருந்த படங்களையெல்லாம் காட்டிக் கொண்டிருந்தேன். அவளும் ஏதேதோ கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தாள். அதற்கெல்லாம் உற்சாகமாகப் பதில் சொல்லிக் கொண்டு வந்தேன். ரமேஷூம் அருகில் இருந்தான். எனக்கு அவர்கள் பார்க்காத விஷயத்தை நாம் பார்த்திருக்கிறோம். அதைப் பற்றிச் சொல்கிறோம் என்று பெருமையாக இருந்தது. அவர்கள் ஆசையாகக் கேட்பதைப் பார்த்துப் பெருமிதமடைந்தேன்.

நம்முடைய மனம்தான் என்ன விசித்திரமானது? நான் என்ற உணர்வுக்கு ஏதேனும் ஆகாரம் கிடைக்கும் போதெல்லாம் ஆவலாக விழுங்குகிறது. எவ்வளவு சாப்பிட்டாலும் அதன் பசி தீருவதேயில்லை.

மேலும் அதையெல்லாம் அவர்களிடம் கூறும்போது நான் இங்கிலாந்தில் அனுபவித்த கஷ்ட சுகங்களை யெல்லாம் திரும்ப நினைத்துப் பார்ப்பதில் ஒரு ஆனந்தம் ஏற்பட்டது.

நான் கேம்பிரிட்ஜின் அழகைப் பற்றியும், கேம் நதியின் அற்புதமான பாலங்களைப் பற்றியும் விவரித்துக் கூறினேன். பிறகு ரமேஷைப் பார்த்து, “ நீ கூடப் போயிருக்கலாம். ரொம்ப அழகான இடம். படிப்பதற்காக இல்லாவிட்டாலும் அந்த அழகை ரஸிப்பதற்காகவாவது போய் விட்டு வரலாம். அந்த அழகிய இடம் நெஞ்சை விட்டு அகலவேமாட்டேன் என்கிறது ” என்றேன்.

“ நான், ரமேஷ் இரண்டு பேரும் போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டுதான் இருந்தோம். ஆனால், இந்த யுத்தம் வந்து அதைக் கெடுத்து விட்டது. அதனால் தான் நாங்கள் போகவில்லை. எங்களுடைய துரதிர்ஷ்டம் ” என்று வருந்தினாள் சுலோசனா.

“ நான் கட்டாயம் போவதாக இருந்தேன், ராய் ! நீங்கள் முன்னால் போவது தெரிந்திருந்தால் உங்களுடனேயே வந்திருப்பேன். எனக்கு அது ஒரு பெரிய குறைதான் ” என்று கூறினான் ரமேஷ்.

“ என்ன பிரமாதம் ? யுத்தம் நின்ற பிறகு போனால் போகிறது ”

“ ஆமாம். அதன் பிறகு போய்ப் பயன் என்ன ? அங்கெல்லாம் வெறும் சாம்பலும் கரியும்தான் இருக்கும் ” என்றான் ரமேஷ்.

“ நீங்கள் நினைப்பது தவறு. அவர்கள் சாம்பலும், கரியுமாக விட்டு வைத்திருக்கமாட்டார்கள். வெகு சீக்கிரம் பட்டணங்களைத் திரும்பச் சிருஷ்டித்து விடுவார்கள் ” என்றேன்.

அதன் பிறகு பேச்சு வேறு எங்கேயோ திரும்பி விட்டது. நான் அவர்கள் பேச்சைக் கவனிக்கவில்லை. இடிந்துபோன கற்குவியல்களுக்கடியில் இந்துவின் கரத்தை மாத்திரம் பார்த்ததாகக் கனவு கண்டது ஞாபகம் வந்தது. ‘ இந்துவை நேரில்தான் பார்க்க முடியவில்லையென்றால்

கனவில்கூட முழு உருவத்தையும் பார்க்க முடியவில்லையே. ஏதாவது இன்பகரமான கனவாக வரக்கூடாதா ? எதற்காக இப்படித் துன்பமாகவே கனவுகள் வருகின்றன. நான் இந்துவைக் கணநேரம் கூட மறக்காமலிருந்தும் அவளைப் பற்றிக் கனவு காண்பதே இல்லையே ! இது விந்தை யல்லவா ? ஏன் அப்படி ? ஒரு வேளை ரொம்ப அயர்ந்து தூங்கிவிடுகிறேன் போலிருக்கிறது ' என்று இப்படி யெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தேன்.

திடீரென்று சுலோசனா, " நீங்கள் இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் மிஸ்டர் ராய் ?" என்று கேட்பது காதில் விழுந்தது.

" தயவு செய்து மன்னிக்க வேண்டும். நீங்கள் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள் என்று நான் கவனிக்க வில்லை " என்றேன் அவர்களிடம்.

சுலோசனா பொய்க் கோபத்துடன், " ஆமாம் ! உங்களுக்கு நாங்கள் பேசுவதில் எப்பொழுதும் ' இன்ட ரெஸ்டே ' கிடையாது. யாரையோ பற்றி எந்த நேரமும் கனவு கண்டு கொண்டே இருக்கிறீர்கள் " என்றாள்.

நான் திடுக்கிட்டேன். கனவைப் பற்றியே நான் யோசித்துக்கொண்டிருந்தபடியால் அவள் என் மனத்தைப் படித்து அறிந்துவிட்டாளோ என்ற எண்ணம் ஒரு கணம் எழுந்தது.

அசட்டுச் சிரிப்புடன், " இல்லை, நீங்கள் சொல்வது தவறு சுலோசனா. ஏன் நான் கனவுகளே காண்பதில்லை என்று யோசித்துக் கொண்டிருந்தேன் " என்றேன்.

" யோசனை செய்ய அருமையான விஷயம்தான் " என்று கூறி விட்டு ரமேஷ் எழுந்து சென்றான்.

சுலோ என் அருகில் சற்று நெருங்கி உட்கார்ந்து கொண்டு, " உங்களை ஒன்று கேட்கிறேன். நிஜமாகச் சொல்லுங்கள். நீங்கள் எப்போதும் இந்த உலகத்திலேயே

இல்லாத மாதிரி ஏதோ யோசித்துக்கொண்டே உட்கார்ந் திருக்கிறீர்களே ? என்ன அப்படிச் சிந்திக்கிறீர்கள் ?" என்று கேட்டாள்.

" ஒன்றுமில்லையே. அது என்னுடைய சுபாவம்."

" நீங்கள் சொல்வதை நான் நம்பவேண்டுமென்று சொல்கிறீர்களா ?"

" அது உங்கள் இஷ்டம்."

சுலோசனு மௌனமாக உட்கார்ந்திருந்தாள். சற்று நேரத்துக்குப் பிறகு சற்று மனம் நொந்த மாதிரி, " உங்களுக்குத்தான் என்னிடம் பேசப் பிடிக்கவில்லையே. நான் கேட்டது என்மீதுதான் தவறு " என்ருள்.

" ஏன் சுலோ அப்படிப் பேசுகிறீர்கள் ? நான் பிடிக்கவில்லையென்று உங்களிடம் கூறவில்லையே !"

" சொல்ல வேண்டுமாக்கும் ? என்னைப் பிடிக்கவில்லை என்பதுதான் நன்ருகத் தெரிகிறதே " என்ருள்.

இதற்கு என்ன பதில் நான் சொல்வது ? உங்களைப் பிடிக்கவில்லை என்று ஒரு பெண்மணியிடம் கூறி அவர் மனத்தைப் புண்படுத்துவதா ? அல்லது பிடிக்கிறது என்று கூறுவதா ? நான் சற்று தயங்கிக் கொண்டிருந்தபோது பத்மநாபன் வந்து என்னை அந்தத் தர்ம சங்கடத்திலிருந்து காப் பாற்றிஞர்.



" ஓ ! உங்கள் பேச்சில் நான் குறுக்கிட்டு விட்டேனே ?" என்று அவர் கேட்டுக் விட்டுச் சற்று நின்ருர்.

" இல்லை! இல்லை! வாருங்கள். இங்கே உட்காருங்கள் " என்று அவர் கையைப் பிடித்து அழைத்து வந்து ஒரு நாற்காலியில் உட்காரச் செய்தேன்.

சுலோசனு உடனே பழையமாதிரி பேச ஆரம்பித்து விட்டாள்.

அவளுடைய குரலின் தொனி உடனே மாறிவிட்டது. சற்று முன் நடந்ததை அடியோடு அவள் பொருட் படுத்தாத மாதிரி தோன்றியது. ஒருவேளை அவள் சாதாரணமாகப் பேசியதைத்தான் நான் அனுவசியமாக, விபரீதமாக நினைத்துக்கொண்டு விட்டேனே என்றுகூடத் தோன்றியது.

நான் அவர்கள் வீட்டுக்குப் போனபோதெல்லாம் கோமளவல்லி அம்மாள் என்னை ரொம்பப் பரிவாகக் கவனித்துக் கொண்டார். என்னுடைய தேவைகளைப் பற்றியே அங்கு எல்லோரும் கவலைப்பட்டுக் கொண் டிருந்ததாகத் தோன்றியது. ஆனால், சுலோசனு எப் போதும் போலவே இருந்தாள்.

இந்த மாதிரி கவனிப்புகளுக்கு நீதிபதி உத்தியோகம் ஏற்ற பிறகு நான் வழக்கப்பட்டுப் போயிருந்தேன். என் பதவிக்காகவே அவர்கள் என்னை மதிக்கிறார்களென்று நினைத்தபோதெல்லாம் எனக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வரும். என்னை எனக்காக மதிப்பவர்கள் கல்கத்தா நகரில் யாரும் இல்லை. அந்த ஒரு ஆத்மா, என்னை எனக்காக என்றே நேசிக்கும் ஒரு பெண் எங்கேயோ எனக்கு எட்டாத தூரத்தில் இருந்தாள்.

முதலில் எனக்கு இதமாக இருந்த அவர்களுடைய உபசரிப்புகள் நாளடைவில் கசக்க ஆரம்பித்தன. ஆனாலும் ரொம்பப் பழகிவிட்ட காரணத்தால் விலகி விடவும் முடியவில்லை.

வக்கீல் பத்மநாபன் இப்போது என்னைப் பார்க்கும் போதெல்லாம் உபதேசம் செய்ய ஆரம்பித்தார்.

" வாழ்க்கையில் இரண்டு விஷயங்கள் இறைவனைப் பொறுத்தவை. பிறப்பையும் இறப்பையும், நாம் மாற்றி

அமைக்க முடியாது. ஆனால், நாமாக இரண்டு முக்கிய மான விஷயங்களை வாழ்க்கையில் நிச்சயிக்க வேண்டி யிருக்கிறது. ஒன்று உத்தியோகம். உனக்கு இறைவ னருளால் நல்ல உத்தியோகம் கிடைத்திருக்கிறது. அடுத்தது விவாகம். அதை நீ சரியாகச் செய்துகொண்டு விட்டால் ஆனந்தமாக வாழலாம்" என்று அவர் கூறத் தொடங்கினார்.

அவர் இந்த மாதிரி பேச ஆரம்பிக்கும்போதெல்லாம் நான் மெள்ளப் பேச்சை மாற்றிவிட்டு நழுவி விடுவேன். சில நாட்களுக்குப் பிறகு அப்படிச் செய்வது தவறு என்றும், அவரிடம் உடைத்துச் சொல்லிவிட வேண்டியது தான் என்றும் தீர்மானித்துக் கொண்டேன். நான் ஒன்றும் சொல்லாமலிருப்பது அவருடைய நம்பிக்கையை வளர்ப்பதாகுமல்லவா? ஆகவே, அவர் நேர்முகமாக என்னைக் கேட்கும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் நான் மீராவையும், பாலுவையும் 'ஐஸ்க்ரீம்' சாப்பிட அழைத்துக்கொண்டு போகலாம் என்று பத்மநாபன் வீட்டுக்குச் சென்றேன். சுலோச னாவும், ரமேஷும் வீட்டில் இல்லை. குழந்தைகளையும் அங்கே காணவில்லை. ஆகவே பத்மநாபனுடைய அறைக்குச் சென்றேன்.

# 6. உயிர் துடித்தது

பத்மநாபன் தன் அறையில் தனியே உட்கார்ந் திருந்தார். அவர் கையில் ஒரு பெரிய சட்டப் புத்தகம் இருந்தது. அவர் அதைப் படிப்பதாகத் தோன்றவில்லை. ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருப்பதாகத் தோன்றியது. ஏதோ வழக்கு விஷயமாக யோசித்துக்

கொண்டிருக்கிறார் போலிருக்கிறது என்று எண்ணினேன். அதைக் கலைக்க வேண்டாம் என்று தோன்றியது.

உட்காரலாமென்று கருதி நாற்காலியைத் தொட்டு நகர்த்தினேன். உடனே விழித்துக்கொண்டவர் போலப் பத்மநாபன் என்னைப் பார்த்துவிட்டு, "வாருங்கள், வாருங்கள்! உட்காருங்கள்! உங்களைப் பற்றியேதான் நினைத்துக் கொண்டிருந்தேன்" என்று உபசாரமாகக் கூறினார்.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருந்தீர்கள்?"

"சொல்கிறேன். முதலில் நீங்கள் ஏதாவது சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்டுக்கொண்டே மணியைப் பலமாக அடித்தார். அவர்கள் வீட்டு பையன் ஓடி வந்தான்.



"இரண்டு 'கப்' காப்பி கொண்டுவா" என்று அவனைப் பார்த்துக் கட்டளையிட்டுவிட்டு, "மிஸ்டர் ராய்! ஏன் நீங்கள் சோர்வாகக் காணப்படுகிறீர்கள்?" என்று என்னிடம் கேட்டார்.

"ஒன்றுமில்லையே. சரியாகத்தான் இருக்கிறேன்" என்றேன்.

பிறகு உலக விஷயங்களைப் பற்றிச் சிறிது நேரம் வம்பளந்தோம். அதற்குப் பிறகு பத்மநாபன் சற்றுத் தயக்கத்துடன், "உங்களிடம் இன்று ஒரு முக்கியமான விஷயம் கேட்கவேண்டுமென்றிருக்கிறேன்" என்றார்.

நான் அது என்னவாக இருக்கும் என்பதை உடனே ஊகித்துவிட்டேன். நான் எதிர்பார்த்த சந்தர்ப்பம் வந்துவிட்டதென்பதை உணர்ந்து அதைக் கூறத் தயாரானேன். ஆனால், எனக்கு உயிரே துடித்துப் போகும்படி

யாகப் பத்மநாபன் ஒரு விஷயம் கூறுவாரென்று தெரிந்திருக்கவில்லை.

முதலில் என்னைப் பத்மநாபன், "உங்களுக்கு எந்த ஊர் பக்கம்?" என்று தயக்கத்துடன் கேட்டார்.

"திருநெல்வேலி ஜில்லாவில், அல்லிக்குளம் என்ற கிராமம் என் பூர்வீகம்."

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். எனக்கும் திருநெல்வேலிப் பக்கத்தில் நிறைய நண்பர்கள் இருக்கிறார்கள்" என்று கூறிவிட்டு வயது, முழுப் பெயர் முதலியவற்றைக் கேட்டார். நானும் கூறினேன். விஷயத்தை நேரே கேட்டுத் தொலைக்காமல் எப்படியெல்லாமோ சுற்றி வளைக்கிறாரே என்று எரிச்சலாக இருந்தது. நான் விஷயத்தை ஊகித்துவிட்டதாகவும் காட்டிக்கொள்ளச் சங்கோசமாக இருந்தது. பெற்றோர்களைப் பற்றிக் கேட்ட போது சுருக்கமாக இருவரும் நான் சிறுவனாக இருந்த போதே இறந்துவிட்டார்கள் என்றே கூறிவிட்டேன். பேராசிரியர் கோதண்டராமனைப் பற்றி நான் கூறியபோது அவரைத் தனக்கு நன்றாகத் தெரியும் என்றார் பத்மநாபன். இதையெல்லாம் சொன்ன பிறகு சற்று நேரம் அவர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

கடைசியாக, "ராய்! எனக்கு ஜாதி, ஜாதகம் இவற்றி லெல்லாம் நம்பிக்கை கிடையாது. உங்களைப் பற்றி நான் இனிமேல் ஒன்றும் விசாரிக்கப் போவதில்லை. நீங்கள்தான் ஒரு விஷயம் கூறவேண்டும். சுலோசனாவை உங்களுக்கு மணம் செய்வித்து, உங்களை இந்த வீட்டு மருமகனாக்கிக் கொள்ளவேண்டுமென்று என் மனைவி, நான், ரமேஷ் மூவரும் விரும்புகிறோம். சுலோசனாவைப் பற்றி உங்களுக்கே நன்றாகத் தெரியும்" என்றார்.

நான் விஷயத்தை எப்படிச் சொல்வது என்று கொஞ்சம் தயங்கினேன்.

அதற்குள் அவர், "சங்கோசப் படவேண்டாம், மிஸ்டர் ராய்! உங்கள் தந்தை மாதிரி என்னை நினைத்துக் கொள்ளுங்கள் " என்ருர்.

" எனக்குச் சங்கோசம் ஒன்றுமில்லை. இதற்கு என்ஞல் உடன்பட முடியாதென்று சொல்லத்தான் தயக்கமாக இருந்தது. தயவு செய்து என்னை மன்னிக்க வேண்டும் " என்றேன்.

பத்மநாபன் பேசும் சக்தியைக்கூட இழந்துவிட்ட தாகத் தோன்றியது. சற்றுப் பொறுத்து, " ஏன் ? உங்க ளுக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும் ?" என்று கேட்டார்.

அவர் அவ்வளவு தூரம் என்னுடைய பதிலால் பாதிக்கப்படுவாரென்று நான் நினைக்கவில்லை. அவர் கேட்ட விதத்தைப் பார்த்தபோது அவர் எவ்வளவு தூரம் அது நிறைவேறி விடுமென்று அழுத்தமாக எண்ணி வந்திருக்கிருரென்று எனக்குத் தெரிந்தது.

" இதற்கு என்ன காரணம் நான் கூற முடியும்? உங்களுக்கெல்லாம் நான் எவ்வளவோ கடமைப் பட்டிருக் கிறேன். தன்னந்தனியாக இருந்த என்னிடம் நீங்கள் அனைவரும் அலாதியான பிரியத்துடன் பழகினீர்கள். அதற்கெல்லாம் நான் நன்றியுள்ளவஞக இருக்கிறேன். ஆஞல், தயவு செய்து இதற்கு மாத்திரம் என்ஞல் உடன் பட முடியாது."

" ஏன் என்று நீங்கள் சொன்ஞல்தான் எனக்குச் சமாதானமாக இருக்கும். இப்படிச் சொன்ஞல் போதாது. என்ன விதத்தில் உங்களுக்கு எங்கள் சம்பந்தம் பிடிக்க வில்லை? சரியான காரணம் இருந்தால் எனக்கு மனம் நிம்மதியடைந்துவிடும். இல்லாவிட்டால் வேதனையாகவே இருக்கும்."

"அப்படியாஞல் சொல்கிறேன். எனக்குத் திருமணம் முன்பே நிச்சயமாகிவிட்டது. நீங்கள் இப்படித் திடுக்கிட

வேண்டிய அவசியமில்லை. இப்போது நிச்சயமாகவில்லை. நான் சீமை செல்லுமுன்பே நிச்சயமாகி விட்டது.''

"அப்போது ஏன் வந்தவுடனேயே விவாகம் செய்து கொள்ளவில்லை ?''

என் மனத்தை அப்படியே துயரம் என்னும் மேகம் வந்து மூடிக்கொண்டது. அவரிடம் கூறினுல் பரவா யில்லை என்று நினைத்துக்கொண்டே, "உங்களை உண் மையில் என் தந்தையாக நினைத்துப் பேசுகிறேன். நான் மணந்துகொள்வதாக வாக்குறுதி கொடுத்திருந்த பெண் இருக்குமிடம் தெரியவில்லை. அவளை எப்படியாவது தேடிக் கண்டு பிடிக்கவேண்டியது ரொம்ப அவசியம். அதற்குத்தான் நான் முயன்று வருகிறேன். அப்படி இருக்கும்போது நீங்கள் கூறுவதை எவ்வாறு நான் ஒப்புக்கொள்ள முடியும் ? ஆனுல் இதிலிருந்து உங்களுக்கு என்னிடமுள்ள நன்மதிப்பு தெரிந்து எனக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகிறது'' என்றேன்.

"ஆமாம் ! அவள் பெயர் என்ன ?''

"இந்துமதி.''

"அவள் தந்தையின் பெயர் ?''

"மந்திரமுர்த்தி. அவர் குங்குமத்துறையில் இருந் தார். அவருடைய வளர்ப்புப் பெண் இந்துமதி. அவரும் இறந்துவிட்டார் என்று கேள்விப்பட்டேன். பேதையான அந்தப் பெண் என்ன ஆனுளோ தெரியவில்லை.''

"ஆவது என்ன ? சினிமாக்காரனுடன் அவள் ஓடி விட்டாள்.''

திடீரென்று என் தலையில் பெட்ரோலை ஊற்றிவிட்டு நெருப்பு வைத்த மாதிரி இருந்தது.

நான் எழுந்து நின்றேன். என் கைகள் நடுங்கின. "மிஸ்டர் பத்மநாபன் ! நீங்கள் கூறியதனுல்தான் இதை நான் பொறுத்துக்கொண்டிருந்தேன்...'' என்று சொல்லிக்

கொண்டே இருக்கும்போது சமையல்காரப் பையன் காப்பியும், டிபனும் கொண்டு வந்தான். அவனெதிரில் ஒன்றும் பேச வேண்டாமென்று நான் நிறுத்திக் கொண்டேன்.

பையன் போன உடனே பத்மநாபன் என்னைப் பார்த்து, " மிஸ்டர், ரங்கதுரை ! உங்களுக்கு இவ்வளவு கோபம் வரும் என்று எனக்குத் தெரியாது. அந்தப் பெண்ணைப் பற்றிய விவரங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். நீங்கள் பொறுமையாகக் கேட்டால் சொல்லு கிறேன். இப்படி ஆத்திரப்பட்டுப் பதறுவதாக இருந்தால் சொல்லவில்லை " என்றார்.

என் கைகால்களில் நடுக்கம் நீங்கவில்லை. நான் மறுபடியும் உட்கார்ந்தேன். இவரிடமிருந்து இந்த விஷங் கலந்த விஷயத்தைக் கேட்பதா அல்லது போய்விடுவதா என்று சிறிது நேரம் நெஞ்சம் போராடியது. கடைசியில் ஆவல் வென்றது. இந்துவைப் பற்றி ஏதேனும் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலினால் நான் பொறுமை யாகக் கேட்பதற்குச் சித்தமானேன்.

" இந்துவைப் பற்றி உங்களுக்கு என்னென்ன தெரியுமோ எல்லாவற்றையும் சொல்லி விடுங்கள். நான் பொறுமையாக இருக்கிறேன் " என்றேன். ஐயோ ! அன்று நான் அதைக் கேட்காமலேயே இருந்திருந்தால், உடனே எழுந்து போய்விட்டுப் பிறகு அவர்கள் முகத்திலேயே விழிக்காதிருந்திருந்தால் எவ் வளவு வேதனை மீதியாயிருக் கும் ? எவ்வளவு சங்கடங்கள் குறைந்திருக்கும் ?



" அந்தப் பண்ணையார் மந்திரமூர்த்தி ரொம்ப நல்ல மனிதர்தான். அவரை

நாங்கள் விஜயராமபட்டினத்தில் சந்தித்தோம். அவர் இறக்கும் தறுவாயில் நான்தான் உயில் எழுதினேன். என்னைத்தான் அவளுக்குக் கார்டியனாக அவள் தந்தை நியமித்தார். அவளுக்குச் சேரவேண்டிய பணம் இன்னும் என்னிடம் இருக்கிறது " என்று கூறினார் பத்மநாபன்.

நான் உண்மையிலேயே இப்போது திகைத்துப் போனேன். 'நான் உண்மையில் அவற்றைக் கேட்கிறேனா, அல்லது உருவமில்லாத பயங்கரக் கனவுகள் சில சமயங்களில் வருமே, அந்த மாதிரி கனவு காண்கிறேனா ?' என்று புரியாமல் திகைத்தேன்.

நான் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருக்கும் போதே என் உயிரைத் துடிக்கச் செய்த அந்த விஷயங்களையெல்லாம் பத்மநாபன் கூறினார்.

" இந்துவை நான் என்னுடன்தான் வைத்துக் கொண்டிருந்தேன். அவளுக்குக் கல்யாணம் செய்ய வரன் கூடப் பார்த்தேன். அந்த நன்றி கெட்ட பெண் என்ன செய்தாள் தெரியுமா ? என் வீட்டிலிருந்த வைரங்களைத் திருடிக்கொண்டு அந்த அய்யாக்குட்டியோ, ஆட்டுக் குட்டியோ ஒரு சினிமாக்காரன் இருந்தானே அவனுடன் ஓடிப் போய் விட்டாள். நீங்கள் வேண்டுமானால் என் மனைவியைக் கேட்டுப் பாருங்கள். எல்லோருக்கும் தெரியும்."



எனக்கு அப்படியே வியர்த்துக் கொட்டிற்று நெஞ்சில் யாரோ சம்மட்டியால் அடிப்பது போன்ற வலி உண்டாயிற்று. 'இதெல்லாம் பொய். என் இந்துவின் மீது நீங்கள் அநியாயமாய்ப் பழி சுமத்துகிறீர்கள். அவள் பச்சிளங் குழந்தையைப் போன்ற உள்ளம் படைத்தவள். அவளைப்

பற்றி ஒன்றும் சொல்லாதீர்கள்' என்று கத்த வேண்டும் போலிருந்தது. ஆனல், பேச்சே வரவில்லை.

'இவருக்கு இந்துவின்மீது என்ன துவேஷம் இருக்க முடியும்? அனுவசியமாக எதற்காகப் பழி சுமத்தப் போகிருர்? என்னதான் சொல்கிருரென்று முழுதும் கேட்டுவிடலாமே?' என்றும் கூடவே தோன்றிற்று.

"அப்படி நீங்கள் கார்டியனுக இருந்தால், அவளை உடனே தேடிப் பிடித்திருக்க வேண்டியது உங்கள் கடமை யல்லவா? எப்படிப் பேசாமலிருந்தீர்கள்?" என்று கேட்டேன்.

"உண்மைதான். ஆனல், எப்படித் தேடுவது? குங்குமத்துறையிலும், சென்னையிலும் சல்லடை போட்டுச் சலித்துவிட்டேன். கிடைக்கவில்லை. போலீஸில் எழுதி வைப்பதா? அப்படி வேண்டுமானல் செய்திருக்கலாம். ஆனல், அதற்கு என் மனம் இடந்தரவில்லை. வைரங்கள் விஷயம் ஏதேனும் வெளியே வந்துவிட்டால் அவளுக்கு எவ்வளவு கஷ்டம்? அப்படி நன்றி கெட்ட பெண் எப்படி யாவது போகட்டுமென்று விட்டுவிட்டேன்."

"அவள் இப்போது எங்கே இருக்கிருள் என்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று வினவினேன்.

"அது எனக்குத் தெரியாது. நான் தெரிந்துகொள்ள முயற்சிக்கவும் இல்லை. அவளை எங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தபோது நான் என்ன நினைத் தேன் தெரியுமா? ரமேஷுக்கே அவளை மணம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனல், அவள் இப்படித் துரோகம் செய்துவிடுவா ளென்று நான் எதிர்பார்க்கவில்லை.

இதற்குள் ஒருவாறு என் படபடப்பெல்லாம் அடங்கி விட்டது. 'கல்யாண விஷயமாய் ஏதோ வற்புறுத்தி

யிருப்பார்கள். அதனால்தான் அவள் ஓடிப் போய் விட்டாள். வேறு எந்தக் காரணமும் இருக்க முடியாது. எத்தனை வருஷங்களானாலும் எனக்காகக் காத்திருப்பேன் என்று அவள் எனக்கு வாக்குறுதி அளித்திருக்கிறாளே? அதை மீறி அவள் நடக்கவே மாட்டாள். இது நிச்சயம். இவருக்கு இந்து இருக்குமிடம் தெரியும். ஆனால் வேண்டுமென்றே தெரியாதென்கிறார். எப்படியாவது அதை அவரிடமிருந்து தெரிந்துகொள்ள முயற்சி செய்ய வேண்டும்' என்று எண்ணினேன்.

இந்துவைப் பற்றி இது தெரிந்த பிறகு, அவள் கல்யாண விலங்கில் அகப்பட்டுக் கொள்ளாமலிருக்க ஓடிப் போயிருப்பாளென்று தோன்றிய பின், இந்துவைப் பார்க்க வேண்டுமென்ற என் ஆவல் பதினாயிரம் மடங்காகப் பெருகிவிட்டது. 'எனக்காகத்தான் அவள் ஓடிப் போயிருப்பாள் அதே சமயத்தில் இவர்கள் வீட்டில் வைரமும் காணமல் போயிருக்கும். ஆகவே, இவர்களுக்கு அவள்மீது சந்தேகம் ஏற்பட்டிருக்கும்' என்று எண்ணினேன்.

பத்மநாபனைப் பற்றி எனக்கு அப்போது தெரியாதல்லவா? ஆகவே, அவர் வேண்டுமென்று இந்துவின் மீது பழி சுமத்துகிறார் என்று நான் நினைக்கவில்லை.

நான் சுலோசவை மணந்துகொள்ள வேண்டுமென்பதற்காக இந்து இருக்குமிடத்தைச் சொல்லமாட்டேனென்கிறாரே தவிர, அவளைப் பற்றிய மற்ற விஷயங்களை அவர் நிஜமாகவே நம்புகிறார் என்றும், அவள் வீட்டை விட்டு ஓடிப் போனதால் மனம் நொந்து போயிருக்கிறார் என்றும் எண்ணினேன்.

இந்தச் சமயத்தில்தான் சினிமா நட்சத்திரம் 'அமரதாரா'வைப் பற்றிய விவரம் எனக்குச் சுலோசனா மூலம் தெரிய வந்தது.

# 7. மனத்தில் எரிச்சல்

இந்துமதியைப் பற்றிப் பத்மநாபன் இந்த விவரங் களைக் கூறிய பிறகு என் மனம் மிகவும் நொந்து போயிற்று. பாவம்! ஒரு பேதைப் பெண். சின்னஞ் சிறு வயதில் எத்தனைக் கஷ்டங்களுக்கு ஆளாகிவிட்டாள்? தாயை இழந்து, தந்தையை இழந்து, இன்னொருவர் வீட்டில் வந்திருந்துவிட்டு, அங்கிருந்தும் ஓடிப் போய் விடும்படி நேர்ந்து விட்டதே! என்ன பரிதாபமான விஷயம்! அவளுடைய குழந்தை உள்ளம் எப்படியெல்லாம் தவித் திருக்கும்? எத்தனை வேதனை அடைந்திருக்கும்?

'என்னுடைய கடிதங்கள் எல்லாம் என்ன ஆகி யிருக்கும்?' என்ற கேள்விக்கு என்னால் பதில் கண்டு பிடிக்கவே முடியவில்லை. எப்படியோ அவை இந்துமதிக்குக் கிடைக்காமல் போயிருக்கவேண்டும். அது நிச்சயமாகத் தெரிந்தது. இந்து எனக்குக் கடிதம் எழுதாமல் இருந்த தற்குக்கூட அதுதான் காரணமாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் இத்தனை துன்பங்களுக்கு நடுவே எனக்குத் தெரிவிக்காமல் இருந்திருப்பாளா?

இந்துவின் படத்தை எடுத்துப் பார்த்தேன். அவள் அதில் உல்லாசமாக ஆகாயத்தில் பறக்கும் கவலையற்ற வானம்பாடியைப் போலிருந்தாள். அவளுடைய களை சொட்டும் வதனத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. அதைப் பார்த்தபோது எனக்கு இன்னும் கஷ்டமாக இருந்தது. அவள் இப்படியே எப்போதும் கவலையில்லாமல் ஆனந்த மாக இருக்கச் செய்திருக்க வேண்டியது என் கடமை யல்லவா? அன்னை சந்திரமணிக்கு நான் சத்தியம் செய்து கொடுத்தேன். அதில் தவறி விட்டேனே. அவளுடைய குழந்தை தன்னந் தனியாக அலைவது தெரிந்தால் என்னைச் சபிக்க மாட்டாளா? ஐயோ,

கடவுளே! நான் எதற்காகச் சீமைக்குப் போனேன்? பேசாமல் அப்போதே இந்துவைக் கல்யாணம் செய்து கொண்டு ஒரு சிறிய வேலை பார்த்துக் கொண்டிருந்திருக்கக் கூடாதா? என்னுடைய பேராசையால் அல்லவா இப்படி ஆகிவிட்டது?

திடீரென்று ஒரு நாள் சீமையிலிருந்தபோது பத்திரிகையில் பார்த்த இந்துவின் படத்தைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் தோன்றியது. என்னுடைய பழைய பெட்டியைத் திறந்து அதில் கிடந்த சாமான்களையெல்லாம் வெளியில் எடுத்துப் போட்டேன். அதைக் கத்தரித்து வைத்தது மட்டும் எனக்கு ஞாபகம் இருந்தது. எங்கே வைத்தேன் என்று தெரியவில்லை. என்னுடைய அஜாக்கிரதைக்காக என்னையே நான் நொந்து கொண்டேன்.

இன்னொரு விஷயத்தை ஊர்ஜிதம் செய்து கொள்ள விரும்பினேன். மகாபலிபுரத்தில் எடுத்த படத்தில் இந்துவுடன் நிற்பது சுலோசனுவாகத்தான் இருக்க வேண்டுமென்று பத்மநாபன் கூறிய விஷயங்களுக்குப் பிறகு நினைத்தேன். அது வரையில் எனக்கு அப்படி ஒரு எண்ணம் தோன்றவே இல்லை.

அந்தப் படத்தைப் பார்த்தபோது நான் இந்துவையே அதிகம் கவனித்தபடியால் அந்த இன்னொரு பெண்ணைக் கவனிக்கவில்லை. மேலும் சின்னஞ் சிறிய படத்தில் பார்த்து விட்டு அதை நினைவு வைத்துக் கொள்வது முடிகிற விஷயமா? அந்தப் படத்தில் இந்துவின் முகம் ரொம்பச் சிறியதாக இருந்தபோதிலும், என் நெஞ்சில் அவளுடைய உருவம்தான் அப்படியே கல்லில் செதுக்கின மாதிரி பதிந்து போயிருக்கிறதே. அதனால் உடனே தெரிந்து போய் விட்டது.

இப்போது இந்துவுடன் நிற்பது சுலோசனுதானு என்று தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் மிக

அதிகமாகி விட்டது. ஆகவே, என்னுடைய பெட்டிகள், கோட்டுகள் சகலத்தையும் தேடினேன். ஒவ்வொரு புத்தகமாக எடுத்துப் பக்கம் பக்கமாகப் புரட்டிப் பார்த்தேன்.

நான் இப்படிக் குப்பைக் கூளங்களுக்கு மத்தியில் தலை கலைந்து, அழுக்கான துணிமணிகளுடன் உட்கார்ந்திருக்கும்போது, சுலோசனவும் ரமேஷும் என்னைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

எனக்கு அவர்களைப் பார்த்ததும் முதல் தடவையாக எரிச்சல் உண்டாயிற்று. ஒரு மனிதனைச் சற்று நிம்மதியாக இருக்கவிடக் கூடாதா? இவர்களுடைய மனப்பான்மைக்கு ஏற்றவாறு நான் என்னைச் சரிப்படுத்திக்கொண்டே இருக்க வேண்டுமென்றும் இவர்கள் எதிர்பார்க்கிறார்களே என்று அவர்கள்மீது அளவற்ற கோபம் வந்தது.

சுலோசன கூறியதைக் கேட்டதும் என் எரிச்சல் அதிகமாயிற்று.

"ஏன் மிஸ்டர் ராய்! இப்படி எதற்காக எல்லாவற்றையும் எடுத்து வெளியே போடுகிறீர்கள்? உங்களை அழைத்துக்கொண்டு 'ஹூக்ளி' நதிக்குச் சென்று, படகில் கொஞ்ச நேரம் உல்லாசமாகப் போய் விட்டு வரலாம் என்று வந்தோம். நீங்களானால் இப்படிக் குப்பைக்கு மத்தியில் உட்கார்ந்திருக்கிறீர்களே?" என்றாள்.



"உங்களுக்குப் பிடித்ததெல்லாம் எனக்கும் பிடிக்க வேண்டுமாக்கும்?" என்றேன் வெறுப்போடு.

சுலோசனவின் முகம் சுருங்கிற்று. "இதில் என்ன தவறு இருக்கிறது?" என்று கேட்டாள்.

" தவறு ஒன்றுமில்லை, ஷீலா ! நாளைக்கு எப்படிப் பிகு பண்ணிக் கொள்வாரென்று இப்போதே அவர் காட்டுகிறார் " என்றார் ரமேஷ் நகைத்தபடியே.

சம்பாஷணை வேறு திசையில் போவதைக் கண்ட நான், " இன்று எனக்கு வேலையிருக்கிறது. நான் எங்கும் வரவில்லை " என்றேன்.

" ஆமாம் ! இப்படிக் குப்பையைக் கிளறுவது ஒரு வேலையாக்கும் ? எல்லாவற்றையும் சுத்தம் செய்ய வேண்டுமென்றால் ஆளை விட்டுச் செய்யச் சொல்லக் கூடாதா ? நீங்கள் ஏன் இப்படிப் புழுதியில் உட்கார்ந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டும் ?" என்றாள் சுலோசனா.

" என் வேலையை நான் செய்து கொள்கிறேன். இதனால் ஒன்றும் எனக்கு உடம்பு கெட்டுப் போய்விடாது. கிளப்புகளுக்குப் போய்ச் சிகரெட் புகையில் உட்கார்ந் திருப்பதை விட இது எவ்வளவோ மேல் " என்றேன்.

" நீங்கள் சீமைக்குப் போய் வந்தவராக இருந்தும் இப்படி இருக்க வேண்டாம் " என்றான் ரமேஷ்.

" உங்களை நான் இன்று எந்தக் கிளப்புக்கும் கூப்பிட வில்லையே ? காற்று வாங்கி விட்டு வரலாமென்றுதானே அழைக்கிறேன் !"

" இல்லை சுலோசனா ! இன்று நான் வரவில்லை. என்னை மன்னித்துவிடுங்கள். எனக்கு மனம் சரியாகவே இல்லை."

சுலோசனாவின் முகம் மாறிற்று. " நானும் போக வில்லை. ரமேஷ் நீயும் இங்கேயே இரு. சற்று நேரம் இவரிடம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போகலாம் " என்றாள்.

" நீ இருப்பதாக இருந்தால் பேஷாக இரு. எனக்கு அவசியம் போயாக வேண்டும். நான் என் நண்பர்களிடம்

கட்டாயம் வருவதாகச் சொல்லியிருக்கிறேன். திரும்பி வீட்டுக்குப் போகும் போது உன்னை வந்து அழைத்துப் போகிறேன். அப்படி நான் வராவிட்டாலும்தான் என்ன ? மிஸ்டர் ராய் உன்னை வீட்டில் கொண்டுவந்து விட்டு விடுகிறார் " என்று கூறி என்னைப் புன்னகையுடன் பார்த்தான் ரமேஷ்.

நான் என்னத்தைச் சொல்வது ? இவளையும் அழைத்துக் கொண்டு போய்விடு என்று சொன்னால் நன்றாக இருக்குமா ? படத்தைத் தேடி எடுக்க வேண்டு மென்று வேறு ஆத்திரமாக இருந்தது. சுலோ இருந்தால் தேட முடியாது.

" ரமேஷ் ! நான் வேலையாக இருக்கிறேனே. சுலோவை என்னால் வீட்டில் கொண்டுவிட முடியுமென்று தோன்றவில்லை " என்றேன் தயக்கத்துடன்.

" அப்படியானால் நான் இன்னும் ஒரு மணி நேரத்தில் இங்கேயே வந்து விடுகிறேன் " என்று கூறிவிட்டுப் போய்விட்டான் ரமேஷ்.

" ஏன் ரமேஷிடம் என்னைக் கொண்டுவிட முடியா தென்று கூறினீர்கள் ? நான் இங்கே இருக்கக் கூடா தென்றுதானே ?" என்று கேட்டாள் சுலோ.

" ஆமாம்."

" ஏன் நான் இங்கிருப்பது உங்களுக்குப் பிடிக்க வில்லை ?"

" எனக்குப் பிடிக்கவில்லை என்று சொல்லவில்லையே. உங்களுக்குப் புழுதி ஒத்துக் கொள்ளாதென்றுதான் சொன்னேன். எனக்கு இதெல்லாம் பழக்கம்."

சுலோசனா என்னை ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு புன்னகையுடன், " நான் எனக்காகச் சொல்லவில்லை. உங்களுக்கு உடம்புக்கு ஆகாதே என்றுதான் சொன் னேன் " என்றாள்.

" காப்பி சாப்பிடுகிறீர்களா ?" என்று கேட்டேன்.

" சாப்பிடுகிறேன் " என்ருள் சுலோ.

நான் எழுந்து உள்ளே சென்றேன். சுலோவும் கூடவே வந்தாள். கைகளைக் கழுவிக் கொண்டு, மின்சார அடுப்பை எரிய வைத்தேன். சுலோசனு வியப்புடன் என்னைப் பார்த்தாள்.

" நீங்களா காப்பி தயாரிக்கப் போகிறீர்கள் ?" என்று கேட்டாள்.

" ஆமாம் ! சமையல்காரனுக்கு இன்று விடுமுறை !"

" எனக்குத் தெரியாதே. தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள். காப்பி போட வேண்டாம். வாசலில் உட்காரலாம் வாருங்கள்."

" இது என்ன பிரமாதம் ? ஐந்து நிமிஷ வேலை. உங்களுக்கு வேண்டாமென்ருலும், எனக்குக் கட்டாயம் காப்பி வேண்டும்."

" அப்படியானல் எங்காவது ஹோட்டலில் போய்ச் சாப்பிடுவோமே ? நீங்கள் சிரமப்படாதீர்கள்."

நான் கொல்லென்று சிரித்தேன்.

" உங்களைக் கல்யாணம் செய்து கொள்கிறவர், ஒன்று சமைக்கத் தெரிந்தவராக .இருக்கவேண்டும் ; அல்லது ஹோட்டலுக்குப் போகத் தயாராக இருக்க வேண்டும், இல்லையா ? அப்படித்தானே ?" என்று கேட்டேன்.

சுலோசனுவின் முகம் சிவந்து போய் விட்டது. "உண்மைதான், மிஸ்டர் ராய் ! அதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். சமையலறைக்கு வந்து சமைப்பதென்ருல் எனக்குப் பிடிப்பதே இல்லை " என்று கூறினள்.

அவள் அப்படி வெளிப்படையாக ஒப்புக் கொண்டதும் எனக்குப் பரிதாபமாக இருந்தது.

சற்றுத் தயங்கிவிட்டுச் சுலோ, "என்னுடைய புடவை நன்ருக இருக்கிறதா ?" என்று கேட்டாள்.

நான் காப்பிப் பொடியை எடுத்துப் போட்டுக் கொண்டே, "நன்ருக இருக்கிறதே" என்றேன்.

"பார்க்காமலேயே சொல்கிறீர்களே ? அதை எப்படி நான் நம்புவது ?"

"பார்த்தேனே" என்றேன்.

"இதில் என்ன விசேஷம் என்று கண்டு பிடியுங்கள், பார்க்கலாம்."

நான் கூச்சத்துடன், "எனக்கு ஒன்றும் தெரிய வில்லையே ?" என்றேன்.

இவள் எதற்காக இப்படியெல்லாம் கேட்டு என்னைத் தொந்திரவு செய்கிருள் என்று கஷ்டமாக இருந்தது.

"நான் ஒரு மாதத்துக்கு முன்பு உங்களிடம் இரண்டு புடவைகளைக் காட்டினேனே, அது ஞாபகமிருக்கிறதா ?"

"இல்லையே."

"நிஜமாகவா ? அன்று நான் இரண்டு புடவைகளை உங்களிடம் காட்டி எது ரொம்ப நன்ருக இருக்கிறது என்று கேட்டேன். நீங்கள் 'இந்தப் புடவையின் கரை அந்தப் புடவைக்கு இருந்திருந்தால் ரொம்ப அழகாக இருக்கும்' என்றீர்கள். உடனே அதே மாதிரி நெய்யச் சொன்னேன். இன்றுதான் அந்தப் புடவை வந்தது."

எனக்கு இப்போது எல்லாம் ஞாபகம் வந்தது. அவர்கள் எல்லோரும் புடவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சுலோசனு என்னைப் பார்த்து, 'எது நன்ருயிருக்கிறது ?' என்று கேட்டாள். நான் வேடிக்கையாக, ஏதோ பதில் கூறி வைத்தேன். அதைச் சுலோசனு கவனிப்பாளென்ருே, அந்த மாதிரி வாங்கி உடுத்திக் கொள்வாள் என்ருே நான் நினைக்கவே இல்லை.

" ரொம்ப சந்தோஷம் " என்றேன்.

" உங்கள் குரலில் கொஞ்சம்கூட சந்தோஷத்தைக் காணோமே ?"

" இதோ காப்பி கலந்தாகி விட்டது. இதைக் குடித்த பிறகு குரலும் நன்ருக ஆகி விடும். பிறகு குரலில் சந் தோஷம் தெரியும். இப் போது தொண்டை வறண் டிருக்கிறது. நீங்களும் சாப் பிடுங்கள் " என்று கூறி ஒரு கப் காப்பியைச் சுலோசனு விடம் கொடுத்தேன்.



இந்துவைப் பற்றிச் சுலோசனுவிடம் கேட்க வேண்டுமென்ற எண்ணம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆனல்,அவளிடம் கேட்டால் பத்மநாபனைப்போலவேகூறு வாள். ' ஐயோ ! மறுபடியும் இந்துவைப் பற்றி அந்த நாராசமான வார்த்தைகளை எப்படிக் கேட்பது ? அதுவும் ஒரு பெண் இன்னொரு பெண்ணைப் பற்றிச் சரியான அபிப்பிராயம் சொல்லி வ் ]வாளா பொருமை வந்து உள்ளத்தை மூடிக்கொ விடாதா ?' என்று

நாம்தான் பிறரை எவ்வளவு சுலபமாகத் தவருக எண்ணி விடுகிருேம் ? பிறரைப் பற்றி மதிப்பிட நாம் சிறிதளவு டட கூச்சமோ, தயக்கமோ கொள்வதில்லை. ஆனல், நம்மைப் பற்றி மட்டும் நாம் மிகவும் உயர்வாக எண்ணிக் கொள்கிருேம்.

இறைவன் மனித குலத்துக்கு அளித்திருக்கும் சக்தி களில், தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் சக்திக்கு ஈடு இணையே கிடையாது. சுலோசனாவிடம் நான் இந்துவைப் பற்றி அன்று கூறியிருந்தேனானால் எத்தனையோ தொந்தரவுகள் குறைந்திருக்கும்.

# 8. கண்ணீர் முத்துக்கள் !

சுலோசனாவும் அதன் பிறகு வெகு நேரம் இருக்கவில்லை.

காப்பி சாப்பிட்ட பிறகு, "உங்களுக்கு இவ்வளவு நன்றாகக் காரியம் செய்யத் தெரியும் என்று எனக்குத் தெரியாது" என்று பாராட்டினாள்.

"உங்களைப் போன்றவர்கள் இதெல்லாம் செய்யாமல் விலகிக் கொண்டால் என்னைப் போலச் சிலர் செய்யத் தெரிந்து கொள்ள வேண்டியதுதானே ?" என்றேன் கேலியாக.

"ரொம்பப் பரிகாசம் செய்கிறீர்களே, மிஸ்டர் ராய் ! சமைக்கத் தெரிந்துகொள்ளாமல் இருந்து விட்டோமே என்று எனக்கு உண்மையாகவே இப்பொழுது வருத்தமாக இருக்கிறது." — அவளுடைய குரலில் ஒரு ஏக்கம் தொனித்தது. எப்போதும் குதூகலமாக ஒலிக்கும் அவள் குரலுக்கு அந்த ஏக்கத்தின் சாயை எப்படி வந்தது என்று எண்ணினேன்.

அவளுடைய மனத்தில் என்னதான் இருக்கிறது என்று என்னால் கண்டு பிடிக்கவும் முடியவில்லை. அவளாகக் கூறினால் பிறகு என்னுடைய மனத்திலிருப் பதைக் கூறி விடலாம். நானாக எப்படி ஒரு பெண்மணி யிடம் போய், "நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா ?"

என்று கேட்பது ? அப்படிக் கேட்டால் அது எவ்வளவு விரசமாக இருக்கும் ?

சுலோசனா நேரில் என்னைக் கேட்டுவிட்டால் தேவலை போலிருந்தது எனக்கு. சந்தேகத்திலேயே காலங் கழிப்பது என்பது என்னால் இயலாத காரியம். ஒருவேளை அவள் எல்லோருடனும் சுதந்திரமாகப் பழகுவது போலத்தான் என்னிடமும் பழகுகிறாளோ என்னவோ ? பத்மநாபன் அவள் திருமணத்தைப் பற்றிக் கூறியதால் என் மனத்தில் இப்படியெல்லாம் தோன்றுகிறதோ ?

ஆனால் நான் விளையாட்டாக சொன்ன விஷயங்களைக் கூட அவள் கவனித்து வைத்துக் கொள்வானேன் ? நான் சொன்ன மாதிரி புடவை உடுத்திக் கொள்வானேன் ? சமைக்கத் தெரியாதென்று கேலி செய்வதற்காக வருத்தப் படுவானேன் ? ஒருவர் சொன்னதற்காக எதையும் செய்யும் குணம் அவளிடம் கிடையாதே ! அதற்கு என்ன காரணம் இருக்க முடியும் ? அட, கடவுளே ! இது என்ன சோதனை ?

" என்ன இப்படிப் பலத்த யோசனையில் ஆழ்ந்து விட்டீர்கள் ?" என்று கேட்டாள் சுலோசனா.

" ஒன்றுமில்லை ! ஏன் இன்னும் ரமேஷ் வரவில்லை ? என்று நினைத்தேன். அவ்வளவுதான்."

" நான் இங்கே இருப்பது உங்களுக்கு உறுத்துகிற தாக்கும் ?" என்று கூறிவிட்டு எழுந்து வேகமாக வாசல் பக்கம் சென்றாள் சுலோ.

அவளுக்கு அப்படிக் கோபம் வந்ததைக் கண்டு சற்றுத் திகைத்தேன். பிறகு நானும் எழுந்து அவளைத் தொடர்ந்து சென்று, " நீங்கள் ஏதோ அனாவசியமாகத் தவறாக எண்ணுகிறீர்கள், சுலோ !" என்றேன்.

அதே சமயத்தில் ரமேஷ் காரில் வந்து உள்ளே நுழைந்தான். கதவின் ஜன்னல் வழியாகத் தலையை

நீட்டி, "என்ன சுலோ? என்னுடன் வருகிருயா? இல்லாவிட்டால் மிஸ்டர் ராய் பிறகு உன்னைக் கொண்டு வந்து விடுகிருரா?" என்று கேட்டான்.

"இல்லை. இப்போதே வந்து விடுகிறேன். இத்தனை நாழியாக நீ வரவில்லையே என்று அவர் தவித்துப் போய் விட்டார்" என்று சொல்லிக்கொண்டே சுலோசனு 'விர்' என்று காரில் போய் ஏறிக்கொண்டாள்.

கார் பறந்து போய்விட்டது. நான் வீட்டுக்குள் சென்றபோது இந்தச் சிக்கலை எப்படிச் சரியாக்குவது என்று யோசனை செய்து கொண்டிருந்தேன்.

அதன் பிறகு மறுபடியும் இந்துவின் படத்தைத் தேடும் காரியத்தில் ஈடுபட்டேன். கடைசியில் அந்தப் படம் ஒரு புத்தகத்திலிருந்து கிடைத்தது. அதை நன்ருக கவனித்துப் பார்த்ததும், இந்துவின் அருகில் நிற்பது சுலோசனுதான் என்று நிச்சயமாகத் தெரிந்தது. 'அதை நான் கண்டுபிடித்து என்ன பயன்?' என்ற சோர்வும் கூடவே எழுந்தது.

தோல் பெட்டியைத் திறந்தேன். அதில் இந்துவின் படங்களும், அவளுக்காக நான் சீமையிலிருந்து வாங்கிக் கொண்டு வந்த சில துணிகளும், ஒரு அழகான பையும், கழுத்தில் அணிந்து கொள்வதற்காகப் பச்சை நிறப் போலிக் கற்களால் செய்யப்பட்டிருந்த மாலையும் இருந்தன. அவற்றை ஒவ்வொன்ருக எடுத்துப் பார்த்தேன். அவைகளை வாங்கியபோது நான் கற்பனை செய்து கொண்டதெல்லாம் ஞாபகம் வந்தது. இந்து பரிசுத்தமான வெண்பட்டுச் சேலை உடுத்திக் கொண்டிருப்பாள். அவளுடைய கழுத்தில் இந்தப் பச்சைக் கல் மாலையை நானே அணிவிப்பேன். மெல்லியதாகப் பின்னப்பட்ட சங்கிலிகளில் தொங்கும் இந்தக் கற்கள் இந்துவின்

கழுத்தில் விளையாடும் அழகைக் கண்டு ஆனந்தப் படுவேன். " இந்து! உன்னைப் பார்த்தால் நிஜமாகவே பூரண சந்திரன் மாதிரிதான் இருக்கிறது. என்னுடைய இதய வானத்துக்கு நீதானே சந்திரன்?" என்பேன். இந்து மலர்ந்த முகத்துடன், " அப்படியானால் சூரியன் யார்?" என்பாள். நான், " சூரியன் இனிமேல்தான் உதிக்கவேண்டும்!" என்பேன். இந்துவின் முகம் அப்படியே சிவந்து போய்விடும். அப்போது எவ்வளவு அழகாக இருக்கும்?

இதை நான் நினைத்துக் கொண்டபோது என்னால் தாங்கவே முடியவில்லை. என்னையுமறியாமல் பொங்கி வந்த சூடான கண்ணீர், மாலைப் பெட்டியில் விழுந்து அதன் வழவழப்பான துணியின்மீது முத்தைப்போல் ஜொலித்தது. அதைத் துடைத்துவிட்டு நான் பச்சைக் கல் மாலைப் பெட்டியைத் தோல் பெட்டிக்குள் வைத்து மூடினேன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் ரமேஷ் வீட்டுக்கு சென்றேன். சுலோசனா கோபத்தை மறந்து விட்டாள் போலிருக்கிறது. மலர்ந்த முகத்துடன் என்னை வர வேற்றாள்.

எல்லோரும் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தார்கள். நானும் அவர்களோடு சேர்ந்து கொண்டேன். நாலா விதமான புஷ்பங்களின் நறுமணம் காற்றில் தவழ்ந்து வந்தது. ஒரு பக்கத்தில் ' டேக்வீன் ' பூத்துக் கொட்டி யிருந்தது. அதன் சுகந்தம் சற்றுத் தலையைக் கிறு கிறுக்கச் செய்தது.

நான் ரமேஷிடம், " இந்தத் தோட்டத்தில் உட்காரும் போதெல்லாம் எனக்குப் பேராசிரியர் ஆன்ட்ரூஸின் வீட்டின் ஞாபகம் வருகிறது. இப்படித்தான் அவர்கள் வீட்டு வாசலில், நாங்கள் எல்லோரும் பேசிக் கொண்டிருப்

போம். இதேமாதிரி அந்த இடமும் அமைதியாக இருக்கும். அவர்களும் என்ன அன்பான மனிதர்கள் தெரியுமா ?" என்றேன்.

" அவருக்கு ஒரு பெண் இருந்ததாகச் சொன்னீர்க ளல்லவா ?" என்று கேட்டாள் சுலோசனா.

" ஆமாம். அவருக்கு ஒரு பிள்ளையும் இருந்தான், அவன் பாவம், யுத்தத்தில் இறந்து விட்டானாம். அதை நினைத்தாலே வேதனையாக இருக்கிறது."

முதல்நாள்தான் ஜான் இறந்து போய் விட்டதாகப் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். அதைப் படித்தது முதல் எனக்கு அவர்களுடைய ஞாபகமாகவே இருந்தது.

" ஐயோ, பாவம் ! அவர்களுக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கும் ? ஏன் அவனை யுத்தத்துக்குப் போகக் கூடா தென்று உங்கள் பேராசிரியர் தடுத்து நிறுத்தவில்லை ?"

" அதுதான் அவர்களிடமுள்ள ஒரு அருங்குணம். என்ன பொறுமையாக இருக்கிறார்கள் தெரியுமா ? தங்கள் நாட்டுக்காக என்ன வேண்டுமானாலும் செய்ய அவர்கள் தயாராக இருக்கிறார்கள். எனக்குக்கூட இந்தப் போலியான வாழ்க்கை பிடிக்கவே இல்லை. நம்முடைய தேசத்துக்காக நான் என்ன செய்திருக்கிறேன் என்று எண்ணிப் பார்த்தால் அவமானமாக இருக்கிறது."

பத்மநாபன் என் பேச்சில் குறுக்கிட்டு, " என்ன மிஸ்டர், ராய் ? உங்களுக்குக்கூட இப்படியெல்லாம் தோன்ற ஆரம்பித்து விட்டதா ? நீங்கள் நீதிபதி வேலை பார்க்கிறவர். மனம் சஞ்சலப்பட இடம் கொடுக்கவே கூடாது. நீங்கள் செய்யும் உத்தியோகம் நாட்டுக்கு நன்மை செய்யவில்லையா ? இதைவிடச் சிறந்த வேலையே ஒன்றும் கிடையாது. குற்றவாளியைத் தண்டித்து, நீதியை

நிலைநாட்டுவதைவிடத் தேசத்துக்குச் சிறந்த தொண்டு வேறு என்ன இருக்கிறது?" என்று கூறினர்.

நான் பேச்சை மாற்ற விரும்பினேன். பத்மநாபனுடன் தர்க்கம் செய்ய ஆரம்பித்து விட்டால் அது ஓயவே ஓயாது. எனக்கும், உற்சாகமாக இருக்கும் சில வேளைகளில் அவருடன் தர்க்கம் செய்யப் பிடிக்கும். ஆனால், இன்று எனக்கு மனம் ரொம்பச் சோர்ந்திருந்தது.

ஆகவே தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு, "என்ன அழகான தோட்டம்? இதைப் பார்த்து ரஸிப்பதை விட்டுவிட்டு வேறு ஏதேதோ பேசிக்கொண்டிருக்கிறோமே!" என்றேன்.

"உங்கள் ஆசிரியரின் வீட்டுத் தோட்டத்தை விட அழகாக இருக்கிறதா?" என்று கேட்டாள் சுலோசனு.

"அவருடைய வீட்டில் ரொம்ப அழகாக இருப்பது பட்டு ரோஜாக்கள்தான். அவையெல்லாம் பூத்துக் குலுங்கியிருக்கும்போது தோட்டத்தில் உட்கார்ந்து "டீ" சாப்பிடுவதே ஒரு அலாதியான அனுபவம்" என்றேன்.

"பட்டுரோஜா உங்களுக்குப் பிடிக்குமா?" என்று கேட்டாள் சுலோ.

"ரொம்பப் பிடிக்கும்" என்றேன்.

சுலோசனு கையில் ஏதோ ஒரு சினிமாப் பத்திரிகை இருந்தது. அவர்கள் வீட்டில் சினிமாவுக்குப் போவதும் அதிகம். அதைவிடச் சினிமாப் பத்திரிகை படிக்கும் வழக்கம் அதிகம்.

அதைப் புரட்டிக்கொண்டே இருந்த சுலோசனு ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தாள். பிறகு தன் தந்தை பக்கம் திரும்பிப் பார்த்து, "அப்பா! இந்த அமரதாராவைப் பாருங்கள். அப்படியே இந்து மாதிரி இல்லையா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

# 9. புத்துயிர்

எனக்கு மனம் படபடவென்று பட்டுப்பூச்சியின் சிறகுகளைப் போல் அடித்துக்கொண்டது. பத்மநாபனை நான் பார்த்தேன். அவருக்கு முகம் கறுத்து, என்னவோ மாதிரி இருந்தது. இந்துவின் பெயரைக் கேட்டாலே இவருக்குப் பிடிக்கவில்லையே என்று எண்ணமிட்டேன்.

சுலோசனுவைப் பார்த்து, "உனக்கு ஏதாவது வேலை இருந்தால் போய்ப் பார். நான் இவருடன் முக்கியமான விஷயங்கள் பேசவேண்டும்" என்று கூறினார் பத்மநாபன்.

நான் சுலோவைப் பார்த்து, "எங்கே அந்தப் பத்திரிகையைக் காட்டுங்கள்" என்றேன். அவள் அதை எடுத்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வதென்று எனக்குப் பயம்.

ஆனால் பத்மநாபன் அதற்கு என்னை விடவில்லை. "என்ன மிஸ்டர் ராய்? நீங்கள்கூட இந்தக் குப்பைகளையெல்லாம் பார்ப்பதுண்டா? இவர்கள்தான் நான் சொல்வதைக் கேட்பதே இல்லை. கண்ட பத்திரிகைகளையெல்லாம் வாங்குவது, வேண்டாத விஷயங்களையெல்லாம் படிப்பது இவர்களது வழக்கம். ரொம்ப மட்டம்" என்றார்.

சுலோசனுவுக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. "இப்போது திடீரென்று இதில் என்ன மட்டம் வந்து விட்டது? சினிமாவில் நடிப்பவர்கள் மட்டும் மனிதர்கள் இல்லையா? அவர்களுக்கு இதயம் இல்லையா? எனக்கு இதில் ஒன்றும் மட்டமாகப் படவில்லை" என்றாள் படபடவென்று.

ரமேஷ் குறுக்கிட்டு, "என்ன ஷீலா! ஏன் இப்படிப் பொரிகிறாய்? அப்பா அவருடன் ஏதோ முக்கியமாகப் பேசிக் கொண்டிருக்கிறார். நாம் அங்கே போய் உட்கார்ந்து பேசுவோம் வா!" என்றான்.

சுலோ ஆத்திரத்துடன் புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அவனுடன் எழுந்து சென்ருள். அவர்கள் இருவரும் கொஞ்ச தூரத்துக்கப்பால் சென்று புல் தரையில் உட்கார்ந்து ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள்.

பத்மநாபன் என்னைப் பார்த்து, "மிஸ்டர், ராய்! நீங்கள் இன்னும் நான் கேட்ட விஷயத்தைப் பற்றி ஒரு முடிவுக்கும் வரவில்லையா ?" என்று கேட்டார்.

"நான்தான் என் முடிவை அப்போதே தெரிவித்து விட்டேனே."

"அது உறுதியானதுதானு? மாற்றவே இடம் இல்லையா ?"

"மாறுதல் ஏற்படுவதற்கே இடமில்லை. அது மட்டும் சர்வ நிச்சயம்."

"அந்தப் பெண்ணை........."

"தயவு செய்து அதைப் பற்றி மாத்திரம் பேச வேண்டாம்."

பத்தநாபன் ரொம்பக் கெட்டிக்காரர். உடனே பேச்சை மாற்றினுர். கொஞ்சங்கூட நான் கூறியது அவரைப் பாதித்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை.

"நான் நாளை சென்னைக்குப் போகிறேன், மிஸ்டர் ராய். அங்கே எனக்கு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. நான் வரும் வரையில் இங்கே எல்லாரையும் நீங்கள்தான் கவனித்துக்கொள்ள வேண்டும்" என்ருர்.

"அதற்கென்ன பேஷாய்க் கவனித்துக் கொள்கிறேன்."—நான் அவருடன் பேசிக்கொண்டிருந்தேனே தவிர என் மனம் ரமேஷும் சுலோசனுவும் இருந்த இடத்திலேயே இருந்தது. அவர்கள் என்ன பேசுகிருர்களென்று கேட்க ஆவலாக இருந்தது. சினிமா நடிகை அமரதாராவின் படத்தைப் பார்த்து எப்படியாவது நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமென்று துடித்தேன்.

பத்மநாபனே பேசிக்கொண்டே இருந்தார். விடவே இல்லை. எனக்குப் பத்மநாபன் எதிரில் அதைப் பார்க்க நான் ஆவலாக இருப்பதாகக் காட்டிக்கொள்ள விரும்ப வில்லை. பத்மநாபன் என்னை விட்டு நகராமல் போகவே புறப்பட வேண்டியதாயிற்று.

நான் எழுந்தேன். சுலோசனாவும் ரமேஷும் இருந்த இடத்துக்கருகில் நான் சென்றபோது, "இது அவள் தான். எனக்குச் சந்தேகமே இல்லை" என்று சுலோ கூறியது காதில் விழுந்தது.

"ஏதாவது உளருதே ஷீலா! அவள் இல்லவே இல்லை. அவள் மாதிரி இருக்கிறதென்று ஒப்புக் கொள் கிறேன். நிச்சயமாக அவளில்லை. நீ எதற்கு இதை யெல்லாம் போட்டு மூளையைக் குழப்பிக் கொள்கிறாய்? அப்பாவுக்கும் பிடிக்காது, விட்டுவிடேன்" என்றான் ரமேஷ்.

நான் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு கிளம்பி னேன். சுலோசனாவிடம் பேசும்போது அந்தப் பத்திரிகை யின் பெயர் என்ன என்று பார்க்க முயற்சித்தேன். இருள் நன்றாகச் சூழ்ந்து விட்டதால் அது முடியவில்லை. அன்று வீட்டுக்குப் போகும் வழியில் ஒரு புத்தகக் கடையில் நுழைந்து, சமீபத்தில் வெளி வந்திருந்த சினிமாப் பத்திரிகைகள் அனைத்தையும் வாங்கிக் கொண்டு போனேன். போய்ச் சேர்ந்ததும், ஒவ்வொரு புத்தகமாக எடுத்துப் பக்கம் பக்கமாகப் புரட்டினேன். ஒன்றிலாவது நடிகை அமரதாராவின் படத்தைக் காணவில்லை.

எனக்கு ஒரே ஏமாற்றமாகப் போய் விட்டது. சுலோசனா பார்த்தது வேறு எந்தப் பத்திரிகையோ? ஒரு வேளை இரண்டு மூன்று வாரங்களுக்கு முந்திய பத்திரிகை யாக இருக்கும். நாளை சுலோசனாவை விசாரிக்கலாம் என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டேன்.

சுலோவை அந்தப் பத்திரிகையைப் பற்றிக் கேட்ட போது, "எதற்காக அதைப் பற்றிக் கேட்கிறீர்கள்?" என்று வினவினாள்.

"சாதாரணமாகத்தான்."

"அப்பா நேற்று நீங்கள் சென்ற பிறகு ஒரே கோபமாக இருந்தார். எங்களுக்கெல்லாம் நல்ல வசவு கிடைத்தது. நாங்கள் உங்கள் முன்னிலையில் ரொம்பக் கேவலமாக நடந்து கொள்கிறோமாம். சினிமாப் பத்திரிகைகளே இனி இந்த வீட்டிலிருக்கக் கூடாது என்று கூறி எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போனார். அவருக்குக் கோபம் வந்துவிட்டால் எல்லோருக்கும் ஒடுங்கிப் போய் விடுகிறது" என்றாள். சுலோவிடம் அதற்கு மேல் அந்த நடிகையைப்பற்றிக் கேட்க எனக்குத் தயக்கமாக இருந்தது. என்னைப் பற்றி அவள் தெரிந்து கொள்வதை நான் விரும்பவில்லை. வீடு சென்றதும் எல்லா சினிமாப் பத்திரிகைகளுக்கும் சந்தாத் தொகை அனுப்பி வைத்தேன்.

அமரதாரா நடித்த படம் ஏதாவது ஒன்று கல்கத்தா நகரில் திரையிடமாட்டார்களா என்று ஏங்கினேன். நான் சந்தா கட்டிய பத்திரிகைகளிலெல்லாம் அமரதாராவைப் பற்றி ஏதேனும் குறிப்புக்கள் வந்து கொண்டுதான் இருந்தன. ஆனால், அவற்றைக் கொண்டு இந்துமதி தான் அமரதாராவா என்பதை நான் எப்படி நிச்சயிப்பது? இந்துவின் பெயர் என் இதயம் முழுவதையும் நிறைத்துக் கொண்டிருந்தது போய் இப்போது அமரதாரா சம இடம் பெற்றுவிட்டாள். எனக்கே இது சில சமயங்களில் அவமானமாகவும் வருத்தமாகவும் இருக்கும். 'யாரையோ பற்றி எப்போதும் சிந்தனை செய்து கொண்டிருக்கிறேமே? அது இந்துவாக இல்லாவிட்டால் எத்தனை ரஸக் குறைவாகப் போய்விடும்?' என்று நினைப்பேன்.

அமரதாராவின் படம் ஒன்று கிடைக்குமாவென்று கல்கத்தா நகர் முழுவதையும் சுற்றி வந்தேன். ஒரு சினிமா தியேட்டர் முதலாளியிடம், " நடிகை அமர தாராவின் படம் ஏதாவது இருக்கிறதா ?" என்று கேட்டேன்.

" எதற்காக ? நீங்கள் அவளுடைய விசிறியோ ?" என்று கேட்டார் அவர்.

" அதைப்பற்றி உங்களுக்கென்ன ? படம் இருக்கிறதா ? காட்ட முடியுமா ?" என்று கேட்டேன்.



" எனக்கொன்றும் இல்லை, சார்! படம் இல்லை ; அவ்வளவுதான் " என்றார். மனம் ரொம்ப நொந்து திரும்பினேன்.

அமரதாரா நடித்த ஒரு படத்தின் விளம்பரத்தைப் பார்த்துவிட்டு நான் அவள் நடித்த ஸ்டூடியோவுக்குக் கடிதம் எழுதினேன். அவளுடைய போட்டோவை அனுப்பி வைக்கும்படி கேட்டிருந்தேன்.

பதில் சீக்கிரத்தில் வந்தது. அதில் அமரதாராவின் படம் கைவசமில்லை என்றும், அவளுடைய உண்மைப் பெயர் விமலா என்றும், அவளுடைய தகப்பனாரின் பெயர் முனிசாமிக் கவுண்டர் என்றும் எழுதப்பட்டிருந்தது. எனக்கு அதன் பிறகு நெஞ்சம் ரொம்பச் சோர்ந்து விட்டது. அமரதாரா, இந்துமதி இல்லை போலிருக்கிறதே என்று நொந்து போனேன். நான் பட்ட பிரயத்தனங்கள் வீண் என்று அறிந்து வருத்தமடைந்தேன்.

இரண்டு வாரங்கள் இப்படியெல்லாம் தவித்த பிறகு ஒரு பத்திரிகையில் தற்செயலாக ' அமரதாரா என்னும் நட்சத்திரம் வீடு வாங்கி இருக்கிறார், அது

என்னும் பெயரில் பதிவாகி இருக்கிறது' என்று படித்தேன். எனக்கு உடனே அது இந்துதான் என்று நிச்சயமாகத் தெரிந்துவிட்டது. அதை ஊர்ஜிதம் செய்துகொள்ள ஒரு போட்டோவைப் பார்த்துவிட்டால் போதும். சுலோசனு விடமே பேச்சுக் கொடுத்துப் பார்த்தால் என்ன என்று தோன்றியது. உடனே காரை எடுத்துக்கொண்டு சுலோசனுவைத் தேடி அவள் வீட்டுக்குச் சென்றேன்.

நான் சென்றபோது சுலோசனு தோட்டத்தில் இருந்த செடிகளுக்குத் தானே பூவாளியால் தண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள்.

“இது என்ன அதிசயமாக இருக்கிறது? காரியா லயத்திலிருந்து வந்ததும் வராததுமாகத் தோட்ட வேலை செய்கிறீர்கள்? பூச்செடிகள் என்ன புண்ணியம் செய்தனவோ?” என்றேன்.

சுலோசனுவும் சிரித்துக்கொண்டே, “எனக்குத் திடீரென்று ரோஜாச் செடிகளை வைக்க வேண்டுமென்று ஆசையாக இருந்தது. அதனுல்தான் இங்கே இருந்த ‘ஆஸ்டர்’ செடிகளையெல்லாம் எடுத்து வேறு இடத்தில் வைத்துவிட்டு இங்கே ரோஜாச் செடிகள் வாங்கிக் கொண்டு வந்து வைத்தேன்.”

நான் பேராசிரியர் ஆண்ட்ரூஸ் வீட்டில் ரோஜாச் செடிகள் இருந்ததைப் பற்றிச் சொன்னதுதான் சுலோசனு வின் புதிய சிரத்தைக்குக் காரணம் என்ன என்று எனக்குத் தெரிந்துவிட்டது. ஐயோ! வெளிப்படையாகச் சொல்லித் தொலைக்கக் கூடாதா? ஆனுல், பத்மநாபன் நான் மறுத்து விட்டதைப் பற்றிச் சொல்லாமலா இருப்பார்? அப்படி யிருந்தும், சுலோசனு ஏன் இப்படியெல்லாம் செய்கிறுள்? இது புரியாத புதிராக இருந்தது. நான் நினைப்பதற்கு ஆதாரமாக அவள் வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. எப்போதும் விளையாட்டாகவேதான் என்னிடம் பேசினுள்.

" என்ன ? என்ன ? இப்படி நீங்கள் தவம் செய்ய ஆரம்பித்து விட்டீர்கள் ?" என்று கேட்டாள் சுலோ.

" தவம் ஒன்றுமில்லை. ரோஜாச் செடிகள் என்றதும் எனக்கு இங்கிலாந்திலுள்ள எனது பேராசிரியர் ஆன்ட்ரூஸின் வீட்டு ஞாபகம் வந்தது."

" அவர்கள் வீட்டுத் தோட்டம் மாதிரியே இருக்க வேண்டுமென்று நான் இவைகளை வாங்கிக்கொண்டு வந்தேன்."

நான் செடிகளின் அருகில் சென்று, " இந்தச் செடிகளைப் பற்றியும், அவை நிறையப் புஷ்பிப்பதற்கு என்ன செய்ய வேண்டுமென்பது பற்றியும் உங்களுக்குத் தெரியுமா ?" என்று கேட்டேன்.

" இதுவரை தெரியாது. ' ரோஜாச் செடிகள் பயிரிடுவதெப்படி ?' என்று ஒரு புத்தகம் வாங்கிப் படித்தேன். அதன் பிறகு கொஞ்சம் தெரியும்."

" எல்லாவற்றையும் பற்றிப் புத்தகத்தில் படித்தே தெரிந்துகொண்டு விடுவீர்கள் போலிருக்கிறதே. அனுபவத்தின் மூலம் தெரிந்துகொள்ளவேண்டிய அவசியம் உங்களுக்கு இல்லைபோலிருக்கிறது !" என்றேன் பலமாகச் சிரித்துக்கொண்டே.

" ஆமாம். எத்தனையோ முக்கியமான விஷயங்களைப் பற்றி நான் புத்தகத்தில் படித்திருக்கிறேன். ஆனால், அவற்றை அனுபவித்து அறிய எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை" என்று கூறிவிட்டுத் தண்ணீர் வாளியைக் கொண்டு வைத்துவிட்டு வந்தாள் சுலோசனா.

நாங்கள் உள்ளே சென்று உட்கார்ந்தோம். " ரமேஷ் எங்கே ? வெளியில் போயிருக்கிறாரா ?" என்று கேட்டேன்.

" இன்னும் ஆபீஸிலிருந்தே வரவில்லை " என்றாள்.

“ நாம் ஏதேனும் சினிமாவுக்குப் போகலாமென்று எண்ணினேன். இன்னும் ரமேஷ் வரவில்லையே. படம் ஆரம்பிக்கும் நேரமாகிவிட்டதே ?”

“ அவன் வராவிட்டால் என்ன ? நான் அம்மாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன். நாம் இருவரும் போவோம். மீராவை அழைத்துக்கொண்டு போவோம். அவளுக்கு இன்று பிறந்த நாள்.”

“ அப்படியா ? எனக்குத் தெரியாமல் போய்விட்டதே· சரி ! சீக்கிரம் வரச் சொல்லுங்கள். போகும்போது நாம் ‘ஐஸ்கிரீம்’ சாப்பிட்டுவிட்டுப் போகலாம் !” என்றேன்.

காரில் மீராவும், சுலோசனுவும் ஏறிக்கொண்டார்கள். “ பாலுவையும் நம்முடன் அழைத்துப் போவோமே ?” என்றேன்.

“ இல்லை. அம்மா அவனுக்கு உடம்புக்கு ஆகாது என்கிருள். நாளைக்கு வேறு எங்காவது அழைத்துப் போகலாம். சினிமாவுக்கு வேண்டாம்.”

“ அப்படியானுல் சரி !” என்று கூறிவிட்டு நான் காரை ‘ ஸ்டார்ட் ’ பண்ணினேன்.

கொஞ்ச தூரம் சென்ற பிறகு, “ ஏதாவது தமிழ்ப் படம் நகரில் ஓடுகிறதா ? நான் இங்கிலாந்திலிருந்து திரும்பிய பிறகு ஒரு தமிழ்ப் படம்கூட இன்னும் பார்க்கவில்லை ” என்றேன்.

“ தமிழ்ப் படமா ? இப்போது ஒன்றும் நல்ல படம் ஓடவில்லை. இன்னும் இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு நல்ல படம் வருகிறதாம். அதற்கு வேண்டுமானுல் போகலாம். அதை எல்லோரும் புகழ்ந்து எழுதியிருக்கிருர்கள்.”

“ அப்படி என்ன அதிசயமான படம் வருகிறது ?”

“ அமரதாரா என்ற மிகப் பிரபலமான நடிகை நடித்த படமாம். அவள் நடித்த படம் எதையும் இதுவரை நான்

பார்த்ததில்லை. இந்தப் படத்துக்குக் கதையையும் அவளே எழுதியிருக்கிறாளாம். ரொம்ப நன்றாக இருக்கிறதென்று விமர்சனங்கள் எல்லாம் ஒரு முகமாகப் புகழ்ந்திருக்கின்றன."

எனக்கு இதயம் விரிந்து விசாலமாகி விட்டது போலிருந்தது. கை சற்று நடுங்கிற்று. எதிரே வெகு வேகமாக வந்த டாக்ஸியின்மேல் மோதி விடாமல் திருப்ப மிகவும் சிரமப்பட்டேன்.



"இன்று என்ன உங்களுக்கு? நீங்கள்கூட இவ்வளவு அஜாக்கிரதையாகக் கார் ஓட்டுகிறீர்களே?" என்றாள் சுலோ.

அன்று படத்துக்குப் போய்விட்டு வந்தது முதல் எனக்கு நிலை கொள்ளவேயில்லை. அமரதாரா நடிக்கும் படம் வரும் நாளை வெகு ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

படம் வெளியாகும் தினத்தன்று முதலிலேயே இடத்துக்கு 'ரிஸர்வ்' செய்துவிட்டு, சுலோசனாவின் வீட்டுக்குக் கிளம்பிச் சென்றேன். ரமேஷும், சுலோவும் என்னுடன் வந்தார்கள்.

நாங்கள் உள்ளே சென்று அமர்ந்தோம். விளக்குகள் அணைந்தன.

என்னால் நாற்காலியில் உட்கார்ந்திருக்கவே முடியவில்லை. முதலில் வந்த செய்திப் படங்கள் எதிலும் மனம் ஈடுபடவே இல்லை. இவை எப்போது முடியும் என்று காத்துக்கொண்டே இருந்தேன். கடைசியில், "சினிமா

வானில் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் 'அமரதாரா' நடித்த" என்று திரையில் நட்சத்திரங்கள் ஜ்வலிக்க ஆரம்பித்தன. என் நெஞ்சம் விம்மித் தணிந்தது.

அதில் முதல் காட்சி. ஒரு ஸர்க்கஸ் நடநது கொண்டிருக்கிறது. ஒரு வாலிபன் வித்தைகள் செய்கிருன். இது எனக்குத் தலை வேதனையளித்தது. அவன் கரணம் போடும்போது கை தவறுகிறது. அதே சமயத்தில் "ஐயோ!" என்று ஒரு பெண் அலறும் சத்தம் கேட்கிறது. அந்த இளம் பெண்ணின் முகம் திரையில் தெரிந்தது.

நான் நாற்காலியை இரண்டு கைகளாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டேன். "இந்து" என்று கூப்பிட்டுவிட வேண்டும் போலிருந்தது. அப்போது நான் அடைந்தது ஆனந்தமா? துயரமா? என்னவென்று சொல்ல முடியாது. இரண்டையும் கடந்த ஒரு நிலை என்றுதான் கூறவேண்டும்.

படம் முழுவதையும் பார்த்த பிறகு இந்துவிடம் எனக்கு மரியாதை உண்டாயிற்று. அதுவரையிருந்த பரிதாப உணர்ச்சிக்கும், அன்பு உணர்ச்சிக்கும் மேலாக இந்த மரியாதை உணர்ச்சி தோன்றியது. அந்த நிமிடம் வரையில் நான் அவளைச் சிறு குழந்தையைப்போல் நேசித்துக் கொண்டிருந்தேன். படத்தைப் பார்த்த பின் ஒரு திறமை மிகுந்த மங்கையாக அவளை நினைக்கத் தொடங்கினேன். பரிவு உணர்ச்சியுடன் அளவிலாத வியப்பு உண்டாயிற்று. ஒன்றுமறியாத சிறுமியாக இருந்த இந்துமதி ஐந்து வருஷங்களுக்குள் எவ்வளவு விஷயங்கள் தெரிந்துகொண்டு விட்டாள். இதயத்திலுள்ள ஏக்கம், அன்பு, துயரம், கசப்பு, ஆத்திரம், பயம் முதலிய நுட்பமான உணர்ச்சிகளைக் கண்களினுலும், புருவத்தின் அசைவுகளினுலும் எவ்வளவு எளிதாக வெளியில் காட்டி விடுகிருள். உடலை அலட்டிக் கொள்ளாமல் முகத்திலேயே

சகல உணர்ச்சிகளையும் பொழிகிருளே ! இந்தத் திறமை அவளுக்கு எங்கிருந்து வந்தது ?

அடேயப்பா ! ஒருவரைப் பற்றி முழுவதும் அறிந்து கொள்வதென்பது எவ்வளவு கடினமான விஷயம் ? நான் இங்கேயே இருந்து அவளை மணந்து கொண்டிருந்தால் அவளுடைய திறமை இப்படிப் பிரகாசிக்க இடமே இல்லாமல் போயிருக்கும். ஒருவேளை இப்படியெல்லாம் நடக்க வேண்டுமென்றுதான் அவளுக்கு அவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டனவோ ? இருக்கும். உலகத்தில் எதற்குத்தான் நம்மால் காரணம் கண்டுபிடிக்க முடிகிறது ?

# 10. மனம் கலங்கியது

படத்தைப் பார்த்தது முதல் என் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது. இந்துவைப் பற்றிய ஒரு சினிமாப் படமே என் உள்ளத்தில் ஓடிக்கொண்டிருந்தது. அவளுடைய திறமையைப் பற்றிய வியப்புத்தான் எல்லா வற்றுக்கும் மேலாக எழுந்துகொண்டிருந்தது.

இந்தப் படத்தில்தான் இந்து எத்தனை அழகாக நடித்திருக்கிருள் ? கதையும் அவளுடைய அன்னை தந்தையைப் பற்றியதுதான். அதையும் எவ்வளவு அழகாகச் சித்திரித்திருக்கிருள் ? படத்தில் உள்ள மற்ற அம்சங்கள் நன்ருக இருந்தபோதிலும், படத்தின் வெற்றிக்கு இந்துதான் காரணம் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இந்துவின் படத்தைப் பார்த்து ஸ்ரீமதி ஹார்வி, " சினிமா நட்சத்திரம் மாதிரி இருக்கிருளே !" என்று வியந்தது என் நினைவுக்கு வந்தது.

" பாவம் ! இந்துவுக்கு முதலில் இதில் பிரவேசிக்க எவ்வளவு தயக்கமாக இருந்திருக்கும் ? அந்த மனேதிடம்

அவளுக்கு வருவதற்குச் சூழ்நிலையின் நிர்ப்பந்தம்தான் காரணமாக இருந்திருக்கும். இல்லாவிட்டால் குங்குமத் துறைப் பண்ணையார் மந்திரமூர்த்தியைப் போன்ற சினிமாவை வெறுக்கும் ஒரு மனிதரால் வளர்க்கப்பட்ட பெண் இப்படி நடிப்பதற்குத் துணிந்திருக்க முடியுமா ?

இந்துவின் நிலையைக் கற்பனை செய்துகொண்டு பார்த்தபோது எனக்கு மனம் உருகிப் போய்விட்டது.

நல்ல வேளையாக இப்போதாவது சௌக்கியமாக இருக்கிறாளே. சந்தோஷமாக இருக்க மாட்டாள். ஆனால் கஷ்டப்படாமல்இருப்பாளல்லவா ? அந்தச் சந்தோஷத்தையும் அவளுக்கு அளிக்க நான் அவளிடம் போய்விடப் போகிறேன். அதன் பிறகு வாழ்க்கையே ஆனந்தமயமாக இருக்கும்.



இவ்வாறெல்லாம் சிந்தனை செய்துகொண்டே நான் காரை ஓட்டிக்கொண்டு போனேன். அத்தனை நேரம் பேசாமலிருந்த சுலோசனா, "ஏன் ரமேஷ் ! இப்போதாவது உனக்கு நிச்சயமாயிற்றா ? அவள் யாரென்று தெரிந்ததா ?" என்று கேட்டாள்.

"தெரிந்தது. அவள்தான் என்று நானும் நம்புகிறேன்."

"இல்லையென்று ஒரேயடியாகச் சாதித்தாயே. நான் அவளுக்குக் கடிதம் எழுதப் போகிறேன்."

" ஷீலா ! நான் சொல்வதை நீ எப்போதும் கேட்டதில்லை. தயவுசெய்து இதை மாத்திரம் கேள். வீணை வம்பை விலைக்கு வாங்கிக் கொள்ளாதே அப்பாவுக்குத் தெரிந்தால் அவருக்கு அடியோடு பிடிக்காது."

" அது வாஸ்தவம்தான்."

" மேலும் அவள்தான் சௌக்கியமாக இருக்கிறுளென்று தெரிகிறது. நாம் மறுபடியும் அவளுடைய வாழ்க்கையில் குறுக்கிடுவானேன் ? அதனுல் யாருக்கும் நன்மை இல்லை."

" சரி ! ரமேஷ். நான் எழுதவில்லை."

இந்தச் சந்தர்ப்பத்தில் நான், " இந்தச் சினிமாவில் நடித்த பெண்ணைப் பற்றியா நீங்கள் பேசுகிறீர்கள் ?" என்று கேட்டேன்.

" ஆமாம் ! இவள் எங்கள் வீட்டில் கொஞ்ச நாட்கள் இருந்தாள். இது ஒரு அதிசயமில்லையா ?"

" அப்படியா ?"

" ஒன்றுமே தெரியாத அப்பாவிப் பெண்ணுக இருந்தாள். இப்போது எவ்வளவு கெட்டிக்காரியாகி விட்டாள் !" என்றுன் ரமேஷ்.

" ஏன் அவள் உங்கள் வீட்டை விட்டுப் போய் விட்டாள் ?"

" அது ஒரு கதை. அதைப் பிறகு சொல்கிறேன் " என்றுன் ரமேஷ்.

அவனுடைய குரலின் தொனியிலிருந்து அதைப் பற்றிச் சொல்ல அவனுக்கு இஷ்டமில்லை என்று தெரிந்தது.

எனக்கு அப்போது என்ன தோன்றியது தெரியுமா ? இந்துவைப் பற்றிய அவதூறுன விஷயங்களை இவர்களும் நம்புகிறுர்கள். ஆனுல், பத்மநாபனைப்போல் சுயநல

நோக்கமில்லாதபடியால் அதைப் பற்றிக் கூற இவர்கள் விரும்பவில்லை என்று எண்ணினேன்.

அவர்களை விட்டுவிட்டு நான் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தபோது மணி பத்து அடித்துவிட்டது. எனக்குச் சந்தோஷத்தினால் மனம் நிறைந்திருந்தது. சாப்பிடப் பிடிக்கவில்லை. சமையல்காரனிடம் எனக்குப் பால் மாத்திரம் கொண்டுவரச் சொல்லிவிட்டுப் படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டேன்.

இந்து இந்த வீட்டில் இருந்தால் இப்படியா சூனிய மாக இருக்கும்? வீடே என்ன களையாக இருக்கும்? எவ்வளவு சுத்தமாகவும், குளுமையாகவும் இருக்கும்? இந்தமாதிரி சாப்பிடாமல் படுத்துக்கொள்ள விடுவாளா? சாதத்தைப் பிசைந்து எடுத்துக்கொண்டு வந்து கொஞ்ச மாவது சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்துவாள். அதற்கு மேலும் மறுத்தால், "நானும் சாப்பிட மாட்டேன்" என்று பயமுறுத்துவாள்.

ஆமாம். நான் இன்னும் அவளைப் பழைய மாதிரியே இருப்பாளென்று நினைத்துக் கொண்டிருக்கிறேனே. எப்படி மாறியிருக்கிறாளோ? பணம், புகழ், அந்தஸ்து எல்லாம் சேர்ந்து வந்திருக்கிறதல்லவா? வீடு வாங்கக் கூடிய அளவுக்குச் செல்வம் சேர்ந்து விட்டது. இன்னும் எவ்வளவு சம்பாதித்திருக்கிறாளோ? அப்படி இருக்கும் போது பழைய மாதிரியே இருப்பாளா? ஒருவேளை மனம் மாறியிருக்கலாமல்லவா? பணம் யாருடைய மனத்தையும் மாற்றி விடக்கூடிய வஸ்துவாயிற்றே!

சே! சே.! என்ன இப்படி நினைக்கிறேன். இந்தச் சந்தேகம் பிடித்த வக்கீல்களுடனும், வாதி, பிரதிவாதிக ளுடனும் பழகிப் பழகி எனக்குக்கூட அவர்கள் மாதிரி சந்தேகப் பிசாசு பிடித்துக்கொண்டு விட்டது போலும்! என் அருமை இந்துவைப் பற்றியா இவ்வாறெல்லாம்

எண்ணுவது? அவள் என்னை மறந்திருக்கவே மாட்டாள். பின் ஏன் என் நெஞ்சத்தில் இப்படி ஒரு எண்ணம் எழுந்தது?

சற்று நேரம் யோசித்தேன். நான் அவ்வாறு எண்ணியதற்குப் பத்மநாபனின் விஷந் தோய்ந்த வார்த்தைகள் ஒரு காரணம். இரண்டாவதாக அவளிடம் எனக்கே சிறிது பொருமை உணர்ச்சி ஏற்பட்டிருந்தது. எனக்கே சொந்தமான இந்துவைப் பற்றி அத்தனை பேர் பாராட்டி எழுதுவதும், பேசுவதும் எனக்கு உள் அந்தரங்கத்தில் சம்மதமாக இல்லை. அவள் முழுதும் எனக்கே உரியவள் என்ற எண்ணத்தை என்னல் போக்கிக்கொள்ள முடியவில்லை. இது தெரிந்ததும் எனக்கே அவமானமாக இருந்தது.

அவளைக் காப்பாற்ற என்னல் முடியவில்லை. அவள் தன் திறமையை வெளியிட்டுப் புகழடைவதைப் பார்த்து நான் பொருமைப்படுவதா? 'ஏ! வஞ்சக நேஞ்சமே நீ எங்கிருக்கிருய்? இப்படிப்பட்ட பாதக எண்ணங்களையெல்லாம் எங்கே ஒளித்து வைத்திருக்கிருய்?' என்று என்னை நானே கேட்டுக்கொண்ட பின்னர் மறுபடியும் மனம் தெளிவடைந்தது.

இந்துவின்மீது எனக்கிருந்த அளவிலாத அன்பினுல் தான் இப்படி ஒரு எண்ணம் எழுந்தது என்று அறிந்து சற்று சமாதானமடைந்தேன்.

உடனே எழுந்து உட்கார்ந்து இந்துவுக்குக் கடிதம் எழுதத் தொடங்கினேன். இரவு இரண்டு மணி வரையில் ஏதேதோ எழுதி எழுதிக் கிழித்துப் போட்டேன். எப்படி எழுதுவது? என்ன விதமாய் என் உணர்ச்சிகளைச் சொல்லுவது என்றே புரியவில்லை. திடீரென்று இந்துமதி என்னிடமிருந்து விலகிப் போய் நின்ருள்.

அவளுடைய நடிப்பைப் புகழ்ந்து எழுதுவதா? அவளுடைய தைரியத்தைப் பாராட்டி எழுதுவதா?

அல்லது அவளுடைய கஷ்டங்களையெல்லாம் குறித்துப் பரிதாபப்பட்டு எழுதுவதா? அல்லது என் அன்பைக் கொட்டி எழுதுவதா? எது அவளுக்குப் பிடிக்கும்? இது எனக்குப் புரியவில்லை.

கடைசியில் இந்துவைப் போய்ச் சந்திப்பது என்றும், நேரில் பார்த்து எல்லாவற்றையும் விவரமாகக் கூறுவது' என்றும் தீர்மானித்துக் கொண்டு தூங்கிப் போனேன்.

மறு நாளே அமரதாராவின் விலாசத்தைக் கேட்டு ஒரு பத்திரிகையாளருக்கு எழுதினேன். உடனேயே பதிலும் வந்தது. அதில் இந்துவின் விலாசத்தைக் கண்டதும் எனக்கு இந்துவையே பார்த்து விட்டதுபோல் சந்தோஷமாக இருந்தது.

நான் சென்னை போவதாகச் சொன்னதும் பத்ம நாபன், தனக்கும் வேலையிருப்பதாகவும், தானும் வருவ தாகவும் கூறினார். எனக்கு இதற்கு அவ்வளவாகச் சம்மதமில்லை என்றாலும், அவர் வருவதை நான் தடுக்கவா முடியும்? சுலோசனாவும் கிளம்பினாள். அவளுக்குத் திடீரென்று தன் சிநேகிதிகளையெல்லாம் பார்க்க வேண்டு மென்று ஆசை வந்துவிட்டது. இது ஒரு சாக்குத்தான் என்றும், அவள் என்னுடன் வரவேண்டும் என்பதற் காகவே வருகிறாளென்றும் எனக்குத் தோன்றியது.

சென்னைக்கு நாங்கள் போய்ச் சேர்ந்த மறுநாள் நான் அமரதாராவின் வீட்டைத் தேடிச் சென்றேன். அங்கேதான் எனக்கு எப்பேர்ப்பட்ட ஏமாற்றம் உண்டாயிற்று. எனக்கு இந்துமதியின் மீது வெறுப்பே உண்டாகிவிட்டது என்று சொல்ல வேண்டும்.

இந்துவைப் பார்க்க நான் ஆவலுடன் போய்க் கொண்டிருந்தபோது பற்பல விதமாகக் கற்பனைகள் செய்து கொண்டே போனேன்.

நான் சென்றவுடன் இந்து ஆவல் ததும்ப ஓடி வருவாள் என்றும், அன்பு பொங்கப் பார்ப்பாள் என்றும் கற்பனை செய்து கொண்டேன்.

பிறகு பத்மநாபன் கூறிய விஷ வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

'பத்மநாபன் கூறியதெல்லாம் பொய்தான். சந்தேக மில்லை. ஆனால், இந்து முன்மாதிரியே இருப்பாளா? குழந்தை மாதிரி என்னை நேசித்த அதே இந்துமதியை நான் இன்று பார்ப்பேனா? அல்லது அகம்பாவம் கொண்ட ஒரு நடிகையைப் பார்ப்பேனா? இப்போது இந்து உலகமறிந்த, அனுபவசாலியான புகழ் பெற்ற பெண்மணியாகி விட்டாள். குங்குமத்துறை இந்துமதிக்கும் அமரதாராவுக்கும் எத்தனையோ வித்தியாசங்கள் இருக்கும்' என்று எண்ணினேன்.

கடைசியில் அவளைப் பார்த்த உடனே என் உணர்ச்சி களை வெளிக் காட்டிக்கொள்ளக் கூடாதென்றும், நிதானமாகவும், விளையாட்டாகவும் பேசுவதென்றும் தீர்மானித்துக் கொண்டேன்.

அதனால் விளைந்த விபரீதத்தை இப்போது நினைத்துப் பார்க்கும்போதுகூட வருத்தமாக இருக்கிறது.

# 11. கனல் அணைந்தது

நான் மாத்திரம் அன்று இந்துவைப் பார்த்த வுடனே அவளை அன்புடன் அழைத்து மனம் விட்டுப் பேசியிருந்தால் எவ்வளவோ தொல்லைகள் விளையாமல் இருந்திருக்கும்.

சந்தேகப் பிசாசு வாழ்க்கையை அடியோடு குலைத்து விடுகிறது. பாவம்! புண்பட்ட இந்துவின் நெஞ்சை

வறண்ட குரலில் பேசி இன்னும் புண்ணுக்கினேன். " பத்மநாபன் கூறியது உண்மை " என்றேன். அதைச் சொல்லும்போதே 'அட பாவி ! இப்படிச் சொல்லுகிருயே !' என்று இதயத்தின் அடிவாரத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. ஆனுல், இந்துவின் அலட்சிய பாவத்தை என்னுல் பொறுத்துக்கொள்ள முடியவில்லே.

என்னேப் பார்த்த உடனே இந்துவின் கண்களில் திகைப்புத்தான் காணப்பட்டது. நான் எதிர்பார்த்த மாதிரி அன்பு என்னும் அமிருதாரை பெருகிப் பாய்ந்து என் இதயத்தில் வந்து கலக்கவில்லே. எங்களுக்கு நடுவில் யாரோ ஒருவர் ஆழமான பள்ளத்தை வெட்டி விட்டது போலத் தோன்றியது.

அன்று நான் அடிபட்ட பறவையைப் போலிருந்தேன். பத்மநாபன் என்னேப் பார்த்ததும், " எங்கே போயிருந்தீர்கள் ?" என்று கேட்டார்.

" நண்பன் வீட்டுக்குப் போயிருந்தேன். சுலோ எங்கே ?" என்று கேட்டேன்.

" மாடியில் இருக்கிருள் " என்ருர் பத்மநாபன். முதலில் அவர் குரலில் இருந்த கடுமை மாறிக் கனிவு இருந்ததாகத் தோன்றியது.

நான் மாடிக்கு ஓடிச் சென்றேன். யாரிடமாவது என மன வேதனேயை அப்படியே கொட்டி ஆறுதல் பெற வேண்டும் போலிருந்தது எனக்கு.

இந்துவின்மீது கோபம் கோபமாகப் பொங்கி வந்தது. என் இதயத்தில் எரிமலேகள் அக்னிக் குழம்பைக் கக்கின.

" போய் வாருங்கள் " என்று இந்து கூறியது ஒவ்வொரு தடவை நினேவுக்கு வந்த போதும் ஒரு பெரிய கொதிக்கும் பாருங்கல் என் நெஞ்சில் வெடித்துச் சிதறியது. ஐந்து வருஷங்களாகப் புனிதமான யாக குண்டத்து அக்னியைக் காப்பாற்றுவதுபோல் நான்

அவளுடைய நினைவை என் நெஞ்சம் என்னும் ஹோம குண்டத்தில் காப்பாற்றி வைத்திருந்தேன். அதன்மீது எப்பொழுதாவது சாம்பல் பூக்கும்படி விட்டிருக்கிறேனா? ஒரு கணமேனும் அதன் உஷ்ணம் குறைந்திருக்கிறதா? அதை எவ்வளவு பக்தி சிரத்தையோடு காப்பாற்றினேன்? அவளுடைய நினைவே புனிதமானதென்று நம்பியிருந்தேனே? அந்த அக்னியை, ஐந்து வருஷங்களாக நான் பாதுகாத்த அந்தப் புனிதமான கனலை இந்து திடீரென்று குளிர்ந்த நீரைக் கொட்டி அணைத்து விட்டாள். இப்போது அந்த ஹோம குண்டத்தில் விகாரமான கரிதான் மீதியிருந்தது. அதைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை. அதை மறுபடியும் பற்றவைக்கவோ, அல்லது அதை எடுத்து வெளியே எறிந்து விடவோ நான் அசக்தனாகி விட்டேன்.

'ஐயோ, இந்து! நான் எவ்வளவு ஆசையுடன் என் உயிரைக் காப்பாற்றிக் கொண்டேன். எல்லாம் உனக்காகத் தானே. உன்னை ஒரு கணமேனும் நான் மறந்திருப்பேனா? இப்படி என்னை நோகச் செய்துவிட்டாயே!

நீ செத்தாவது போயிருக்கக் கூடாதா? அப்போதுகூட எனக்குத் துயரம்தான் ஏற்பட்டிருக்கும். துயரத்திலும் அன்பின் இனிமை கலந்திருக்கும். இப்போது என்னைச் சித்திரவதை செய்துவிட்டாயே. உன் நினைவு எனக்கு அளித்து வந்த ஆறுதல் எங்கே போயிற்று? இப்போது அதுவே உப்புத் தாளால் தேய்ப்பது போல் நெஞ்சை அறுக்கிறதே!'

எனக்கு நினைவு வந்தபோது சுலோசனா என் எதிரில் நின்றுகொண்டிருந்தாள். நான் மாடியில் கடைசிப் படியில் உட்கார்ந்திருப்பது அப்போதுதான் எனக்குத் தெரிந்தது.

"என்ன இது? உட்கார உங்களுக்கு வேறு இடம் கிடைக்கவில்லையா?"

" உனக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறேன்."

" உண்மையாகவா ?"

" ஆமாம் ! சற்று நேரம் கடற்கரைக்குப் போய்விட்டு வருவோமா ?"

" கட்டாயம் போகலாம். நானே உங்களைக் கேட்க வேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறேன். இங்கே எனக்கும் பொழுதே போகவில்லை. இதோ அப்பாவிடம் சொல்லிவிட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு விடு விடென்று கீழே இறங்கிப் போனாள்.

நாங்கள் கடற்கரைக்குச் சென்று மணலில் உட்கார்ந்தோம். மணலின் சூடு இன்னும் ஆறவில்லை. ஆனால்,



'ஜிலுஜிலு'வென்று காற்று சுகமாக வீசியது. அந்தச் சூழ்நிலை என் மனம் அப்போது இருந்த நிலைமைக்குப் பொருத்தமாக இருந்தது. உள்ளம் இந்து பேசிய விதத்தால் கொதித்துக்கொண்டிருந்தது. வெளியே சுலோசனாவுடன் குளுமையாக பேச முயற்சித்துக் கொண்டிருந்தேன்.

மணலில் போய் உட்காரும் வரையில் என் மனம் முழுவதையும் சுலோசனாவிடம் திறந்து காட்டி ஆறுதல் பெறவேண்டும் என்றுதான் நினைத்துக்கொண்டிருந்தேன்.

என் மனம் அப்படி மறுகிக்கொண்டிருந்தது. சொன்னால் தான் நெஞ்சிலுள்ள துன்பம் குறையும் என்று தோன்றியது.

மணலில் போய் உட்கார்ந்ததும் என் அறிவு சற்றுத் தெளிவடைந்தது. ஜன்னலுக்கு வெளியே உள்ள மரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் வரை நமக்கு ஜன்னல் கம்பிகள் கண்களில் தென்படவே செய்யாது. ஆனால், பார்வை மிகச் சிறிதளவு உள் பக்கம் திருப்பினால் உடனே கம்பிகள் மட்டும்தான் தெரிகிறது. வெளியே உள்ள மரங்கள் மறைந்து போகின்றன. அந்த மாதிரி நான், இந்து பேசிய விதத்தையே எண்ணிக்கொண்டிருந்தேன். திடீரென்று அவளிடம் நான் வைத்திருக்கும் பரிசுத்தமான பிரேமை, அளவில்லாத அன்பு என் கண்முன் வந்து நின்றன. உடனே அவள்மீது எனக்கிருந்த கோபம் மறந்துபோய்விட்டது. சற்று நேரம் மறந்தேனே தவிர கோபம் முழுதும் மறைந்து விடவில்லை.

சுலோசனாவிடம் இந்துவைப் பற்றிச் சொல்ல எனக்கு மனம் வரவில்லை. நான் சொன்னேனானால் அவள் இந்துவைப் பற்றிக் குறைவாகப் பேசுவதை நான் கேட்டுச் சகித்துக்கொள்ளும்படி நேரிடும். ஏற்கனவே இந்துவைப் பிடிக்காதவளிடம் இன்னும் அவள் பொறுமை கொள்ளும்படியான விஷயத்தை எதற்காகச் சொல்வது? அதனால் உண்மையில் எனக்கு மனச் சாந்தி கிடைத்து விடப் போகிறதா? ஒரு நாளும் இல்லை. இந்த நெஞ்சம் இப்படியே குமுறிக்கொண்டுதான் இருக்கும். பூமியின் அடியில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் அக்கினிக் குழம்பு எரிமலை வழியாகப் பொங்கிச் சில சமயங்களில் வழியலாம். பூகம்பங்களின் மூலம் சில சமயம் தன் ஆத்திரத்தைக் காட்டலாம். ஆனால், அதன் உஷ்ணம்

?

என் ஆழ்ந்த மௌனத்தைக் கண்டு சுலோசனாவுக்குக் கோபம் வந்துவிட்டது. "இப்படி மௌனச் சாமியாராக உட்கார்ந்திருப்பதற்காகத்தான் இங்கே என்னை அழைத்து வந்தீர்களா ?" என்று கேட்டாள்.

"இல்லை, சுலோ! மனம் குழம்பிக் கிடக்கிறது. சில சமயங்களில் காரணமில்லாமல் மனம் குழம்பி வேதனைப் படுகிறதல்லவா ?"

"வேதனைக்கு என்ன காரணம்? அதைத்தான் சொல்லுங்களேன்."

"கட்டாயம் சொல்கிறேன், சுலோ! ஆனால், இன்று வேண்டாம். இன்னொரு நாள் சொல்கிறேன்" என்றேன்.

"உங்களுடைய வேதனை என்னவென்று தெரிந்தாலாவது ஆறுதல் கூறலாம். முகத்தைத் தூக்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள். பேசவும் மாட்டேன் என்கிறீர்கள். நான் என்ன செய்வதென்று எனக்குப் புரியவில்லை."

சுலோசனாவின் பேச்சு எனக்கு இதமாக இருந்தது. அவளுடைய ஆறுதலான வார்த்தைகளைக் கேட்டு நன்றி உணர்ச்சி உண்டாயிற்று.

"நீங்கள் இப்படிச் சொல்வதே எனக்கு ஆறுதலாக இருக்கிறது, சுலோசனா!" என்று கூறினேன்.

உண்மையாக அப்போது என் நெஞ்சத்தில் ஒரு பைத்தியக்காரத்தனமான எண்ணம்கூட உண்டாயிற்று. 'சுலோசனா இவ்வளவு படித்த பெண். இந்துமாதிரி அவ்வளவு அழகியாக இல்லாவிட்டாலும், அழகானவள் தான். இவளும்என்னை விரும்புகிறாள். பத்மநாபனும் அதற்கு ஆசைப்படுகிறார். இவளை மணந்துகொண்டால் என்ன ? இந்துவுக்குச் சரியான தண்டனையாக இருக்கும். ஆனால், அவள் அதைப் பொருட்படுத்தினாலல்லவா

தண்டனையாக இருக்கும்? அலட்சியம் செய்துவிட்டால்...' என் சிந்தனைகளின் போக்கு எனக்கே கொஞ்சமும் பிடிக்கவில்லை.

ஆனால், ஒன்று மட்டும் நிச்சயம். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு பெண் தன்னைக் காதலிக்கிறாள் என்று தெரியும்போது ஒரு வகைக் கர்வம் உண்டாகிறது. தனக்கு அந்தக் காதலில் விருப்பமே இல்லாவிட்டாலும் கூட, அந்தப்பெண் தன்னை நேசிக்கிறாள் என்ற எண்ணத்தினால் ஒரு பெருமிதம் ஏற்படுகிறது. எல்லாம் அகம் பாவத்தின் விசித்திரமான பசிக்கு ஆகாரம்தான்.

சுலோசனாவை மணந்துகொள்ள என்னால் முடியவே முடியாதென்று நன்றாகத் தெரியும். ஆயினும் அப்படி நினைப்பதில் ஒரு திருப்தி.

இந்து இத்தனை நாள் உட்கார்ந்திருந்த என் இதய சிம்மாசனத்தில், இன்னொருத்தியை ஏற்றி வைப்பது சாத்தியமா? அது என்னாலும் முடியாது; யாராலும் முடியாது. வீம்புக்காக வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம். ஆனால், சுலோசனாவுக்கு என் இதயத்தில் மட்டும் இடம் கொடுக்கவே முடியாது. அங்கே இந்துமதி தான் என்றும் இருப்பாள். அமரதாரா எப்படியாவது நாசமாகப் போகட்டும். இந்துமதி என்னை விட்டு எங்கேயும் போக முடியாது. அவளை என் மனத்திலிருந்து தப்பிச் செல்ல விடவேமாட்டேன்.

இந்த எண்ணங்களை நான் மறக்க முயற்சித்தேன். அதற்காகச் சுலோசனாவிடன் புத்தகங்களைப் பற்றியும், கதாசிரியர்களைப் பற்றியும் பேச ஆரம்பித்தேன். அவை அவளுக்கு ரொம்பப் பிடித்தமான விஷயமாகையால் உற்சாகமாக வரவேற்றாள்.

வெகு நேரம் பேசிய பிறகு வீட்டுக்குக் கிளம்பினோம். சுலோசனாவின் படிப்பும், புத்தி கூர்மையும், சாதுர்யமும்

எனக்குப் பல சமயங்களில் வியப்பு அளித்திருக்கின்றன. இன்று அவளுடைய பேச்சு உண்மையிலேயே இலக்கியச் சுவை சொட்டச் சொட்ட இருந்தது.

நான் சரித்திரம் படித்த மாணவன் அல்லவா? அவள் சரித்திர நாவல்களைப் பற்றிப் பேசியபோது கேள்விகள் கேட்டு மடக்கினேன். எல்லாவற்றுக்கும் சளைக்காமல் அவள் பதில் சொன்னாள். கிரேக்க நாட்டு அறிவாளியான ஸாக்ரடீஸிலிருந்து, சீனு தேசத்து மகானை கன்ப்யூஷஸ் வரையில் அனைவரையும் பற்றிப் பேசினோம்.

வீட்டுக்குள் நாங்கள் நுழைந்தபோது எதிரே ஒரு கார் புறப்பட்டுச் சென்றது. அதில் உட்கார்ந்திருந்த பெண் இந்துமதியோ என்று சந்தேகமாக இருந்தது. நன்றாக இருள் சூழும் வேளை. ஆகவே, நிச்சயமாகத் தெரியவில்லை. பத்மநாபனிடம், வந்து விட்டுப் போவது யாரென்று கேட்டேன். யாரோ வழக்கு சம்பந்தமாக வந்திருந்தார்கள் என்று மட்டும் கூறினார்.

நானும், சுலோசனாவும் மாடிக்குச் சென்றோம். சுலோசனா என்னைப் பார்த்து, "நீங்கள் என் அறைக்கு வந்ததே இல்லையே. உள்ளே வந்தால் உங்களுக்கு ஒரு அற்புதமான புத்தகம் தருகிறேன்" என்றாள்.

எனக்கு அவளுடைய அறைக்கு வரச் செய்ய அவள் கையாண்ட தானோபாயம் எனக்கு வேடிக்கையாக இருந்தது. சிரித்துக்கொண்டே உள்ளே சென்றேன்.

அறை மிக அழகாக இருந்தது. "நீங்கள்தான் கல்கத்தாவில் இருக்கிறீர்களே? இங்கே இந்த அறையை எப்படி இவ்வளவு நன்றாக வைத்துக் கொள்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"என்னால் எதையும் அரைகுறையாகச் செய்து கொள்ள முடியாது, மிஸ்டர் ராய்! அப்படி நேரும் போதெல்லாம் சொல்ல முடியாத சங்கடம் ஏற்படுகிறது" என்றாள் சுலோ.

" உங்களைப் பார்த்தால் சங்கடப்படக் கூடியவராகவே தோன்றவில்லையே ?"

" எரிமலையின் சிகரத்தின்மீது பனி உறைந்து வெண்மையாக மூடிக் கொண்டிருக்கும் விஷயம் உங்களுக்குத் தெரியாதா ?"

எரிமலை ! என் உள்ளத்திலிருப்பதை இவள் எப்படிக் கண்டுபிடித்து விடுகிருள் ? பொல்லாத பெண் பேச்சை மாற்ற விரும்பினேன்.

" அதோ உங்கள் அறையில் இன்னொரு கதவு இருக்கிறதே, அதற்குப் பக்கத்தில் என்ன இருக்கிறது ?" என்று கேட்டு வைத்தேன்.

" அதைத் திறந்தால் உங்கள் அறை. இந்துமதி இங்கே இருந்தபோது இரவில் அந்தக் கதவு வழியாகத் தான் இந்த அறைக்கு வருவாள். நாங்கள் இரவெல்லாம் பேசிக் கொண்டிருப்போம். அப்படிப்பட்ட பெண் இப்போது எப்படியாகி விட்டாள் ?"

நான் திக்பிரமை அடைந்து நின்றேன். அவர்கள் வீட்டில் முன்பு நான் வந்து தங்கிய போதும், அதே அறையில்தான் தங்கினேன். இந்துவும் அங்கேதான் இருந்தாளா ? என்ன ஆச்சரியம் ?

" அவள் எப்படி மாறிப்போய் விட்டாள் என்கிறீர்கள்? சினிமாவில் நடிப்பதைப் பற்றியா ?"

" அது மட்டுமில்லை. அவள் ரொம்பக் கர்வக்காரியாகப் போய் விட்டாளென்று எல்லோரும் சொல்லுகிருர்கள். யாரையும் பார்க்க மாட்டேனென்கிருளாம். வீட்டுக்குள்ளேயே இருந்துகொண்டு இல்லையென்று சொல்லச் சொல்கிருளாம். நான் சாதாரணமாக மற்றவர்கள் சொல்வதை நம்புவதில்லை. இது ஒருவேளை பொய்யாகவும் இருக்கலாம். ஆனால் அப்படி ஒரு பத்திரிகையில் எழுதியிருந்தது."

என் நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளித்தது. 'ஆமாம்! உண்மைதான்' என்று சொல்ல எண்ணினேன். ஆனால்! சொல்லவில்லை. இந்துவைப் பற்றிப் பேசவே என்னுடைய நாக்கு மறுத்தது.

* * *

சுலோசனாவின் அறையிலிருந்து என் அறைக்குச் சென்றேன். செல்லும்போதே நெஞ்சை வேதனை அழுத்தியது. என் கட்டிலின்மீது உட்கார்ந்தவுடன், இந்துவும் இதே கட்டிலின் மீதுதான் படுத்துறங்கியிருப்பாள் என்ற நினைப்பு உண்டாயிற்று. அந்தப் படுக்கையில் பன்னீர் தெளித்திருப்பது போலவும், ரோஜா இதழ்களைத் தூவியிருப்பது போலவும் எனக்குத் தோன்றியது. படுத்துக் கொண்டேன். ஐயோ! அதில் யாரோ நெருஞ்சி முட்களைப் பரப்பியிருக்கிறார்கள்!



இந்து! இந்து!! நீ இப்படிச் செய்யலாமா? உன்னை நான் இங்கிலாந்தில் குண்டு வீச்சுக்களுக்கு மத்தியில்கூட மறக்கவில்லையே. உனக்காகவே என் உயிரைக் காப்பாற்றிக் கொண்டேனே. உன்னைத் தேடிக் கண்டு பிடிக்கத்தான் எவ்வளவு பிரயத்தனம் செய்தேன். அத்தனைக்கும் பிறகு உன்னைப் பார்க்க வந்தபொழுது நீ என்மீது அக்னித் திராவகத்தையல்லவா இரக்கமில்லாமல் கொட்டி விட்டாய்?

*"மாலைப் பொழுதிலொரு மேடை மிசையே*
*வானையும் கடலையும் நோக்கி யிருந்தேன்"*

என்று யாரோ பாடுவது காதில் விழுந்தது. தூக்கிவாரிப் போட்டுக்கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். ஒருவேளை

இந்து தன் உயிரை இந்த அறையில் விட்டு விட்டுப் போயிருக்கிருளோ ? அதுதான் பாடுகிறதோ ?

எனக்குச் சீன தேசத்துப் பிரபல நாவலாசிரியரான " லின் யூ டாங் " எழுதிய கதை நினைவுக்கு வந்தது.

' ஒரு காதலன் தன் காதலியைப் பிரிந்து செல்கிருன். கப்பல் புறப்படும் சமயத்தில் அவளும் ஓடி வந்து சேருகிருள். வெகு நாட்கள் சென்ற பின்னர் இருவரும் அதே ஊருக்குத் திரும்பி வருகிருர்கள். மனைவியை ஒரு இடத்தில் விட்டு விட்டு அவளுடைய தாய் தந்தையரை அவன் பார்க்கச் செல்கிருன். அவர்கள் அவனைப் பார்த்ததும் கண்ணீருடன் ' எங்கள் பெண் நீ சென்ற தினத்திலிருந்து மயக்கமாகக் கிடக்கிருள். சுய நினைவே இல்லை' என்கிருர்கள். அதைக் கேட்டு இவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

கடைசியில் அவள் இருக்கும் அறைக்குச் செல்கிருன். உண்மையில் அவன் மனைவி அங்கே மயக்கத்தில் ஆழ்ந்திருக்கிருள். இவன் அருகில் சென்றதும் அவளுக்கு உணர்வு வருகிறது. அவன் தன் மனைவியை விட்டு வந்த இடத்தில் போய்ப் பார்க்கிருன். அவளைக் காணவில்லை. ஆகவே, தன் காதலியின் ஆத்மா மாத்திரம் தன்னுடன் வந்திருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்கிருன்.'

இந்தக் கதை ஞாபகம் வரவே எனக்கு உடல் சிலிர்த்தது. ' சே ! என்னவெல்லாம் தோன்றுகிறது. காதலின் வேகம் சுய புத்தியுள்ளவனைக்கூடப் பைத்தியமாக்கிவிடும் போலிருக்கிறது. பக்கத்து அறையில் சுலோசனு அல்லவா பாடிக்கொண்டிருக்கிருள் ?'

" நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன் " என்று பாடினுள் சுலோ. அந்த ஒரு வரி என்ன காட்சிகளையெல்லாம் கண் முன் கொண்டு வந்து நிறுத்தியது. பாதிரித் தோட்டம், புன்னை மரம், அதன் வெண் முத்துக்

களைப் போன்ற புஷ்பங்கள், இந்து நின்ற காட்சி, அவள் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தது எல்லாம் படமாக வந்து நின்றன. இந்துவை என் நெஞ்சிலிருந்து பிரிக்க முடியுமா ? முடியவே முடியாது.



சுலோசனு என் அறைக் கதவை இலேசாகத் தள்ளித் திறந்து, "சாப்பிட வருகிறீர்களா ?" என்று இனிய குரலில் கேட்டாள். நான் முதலில் மறுத்தேன். பிறகு அவள் வற்புறுத்தியதற்காகச் சாப்பிடப் போனேன்.

# 12. நெருஞ்சி முட்கள்

சுலோசனு அன்று என்னை எவ்வளவோ பிரியத்துடனும், அன்புடனும்தான் உணவருந்த அழைத்துச் சென்ருள். இந்துவைப் பற்றி கவலையும் துயரமும் சுலோசனுவின் அளவு கடந்த அன்பை வேம்பாகக் கசக்கச் செய்தன. அவளோடு வேண்டா வெறுப்போடு சாப்பிடச் சென்றேன்.

சாப்பிடத் தொடங்கியதும், "சுலோசனு! சற்று முன் பாடிக்கொண்டிருந்தீர்களே, அதை யார் உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள் ? மிக இனிமையாக இருந்தது" என்றேன்.

"இந்துமதியைப் பற்றிச் சொன்னேனல்லவா ? அவள் பாடுவாள். அவளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்த

படியால் அந்தப் பாட்டையும் என்னை அறியாமல் பாடி யிருக்கிறேன் " என்றாள் சுலோசனா.

எங்களுக்குப் பரிமாறிக்கொண்டிருந்த சமையல்காரன் முத்து, " அம்மா! இன்று மாலை நம் வீட்டுக்கு யார் வந்தார்கள் தெரியுமா ?" என்றான்.

" யார் ?" என்று கேட்டாள் சுலோ.

" முன்னே இங்கே இருந்த இந்துமதி வந்தார்கள். நம்ம ஐயாவின் அறைக்குப் போனார்கள். நான் உள்ளே போய்விட்டேன். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் காப்பி எடுத்துக்கொண்டு ஆபீஸ் அறைக்குப் போனேன். அதற்குள் போய்விட்டார்கள் " என்றான்.

சுலோசனா திகைத்து உட்கார்ந்திருந்தாள். நானும் இந்து எதற்காக வந்திருப்பாள் என்று யோசித்தேன்.

சுலோசனா பேசவேயில்லை.

" என்ன, நீங்கள்கூட இப்படி மெய்மறந்து போக ஆரம்பித்து விட்டீர்களே ?" என்றேன் கேலியாக.

சிந்தனையிலிருந்து விழித்துக்கொண்ட சுலோசனா, " எனக்கு அவளைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருக்கிறது. அவள் எதற்காக அப்பாவைப் பார்க்க வந்திருக்கக் கூடுமென்று புரியவில்லை " என்றாள்.

" ரமேஷ் கூறியதை மறந்துவிட வேண்டாம், சுலோசனா! என்ன காரணத்தாலோ தந்தைக்கு அவளை அடியோடு பிடிக்கவில்லை என்பது நன்றாகத் தெரிகிறது. வீணாக சச்சரவுகளுக்கு இடம் கொடுக்க வேண்டாமென்று எனக்குத் தோன்றுகிறது. அந்தப் பெண் எங்கே வந்தாள் என்பதை அவர் ஏன் கூறாமல் மறைக்க வேண்டும் ? அதிலிருந்தே அவளை அவருக்குப் பிடிக்க வில்லை என்பது நிதர்சனமாகத் தெரியவில்லையா ?"

" அவருக்கு இந்துவைப் பிடிக்காமல் இருப்பதில் என்ன அதிசயம் இருக்கிறது ?" என்று கூறி நிறுத்தினாள்

சுலோசனு. ஏதோ சொல்ல வந்ததை அழுத்திப் பிடித்து அவர் நிறுத்திய மாதிரி எனக்குத் தோன்றியது.

'பாவம்! எவ்வளவு நல்ல குணம்? இந்துவைப் பற்றி ஏதும் கெடுதலாகச் சொல்லச் சுலோவுக்கு இஷ்ட மில்லை' என்று எண்ணினேன்.

நான் சுலோசனுவிடம் இந்துவைப் போய்ப் பார்க்க வேண்டாமென்று கூறியபோது உண்மையாகவே என் மனத்தில் பட்டதைத்தான் கூறினேன். சுலோசனு இந்துவைப் பார்க்கப் போனுளானுல் வீணுகச் சச்சரவுகள் ஏற்படுமெனக் கருதினேன்.

படுக்கையில் போய்ப் படுத்த பிறகு நிதானமாக யோசித்தேன். 'எதற்காக இந்து பத்மநாபனைப் பார்க்க வந்திருப்பாள்? நான் அவளிடம் 'பத்மநாபன் கூறிய தெல்லாம் உண்மை' என்று கூறினேன் அல்லவா? ஆகவே அவளுக்கு ரொம்ப ஆத்திரம் உண்டாகியிருக்கும். தன்னைப் பற்றி அவர் ஏதோ அவதூருகப் பேசியிருக்கிருர் என்று ஊகித்திருப்பாள். அதைக் குறித்து அவரைச் சண்டை பிடிக்க வந்திருப்பாள்.

இந்துமதி பத்மநாபனிடம் வந்து சண்டை பிடிப் பாளா? அவளால் அது முடியுமா?

ஏன் முடியாது? இன்று என்னிடம் அவள் பேசிய தோரணையிலிருந்தே எவ்வளவு தூரம் அவள் துணிந்து விட்டாள் என்று தெரியவில்லையா? பழைய இந்துவாக இருந்தால் அப்படிச் செய்ய முடியுமா? கட்டாயம் பத்ம நாபனைச் சண்டை பிடிக்கத்தான் வந்திருப்பாள். பணம் நிறைய இருக்கும். சிநேகிதர்களும் நிறைய இருப் பார்கள். தைரியமும் வந்துவிட்டது. அதுதான் பெண் களுக்கு அதிக சுதந்திரம் கொடுக்கக்கூடாது என்பது. கொஞ்சம் சுதந்திரம் கிடைத்துவிட்டால் தலைகாலே புரிவதில்லை. இருந்தாலும் இந்துமதி இப்படி மாறிப் போவாளென்று நினைத்திருக்க முடியுமா?'

"பார்த்தாகி விட்டதல்லவா? போய் வாருங்கள்' என்று விரட்டிவிட்டாளே. சே! என்ன அவமானம்?

பத்மநாபனை இந்து பார்க்க வந்த பிறகு எனக்கு இன்னும் வெறுப்பு ஏற்பட்டது. உண்மையாக நான் கோபம் இல்லாமல் யோசித்துப் பார்த்திருந்தேனுல் அவள் பத்மநாபனைப் பார்த்துச் சண்டை பிடிக்க வந்ததி லிருந்து அவளுக்கு என்மீது இருந்த அன்பு மாறவில்லை என்பதை ஊகித்திருக்கலாம்.

என்னிடம் பத்மநாபன் ஏதோ அவதூறு சொல்லி விட்டாரென்பதனுல்தானே அவளுக்கு ஆத்திரம் உண்டாகியிருக்க வேண்டும்? என்னிடம் அவளுக்கு அன்பில்லை என்ருல் அவள் நான் சொல்லியதை ஏன் பொருட்படுத்தியிருக்க வேண்டும்?

இதை அன்று என்னுல் நினைத்துப் பார்க்கவே முடிய வில்லை. கோபம் என்னும் பொருள் என் அறிவையே மூடி மறைத்துவிட்டது.

இந்துவின் பணம் தன்னிடம் இருந்ததாகப் பத்ம நாபன் சொன்னுரல்லவா? அது எனக்கு ஞாபகம் வந்தது. அதைத் திரும்பக் கேட்பதற்கு வந்திருப்பாள். பணம் சேரச் சேர ஆசை அதிகமாகத்தானே ஆகும்?

கடைசியாக எனக்கு என்மீதே அளவில்லாத கோபம் வந்தது. இப்படியெல்லாம் நெஞ்சு அலைகிறதே என்று அதன்மீதும் எனக்குக் கோபம் வந்தது.

ஒரே பெண் பதினைந்து வயதில் ஒருவனைப் பார்த்து விரும்பினுளென்ருல் அப்படியே இருக்க வேண்டுமென்று கட்டாயமா? அப்போது அவள் சிறுமிதானே. உலகமே தெரியாத வயதல்லவா அது? பெரியவளாகும்போது எண்ணங்கள் மாறியிருக்கலாம். இரண்டு மாதங்கள் பழகிய எனக்கு அவள் அடிமையாக இருக்க வேண்டு மென்று எதிர்பார்ப்பது என்னுடைய அறியாமையல்லவா என்று தோன்றியது.

இந்த வாதத்தை மனம் ஒப்பவில்லை. இப்படி யெல்லாம் குழம்பிக் கொந்தளித்த மனத்துடன் அன்றிரவு தூங்க முயற்சி செய்தேன். இயற்கை அன்னை நல்ல வேளையாக இத்தத் தூக்கம் என்னும் வரத்தை அளித் திருக்கிறாள். அது இல்லாவிட்டால் சிந்தனை செய்தே மனிதனுடைய அறிவு குழம்பிப் போய்விடும்.

காலையில் எழுந்த உடனே நான் பத்மநாபனுடைய அறைக்குச் சென்று, " எனக்கு லீவு முடிந்துவிட்டது. நான் கல்கத்தாவுக்குப் புறப்பட வேண்டும் " என்று கூறினேன்.

" எனக்கும் இங்கே வந்த காரியம் முடிந்து விட்டது. இன்றிரவு சில நண்பர்களை நம் வீட்டில் சாப்பிடக் கூப்பிட் டிருக்கிறேன். நாளையே புறப்பட்டு விடலாம் " என்றார் பத்மநாபன்.

அன்று முழுவதும் நான் வீட்டை விட்டே அசைய வில்லை. உடல் சோர்ந்து, உள்ளம் சோர்ந்து, இதயம் சோர்ந்து படுக்கையிலேயே கிடந்தேன். சுலோசனா என்னை வந்து பார்த்தபோது ' தலைவலி ' என்று சொல்லி வைத்தேன்.

விருந்தினர்களைக் கவனிக்கவேண்டிய கடமையும், விருந்துக்கு ஏற்பாடு செய்யவேண்டிய பொறுப்பும் அவளுடையதாக இருந்தபடியால் அவள் என் அறைக்கு அதிகமாக வரவில்லை. அது எனக்கு ரொம்பச் சௌகரிய மாக இருந்தது.

அவள் இரண்டு தடவை காப்பி எடுத்துக்கொண்டு மேலே வந்தபோது, " என்னால் உங்களைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. மன்னித்துக் கொள்ளுங்கள் " என்று வருத்தத்துடன் கூறிவிட்டுச் சென்றாள்.

இந்துவின் அறையில் படுத்துக்கொண்டு இருந்த படியால் அவளுடைய நினைவு மிக அதிகமாகத் தோன்றிக்

கொண்டிருந்தது. அந்த மூலையில் தன் பெட்டியை வைத்திருப்பாள். இந்தப் பக்கத்தில் உள்ள 'கோட் ஸ்டாண்டி'ல் தன் சேலைகளைப் போட்டு வைத்திருப்பாள். ஜன்னலோரத்தில் நாற்காலியில் உட்கார்ந்து படித் திருப்பாள். இதே படுக்கையில் படுத்துக் கொண்டு என்னைப் பற்றிச் சிந்தனை செய்து கொண்டு இருந் திருப்பாள். அப்போது அவள் கபடமற்ற குழந்தை உள்ள முடையவள்தானே. பாதிரித் தோட்டத்தில் நான் அவளுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்தது ஞாபகம் வந்திருக்கும். அதை வாய் விட்டுப் பாடியிருப்பாள். சுலோசனாவின் அறையில் அது கேட்டிருக்கும். உடனே அவள் இந்த அறைக்கு வந்து இந்துவை நன்றாகப் பாடச் சொல்லிக் கேட்டிருப்பாள். அப்போதுதான், "மாலைப் பொழுதிலொரு" என்ற பாட்டைச் சுலோசனாவுக்குப் பாடிக் காட்டியிருப்பாள்.

அந்த இந்துமதி அப்படியே இருந்திருக்கக் கூடாதா? அவள் ஏன் அமரதாராவாக மாறவேண்டும்? என் வானத்தில் உல்லாச பவனி வரும் பூரணச் சந்திரனை யாரோ பறித்துக் கொண்டு விட்டார்களே! என் இதயம் இருண்டு விட்டதே!

எழில் மிகுந்த தண்மதி எதற்காக மின்னும் நட்சத் திரமாக வேண்டும்? அவள் அப்படியே இருந்தி கூடாதா என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஒரு பக்கத்துச் சுவரில் சற்று உயரத்தில் இரண்டு ஆணிகள் அடிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தேன்.

இங்கே யாருடைய படத்தை இந்து மாட்டி வைத திருப்பாள்? என்னுடைய படம் அவளிடம் அதனால் அவளுடைய அன்னையின் பட மாட்டி வைத்திருப்பாள். இப்படி என் எண்ணங்கள் முடிவேயில்லாமல் வளர்ந்து கொண்டே இருந்தன.

சுமார் ஆறு மணிக்குச் சுலோசனு என் அறைக்கு மறுபடியும் வந்தாள்.

" தலைவலி எப்படி இருக்கிறது மிஸ்டர் ராய் ?" என்று கேட்டாள்.

" தேவலை !"

" அப்படியானுல் ஒரு வேண்டுகோள். இன்றிரவு விருந்தில் நீங்கள் கலந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கும்."



" எனக்கு அவ்வளவு அவசிய மாகப் படவில்லை, சுலோ ! யாரோ உங்களுக்குத் தெரிந்தவர்கள்தானே வரப்போகிருர்கள். நான் கலந்து கொள்ளவில்லை."

சுலோவின் முகம் வாடியது. " அப்பா கூடச் சொன்னுர். உங்களைத் தயாராகச் சொல்லும்படி என்னிடம் கூறினுர். தயவு செய்து எனக்காக வரக்கூடாதா ? வேறு எங்கும் போகவில்லையே. நமது வீட்டில்தானே ?" என்ருள்.

கடைசியில் அரை மனத்துடன் தயாராவதாகக் கூறினேன்.

# 13. சுலோசனுவின் வருத்தம்

சுலோசனு அன்று என்னையும் விடச் சோபிதமாக அலங்காரம் செய்துகொண்டிருந்தாள். தலையை அழகாகக் கொண்டை போட்டுக்கொண்டு அதில் நல்ல மணமான மல்லிகைப் பூவைச் சக்கரம்போல் சுற்றியிருந்தாள். ஆகாய நீல வண்ணமுடைய காசிப்பட்டு அவளை அலங்

கரித்தது. அதில் நட்சத்திரங்களைப்போல் 'பளிச் பளிச்' என்று மின்னிய சரிகைப் பூவேலை மிக அழகாக இருந்தது.

ஆனால், அந்த நட்சத்திரங்கள் கூட எனக்கு அமர தாராவையே நினைவூட்டின. தோட்டத்தில் உட்கார்ந்து விருந்தினர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். வானத்தில் வைரங்களை வாரி இறைத்த மாதிரி ஜொலித்த விண்மீன்களைப் பார்த்தபோது அவள் நினைவுதான் வந்தது. இந்த நட்சத்திரங்களைப்போல் அவளும் எட்டாத தூரத்துக்குப் போய் விட்டாளே. இந்து! இந்து! யுகம், யுகமாய்க் காத்திருப்பேன் என்றாயே...........உன் வாக்குறுதி என்னவாயிற்று?.........

யாரோ இரண்டு பேர் வந்தார்கள். என் எண்ண ஓட்டத்துக்குத் தடை ஏற்பட்டது. அவர்களைப் பத்மநாபன் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

சற்றைக்கெல்லாம் பேராசிரியர் கோதண்டராமன் வந்தார். எனக்கு அவரைப் பார்த்ததும் ஒரே சந்தோஷ மாக இருந்தது. கைகளைக் கூப்பி நமஸ்கரித்துக்கொண்டே "உங்களை இன்று சந்திப்பேன் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை" என்றேன்.

அவரும் சந்தோஷமாக அன்போடு, "நீ இப்போது மாஜிஸ்ட்ரேட்டாக இருக்கிறாயாமே? ரொம்ப மகிழ்ச்சி! சீமை சென்றதனால்தானே இப்படி இருக்க முடிகிறது? என்னுடன் சரித்திர ஆராய்ச்சி செய்து கொண்டிருந் திருந்தால் அதிகப்பட்சம் ஒரு கல்லூரி ஆசிரியராகத்தானே நீ ஆகியிருக்க முடியும்?" என்று கூறினார். அவருடைய புகழ் மொழிகளைக் கேட்டு எனக்கு எப்படியோ இருந்தது.

நான் அவரிடம் என்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் பத்மநாபன் என் தோளைத் தொட்டு, "மிஸ்டர், ராய்! உங்களுக்கு இன்றைய

பிரதம விருந்தாளியை அறிமுகம் செய்து வைக்க வேண்டாமா ?" என்று கூறினர்.

நான் எழுந்து கை கூப்பினேன்.

"இவர்தான் ஈசுவர மூர்த்தி. என்னுடைய நண்பர். இவருக்குத்தான் 'ராவ் பகதூர்' பட்டம் இப்போது கிடைத்திருக்கிறது" என்ருர் பத்மநாபன்.

ஆயிரம் தேள்கள் ஒருவனைக் கொட்டி விட்டால் அவனுக்கு எந்தவிதமான உணர்ச்சி ஏற்படும் என்று யாரும் கூறமுடியாது. அன்று நான் அடைந்த உணர்ச்சியை வேண்டுமானல் அதற்கு ஒப்பிடலாம். கொஞ்சங்கூட எதிர்பார்க்காமல் ஈசுவர மூர்த்தியை சந்தித்ததும் எனக்குப் பிரமையாகப் போயிற்று.

என் கையை அவர் பிடித்துக் குலுக்கிய போது நான் மரத்தைப் போல் உணர்ச்சியற்று நின்று விட்டேன்.

பத்மநாபன் அதற்குள் பேராசிரியர் கோதண்டராமனை ஈசுவர மூர்த்திக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள் இருவரும் சில உபசார வார்த்தைகள் பரிமாறிக் கொண்டார்கள். அதற்குள் எனக்கும் புத்தி சற்று வேலை செய்ய ஆரம்பித்தது.

ஈசுவரமூர்த்தி சற்று அப்பால் சென்றதும் அவரை நன்ருகக் கவனித்தேன். நாங்கள் தோட்டத்தில் உட்கார்ந்திருந்த படியால் அதிக வெளிச்சம் இல்லை. அவர் போய் உட்கார்ந்த இடத்தில் இலேசாக வெளிச்சம் பரவியிருந்தது.

நான் ஈசுவரமூர்த்தியைப் பார்த்து எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. ஆனல், அவருடைய தோற்றம் மாத்திரம் சிறிதும் மாறவில்லை. அவருக்குத் தலைகூட நரைக்கவில்லை. அதே மாதிரி அங்கவஸ்திரம், ஜிப்பா, ஜரிகை வேஷ்டி, கண்ணுடி அணிந்திருந்தார். எப்படி இவர் சிறிதும் மாருமலிருக்கிருர் என்று வியப்பு உண்டாயிற்று.

நான் படித்த ஆங்கில நாவல் ஒன்று ஞாபகம் வந்தது. டோரியன்கிரே என்ற அழகான இளைஞனின் படத்தை ஒரு சித்திரக்காரன் வரைகிறன். அந்த இளைஞன் செய்யும் பாபங்கள் எல்லாம் அந்தச் சித்திரத்தில் பதிகின்றன. இவன் சிறிதும் மாருமல், வயதே ஆகாமல் இளைஞனுகவே இருக்கிறன். இந்த ஈசுவரமூர்த்தியின் விஷயத்திலும் அப்படி ஏதோ ஒரு மர்மம் இருக்க வேண்டும்.

என்னை ஒரு வேளை அடையாளம் கண்டு பிடித்திருப் பாரோ என்று நினைத்தேன். இருக்கவே இருக்காது. அவருக்கு எப்படி என்னைத் தெரியும்? நான் சிறு பையனுக இருந்த போது பார்த்தது. இப்போது அவரால் அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. மேலும் கந்தசாமியின் பிள்ளை 'மாஜிஸ்டிரேட்' ஆக இருப்பானென்று அவர் கனவிலும் கருத முடியாதல்லவா ?

கடவுளே ! இவர்களுடைய சகவாசத்தில் மறுபடியும் நான் ஏன் வந்து மாட்டிக் கொண்டேன் ? பத்மநாபன் இவரைத் தம்முடைய ஆப்த நண்பர் என்று கூறினுரே. இவருக்கு எதற்காக இந்த மனிதரிடம் இவ்வளவு சிநேகம் ?

பத்மநாபனுக்கு ஈசுவரமூர்த்தியின் நடவடிக்கைகள் தெரிந்திருக்காது. சமூகத்தில் பதவியும், பணமும் உள்ள வர்களை எல்லாம் தம்முடைய நண்பர் என்று சொல்லிக் கொள்வதில் அவருக்குப் பிரியம் போலும் ! அதனுல் இவருடனும் சிநேகமாக இருக்கிறுர் போல இருக்கிறது என்று நினைத்தேன்.

அன்று எனக்கு உணவே பிடிக்கவில்லை. சுலோசனு என்னைப் பார்த்து, "ஏன் நீங்கள் சரியாகச் சாப்பிட வில்லை ?" என்று கேட்டாள்.

நான் நெற்றியைத் தொட்டுக் காட்டினேன். பிறகு பேசாமலிருந்து விட்டாள்.

சாப்பாடு ஆன பிறகு வெகு நேரம்வரை ஈசுவர மூர்த்தியும் மற்றவர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள். எனக்கு அங்கே உட்கார்ந்திருக்கவே சிறிதும் பிடிக்கவில்லை.

சுலோசனு தன் சிநேகிதிகளுடன் ஒரு பக்கத்தில் 'சளசள' வென்று பேசிக் கொண்டிருந்தாள்.

யாரோ சினிமாப் படங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். வந்திருந்தவர்களில் ஒரு சினிமா டைரக்டர் இருந்தார். அவர் தாம் சமீபத்தில் எடுத்த படத்தைப் பற்றிக் கூறினர். பிறகு, " நான் வெகு சீக்கிரம் இன்னொரு படம் எடுக்கப் போகிறேன். அதில் அமரதாராவை நடிக்கும்படி கேட்டிருக்கிறேன் " என்ருர்.

" அவள்தான் எந்தப் படத்திலும் நடிக்க இலேசில் சம்மதிப்பதில்லையாமே ? அவளை ஏன் கேட்கிறீர்கள் ?"

" அவள் ஒரு சிறந்த நடிகை. அதனுல்தான் " என்ருர் டைரக்டர்.

" அதே காரணத்திஞல்தான் அவ்வளவு கர்வம் அவளுக்கு உண்டாகியிருக்கிறது."

" இல்லை ஸார் ! அவள் ரொம்ப நல்லவள்தானும். கூட ஒரு மனிதன் இருக்கிருன், ராஜாராம் என்று. அவன்தான் இல்லாத ஆர்பாட்டமெல்லாம் செய்து கொண்டு வருகிருனும்."

" அவன் யார் ?"

" யாரென்று யாருக்குத் தெரியும் ? ஒன்றுமில்லாத மடையன்களெல்லாம் இத்தமாதிரி யாரையாவது பிடித்துக் கொண்டு, அவர்களையும் உறிஞ்சிக் கொண்டு மற்றவர்களையும் அதிகாரம் செய்கிருர்கள். இவர்களுக்கு ' நாய்க் குடை ' என்று பெயர் வைக்கலாம்."

அதற்குள் ஒரு செந்தமிழ்ச் செல்வர், " நாய்க் குடைக்குப் ' புல்லுருவி ' என்பதுதான் சரியான தமிழ்ப் பெயர் " என்ருர்.

"இங்கே யாருக்குச் சரியான பெயர் வேண்டும்? விட்டுத் தள்ளுங்கள்!"

"ஆமாம்! அந்த அமரதாராவுக்கு என்ன வயது இருக்கும்?"

"சின்னப் பெண்தான் ஸார், இருபது வயதுதான் இருக்கும்."

"ஒரு நாளுமிருக்காது. இருபது வயதுப் பெண் இவ்வளவு நன்றாக நடித்துப் பெயர் வாங்கிவிட முடியு மாக்கும்? குறைந்த பட்சம் முப்பது வயதாவது இருக்கும். அவர்கள் அப்படித்தான் என்றும் பதினாறு வயதென்று சொல்லுவார்கள்."

உண்மையில் இந்தப் பேச்சுக்களைக் கேட்டபோது அவர்களை யெல்லாம் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விடவேண்டு மென்று எனக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

பேராசிரியர் கோதண்டராமனாலும் இதைத் தாங்க முடியவில்லை. என்னைப் பார்த்துப் புன்னகையுடன், "இந்தக் கோஷ்டியில் எனக்கு இடமில்லை. நான் கிளம்பு கிறேன். நீ ஒருநாள் வீட்டுக்கு வா" என்று கூறிவிட்டு எழுந்தார்.

பிறகு ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

எனக்கு ஒரு வேளை பத்மநாபனே அமரதாராவின் பேச்சைக் கிளப்பி விட்டிருக்கலாம் என்று தோன்றியது. எனக்கு அவளைப் பிடிக்காமல் போக வேண்டு மென்றே அவர் இப்படியெல்லாம் சூழ்ச்சி செய்கிறாரோ என்றுகூட எண்ணினேன்.

பிறகு, 'அப்படி இருக்காது. இந்துமதிதான் அமரதாரா என்பது எனக்குத் தெரியும் என்று அவர் அறிந்திருக்க வழியே இல்லை. தற்செயலாக எழுந்த

பேச்சாகவே இருக்கலாம். நானுக ஏன் இவ்வாறு கற்பனை செய்து கொள்ள வேண்டும் ?' என்று சமாதானம் செய்து கொண்டேன்.



சுலோசனு எல்லோரும் விடை பெற்றுச் சென்ற பிறகு, வாசலில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தாள். நான் உள்ளே போகக் காலடி எடுத்து வைத்தேன். "மிஸ்டர் ராய் ! ஏன் இப்படி உள்ளே ஓடிக்கொண்டே இருக் கிறீர்கள் ? இங்கே வந்து சற்று உட் காருங்களேன். நல்ல காற்று வீசுகிறது. தோட்டம் இந்த நிலா வெளிச்சத்தில் என்ன அற்புத அழகோடு மிளிர்கிறது பாருங்கள். நீங்கள் தான் பிரமாத மான ரஸிகராயிற்றே. சற்று நேரத்துக்குப் பின் உள்ளே போகலாம்" என்ருள்.

எனக்குச் சுலோசனு மீது கோபம் வந்தது. அவள் வரச்சொல்லி வற்புறுத்தி யிருக்கா விட்டால் இந்தச் சகிக்க முடியாத பேச்சுக்களை யெல்லாம் கேட்டிருக்க வேண்டா மல்லவா ?

எனக்கு அதைப் பற்றிச் சூடாக இரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டும் போலிருந்தது. "என்ன இருந்தாலும் சுலோசனு இன்று இங்கே பேசியவர்களின் பேச்சை என்னுல் கேட்கவே முடியவில்லை. இவர்களெல்லாம் நாகரிகம் என்றுல் 'ஸில்க்' சட்டையிலும் விலையுயர்ந்த 'ஸெண்டி'லும்தான் இருக்கிறதென்று நினைத்துக் கொண்டிருக்கிருர்கள் போலிருக்கிறது. உள்ளம் முதிர்ந்து பண்படுவதல்லவா நாகரிகம் ? மகாமோசம்" என்றேன்.

சுலோசனு சோகமாக முகத்தை வைத்துக் கொண்டு "எனக்குந்தான் பிடிக்கவில்லை, மிஸ்டர் ராய் ! ஆனுல் நான் என்ன செய்வது ? அப்பாவுக்காகப் பழகித்தான் ஆகவேண்டி யிருக்கிறது" என்ருள்.

"இருந்தாலும் ஒரு பெண்ணைப் பற்றி இவர்கள் இங்கே இத்தனை விமர்சனம் செய்திருக்கக் கூடாது. அவளைப் பற்றி அவர்களுக்கு எத்தனையோ அபிப்பிராயம் இருக்கலாம். இப்படியா அதைப் பற்றிப் பேசிச் சிரிப்பது. ரொம்ப வெட்கக் கேடான விஷயம். நீங்கள் என்னை இங்கே இருக்கச் சொல்லி வற்புறுத்தியிருக்க வேண்டாம்."

சுலோசனாவுக்கும் சற்று கோபம் வந்து விட்டது. "அப்படி உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் போய் விடுவதுதானே ? எனக்கு நீங்கள் இருக்கவேண்டுமென்று தோன்றியது. ஆகையால் சொன்னேன். உங்களை நான் ஒன்றும் கட்டாயப் படுத்த வில்லையே. என் தலைவிதி நான் இருக்கவேண்டும்" என்றாள்.

அவளுடைய மனம் புண்பட்டு விட்டதென்று உணர்ந்து கொண்டவுடன் எனக்கும் ஏன் அப்படிக் கூறினோமென்று இருந்தது. சிறு வயதில் நான் ரொம்பக் கஷ்டங்களை அனுபவித்திருந்ததனாலோ என்னவோ தெரியவில்லை. யாருடைய மனத்தையும் நோகச் செய்ய என்னால் முடியவே முடியாது. அதேமாதிரி என்னையும் யாராவது, குத்தலாகச் சொன்னால், அதைப் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை.

ஆகவே, சமாதான எண்ணத்துடன், "நான் உங்களை ஒன்றும் குறை சொல்லவில்லை, சுலோசனா. எனக்கு அவர்கள் மீதிருந்த கோபத்தில் சற்று ஆத்திரத்துடன் பேசிவிட்டேன். நீங்கள் அதைத் தவறாக எண்ண வேண்டாம்" என்றேன்.

சுலோசனாவின் முகத்தில் மெல்லிய புன்னகை அரும்பியது.

"இங்கே உள்ள சம்பங்கிக் கொடி புஷ்பித்திருக்கிறது. என்ன வாசனை பார்த்தீர்களா ?" என்றாள்.

சம்பங்கி என்றால் இந்துவுக்கு எவ்வளவு பிரியம் ! இங்கே இந்து இருக்கக் கூடாதா என்ற ஏக்கம் என்

கோபத்தை யெல்லாம் துளைத்துக் கொண்டு வெளியே வந்தது.

*　　　*　　　*

நாங்கள் மறுபடியும் கல்கத்தாவுக்குச் சென்று விட்டோம். நான் என் வேலையில் மூழ்கி என் துயரத்தையும் ஏமாற்றத்தையும் மறக்க முயன்றேன். வேலை இல்லாத நேரத்தில் நெஞ்சத்தில் குமுறும் எண்ண அலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பேன். இந்துவைப் பற்றி நினைவுக்கு வரும் ஒவ்வொரு சம்பவமும் எனக்கு ஒரு பொக்கிஷமாக இருந்தது. அவைகளை யெல்லாம் நினைத்து ரசிப்பதிலும், இந்து அருகில் இருந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் என்று கற்பனை செய்வதிலும், பிறகு அவள் அன்று அலட்சியம் செய்ததை நினைவு படுத்திக்கொண்டு ஆத்திரப் படுவதிலுமாக நேரம் சென்றது.

கல்கத்தா வாழ்க்கை உப்புச் சப்பில்லாமலே ஒரே மாதிரி இருந்தது. உயிர் வாழ்வதே எனக்குச் சுமையாக இருந்தது. என்ன செய்வதென்று அறியாமல் ஒட்டியும் ஒட்டாமலும் தாமரை இலைத் தண்ணீர் போல வாழ்க்கை சென்று கொண்டிருந்தது. பத்மநாபன் வீட்டுக்குப் போவதை நான் குறைத்துக் கொண்டேன். சுலோசனுவும் ரமேஷும் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். சில சமயங்களில் எங்கேயாவது வெளியில் போய் விட்டு வருவோம்.

குளிர்ந்த பிரதேசங்களில் முள்ளம் பன்றிகள் உஷ்ணப்படுத்திக் கொள்வதற்காக நெருங்கியிருக்குமாம். ஒன்றின் முள் இன்னொன்றின் மீது குத்திப் புண் படுத்துமாம். அவைகளுக்கு விலகிச் சென்றால் குளிர் பொறுக்க முடியாது. சேர்ந்து இருந்தால் உடல் முழுதும் ஊசிகளின் குத்தல், அந்த மாதிரி இருந்தது என் நிலை. வாழ்க்கையில் அநேகம் பேர் இப்படித்தானே திண்டாடு

கிறோம் ? சமூகம் என்பதே ஒரு முள்ளம் பன்றிக் கூட்டம் தான் போலும்.

ஒரு நாள் நான் அறையில் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். எதையோ புரட்டின போது ‘ அமர தாரா ’ நடிக்கும் ‘ இதய வீணை ’ என்னும் படம் கல்கத்தாவில் வரப் போவதாக ஒரு செய்தி வெளியாகி



யிருந்தது. இந்துவின் படத்தின் அருகில் ‘ பேரழகி ’ அமரதாரா என்று எழுதப்பட்டிருந்தது. எனக்கு அதைப் பார்த்தவுடனே முதலில் ‘ இதய வீணை ’ படத்தைச் சென்று பார்க்க வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. அடுத்தபடியாக இந்துவின் மீது அளவிலாத கோபம் வந்தது. இப்படியெல்லாம் அவளைப் புகழ மனிதர்கள் கிடைத்து விட்டதனுல்தானே என் தூய்மையான பளிங்கு போன்ற அன்பை அவள் உணரவில்லை ? சே ! என்ன உலகம் ?

நான் இப்படிச் சிந்தனையில் மூழ்கியிருந்த போது, எனக்குப் பின்னுல் புடவை சரசரக்க யாரோ வரும் சத்தம் கேட்டது.

# 14. பட்டு ரோஜா

இதுப் புடவையின் சரசர வென்ற ஒலியிலிருந்து அது சுலோசனுவாகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகித்தேன். அத்தரின் மணம் கும்மென்று அறை முழுவதும் பரவியது. நான் அசையவில்லை. சோபாவில் சாய்ந்த வண்ணம் சுவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

திடீரென்று என் முன்னால் ஒரு கொத்து ரோஜாப் புஷ்பங்களை நீட்டினாள் சுலோசனா. கருஞ் சிவப்பு நிற முடைய பட்டு ரோஜாக்களும், இளம் மஞ்சள் நிற முடைய ரோஜாக்களுமாக அந்தக் கொத்து மிக அழகாக இருந்தது. நான் புஷ்பங்களையே அசையாமல் பார்த்துக்கொண் டிருந்தேன்.

"உங்களுக்கு ரோஜாப் பூக்கள் ரொம்பப் பிரியம் என்று கூறினீர்களே. வாங்கிக்கொள்ள மாட்டீர்களா ?" என்று கேட்டாள் சுலோசனா.

எனக்கு என்ன காரணத்தாலோ உணர்ச்சி தொண்டையை அடைத்துக்கொண்டது. வாழ்க்கை என்ன விநோதமானது ? இந்தப் பெண் என்னை உண்மை யிலேயே நேசிக்கிறாள். எத்தனையோ பேர்களுக்கு மத்தியில் பழகியும் அவளுக்கு என் மீதுதான் அன்பு இருந்தது. அது நன்றாகத் தெரிந்தது. சுலோசனா மற்றவர்களிடம் பேசும்போது சிரித்துக் கலகலப்பாகப் பேசுவாள். ஆனால் எங்கோ தொலைவிலிருந்து பேசுவது போல இருக்கும். என்னுடன் பேசும்போது அதிகமாகச் சிரிக்கமாட்டாள். வார்த்தைகளை நிறுத்திப் பேசுவாள். ஆனால் என் அருகில் நெருங்கியிருக்க வேண்டும் என்ற ஆர்வம் அதில் தொனிக்கும்.

சுலோசனாவின் கலகலப்புக்கும், புதியநாகரிகத்துக்கும் அடியில் ஒரு அடக்கம் இருந்தது. அவளுடைய சுபாவங்களை நான் மனத்துக்குள் மெச்சிய போதிலும் அவளிடம் எனக்கு அன்பு சுரக்கவில்லையே. என் இதயத்தை நான் இந்துமதிக்கு என்றோ கொடுத்து விட்டேனே. அதில் வேறு எதற்கும் இடமே இல்லை. சுலோசனாவின் ரோஜாக்களைக் கண்டு எனக்கு அவளிடம் பரிதாப உணர்ச்சிதான் உண்டாயிற்றே தவிர அன்பு உண்டாகவில்லையே ? சுலோசனா என்னிடம் ஒருவித

உணர்ச்சியையும் வெளிப்படையாகச் சொல்லாமலேயே இருந்தாள். அதனால் அவள் மீது எனக்கு மதிப்பும் மரியாதையும் உண்டாயிற்று. அதற்கு மேல் சிறிது கூட இதயம் கனிந்து உருகவில்லை.

ஆனால் என்னை அலட்சியம் செய்த இந்துவைப் பற்றி நினைத்து நினைத்து ஏங்குகிறேன். அவளுடன் கழித்த நாட்களைப் பற்றி எண்ணிப் பெருமூச்சுவிடுகிறேன். ஒரு காலத்தில பூரணச் சந்திரனின் தண்மையான கதிர் களைப் போல் என் இதயத்தைக் குளிர்வித்த அவளுடைய பெயரை நினைக்கும் போதே நெஞ்சம் வெம்புகிறது.

சுலோசனாவுக்குப் பொறுமை போய்விட்டது. ரோஜாப் பூக் கொத்தை மேஜை மீது வைத்தாள். பிறகு உள்ளே சென்று ஒரு கிண்ணம் எடுத்துக்கொண்டு வந்து பூக்களை அதில் அடுக்கி விட்டு மறுபடியும் வைத்தாள்.

பிறகு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஏக்கம் தொனிக்கும் குரலில், " என்னிடம் பேசமாட்டீர்களா ? நான் எவ்வளவு ஆசையாக இந்த ரோஜாப் புஷ்பங்களைக் கொண்டுவந்தேன். ஒரு வேளை சீமையில் பார்த்தமாதிரி இவை அவ்வளவு அழகாக இல்லைபோலிருக்கிறது " என்றாள்.

" ரொம்ப அழகாக இருக்கிறது, சுலோசனா ! மலர்கள் இயற்கை அன்னையின் தெய்வீகமான அழகு பொருந்திய குழந்தைகள் அல்லவா ?"

" பின் ஏன் இப்படிப் பறிகொடுத்த மாதிரி இருக் கிறீர்கள் ? முன்பெல்லாம் சில சமயங்களிலாவது உங்கள் முகம் பிரகாசமாகத் தெளிவுடன் இருக்கும். இப்போ தெல்லாம் எப்போதும் ....."

" அழுது வடிகிறதாக்கும். "

" இல்லை. சோகம் ததும்புகிறது !"

நான் சிரித்தேன். என் சிரிப்பு எனக்கே விநோதமாக இருந்தது. நான் சிரித்து அவ்வளவு நாட்களாகி விட்டன.

" இந்தச் சிரிப்பிலும் உற்சாகம் இல்லையே மிஸ்டர் ராய் ! உங்கள் சக்தி யெல்லாம் எங்கே போயிற்று ? உங்கள் முக மலர்ச்சி எப்படி மறைந்தது ? சீமையிலிருந்து வந்தவுடன் நீங்கள் புது மலரைப் போல இருந்தீர்களே ? இப்போது என்ன ஆகிவிட்டது ? என்னிடம் சொல்ல மாட்டீர்களா ?"

" முக்கியமான காரணம் ஒன்றுமில்லை, சுலோசனா. நீங்கள்தான் சொல்லுங்களேன். எனக்குச் சந்தோஷமாக இருக்க என்ன இருக்கிறது ?"

சுலோசனா மேஜைக்கருகில் திரும்பினாள். ரோஜாக் கொத்திலிருந்து ஒரு பெரிய சிவந்த ரோஜா மலரைக் கிள்ளி எடுத்தாள். தன் கழுத்தில் தொங்கிய சங்கிலியிலிருந்து ஒரு ஊசியை எடுத்து அந்த மலரை அதில் கோத்து என் அருகில் வந்தாள்.

சட்டென்று குனிந்து அதை என் சட்டையில் பொருத்தினாள். என் திகைப்பு நீங்குவதற்குள், " ஏன் மிஸ்டர் ராய்! உங்களுக்குச் சந்தோஷத்துக்கு என்ன குறை ? மகிழ்ச்சியை நீங்கள் வேண்டுமென்றால் அடைய முடியாதா ? நீங்களாகவே உங்களைச் சுற்றி முள் வேலியைக் கட்டிக்கொண்டு ஏன் துன்பப்படுகிறீர்கள் ?" என்றாள்.

அவள் கூற வந்ததைக் கூறவில்லை என்று எனக்கு நன்றாகத் தெரிந்தது. இனிமேலும் அவளிடம் உண்மையைச் சொல்லாமல் இருக்கக் கூடாதென்று உடனே தீர்மானித்தேன். சுலோசனா என்னிடம் அளவு கடந்த அன்பு கொண்டிருக்கிறாள் என்பதும், அதை வெளியிடாமலிருக்க அவள் எவ்வளவு கஷ்டப்படுகிறாள் என்பதும் அந்தக் கணத்தில் நன்றாகத் தெரிந்துவிட்டது.

நான் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டேன். சுலோசனு நான் கேட்பதற்கு நீங்கள் பதில் சொல்வீர்களா ? உங்கள் மனத்தில் ஏதோ ஒரு எண்ணத்தை வைத்துக்கொண்டு கஷ்டப்படுவதாகத் தோன்றுகிறது......"

" மிஸ்டர் ராய் ! அதை நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமா ? உங்களுடைய மனத்தில் அதைக் குறித்துச் சந்தேகம்தான் எழுகிறதா? என் இதயத்திலிருந்து எழும் குரல் உங்கள் உள்ளத்தில் எதிரொலிக்கவில்லையா ?"

" சுலோசனு ! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். இன்று வரை எனக்கு நிச்சயமாகத் தெரியாததால் நானுகப் பேச்சை ஆரம்பிக்கவில்லை. நான் செய்தது மிகப் பெரிய தவறு. ஆரம்பத்திலேயே கூறியிருக்க வேண்டும். இவ்வளவு தூரம் அதை முற்ற விட்டு விட்டேனே என்று ரொம்ப வருத்தமாக இருக்கிறது. நீங்கள் இம்மாதிரி எண்ணத்தை உங்கள் மனத்திலிருந்து அகற்றிவிட வேண்டும். அதற்குக் காரணம் கூறவும் தயாராக இருக்கிறேன்."

" மிஸ்டர் ராய் ! நீங்கள் இவ்வாறு கூறுவீர்களென்பதை நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். இந்த எண்ணத்தை அடியோடு களைந்துவிட வேண்டும் என்று ஆனமட்டும் முயற்சி செய்தேன். அப்படி அதை நான் கத்தரிக்கக் கத்தரிக்க அது இன்னும் அடர்த்தியாக வளர்ந்தது. ரோஜாச் செடியைக் கத்தரித்தால் நன்ருகத் தழைத்து அதிகமாகப் பூக்கிறது. அந்த மாதிரி என் நிலையும் ஆகிவிட்டது. நான் என்ன செய்ய முடியும் ? உங்களுடைய அன்பை நான் பெற முடியாதென்று என் உள்ளத்தில் இருந்து ஒரு குரல் கூறிக்கொண்டேதான் இருக்கிறது. இருந்தாலும் அதை மறக்க முடியவில்லை."

என் உள்ளம் உருகிப் போயிற்று. அந்தச் சமயத்திலும் எனக்கு ஒரு விதமான கர்வம் உண்டாயிற்று. ஒரு

பெண் தன்னைக் காதலிப்பதாகக் கூறும்போது ஒரு மனித னுக்கு ஏற்படும் கர்வத்துக்கு இணையாக வேறு எப்போதும் ஏற்படுவதில்லை. இந்துவின் வார்த்தைகளால் எரிந்து கொண்டிருந்த மனத்துக்குச் சுலோசனுவின் அன்பு இதமாகக்கூட இருந்தது. எனக்கே என் உணர்ச்சி வெட் கத்தை உண்டாக்கிற்று.

நான் சுலோவைப் பார்த்து, " சுலோ ! என் மீதுதான் தவறு. மேலும் உன் அண்ணுவும் அப்பாவும் இதற்குத் தூபம் போட்டுவிட்டார்கள். அதுதான் முக்கியமான காரணம் " என்றேன்.

சுலோசனு என்னை ஏறிட்டுப் பார்த்தாள். அவ ளுடைய கண்களில் கண்ணீர் ததும்பிக் கீழே சொட்டத் தயாராக இருந்தது. எப்போதும் சிரிப்பும், விளையாட்டு மாய்ச் சிறு குழந்தைபோலிருந்த சுலோசனுவை அந்த நிலையில் பார்த்தபோது எனக்கு இரக்க உணர்ச்சி பொங்கிக் கொண்டு வந்தது. அவளுடைய குதூகலத்தைக் குலைப்பதற்கு நானே காரணம் என்று நினைத்தபோது செய்யத்தகாத குற்றத்தைச் செய்துவிட்டது போல் மனம் புழுங்கியது.

" நான் உங்களை நேசிப்பதற்கு அவர்கள்தான் காரணம் என்று நினைக்கிறீர்களா ? அது எவ்வளவு தவருன எண்ணம் தெரியுமா ? உங்களுக்கு முன்ருல் நான் பலரிடம் பழகியிருக்கிறேன். என் தந்தையும், ரமேஷும் எனக்குக் கலியாணம் செய்துவைக்க நான்கு வருஷங்களாக முயன்றுதான் வருகிருர்கள். நான் யாரையும் பிடிக்கவில்லை என்று சொல்லிவிட்டேன். ஆனுல், உங்களை முதன் முதலில் பார்த்த போது மட்டும் என் மனத்தில் ஒரு வித அதிர்ச்சி ஏற்பட்டது.

" உண்மையைக் கூறுகிறேன் மிஸ்டர் ராய் ! யாரைப் பார்த்தாலும் எனக்கு என்னைவிட மட்டமாகத் தோன்றும்.

யார் முன்னலும் நான் என்னைக் குறைவாக மதிப்பிட்டுக் கொண்டதேயில்லை. ஆனல், உங்களைப் பார்த்த போது எனக்கு உங்களிடம் ஒரு மரியாதை ஏற்பட்டது. என்னை விட நீங்கள் உயர்ந்தவரென்ற எண்ணம் தோன்றியது. என்னுடைய கர்வமெல்லாம் உங்கள் முன்னல் பொடிப் பொடியாகச் சிதறிப் போயிற்று. உங்களிடம் என் இதயத்தை அர்ப்பணிப்பதே எனக்குப் பெருமை என்று தோன்றியது. என்னைவிடத் தாழ்ந்தவரென்று நான் கருதும் ஒருவரிடம் எப்படி என் இதயத்தைக் கொடுக்க முடியும் ?

" நான் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். பழகியுமிருக்கிறேன். எத்தனையோ அறிவாளிகளைப் பார்த்திருக்கிறேன். ஆனல், அவர்களுக்கு இதயமே இல்லாமலிருந்தது. நல்ல இதயமுடையவர்களுக்கு அறிவின் வளர்ச்சியே இல்லாமலிருந்தது. உங்கள் ஒருவரிடம் தான் இதயமும், அறிவும் ஒன்ருேடொன்று பொருந்தியிருப்பதைக் கண்டேன். அவை இரண்டும் சங்கமமாகும் இடத்திலிருந்து ஒரு அமுத தாரை பாய்ந்து என் இதயத்தில் கலந்தது. அதை நீங்கள் எப்படி அறிவீர்கள் ?"

சுலோசனவின் கண்களிலிருந்து பொங்கிய கண்ணீர் பொல பொலவென்று அவளுடைய புடவை மீது உதிர்ந்தது.

" சுலோசன ! நீங்கள் முகத்தைத் துடைத்துக் கொள்ளுங்கள். நான் என் இதயத்திலிருப்பதைச் சொல்லி விடுகிறேன். பிறகு உங்கள் மனமும் மாறி விடும்" என்றேன்.

சுலோசன கண்களைத் துடைத்துக்கொண்டு பேசத் தொடங்கினள். " நீங்கள் என்ன கூறினலும் என் மனம் மாருது, மிஸ்டர் ராய். நீங்கள் கூறுவதற்கு முன்பாக

நான் கூற வேண்டுமென்று நினைத்ததைக் கூறி முடித்து விடுகிறேன். பிறகு நீங்கள் சொல்வதை யெல்லாம் கேட்கிறேன்.

" முதன் முதலில் நாம் ஒரு விருந்தில் சந்தித்தோம். அன்று நீங்கள் என்னிடம் பேசியதும், உங்கள் தோற் றமும் எனக்கு உங்களிடம் ரொம்ப மரியாதையை உண்டாக்கின. அன்று இரவெல்லாம் எனக்கு உங்கள் நினைவாகவே இருந்தது. உங்கள் பேச்சில் பணிவு இருந்தது; குழைவு இல்லை. உங்கள் தோற்றத்தில் கம்பீரம் இருந்தது ; கர்வம் இல்லை.

" பிறகு உங்களுடன் நான் நன்ருகப் பழக ஆரம் பித்தேன். என்னை நீங்கள் என் சகோதரனைவிட நன்கு நடத்தினீர்கள்; பிரியமாக இருந்தீர்கள். ஆனால், ஒரு தடவையாவது அதிகமாக ஒரு வார்த்தை பேசியதில்லை. அந்த மன உறுதி எனக்கு வியப்பளித்தது. அந்தப் பாறையைப் போன்ற உறுதிக்குப் பின்னால் மனிதத் தன்மை மிளிர்ந்தது.

" நாளடைவில் நான் உங்களைச் சந்தோஷப்படுத்த வேண்டுமென விரும்பினேன். நீங்கள் அதை உணராம லிருந்த போதெல்லாம் எனக்கு உங்கள் மீது கோபம் உண்டாயிற்று. உங்களுக்கு ரோஜாமலர்கள் பிடிக்குமென்று கூறியதும், ரோஜாச் செடிகள் வரவழைத்துப் பயிராக்கத் தொடங்கினேன். அது துளிர் விட்ட போது என் மனமும் துளிர்த்தது. அது மொட்டு விடுவதை ஆவலாக எதிர் பார்த்திருந்தேன். முதல் மொட்டு அரும்பியதும் என் மனம் குதூகலித்தது. ஆனால், நாம் உடனே சென்னை சென்று விட்டோம். திரும்பி வந்ததும் அவை நிறைய மொட்டுக் கட்டியிருப்பதைப் பார்த்து ஆனந்தப்பட்டேன். இன்று அவைகளைப் பறிக்கும் போது என்னவெல்லாம் எண்ணினேன் தெரியுமா ? ' இந்தச் சிவந்த ரோஜாவோடு

என் இதயத்தையும் உங்களுக்கு அர்ப்பணிக்கிறேன்' என்று கூறவேண்டு மென்று எண்ணினேன்......" சுலோசனுவால் அதற்குமேல் பேச முடியவில்லை. உணர்ச்சி மிகுதியினுல் அவள் விம்மினுள்.

# 15. சுருதி சேர்ந்தது

சுலோசனுவின் விம்மல்கள் அடங்கும் வரையில் நான் காத்திருந்தேன். பிறகு அவள் உள்ளே சென்று முகத்தைத் தண்ணீரில் கழுவிக் கொண்டு திரும்பி வந்தாள்.

நான் சிறிது நேரம் தயங்கினேன். பிறகு மனத்தைத் திடம் செய்து கொண்டு பேச ஆரம்பித்தேன். "சுலோசனு! உங்களை நான் இவ்வளவு தூரம் மனம் நோகச் செய்ததற் காக வருந்துகிறேன். நானும் உங்களைப் போன்ற மன வேதனையையே அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். அதனுல் உங்களுடைய துயரத்தை என்னுல் நன்ருகப் புரிந்து கொள்ள முடிகிறது.

"நானும் ஒரு பெண்ணை மனப்பூர்வமாக நேசிக் கிறேன். அவளை என்னுல் மறக்க முடியவில்லை. அவளுடைய நினைவைப் பெயர்த்தெறிய நானும் முயற்சி செய்துதான் பார்க்கிறேன், சுலோசனு. ஆனுல், முடிய வில்லை" என்று நிறுத்தினேன். இந்துவைப் பற்றிச் சொல்வதா வேண்டாமா என்ற போராட்டம் மனத்தில் எழுந்தது. முழுதும் சொல்லிச் சற்று மன ஆறுதல் அடைய வேண்டும்போல ஒரு நிமிஷம் தோன்றியது. உடனேயே 'சே! என்ன கேவலமான எண்ணம்? எனக்குப் பத்து நிமிஷ ஆறுதலுக்காக இந்துவைப் பற்றிக் குறை சொல்வதா? பிறகு பத்மநாபனுடைய நண்பர் களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? இவளுக்கு

ஏற்கனவேயே அவளைப் பிடிக்காது; நான் வேறு அதற்குத் தூபம் போடுவானேன் ? மேலும் இந்துவைப் பற்றி நான் சொன்னால் சுலோசனா எனக்கு அவளை மறந்து விடும்படி உபதேசம் செய்யத் தொடங்கலாம். வேண்டாம் ! வேண்டாம் ! இந்துவைப் பற்றிப் பேசவே வேண்டாம்' என்று தீர்மானித்தேன்.

சுலோசனா பேசாமல் என் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். நான் மௌனமாக இருக்கவே, " உங்களுக்கு விருப்பமில்லையென்றால் நான் சொல்ல வேண்டுமென்று வற்புறுத்தவில்லை, மிஸ்டர் ராய். நான் என்னைப் பற்றி உங்களிடம் கூறத்தான் வந்தேன். என் மனத்தை உங்களிடம் திறந்து காட்டிய பிறகு எனக்கு மனச்சுமை ரொம்பக் குறைந்து போய் விட்டது. நான் போகிறேன் " என்றாள்.

என் மனப் போராட்டத்தை அவள் எவ்வளவு எளிதில் புரிந்து கொள்கிறாள் என்று எனக்கு ஆச்சர்யமாக இருந்தது.

" சுலோசனா ! உங்கள் இதயம் ரொம்பப் பண்பட்ட இதயம். உங்களைப் போன்றவர்களை அதிகமாகச் சந்திக்க முடிவதில்லை. உங்களுடைய நண்பனாக நான் என்றென்றும் இருப்பேன். உங்களுக்கு எந்த உதவி வேண்டுமானாலும் என்னிடம் தயங்காமல் நீங்கள் கேட்கலாம். இன்னொரு சமயம் நான் அடைந்த ஏமாற்றத்தைப் பற்றிக் கூறுகிறேன். இப்போது வேண்டாம். அதற்குக் காரணமிருக்கிறது. அதனால் உங்களிடம் எனக்கு நம்பிக்கைக் குறைவு என்று எண்ண வேண்டாம். என்னைப் பற்றி என்னால் தயங்காமல் கூற முடியும். இன்னொருவரைப் பற்றிக் கூற எனக்குத் தயக்கமாக இருக்கிறது. மன்னித்து விடுங்கள் !" என்றேன்.

சுலோசனா என் சங்கடத்தைப் புரிந்து கொண்டாள். " உங்களுக்கே சொல்ல வேண்டுமென்று தோன்றினால்

பிறகு கேட்கிறேன். இப்போது நான் போய் விட்டு வருகிறேன் " என்று கூறிவிட்டு எழுந்து சென்றாள்.

கதவின் அருகில் சென்றவள் திரும்பி வந்து, " மிஸ்டர் ராய்! நீங்கள் இன்னொரு பெண்ணை நேசிப்ப தாகக் கூறியதால் என் மனம் உடனே மாறி விடவில்லை. நான் இன்று உங்களுடன் மனம் விட்டுப் பேசியதை என்றென்றும் மறக்க மாட்டேன் " என்றாள்.

" சுலோசனா! அப்படிக் கூறாதீர்கள். இன்று நாம் பேசியதை அடியோடு மறந்து விடுங்கள். முன்போலவே நாம் பழகுவோம்."

" மனம் என்ன கரும்பலகையா? ஒரு விஷயத்தை உடனே அழித்து விடுவதற்கு? அதுவுமல்லாமல் என் வாழ்க்கையிலேயே நான் இப்படிப் பேசியது இதுதான் முதல் தடவை. இதுவே கடைசித் தடவையாகவும் இருக்கும் ஆனால், இந்த ஞாபகம் என்னை விட்டு அகலவே அகலாது. இந்த இனிமையான ஞாபகத்திலேயே நான் வாழ்க்கையைக் கழித்து விடுவேன். ஆனால், உங்களிடம் மறுபடியும் நானாக இப்படிப் பேச்சை ஆரம்பிக்கமாட்டேன். இதை நீங்கள் நம்பலாம்!" என்று கூறிவிட்டு, சட்டென்று திரும்பி வெகு வேகமாகப் போய்விட்டாள். கார் புறப்பட்டு வேகமாகப் போகும் ஓசை கேட்டது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். சுலோசனாவே காரை ஓட்டிக்கொண்டு சென்றாள். அவளுடைய மன நிலையில் எங்கேயாவது காரை இடித்துவிடப்போகிறாளே என்று எனக்குக் கவலையாக இருந்தது.

சுலோசனா சென்ற பிறகு சொல்ல முடியாத சோர்வு என்னை வந்து சூழ்ந்து கொண்டது. வெகுநேரம் ஏதேதோ சிந்தனைகளுடன் ஸோபாவிலேயே விழுந்து கிடந்தேன்.

என்றையும் விட இந்துவின் நினைவு ரொம்ப அதிக மாக வந்தது. சுலோசனாவுடன் பேசிய பிறகு இந்துவைப்

பார்க்க வேண்டுமென்ற தாபம் அடக்க முடியாமல் பெருகியது. பக்கத்தில் கிடந்த பத்திரிகையை எடுத்து இந்துவின் படத்தை மறுபடியும் பார்த்தேன். கள்ளங் கபடமில்லாத அவளின் உள்ளம் அவள் கண்களின் மூலம் பிரகாசித்தது.

'இந்துமதியின் பார்வையில் இவ்வளவு பிரகாசம் இருக்கிறதே. அதுவும் ஒரு சோகத்துடன் கூடிய பிரகாச மாக அல்லவா இருக்கிறது ? ஒருவேளை நான் அவசரப் பட்டு விட்டேனோ ? அவளிடம் மனம் விட்டுப் பேசியிருக்க வேண்டுமோ ? நான் இன்னும் சற்றுப் பொறுமையாக இருந்திருக்கலாம். என்னைப் பார்த்த திகைப்பு அவளுக்கு நீங்குவதற்குள்ளேயே, நான் அவள் மனம் புண்படும்படி பேசி விட்டேனே ?'

ஆம் ! அவளைப் பார்த்தபோது எனக்குக் கொஞ்சம் பொறுமை உணர்ச்சி உள்ளே இருந்தது. அதனால் தான் அப்படிப் பேசினேன். எப்படியும் இன்னொரு தடவை அவளைச் சந்தித்துவிட வேண்டும். அவள் ஒருவேளை என்னைத் தேடிக் கொண்டிருக்கலாமல்லவா ? நான் இருக்குமிடம்தான் அவளுக்குத் தெரியாதே. ஒருவேளை அன்று பேசிய விதத்துக்காக அவள் மனம் நொந்து வருந்திக் கொண்டிருக்கலாம்.

எனக்குத் திடீரென்று இந்துவைப் பார்க்கா விட்டால் நெஞ்சு வெடித்து விடும் போல இருந்தது. உடனே சென்று இந்துவைப் பார்க்க வேண்டு மென்று மனம் பறந்தது. ஸ்நானம் செய்து விட்டு 'இதய வீணை' படம் ஓடும் தியேட்டருக்கு அவசரமாகப் புறப்பட்டுச் சென்றேன். அதைப் பார்ப்பதன் மூலமாவது இந்துவைப் பார்க்க வேண்டுமென்ற என் தாங்க முடியாத தாபம் தணியாதா என்ற ஏக்கத்துடன் தான் சென்றேன்.

விளக்குகள் அணைந்து படம் தொடங்கியது. விம்மும் இதயத்துடன் இந்துவின் முகம் எப்போது தோன்று மென்று காத்துக் கொண்டிருந்தேன்.

எனக்குத்தான் இந்துமதிமேல் கோபமாயிற்றே! அவள் திரையில் தோன்றியதும் அப்படி மனம் கசிந்து போவானேன்? கண்களில் நீர் துளிப்பானேன்? சே! அவ்வளவு துச்சமாக என்னைப் பேசியவளுக்காக நான் ஏன் என் கண்ணீரை வீணுக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டேன்.

படம் மேலே செல்லச் செல்ல அதில் கதாநாயகனுக நானே மாறிவிட்டேன். குங்குமத்துறையின் இயற்கை வனப்புக்களுக்கு மத்தியில் காதலர்கள் சந்திப்பதும் பேசுவதும், பாடுவதும் எனக்கு எத்தனையோ விதமான உணர்ச்சிகளைத் தூண்டி விட்டன.

இந்து அவற்றை யெல்லாம் மறக்கவே இல்லை. படத்தைக் குங்குமத்துறையில் எடுக்க வேண்டுமென்று அவள்தான் சொல்லியிருப்பாள். அதில் சந்தேகமில்லை. அதுவும் பாதிரித் தோட்டத்திலேயே படம் எடுக்கப்பட்டிருந்தது. அது மாத்திரமா? கதாநாயகன் மரத்தின் கிளைமீது உட்கார்ந்து புத்தகம் படித்துக்கொண்டிருக்கிறுன். அப்போது இந்துமதி பாடிக் கொண்டே வருகிறுள். எனக்கு அப்படியே பரவசமாகிவிட்டது. அடுத்தாற் போல அந்தத் திரைப்படக் கதாநாயகன் இந்துவுடன் பேசிய போது அவனுடைய கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட வேண்டுமென்று கூட ஆத்திரம் உண்டாயிற்று.

இந்து நான் நினைத்தமாதிரி அடியோடு எல்லாவற்றையும் மறந்துவிடவில்லை. அவளுடைய குழந்தை உள்ளத்தில் அரும்பி மலர்ந்த காதல் இன்னும் மணம் வீசிக்கொண்டுதான் இருக்கிறது. அவளுடைய இதயத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் அன்புதான் என்னை அன்று

பார்த்தவுடன் அலட்சியமாகப் பேசவைத்தது. அவளுடைய அளவிலாத அன்பினால் தான் என்னிடம் அவள் எரிந்து விழுந்தாள்.

இந்த எண்ணங்களெல்லாம் முட்டி மோதிக் கொண்டு வெளியே வந்தன. அப்போது நான் தாங்கமுடியாத வேதனையை அடைந்தேன்

இந்துவின்மீது எனக்கு அளவிலாத கோபம் ஏற்பட்டிருந்தது. அந்தக்கோபம், என்நெஞ்சத்தில் அவள் மீது ஏற்பட்டிருந்த அன்பென்னும் அக்னிக் குழம்பைக் கெட்டியாக மூடிப் பாறையாக உறையவைத்திருந்தது. இந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போதே, உள்ளே இருந்த அக்னிக் குழம்பு பாறைகளைத் தகர்த்து எறிந்து விட்டு வெளியே வந்து பாய்ந்தது. அந்த வெம்மையில் நான் கருகிப் போனேன்.

படம் முடிந்ததும் வீட்டுக்கு வந்தேன். உடம்பு கொதித்தது. தலையையும் மார்பையும் ரொம்ப வலித்தது. தாங்க முடியாத சோர்வு என் உடலைப் பற்றிக் கொண்டது. தள்ளாடி நடந்து போய்ப் படுக்கையில் உட்கார்ந்தேன். டெலிபோனை எடுத்து டாக்டரை வரச் சொல்லிவிட்டுப் படுத்தேன்.

'இந்துவை ஒரு முறை பார்த்து, என்மீது அவளுக்கிருந்த அன்பு மாறவில்லை என்று தெரிந்து கொள்ளாமல் இறந்து போகக்கூடாது. அப்படி நான் குறையுடன் இறந்துபோய் விட்டால் இன்னும் தொடர்ந்து வரும் எத்தனையோ பிறவிகளில் என் மனக் குறை தீராது.'

இந்துவைப் பார்த்து, 'இந்து! நீ என்னை அலட்சியம் செய்யவில்லை என்று சொல்லு. என்மீது உனக்கு உண்டான பிரேமை அழியவில்லை என்று சொல்லு. இல்லை! அப்படிச் சொன்னால் போதாது. என்மீது உனக்கு அன்பு பொங்கித் ததும்பிக் கொண்டிருக்கிறது என்று

சொல்லு. இரவும், பகலும் என்னை நினைத்து ஏங்கினாய் என்று சொல்லு. இல்லாவிட்டால் என் இதயத்தில் எரியும் நெருப்புத் தணியாது' என்றெல்லாம் பேசவேண்டு மென்று கற்பனை செய்து கொண்டேன். நெஞ்சில் ரொம்ப வலியாக இருந்தது. என் மன வேதனையும் மிகுந்தது.

# 16. இதயம் விரிந்தது

எவ்வளவு நேரம் இந்துவைப் பற்றிய சிந்தனை களினால் உண்டான வேதனையையும், உண்மையிலேயே ஊசி குத்துவது போல் மார்பில் ஏற்பட்ட வலியையும் பொறுத்துக் கொண்டிருந்தேனோ தெரியாது.

டாக்டர் வந்து என்னைப் பரிசோதித்து விட்டு, "ஒன்றும் இல்லை! மனத்தில் ஏதோ அதிர்ச்சி ஏற்பட் டிருக்கும். ஓய்வு எடுத்துக்கொண்டு எங்கேயாவது ஒரு வாரம் போய்விட்டு வரலாமே. 'டார்ஜீலிங்' மிக அருமையான இடம். அங்கே போய் இருந்து விட்டு வாருங்களேன்" என்று கூறிவிட்டுத் தூக்க மருந்து கொடுத்து விட்டுப் போனார். அதைச் சாப்பிட்டு விட்டு நன்றாக அயர்ந்து தூங்கினேன்.

மறு நாள் பொழுது விடிந்து வெகு நேரம் சென்ற பிறகுதான் எழுந்தேன். ஒருவாறு மனம் தெளிவடைந் திருந்தது. கால்களில் ஒரு இலேசான நடுக்கம் இருந்தது. அதைத் தவிர நெஞ்சு வலி யெல்லாம் சரியாகி யிருந்தது.

கோர்ட்டுக்குப் போய் விட்டு வந்த பிறகு உடை மாற்றிக் கொண்டு, பத்மநாபன் வீட்டுக்குச் சென்றேன். சுலோசனா சிவந்த ரோஜா மலர் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு சோகமே உருவாகத் தோட்டத்தில் நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு அருகில் ரோஜாச் செடிகள் பூத்துக் குலுங்கியிருந்தன.

அந்தக் காட்சியை இன்னும் என்னால் மறக்க முடிய வில்லை. சுலோசனாவின் உள்ளத்தில் துயரத்தின் சாயை படியவே படியாதென்று எண்ணிக் கொண்டிருந்தேன். அவளை அந்த நிலையில் பார்த்ததும் எனக்கு ரொம்பக் கஷ்டமாக இருந்தது. அதை எண்ணும்பொழுதெல்லாம் என்னையே என்னால் மன்னித்துக் கொள்ள முடியவில்லை.

சுலோசனா என்னைப் பார்த்ததும் இரண்டு அடிகள் முன்னால் எடுத்து வைத்தாள். ரோஜா மலரை மறுபடியும் என் சட்டையில் பொருத்த வேண்டுமென்று வருகிறாளோ என்று எனக்குத் தோன்றியது. சடாரென்று சுலோசனா திரும்பினாள். ஒரே ஓட்டமாக ஓடித் தோட்டத்தின் பின் பக்கத்தில் மறைந்து போய்விட்டாள்.

அவளைத் தொடர்ந்து சென்று சமாதானமாக இரண்டு வார்த்தைகள் சொல்லலாமென்று நான் நடந்தேன். காலடியில் ஏதோ மெத்தென்று மிதிபட்டது. அந்தச் சிவப்பு ரோஜா என் பூட்ஸின் அடியில் அகப்பட்டுக் கசங்கிப் போயிருந்தது.

குனிந்து ரோஜாவை எடுத்துப் பைக்குள் வைத்துக் கொண்டு வீட்டுக்குள் சென்றேன். சுலோசனாவைச் சந்திக்க எனக்கு மனம் வரவில்லை. பார்த்தால் என்ன கூறிச் சமாதானப் படுத்துவது? பார்க்காமலேயே இருந்தால் தானாக மறந்து விடுவாளென்று நினைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டேன். ரமேஷிடம் நான் சென்னை சென்று விட்டுச் சில நாட்களில் திரும்புவேனென்று கூறி விட்டு வீட்டுக்குத் திரும்பினேன்.

காலையில் எழுந்ததும் எனக்கு இரண்டு அதிசயங்கள் காத்துக் கொண்டிருந்தன. மேஜை மீது கிண்ணத்தில் புதிய ரோஜா மலர்கள் வைக்கப்பட்டிருந்தன. மஞ்சளும், சிவப்புமாக அவை மிக அழகாக இருந்தன.

அருகில் சென்றேன், கிண்ணத்துக்கு அடியில் ஒரு கடிதம் இருந்தது. அதை எடுத்துப் பிரித்தேன். ஆங்கி

லத்தில் முத்து முத்தான எழுத்தில் எழுதப் பட்டிருந்தது. " உங்களிடம் விடை பெறுவதற்கு முன்னால், உங்கள் இதயத்துக்காகச் சிவப்பு ரோஜாவையும், அறிவுக்காக மஞ்சள் ரோஜாவையும் பரிசாக அளிக்கிறேன். நமஸ்காரம். சுலோ " என்று எழுதியிருந்தது. என் கண்களில் நீர் திரையிட்டது.

ஸ்நானம் செய்து விட்டு வந்ததும் இன்னொரு கடிதம் வந்தது. எனக்கு மாற்றல் உத்தரவு வந்திருப்பதையும் அதிலும் சென்னைக்கு அருகில் என்னை மாற்றி இருக்கிறார்கள் என்பதையும் பார்த்தபோது ரொம்ப மகிழ்ச்சி உண்டாயிற்று. அதுவே ஒரு நல்ல சகுனம் என்று தோன்றியது.

உத்சாகத்துடன் நான் கோர்ட்டுக்குக் கிளம்பினேன். வீட்டுக்குப் பிற்பகலில் திரும்பி வந்தபோது சமையல் காரன் எனக்குப் பத்மநாபன் வீட்டிலிருந்து டெலிபோன் வந்ததாகச் சொன்னான். அன்றிரவு அவருடைய வீட்டில் நடக்கும் விருந்துக்கு வரச் சொல்லிப் பத்மநாபன் கூறச் சொன்னாரென்றும் கூறினான். அவனிடம் சென்னை புறப்படுவதற்கு ஏற்பாடுகள் செய்யச் சொல்லி விட்டு நானும் விருந்துக்குப் புறப்பட்டேன். மேஜையின் மீதிருந்த பேனாவை எடுத்துக் கொண்ட போது ஒரு ரோஜா முள் என் கையைக் கீறியது. கீறிய இடத்திலிருந்து ரத்தம் வந்தது. ஒரு ரோஜாவைக் கிள்ளி என் சட்டையில் பொருத்திக்கொள்ள முயற்சித்தேன்: அது நிற்கவில்லை கடைசியில் பைக்குள் போட்டுக்கொண்டு கிளம்பினேன்.



சுலோசனு விருந்தினர்களை உபசரித்துக் கொண் டிருந்தாள். அவளுடைய முக மலர்ச்சியைப் பார்த்தபோது முதலில் எனக்கு வியப்பாக இருந்தது. காலையில் அப்படிக் கடிதம் எழுதிய சுலோசனு வென்றே தோன்றவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுடைய உபசாரப் பேச்சில் ஒரு அலட்சிய பாவம் தொனிப்பதும், அவளுடைய சிரிப்பில் ஒரு துயரச் சாயை படிந்திருப்பதும் எனக்குத் தெரிந்தன. எப்போதும் போலப் பகட்டாகவே தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள் சுலோசனு. ஆனுல் முன்பிருந்த சிரத்தையுடன் செய்து கொள்ளவில்லை யென்று தோன்றியது. என்னைப் பார்த்து ஒரு புன்னகை யுடன், வறண்ட குரலில், "மிஸ்டர், ராய் உங்களுக்கு ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டாள். அந்த உபசார வார்த்தைகள் என்னை முள்ளைப் போல் குத்தின.

சற்று நேரத்திற்குப் பின் என்னைப் பார்த்து ஒரு மெல்லிய புன்னகையுடன் தன் தலையில் சூடியிருந்த ஒரு ரோஜாவை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள். தன்னுடைய கடிதத்தை நான் படித்தேனு என்று தெரிந்து கொள்ள அவள் விரும்புகிருளென்பதைப் புரிந்துகொண் டேன். சட்டைப் பையிலிருந்து நானும் ரோஜாவை எடுத்து ஒரு தடவை முகர்ந்து பார்த்துவிட்டு மறுபடியும் பையில் போட்டுக்கொண்டேன். சுலோவின் மெல்லிய புன்னகை மலர்ந்து சிரிப்பாயிற்று. அது ஒரு கணம்தான். பிறகு மலரைத் தலையில் வைத்துக் கொண்டு சுலோ மற்ற வர்களுடன் பேசத் தொடங்கினுள். விருந்து முடியும் வரை அவள் என்னைத் திரும்பிப் பார்க்கவே இல்லை.

நான் எல்லோரும் சென்ற பிறகு கிளம்பினேன். பத்மநாபனிடம் நான் மாற்றலாகிப் போவதைக் கூறி விட்டுப் போகவேண்டுமென்று காத்துக்கொண்டிருந்தேன். அதைக் கூறியபோதுகூடச் சுலோசனுவின் முகத்தில் சிறிதும் சஞ்சலம் காணப்படவே இல்லை. அவளுடைய

மனோதிடம் எனக்கு வியப்பை அளித்தது. ஆயினும், அப்படி அவள் திடீரென்று என்னை யாரோ அந்நியன் மாதிரி பாவித்தது எனக்குப் பிடிக்கவில்லை. நான்தான் நண்பனாக இருப்பதாகக் கூறியிருக்கிறேனே, அதை ஏன் அவள் ஏற்றுக் கொள்ளக்கூடாது? எதற்காக இப்படி அலட்சிய பாவத்துடன் நடந்துகொள்ள வேண்டுமென்று தோன்றியது.

பத்மநாபன் உண்மையாகவே கவலைப்பட்டார். நான் வெகு தூரத்துக்கப்பால் போய் விடுவதால் தம்முடைய நோக்கம் நிறைவேறாமலேயே போய் விடுமோ என்று அவர் பயந்திருக்க வேண்டும். அந்தக் கவலை அவர் பேச்சில் தொனித்தது. ரமேஷ் நிஜமாகவே வருத்தப்பட்டான். "நீங்கள் இல்லாமல் எனக்குப் பொழுதே போகாது, மிஸ்டர் ராய்! என்று நாம் இனிமேல் ஒன்றாய்ச் சேருவோமென்று கவலையாக இருக்கிறது!" என்றான். அவன் கூறிய மொழிகள் இதயத்திலிருந்து வந்தபடியால் எனக்கு உண்மையிலேயே ஒரு அருமையான நண்பன் இருக்கிறான் என்ற உணர்ச்சி உண்டாயிற்று.

ஒரு வாரத்தில் நான் சென்னை புறப்பட்டுவிட்டேன். ராஜாராமை உடனே வந்து என்னைப் பார்க்கும்படி சொல்லி அனுப்பினேன்.

அன்று ராஜாராம் வந்ததும் அவரிடம் நான் இந்துவைப் பற்றி முழு விவரங்களையும் விசாரித்துத் தெரிந்து கொண்டேன். நான் எதிர் பார்த்ததற்கு மேலாகவே அவர் பரிவோடு நடந்துகொண்டார். அன்று நான் சென்ற பிறகு இந்து எவ்வளவு வருத்தப்பட்டாளென்று கூறினார். சுலோசனாவுடன் என்னைச் சினிமாத் தியேட்டரில் பார்த்ததுதான், இந்துவின் கோபத்துக்குக் காரணமென்று தெரிந்த போது என் மனத்தில் கொஞ்ச நஞ்சம் பாக்கியிருந்த சந்தேகமும் கோபமும் பறந்தோடிப் போய்விட்டன. இந்துவைப் பார்த்து அவளிடம் என்

ஏக்கத்தைத் தெரிவிக்க வேண்டுமென்ற ஆர்வம் மட்டுமே இருந்தது.

ராஜாராமிடம் இந்து வீட்டிலிருக்கும் நேரத்தைக் கேட்டேன். அவருடனேயே நான் போக வேண்டு மென்று முதலில் விரும்பினேன். பிறகு மறுநாள் பிற்பகல் போவதுதான் சிறந்ததென்று ராஜாராம் கூறவே அப்படியே வருவதாகக் கூறினேன்.

மறுநாள் இந்துவை நான் சந்தித்தபொழுதுதான் உண்மையில் இந்து அனுபவித்திருக்கும் தாங்க முடியாத வேதனையை என்னால் உணர முடிந்தது. நான் அவளுடைய கண்களை மூடியதும் அவள் உணர்ச்சி வசப் பட்டு, கைகள் நடுங்க என் கைகளைத் தொட்டுப் பார்த் தாளே, அதை நினைத்தாலே எனக்குத் தேகம் சிலிர்க் கிறது.

இந்துவை அப்படியே மலரைப் பாதுகாப்பது போல அன்பைப் பொழிந்து ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டுமென்ற அவா எனக்கு உண்டாயிற்று. ஆனால், கடமை குறுக்கிட்டது. இந்துவைக் குங்குமத்துறைக்கு அனுப்பி வைத்துவிட்டு நான் வேலையை ஒப்புக்கொள்ளச் சென்றேன்.

ஈசுவரமூர்த்தியைப் பற்றி எனக்கு மனம் உறுத்திக் கொண்டிருந்த போதிலும், அவரால் என்ன செய்துவிட முடியுமென்று நான் தைரியமாக இருந்தேன். ஈசுவர மூர்த்தி விஷயமாக நான் ஒன்றும் செய்யாமல் இருப்பதே நல்லதென்று எனக்குப் பட்டது. இந்துவை நான் மணந்துகொண்டுவிட்டால் என்ன நேரிட முடியும்? யார் தான் என்னிடமிருந்து இந்துவைப் பிரிக்க முடியும் என்று நினைத்தேன்.

ஆனால், நான் வேலை ஒப்புக்கொண்ட ஐந்தாவது நாள் அந்தப் பயங்கரமான செய்தி வந்தது. "இந்து

கைதானுள். உடனே வரவும்” என்று ராஜாராம் தந்தி யடித்திருந்தார்.

அதைப் பார்த்தவுடன் என் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்பதை எழுத முடியுமா ? இதயம் விரிந்தே போய்விட்டது. எனக்கு இறைவனுடைய கருணையிலேயே நம்பிக்கை போய் விட்டது. கடவுள் என்று ஒருவர் இருந்தால் இவ்வாறு அநீதிகள் உலகத்தில் நடைபெற முடியுமா ? அதிலும் இந்துவைப் போன்ற மாசு மறு இல்லாத இதயம் படைத்த ஒரு பெண்ணுக்கு இத்தனை கஷ்டங்களைக் கொடுக்கும் கடவுள் ஒரு கடவுளா என்று ஆத்திரப்பட்டேன்.

எனக்கு வேலையை அப்படியே விட்டு விட்டுப் போகவும் முடியாது. என்னுடைய சொந்த விஷயத்துக்காகக் கடமையில் தவறுவதா என்ற கேள்வி எழுந்தது. பிறகு, நான் உயிர் வாழ்வதே இந்துவுக்காகத்தானே ? இந்துவை விட எனக்கு உலகில் எதுவும் பெரிய கடமை இல்லை என்று தீர்மானித்து, ஒரு ராஜிஞமாகக் கடிதம் எழுதி வைத்துவிட்டுப் புறப்பட்டுவிட்டேன்.

இரவெல்லாம் தூக்கமில்லாததாலும் என் நெஞ்சில் ஏற்பட்டிருந்த துயரத்திலுைம் திடீரென்று எனக்கு ரொம்ப வயதாகிவிட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டிருந்தது.

நடுவில் ரயில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் நின்ற பொழுது ஒரு சிறுவன், “ அமரதாரா கைதானுள். அமரதாரா குற்றவாளி ” என்று கத்திக்கொண்டே போனுன். அவனை இழுத்து நாலு அறை வைக்க வேண்டுமென்று எனக்கு அளவில்லாத ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

ஆனல், சிலர் பத்திரிகையை ஆவலுடன் வாங்குவதையும், அதில் வந்துள்ள செய்தியைப் படிப்பதையும்

கண்டு நான் வேதனை அடைந்த போதிலும், கோபத்தை அடக்கிக் கொண்டேன். அவர்களுடன் சண்டை போட்டு என்ன பயன் ?

திருநந்திபுரம் போய்ச் சேரும் வரையில் எனக்கு மனம் ஒரு நிலையில் இல்லை. இந்துவை எப்படியும் காப்பாற்றி விடலாம் என்ற நம்பிக்கை இருந்தது. இருப்பினும் இந்துவுக்கு இப்படி ஒரு அவமானம் நேர்ந்து விட்டதே என்று நெஞ்சம் புழுங்கியது. திடீரென்று சந்திரமணியின் முகம் எதிரில் தோன்றி, " உன்னை நம்பி என் குழந்தையை ஒப்புவித்தேனே ! என் கண்மணியின் கதி இப்படியாகும்படி செய்துவிட்டாயே !" என்று கூறுவது போல் தோன்றும். நான் கண்களை மூடிக் கொள்வேன். ஆனால், காதுகளில் அந்த வார்த்தைகள் மட்டும் ஒலித்துக் கொண்டேயிருக்கும். அவருடைய புலம்பலினால் எனக்குச் சித்தப்பிரமை வந்து விடக் கூடாதே என்று அஞ்சினேன்.

திருநந்திபுரத்தை அடைந்த பிறகு இந்துவை லாக்-அப்பில் போய்ப் பார்க்கவே எனக்கு மனம் வரவில்லை. ராஜாராமும், முனிசாமிக் கவுண்டரும் என்னைப் பார்த்த உடனே கதறிக் கண்ணீர் விட்டார்கள்.

" குழந்தைக்கு வரக்கூடாத கதி வந்து விட்டதே !" என்று வருந்தினார் முனுசாமிக் கவுண்டர்.

என்னை அவர்கள் தேற்ற வேண்டிய நிலையில் நான் இருந்தேன். ராஜாராமிடம், " இந்துமதியை எந்த முகத்துடன் வந்து பார்ப்பேன் ?" என்று கண்ணீர் விட்டேன். ராஜாராம் என்னைத் தேற்றினார்.

" இந்து என்னைப் பற்றி என்ன நினைப்பாள் ராஜாராம்? கையாலாகாதவன் என்று எண்ண மாட்டாளா? என் துயரத்தை நான் எப்படி அவளிடம் காட்டிக் கொள்ள முடியும் ? நான் இவ்வளவு படித்தும், பட்டம் பெற்றும் பயன் என்ன ? என் இந்துவைப் பாதுகாக்க முடியாமல்

போய் விட்டதே. அவள் தனக்கு ஏதோ ஆபத்து வரும் என்று எண்ணினாள். நான்தான் அலட்சியமாக இருந்து விட்டேன். அன்றே நான் அவளைப் பதிவுத் திருமண மாவது செய்து கொண்டிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் இப்படி நடப்பதை ஒருவேளை தடுத்திருக்க முடியும்" என்று புலம்பினேன்.

"நீங்கள் இப்படி நொந்து கொள்வதால் என்ன பயன் மிஸ்டர் ரங்கதுரை? எல்லாம் அந்தப் பாழாய்ப் போன ஈசுவரமூர்த்தியின் சூழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும். இனிமேல் நீங்கள் இந்துவை நிரபராதி என்று நிரூபிக்கத்தான் முயற்சி செய்ய வேண்டும். தெய்வம் நம் பக்கத்தில் இருக்கும். அதில் சந்தேகமில்லை. இந்து நிரபராதி என்பது நமக்குத் தெரியும். ஆகவே கவலைப்படாதீர்கள்" என்றார் ராஜாராம்.

என்னதான் மற்றவர்கள் சமாதானப்படுத்தினாலும் நமது மனம் சமாதானமடைந்து விடுகிறதா என்ன? கண்ணீரை வேண்டுமானால் அடக்கிக் கொள்ளலாம். துயரத்தை நமக்குத் தெரியாமலே ஒளித்து வைத்துக் கொள்ள முடியுமா?

இந்துவைக் கடைசியில் லாக்-அப்பில் போய்ச் சந்திக் கத்தான் செய்தேன். அவளைப் பார்த்து நான் கலங்கிப் போனேன். தைரியம் சொல்லக்கூட முடியவில்லை. என்னுடைய வாழ்க்கையில் சம்பந்தப்பட்டவர்களுக்கும் சிறைக்கும் ஏதோ தொடர்பு இருந்து வருகிறது போலும் என்று எண்ணினேன். என் தந்தை சிறையிலிருந்து தப்பிச் செல்ல முயற்சி செய்து அதனால் இறந்து போனது நினைவுக்கு வந்து என்னை நிலைகுலையச் செய்துவிட்டது.

இந்து என்னைத் தேற்றினாள். அவளுடைய குரலில் நான் முன்பெல்லாம் அனுபவித்து ஆனந்தித்த கனிவு இல்லை. வறட்சிதான் இருந்தது. முதலில் ஏமாற்றத்தினால்

அப்படி இருக்கிறுளென்று நினைத்தேன். நாட்கள் செல்லச் செல்ல அவள் சுபாவமே எனக்குப் புரியாத புதிராக இருந்தது.

என்னிடம் மனம் விட்டுப் பேச மறுத்தாள். அதுதான் எனக்குப் புரியவில்லை. தனக்கு முடிவு வந்துவிட்டதாகத் தானே தீர்மானித்துக் கொண்டாள். 'நான் மரண தண்டனை அடையவே விரும்புகிறேன்' என்று கூறி என் மனம் பதறும்படி செய்தாள். வக்கீல் வைத்து வாதாடக் கூடாதென்று பிடிவாதம் பிடித்தாள்.

ஜாமீனில் விடுதலை செய்து அழைத்து வந்த பிறகு அவளுடைய பிடிவாதம் அதிகமாயிற்று.

இந்துவின் நிலையைப் பார்த்து எனக்குப் பச்சாதாப உணர்ச்சி பொங்கியது. ஆனால், அவள் எங்களுடன் வழக்கு நடத்த ஒத்துழைக்காமலிருந்ததை நினைத்தால் இன்னும் கோபம் வருகிறது. அவள் அவ்வளவு விரக்தி மனப்பான்மை அடையாமல் கொஞ்சம் நாங்கள் சொன்னபடி கேட்டிருந்தால் இந்த வரலாற்றை நான் எழுத வேண்டியே நேர்ந்திருக்காது.

அவளுடைய பச்சோந்தி சுபாவம் எனக்கு விளங்கவே இல்லை. சில சமயங்களில் பேசத் தொடங்குவாள். உடனே 'கப்'பென்று வாயை மூடிக்கொண்டு விடுவாள். பேசினுல் பதில் சொல்ல மாட்டாள். சில சமயம் அழுதுகொண்டிருப்பாள். சமாதானப்படுத்தினுல் எரிந்து விழுவாள். சில அபூர்வமான சந்தர்ப்பங்களில்தான் எனக்காக அவள் எவ்வளவு தூரம் ஏங்கினுள் என்பது தெரிய வரும். இரண்டு நிமிஷங்களில் அவள் இதயம் பனிக்கட்டியாக உறைந்து விட்டதோ என்று தோன்றும்படி பேசுவாள். ஏதோ உறுதி செய்து கொண்டவள்போல வாயே திறக்க மாட்டாள். அப்படித் திறந்தால் பனிக்கட்டியிலிருந்து நெருப்புக்கூட வருமோ என்று தோன்றும் வண்ணம் ஒவ்வொரு வார்த்தையும் நெஞ்சைச் சுடும்.

தாங்க முடியாத துக்கங்கள் அனுபவித்து அவளுக்கு உண்மையிலேயே சித்தம் கலங்கி விட்டதோ? 'ஹிஸ்டீரியா' என்பது போன்ற கோளாறு அவளுக்கு ஏற்பட்டு விட்டதோ என்றுகூட நான் கவலைப்பட்டேன்.

அளவுக்கு மீறி அவள் பிடிவாதம் பிடித்த சமயங்களில், பிடிவாதம் செய்யும் குழந்தையை அடித்துச் சொன்னதைக் கேட்கச் செய்வதுபோல, செய்தால் என்ன என்றுகூட எனக்குத் தோன்றிவிடும்.

மிகுந்த செலவில் சென்னையிலிருந்து வக்கீல் நீலகண்டனை வரவழைத்து வழக்கை நடத்தினேன். அவர் இந்துவிடம் தந்தப்பிள்ளையாரைப் பற்றிக் கேட்டால் தனக்கு ஒன்றும் தெரியாதென்று கூறச் சொன்னார். ஆனால், விசாரணையின்போது இந்து உண்மையை ஒளிக்காமல் கூறிவிட்டாள். அவளிடம் அந்தச் சமயத்தில் தாங்க முடியாத கோபம் வந்தபோதிலும் பிறகு, அவளுடைய தீரத்தைப் பற்றி நினைத்து நான் வியந்தேன்.

இந்து சிறைப்பட்ட செய்தி தெரிந்ததும் சுலோசனா எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள் :

"நான் செய்ய இருந்த தவற்றை நினைத்தாலே எனக்குக் கலங்குகிறது. இதுவரையில் நாங்கள் இந்துமதிக்கு இழைத்த அநீதிகள் போதாதென்று நானும் பெரிய குற்றம் செய்ய இருந்தேன். இறைவன்தான் என்னை அதில் இருந்து காப்பாற்றினார். இப்போது உங்களைப் பற்றி நான் கொண்டிருந்த மதிப்பும் மரியாதையும் இன்னும் பல மடங்கு அதிகமாகி விட்டன.

எனக்கு உங்களோடு வந்திருந்து வழக்கை நடத்த ஆவலாக இருக்கிறது. உங்கள் இருவருக்கும் உதவி செய்ய வேண்டுமென்று எனக்கு மனம் துடிக்கிறது. ரமேஷ் அப்படி நான்

செய்வது தவறென்றும், அதனுல் பல கோளாறுகள் விளையலாம் என்றும் கூறுகிருன். என் தந்தைக்கு உங்கள்மீது இன்னும் அதிக மாகப் பகை ஏற்படுமென்கிருன். அதனுல்தான் நான் பொறுமையோடு சகித்துக் கொண்டிருக் கிறேன். இந்துவிடம் நான் மன்னிப்புக் கேட்ட தாகக் கூறுங்கள். அவளுக்கு எழுத எனக்கு துணிவு வரவில்லை.

—சுலோசனு.''

இந்துவைப் பற்றி யார் போலிஸுக்குத் தகவல் சொன்னுர்களென்று விஷயம் வெளியே வரவே இல்லை. அது ஈசுவரமூர்த்தியாகத்தான் இருக்க வேண்டுமென்று நான் ஊகித்தேன்.

வழக்கு திருநெல்வேலியில் உள்ள ஸெஷன்ஸ் கோர்ட்டுக்குப் போயிற்று. இந்துமதியின் கார்டியனை பத்மநாபன் அவர்கள் சாட்சியாக அழைக்கப்பட்டார். அவர் என்னைத் தனியாகப் பார்த்தபோது என்ன சொன்னுர் தெரியுமா? "மிஸ்டர் ராய்! அந்தப் பெண் ணுடைய பெயர் அநியாயமாகக் கெட்டுப் போய்விட்டது. நீங்கள் சுலோசனுவை மணந்துகொண்டு சந்தோஷமாக இருக்கலாம். எதற்காக உங்கள் வாழ்க்கையை இந்து மதியின் வாழ்க்கையோடு சேர்த்துக் கெடுத்துக் கொள் கிறீர்கள்?" என்ருர்.

"நான் நினைத்த சமயங்களிலெல்லாம் என் மனத்தை மாற்றிக் கொள்ளும் வழக்கம் இல்லை, மிஸ்டர் பத்ம நாபன்!" என்றேன் கடுமையாக.

"அப்படியா? நானும் மாற்றிக் கொள்வதில்லை. நீங்கள் என்னுடைய விருப்பப்படி சுலோவை மணந்து கொண்டால் இப்போதுகூட இந்துமதியை எப்படியாவது நான் காப்பாற்றி விடுகிறேன்" என்ருர்.

என் மனத்தில் ஒரு பைத்தியக்கார எண்ணம் உண்டாயிற்று. இந்துவைக் காப்பதற்காக அவர் கூறுவது போலச் செய்தாலென்ன என்று தோன்றியது. அடுத்த கணத்தில் 'அதைவிட இந்து இறந்துபோவதே நல்லது. நான் சுலோவை மணந்து கொண்ட பிறகு இந்து உயிர் வாழ்ந்து என்ன பயன்?' என்ற எண்ணம் உதித்தது. _னே, " உங்கள் யோசனைக்கு மிகுந்த நன்றி. ஆனால், அதை நான் ஏற்றுக்கொள்ள முடியாதவனாக இருக் கிறேன் " என்று கூறிவிட்டு வந்துவிட்டேன். அதன் பிறகு நானும் அவருடன் பேசுவதில்லை. அவரும் விட்டு விட்டார்.

வழக்கு நடந்தபோது இந்துமதியைக் கேட்கக் கூடாத கேள்விகளையெல்லாம் கேட்டுத் துன்புறுத்தினார் பிராஸிக்யூஷன் வக்கீல். இந்துவின் பொறுமையை ஒவ்வொரு கேள்வியும் சோதித்தது. கோர்ட்டுக்கும், விசாரணைகளுக்கும் எவ்வளவோ நாட்களாக வழக்கப் பட்டிருந்த எனக்கே கோபம் கோபமாய் வந்தது. ஆனால், நான் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் இருந்தேன்.

தங்கபாண்டியனையும் சாட்சியாக வரவழைத்தார்கள். தங்கபாண்டியனைப் பார்த்ததும் நான் என் தாபங்களை யெல்லாம் கூறிக் கண்ணீர் விட்டேன். அவற்றை அவன் அனுதாபத்துடன் கேட்டான். ஆனால், அவனால் எனக்கு எந்த உதவியும் செய்ய முடியவில்லை. எங்களுக்கு எதிராக அவன் ஒன்றும் கூறாமல் இருந்தான். அதையே நான் பெரிய உதவியாகக் கருதினேன்.

சொக்கையாவுக்கும் தங்கபாண்டியனுக்கும் எப்போதும் விரோதம்தான். ஆனாலும், அவன் மாமாவின் கட்சியில் சாட்சி கூற அவனை அழைத்தார்கள். அந்த விநோ தத்தைப் பார்த்து நான் வியந்தேன்.

இந்துமதிக்கு விரோதமாகவே எல்லாச் சாட்சியங் களும் இருந்தன. எனக்கே அது நன்றாகத் தெரிந்தது

சாட்சிகள் எவ்வளவு விரோதமாக இருந்தாலும் இந்து நிரபராதி என்று தெரிந்து கொள்வதில் என்ன சிரமம்? இந்துவின் பொன் முகத்தைப் பார்த்தாலே அவள் எந்த விதமான குற்றத்தையும் மனத்திலுல்கூடச் செய்ய மாட்டாள் என்பது தெரிந்துவிடுமே. நான் என் வேலையை ராஜிஞமாச் செய்ததற்கு என்னையே வாழ்த்திக் கொண்டேன். சில சமயம் சாட்சிகளை வைத்துக் கொண்டு நிரபராதியைக்கூடத் தண்டிக்கும்படி நேர்ந்து விடுமே? அதற்கு வேண்டிய கல் மனம் எனக்கு இல்லை. அதை விரும்பவும் இல்லை.

இந்துவிடம் கடிதம் கொண்டு வந்து கொடுத்த ஒரு ஆள் சாட்சி சொன்னான். அவன் தானே இந்துவிடம் கடிதத்தைக் கொடுத்ததாகவும், அதைப் படித்ததும் இந்துமதி பாதிரித் தோட்டத்துக்கு ஓடியதைப் பார்த்த தாகவும் கூறினான். அதில் என்ன எழுதியிருந்ததென்று தனக்குத் தெரியாதென்றும், சொக்கையா அந்தக் கடிதத்தை இந்துவிடம் கொடுக்கச் சொன்னதாகவும், மறுநாள் காலையில்தான் அவர் இறந்துபோன விவரம் தனக்குத் தெரியும் என்றும் அவன் கூறினான். அவன் கூறியது உண்மை என்பது எங்கள் அனைவருக்கும் நன்ருகத் தெரிந்திருந்தது.

தங்கபாண்டியன் சாட்சி கூறியபொழுது, தான் அன்று முழுவதும் திருநந்திபுரத்தில் இருந்ததாகவும், இரவு பத்து மணிக்கு மேல் வீடு திரும்பியதாகவும், காலையில் தான் தனக்குச் சொக்கையா கொலை செய்யப்பட்ட விவரம் தெரியுமென்றும் கூறினான். தங்கபாண்டியன் கூறியதில் சிறிது பொய் இருந்தாலும், அவன் எனக்குச் செய்துள்ள எத்தனையோ உதவிகளை நினைத்து நான் பேசாமலிருக்க வேண்டியதாயிற்று.

பிறகு பத்மநாபன் சாட்சி சொன்னார். இந்துமதியைத் தன்னிடம் ஒப்படைத்துவிட்டு அவளுடைய வளர்ப்புத்

தந்தை மந்திரமூர்த்தி காலஞ் சென்றதாகவும், அவளைத் தான் எவ்வளவோ நன்றாகக் கவனித்துக்கொண்டிருந்த போதிலும் ஓடிப் போய் விட்டதாகவும், அவள் இருக்கு மிடம் தமக்கு அதுவரையில் தெரியாதென்றும் கூறினார்.

இந்துமதியிடம் அவள் ஏன் பெயரை மாற்றி வைத்துக் கொண்டாள் என்று கேட்டதற்கு அவள் பதில் கூற மறுத்து விட்டாள். ஒரு தடவை தன் பெயரை விமலா என்றும், இன்னொரு தடவை அமரதாரா என்றும் அவள் மாற்றி வைத்துக் கொண்டதற்கு அவளுடைய குற்றவாளி மனப்பான்மைதான் காரணம் என்றும் சாதுர்யமாக வாதாடினார் எதிர்க்கட்சி வக்கீல்.

ராஜாராம் என்ற அய்யாக்குட்டியுடன் இந்துமதி ஏன் வசித்து வந்தாள் என்று எதிர்க் கட்சி வக்கீல் கேட்டதும் கோர்ட்டில் சிரிப்பொலி உண்டாயிற்று. என் நெஞ்சில் அக்னித் திராவகத்தை ஊற்றிய மாதிரி எரிச்சலை உண்டாக்கியது. இந்துவின் நிலை மிகவும் பரிதாபகரமாகி விட்டது. அவளுக்கு எந்தக் கேள்விக்குப் பதில் சொல் கிறோம், என்ன சொல்கிறோம் என்ற பிரக்ஞையே போய் விட்டது.

இந்துவிடம் நான் பத்மநாபனைப் பற்றி அவளுக்குத் தெரிந்ததையெல்லாம் எழுதித் தரும்படி கேட்டேன். புதுச்சேரியிலிருந்து வைரம் வரவழைத்ததும், இந்து வுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை அவர் கொடுக்க வில்லை என்பதும் கோர்ட்டாருக்குத் தெரிந்தால் பத்மநாப னுடைய சாட்சியத்துக்கு வலிவு இருக்காதென்று நான் எண்ணினேன். இந்து அதற்கு உடன்படவில்லை. "சுலோசனாவின் தந்தையைக் காட்டிக் கொடுக்க நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்" என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டாள்.

"பத்மநாபன் நமக்கு விரோதமாகச் சாட்சி சொல்லும் போது நாம் எப்படி அதைப் பொறுத்துக் கொள்வது ?"

" எப்படியாவது என் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு தான் ஆகவேண்டும் என்கிற ஆவல் எனக்கு இல்லை " என்றாள் இந்துமதி.

" எனக்கு நீ துரோகம் செய்கிறாய் ?" என்று கூறினேன்.

" அது வேறு விஷயம். நான் அடுத்த ஜன்மத்தில் உங்களைப் பதியாக அடைவேன். நான் என் அம்மா விடம் போகவேண்டும். எனக்கு இந்த வாழ்க்கை அலுத்துவிட்டது " என்றாள் இந்து.

அவளுடைய விவாதத்தைக் கண்டு அழுவதா ? பெருமைப்படுவதா என்று எனக்குப் புரியவில்லை.

கடைசியில் இந்துமதிக்கு மரண தண்டனை என்று தீர்ப்புக் கூறி விட்டார்கள். என் மனம் சுக்கல் சுக்கலாகச் சிதறியது.

# 17. இடிந்த கோட்டை

நீதிபதி இந்துமதிக்கு மரணதண்டனை என்று கூறியதும் அப்படியே கல்லாய்ச் சமைந்துவிட்டேன், ஆனால், இந்துவுக்கு என்று மரண தண்டனை என்று கூறினார்களோ அன்று முதல் அவள் சரியாகிவிட்டாள். அது எனக்கு இன்னும் ஆச்சரியமாக இருக்கிறது. என்ன சாந்தம் வந்துவிட்டது அவளுக்கு ? எங்கிருந்து வந்ததென்றே புரியவில்லை. இந்துவின் அமைதி தவழும் முகத்தைப் பார்க்கும்போது எனக்கு பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டது. அவள் கோபித்துக்கொள்வதே தேவலை என்று தோன்றியது.

பிறகு, " இந்து ! உனக்கு மரண தண்டனை நிறை வேற்றப்படுவதாக இருந்தாலும், அதற்கு முன்னால்

உன்னை மணந்துகொள்கிறேன். நீ என் மனைவியாக ஒரு நாளாவது இருக்கவேண்டும்" என்று கூறிவிட்டுக் கண்ணீர் விட்டேன். இந்துவின் மனம் அப்போது கரைந்து போயிற்று. உறைந்து போயிருந்த பனிக்கட்டி உருகி அன்பு வெள்ளமாகப் பாயத் தொடங்கியது. அந்த ஜீவ நதி எனக்கு உயிரளிக்கத் தொடங்கியது. நம்பிக்கைப் பயிர் அங்கே விளையத் தொடங்கியது. அதன் பிறகு இந்து என்னிடம் எதையும் மறைக்கவில்லை. தன்னுடைய இதயத்தைத் திறந்து என்னிடம் அன்பைப் பொழிந்தாள்.

இந்துவுக்கு மரண தண்டனை என்று தீர்ப்பான விஷயமும், நான் ஹைக்கோர்ட்டுக்கு அப்பீல் செய்தி ருக்கும் விஷயமும் தெரிந்த உடனே சுலோவும் ரமேஷும் புறப்பட்டு வந்தார்கள். ரமேஷ் எவ்வளவு தடுத்தும் சுலோ கேட்கவில்லை. எனக்கு உதவி செய்ய வந்தாள். ஆனால் வரும்போதே காய்ச்சல் வந்துவிட்டது. நிமோனியா என்று தெரிந்ததும் அவளை ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார்கள். ஐந்து நாட்கள் நினைவே இல்லாமலிருந்தது. இப்போதும் காய்ச்சல் முற்றிலும் குணமாகவில்லை. பாவம்! இந்துவைப் பற்றி ரொம்பக் கவலைப் படுகிறாள். இந்துவிடம் நிராசை அடைந்துவிட வேண்டாமென்று கூறச் சொன்னாள்.

பாவம்! இந்துவும் தன் மனவேதனைகளையெல்லாம் என்னிடம் காட்டிக்கொள்வதே இல்லை.

நான் படும் துயரத்தைக் கண்டு இந்து மனம் உருகி எனக்கு உதவி செய்ய வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறாள். என்னுடைய கடமையை நான் நிறைவேற்றுவதில் அவளுக்குரிய பங்கைச் சரியாகச் செய்யவேண்டியது தன்னுடைய கடமைதான் என்று ஒப்புக் கொண்டாள். தான் சரியாக நடந்துகொள்ளாமல் என்னை வேதனைப் படுத்தியதற்காக மன்னிப்புக் கேட்டாள்.

இனிமேல் ஹைறக்கோர்ட்டில் வழக்கு நடக்கப் போகிறது. இந்துவை எவ்வாறேனும் விடுதலை செய்து விடலாமென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. என்ன நடக்கப் போகிறதோ? இறைவனுக்குத்தான் வெளிச்சம்.

இதுவரையில் நடந்ததையெல்லாம் எழுதி முடித்து விட்ட பிறகு எனக்கு இங்கே இருப்பது பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. தங்கபாண்டியனுக்கும் உடம்பு சரியாக இல்லை. இங்கே வெறும் அலைச்சல்தான் மிச்சம்.

எனது கதையை எழுதி முடித்த பிறகு இந்துவிடம் இதைக் கொடுத்துவிட்டு அவள் எழுதியிருப்பதை வாங்கிப் படிக்க வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. உடனே சென்னைக்குப் புறப்பட்டுச் சென்றேன். இருந் தாலும் இந்துவை ஜாமீனில் விட மறுக்கிறார்களே! அவள் சிறையில் இருப்பதை நினைக்கும்போதே என் நெஞ்சு கொதிக்கிறது.

இந்துவைப் போய்ப் பார்த்தேன். அவள் முகத்தில் அமைதி தவழ்கிறது. அவள் கொஞ்சம்கூட சோர்வு அடையவே இல்லை.

அவளுடைய அறைக் கதவைத் திறந்ததும், "இந்து!" என்று கூப்பிட்டேன். அதற்கு மேல் பேச முடியவில்லை.

இந்து அருகில் வந்தாள். "நீங்கள் ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள்? எனக்கு மரணத்தைக் கண்டு சிறிதும் பயமில்லை. இந்த ஜன்மத்தில் இல்லாவிட்டாலும், அடுத்த ஜன்மத்தில் உங்களை என் பதியாக அடைவேன்" என்றாள். அவள் கண்களிலும் கண்ணீர் பொங்கியது.

நான் அதைத் துடைத்துவிட்டு, "இந்து! நீ கேட்ட படி நான் என் கதையை ஒரு சிறு சம்பவம்கூட விட்டுப்

போகாமல் எழுதி வந்திருக்கிறேன். நீயும் உன் கதையை எழுதி முடித்துவிட்டாயல்லவா ?" என்று கேட்டேன்.

இந்து ஒரு கத்தை காகிதங்களை எடுத்து என்னிடம் கொடுத்தாள். " என்னைப்போன்ற பாக்கியம் எந்தப் பெண்ணுக்கும் கிடைக்காது. என்னுடைய வாழ்க்கை முழுவதையும் அப்படியே உங்களுடன் பங்கிட்டுக்கொள்ள எனக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. உங்கள் கதையைப் படிப்பதன்மூலம் அது பூரணத்துவம் அடைந்துவிடும். எனக்கு என்ன நேர்ந்தாலும் என்னுடைய அன்பை நீங்கள் மறக்கமாட்டீர்களே ? அதில் சந்தேகப்பட மாட்டீர்களே ?" என்று கேட்டாள். மறுபடியும் அவளுக்கு கண்ணீர் பொங்கி வந்தது.

" இந்து ! புன்னகையே தவழ வேண்டிய உன் பொன் முகத்தில், கண்ணீரே வழியும்படி நான் விட்டிருக்கிறேன். என்னை மன்னித்துவிடு. இறைவன் அருளால் எல்லாம் சீக்கிரம் சரியாகி நீ என்னுடையவளாகி விடுவாய் என்று நம்புகிறேன். அப்போது பார், உன் கண்களில் ஒரு சொட்டு ஜலம் வர நான் அனுமதிக்கிறேனு என்று ?" என்றேன்.

இந்து சட்டென்று குனிந்து என்னை நமஸ்கரித்தாள். " நீங்கள் இப்படிச் சொன்னதே எனக்குப் போதும். நான் செய்த தவறுகளையெல்லாம் மன்னித்துவிடுங்கள். உங்களை நான் அலட்சியம் செய்ததாக நடந்துகொண்டதெல்லாம் உங்கள்மீது எனக்கு ஏற்பட்ட வெறுப்பினுல் அல்ல ; அளவிலாத அன்பினுல்தான் என்று என் கதையைப் படித்தால் தெரிந்துகொள்வீர்கள் " என்ருள்.

" இந்து ! உனக்கு என்மீது உள்ள பிரேமைக்குச் சாட்சி எனக்கு வேண்டியதில்லை. சூரியன் பிரகாசிப்பதற்கும், காற்று வீசுவதற்கும், மலர் மணம் கமழ்வதற்கும் சாட்சி வேண்டுமா ? அதை அந்தந்த கணத்திலேயே

உணர முடியவில்லையா ? உன் மனத்தில் அன்புப் புனல் பாய்ந்துகொண்டிருக்கும் வரையில் அது எனக்குத் தெரிந்துகொண்டுதான் இருக்கும். நான் எங்கே இருந்தாலும் இந்த அன்பு வெள்ளம் என்னை நோக்கிப் பாய்ந்து வந்துகொண்டே இருக்கிறது " என்றேன்.

இந்து என் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவளுடைய நீண்ட இமைகள் என் கைகளில் குறுகுறுத்தன. கையை எடுக்கவே கூடாதென்று தோன்றியது. அவளுடைய களைப்படைந்த கண்களைத் திறக்க அனுமதிக்கக் கூடாதென்று தோன்றியது. அவளை...என் எண்ணம் தொடர்வதற்குள் இந்து சிந்தனையைக் ...ாள. உஙகள கை ஏன இப்படி ஜில்லென்றுஇருக்கிறது?" என்றாள்.



" உனக்கு இதமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் " என்றேன்.

இந்துவின் முகத்தில் நாணப் புன்னகை அரும்பியது. அந்த அழகில் நான் சொக்கிப் போனேன்.

மறுபடியும் கண்களில் ஒற்றிக்கொண்டாள் இந்து. அதற்குள் நேரமாகிவிட்டது. இந்துவின் கதையை எடுத்துக்கொண்டு நான் கிளம்பினேன்.

இந்து என் கரத்தைப் பிடித்து நிறுத்தினாள். " இதுவரையில் எழுதியது போலவே தினமும் நீங்கள் என்ன செய்தீர்களென்று எழுதி வைக்கிறீர்களா ?" என்று கேட்டாள்.

" கண்டிப்பாய் எழுதுகிறேன், இந்து !" என்றேன்.

குங்குமத்துறை வந்து சேர்ந்ததும் இந்துவின் கதையைப் படித்து முடித்தேன். அப்படியே ஒரு உணர்ச்சிச் சித்திரமாக அது விளங்குகிறது. அதைப் படிக்கும்போது அவளுடைய உள்ளத்தை, அதாவது நான் என்னுடைய உள்ளத்தையே அறிந்துகொள்வது போல் தெரிந்துகொள்ள முடிந்தது.

இந்துவுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற எண்ணியிருக்கிறேன். அதுமட்டுமல்ல, இவைகளை நான் எழுதுவது பின்னால் எங்களுக்கே படிப்பினையாக இருக்கும். நாங்கள் செய்த தவறுகள் தெரியும். இந்துவின் பிடிவாதத்தாலும், விரக்தி மனப்பான்மையாலும் இன்னும் சிக்கலாகிவிட்ட விஷயத்தை முடிச்சு அவிழ்க்க நான் எப்படியெல்லாம் முயற்சித்தேன் என்பதை அவள் பிறகு தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

* * *

இன்று ஒரு விந்தை நிகழ்ந்தது. நான் இந்துவின் கதையை இரவு வெகு நேரம் படித்தேன். அதற்குப் பிறகும் தூக்கம் வரவில்லை. அதிகாலையில் எழுந்து துயரம் நிறைந்த மனத்துடன், நிராசையால் நைந்த நெஞ்சுடன் பாதிரித் தோட்டத்துக்குச் சென்றேன.

எங்கள் அன்பு வளர்ந்த அந்தத் தோட்டத்தைப் பார்த்தபோது என் நெஞ்சில் சிறிது இன்பம் சுரந்தது. பிறகு அதே தோட்டம் எங்களுடைய அன்புக்குச் சமாதியாகவும் ஆகிவிடுமோ என்று தோன்றியதும் மனத்தில் பொறுக்க முடியாத வேதனை ஏற்பட்டது. அப்போது நான் வழக்கமாக உட்கார்ந்து என் கதையை எழுதிய இடத்தில் ஒரு கவர் கிடப்பதைக் கண்டேன். அளவிலாத ஆச்சரியத்துடன் அதை எடுத்துப் பிரித்துப் படித்தேன்.

“ ஊமையன் கோட்டைக்கு உடனே வரவும். முக்கியமான விஷயங்கள் பல தெரிவிக்கிறேன்.—பகத்சிங் ” என்று எழுதியிருந்தது.

ஆவல் என்னை உந்தித் தள்ள நேரே மலைமீது ஏறிச் சென்றேன். பசி, தாகம் எதுவும் தெரியவில்லை. ஆவல் என்பது ஒன்றுதான் உலகத்தில் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

நான் அவ்வளவு சிரமப்பட்டு ஏறிச் சென்றது வீண் போகவில்லை. மலைமீது எனக்கு முன்னால் யாரோ ஏறிச் சென்றுகொண்டே இருப்பதாக எனக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. பாதைக்குப் பக்கத்தில் சில சமயம் சந்தடி கேட்கும். அதற்குக் காரணம் படிகள்போல அமைந்துள்ள மலைப் பாதையில், மேலே உள்ள பாதையிலிருந்து கற்கள் விழுவதுதான்என்றுதெரிந்து கொண்டேன்.



எனக்கு பரபரப்பு அதிகமாயிற்று. இந்துவின் கதை மூலம் பகத்சிங்கைப் பற்றி நான் தெரிந்துகொண்டிருந்தபடியால் ஒரே ஓட்டமும் நடையுமாக ஏறிச் சென்றேன். நேரமாக ஆக என் கால்கள் தள்ளாடின. சரியான தூக்கமும், ஆகாரமும் இல்லாததால் எனக்கு உடல் ரொம்பச் சோர்ந்துபோயிருந்தது. ஆகவே மலைமீது ஏறுவது ஒரு சோதனையாக இருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு ஏறிச் சென்றேன்.

இடிந்து சிதிலம் சிதிலமாகக் குட்டிச் சுவர்களுடன் நின்ற கோட்டையைப் பார்த்தபோது எனக்கு என்னுடைய வாழ்க்கையைப் பார்ப்பது போலிருந்தது. என் வாழ்க்கை இப்படித்தானே இருந்தது? நான் கட்டிய கோட்டைகள் எல்லாம் விழுந்து விட்டன. ஆனால் அஸ்திவாரம் இருக்கிறது. அதைத் திருப்பிக் கட்ட முடியுமா? அதற்குப் 'பகத்சிங்' உதவி செய்வாரா என்று எண்ணமிட்டேன்.

கோட்டையின் அருகில் சென்றதும் எனக்கு உள்ளே போகத் தயக்கமாக இருந்தது. முன்பு எப்போதோ மந்திர மூர்த்திப் பண்ணையார் ஊமையன் கோட்டையில் " சொக்கையாப் பாண்டியனைக் கொண்டு வா !" என்று ஒரு ஆவி சத்தம் போட்டுக் கொண்டிருப்பதாகக் கூறியது ஞாபகம் வந்தது. பட்டப் பகலில் எனக்குப் பயம் உண்டாவதைக் குறித்து நானே வெட்கமடைந்தேன்.

' ஒருவேளை இது ஈசுவரமூர்த்தியின் சூழ்ச்சியாக இருக்குமோ ? இங்கே என்னைக் கொன்று போட்டு விட்டால்கூட யாராலும் கண்டு பிடிக்க முடியாதே. இந்துவின் கதி என்ன ஆகும் ? அசட்டுத் தைரியத்தினால் துன்பத்தை வரவழைத்துக் கொள்வதா என்றும் தோன்றியது. பின்னர் " பகத்சிங் " என்று கையெழுத் திட்டு வேறு யாராலும் கடிதம் எழுதியிருக்க முடியாது என்று தீர்மானித்தேன்.

இடிந்த கோட்டை வாசலில் நான் ஒரு அடி எடுத்து வைத்ததும் எதிரேயிருந்து ஒரு உருவம் வெளிப்பட்டது. அதைக் கண்டு நான் திக்பிரமை அடைந்தேன்.

# 18. காசிலிங்கத்தின் கதை

உள்ளத்தின் படபடப்பு அடங்கியதும் அந்த உருவம் மனித உருவந்தான் என்று எனக்குப் புரிந்தது. யோசிக்கும் சக்தி ஒரு கணத்துக்குப் பிறகுதான் வந்தது. இந்த முகம் யாருக்குச் சொந்தமானது ?......ஆ ! இதோ நினைவுக்கு வந்து விட்டது. இது என்னை முன்னொரு காலத்தில் காப்பாற்றிய உத்தமரின் முகம்தான். பிறகு இந்துமதியின் வீட்டிலிருந்த போட்டோ ஆல்பங்களில் பார்த்த அவளுடைய தந்தையின் முகம்தான். ஆனால் இப்பொழுது எவ்வளவு மாறிப் போய் விட்டது ?

எதிரே கண்ட மனிதரை என்ருல் ஒரு மனிதராக எண்ண முடியவில்லை. உருவம் என்றுதான் நினைக்க முடிந்தது. தலை வெண்மையாய் நரைத்திருந்தது. உடல் குச்சி மாதிரி இருந்தது. தாடியும் மீசையும் வளர்ந்து அதன் உள்ளே கண்கள் ஒளிந்து கொண்டிருந்தன. எனக்குப் பயில்வான் காசிலிங்கத்தை அந்த நிலையில் பார்த்தபோது தாங்கமுடியாத விசனம் உண்டாயிற்று. வார்த்தைகளே வெளி வரவில்லை.

“ என்ன தம்பி! மரம் போல நின்று விட்டாயே ? என்னைத் தெரியவில்லையா உனக்கு ? என்னைச் சொக்கையாவின் ஆவி என்று நினைத்து விட்டாய் போல் இருக்கிறது !” என்று கரகரத்த, கம்பீரமான குரலில் கேட்டார் காசிலிங்கம்.

“ உங்களை என்ருல் மறக்க முடியுமா ? ஆனல் இந்த நிலையில் பார்த்ததால் திகைத்துப் போய் விட்டேன்.”

“ நீ ரொம்பக் களைப்பாக இருக்கிருய். வா, நான் சுட்டு வைத்திருக்கும் சோளக் கொண்டையைச் சாப்பிட்டு விட்டுத் தண்ணீர் குடி. பிறகு பேசலாம்” என்று என் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்ருர் காசிலிங்கம்.

கோட்டையின் ஒரு முடுக்கில் ஒரு அடுப்பு புகைந்தது. அதன் அருகில் சோளக் கொண்டைகள் சுட்டு வைக்கப் பட்டிருந்தன. என்னுடைய பசிக்கு அந்தச் சோளம் மிக ருசியாக இருப்பதாகத் தோன்றியது.

நான் அங்கே விழுந்து கிடந்த ஒரு கல் தூணின் மீது உட்கார்ந்தேன். அவரும் உட்கார்ந்தார்.

“ தம்பீ ! உன்னிடம் எவ்வாறு பேச்சை ஆரம்பிப்பது என்று தெரியவில்லை. நீ பாவம்! ரொம்பத் துன்பப் படுகிருய் என்று உன்னைப் பார்த்தாலே தெரிகிறது. ஆனல் நீயாவது அவளுக்கு அருகில் இருக்கிருய். நான்

அவளுக்கு அருகில் வரக்கூட முடியாது. ஐயோ! குழந்தையின் மனம் தனக்கு விதித்த தண்டனையைப் பற்றிக் கேட்டபோது என்ன பாடு பட்டிருக்கும்? எல்லாம் இந்தப் பாவியால் வந்தது. நான் உலகத்தினரைப் போல என் மனைவியுடனும் குழந்தையுடனும் வாழ்க்கை நடத்தியிருந்தால் இப்படியாகி யிருக்குமா? என் கண்மணிக்கு விதிக்கப்பட்ட தண்டனையைக் கேட்டு இப்படி நான் தவிக்க நேர்ந்திருக்குமா? நான் செய்த பாவம்! ஐயோ சந்திரமணி! உனக்கும் குழந்தைக்கும் நான் துரோகம் செய்து விட்டேன்" என்று கூறிவிட்டுத் தலையில் படீர் படீரென்று அடித்துக் கொண்டார்.

நான் வேகமாக எழுந்து அவர் கையைப் பிடித்துக் கொண்டேன். "பதறாதீர்கள். இன்னும் ஒன்றும் ஆகி விடவில்லையே? இந்து குற்றவாளி இல்லை என்பதை நிரூபிக்கத்தானே நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். எனக்குத் துணையாக நீங்களும் இருக்கிறீர்கள் என்பதால் எனக்கு அளவில்லாத நம்பிக்கை ஏற்படுகிறது. அவளை எப்படியும் காப்பாற்றி விடலாம் என்று தைரியம் பிறக்கிறது."

"நிச்சயமாக என் குழந்தையைக் காப்பாற்றுவாயா? என் கண்மணியை மரண தண்டனையிலிருந்து மீட்பாயா? என்னை நினைத்துப் பார் தம்பி! நான் செய்த பாபம் என்னைத்தான் பிடித்ததென்றால் என் குழந்தை ஒன்று மறியாத இந்துவையுமா பிடிக்க வேண்டும்? அந்தப் படுபாவி சொக்கையா என் வாழ்க்கையையும் கெடுத்தான். என் குழந்தையின் வாழ்க்கையையும் குலைத்துவிட்டானே? சந்திரமணி உயிரோடு இருந்தால் இப்படி நடப்பதைப் பார்த்துச் சகிப்பாளா? நல்ல வேளையாக அவள் செத்துப் போய் விட்டாள். இந்துமதியின் தண்டனையைப் பற்றிப் பத்திரிகையில் படித்தது முதல் சந்திரமணியின் ஆவி என்னைச் சுற்றுகிறது தம்பி. என்னைப் பார்த்து, 'நீதான்

என் கண்மணியை நிர்க்கதியாய் விட்டாய். உன்னால்தான் என் குழந்தை சிறையில் கண்ணீர் வெள்ளத்தில் மிதக்கிருள். உன்னால்தான் என் குழந்தை மரண தண்டனை அடையப் போகிருள்' என்று கூறிக் கொண்டே இருக்கிருள். என்னால் அந்தப் புலம்பலைச் சகிக்க முடியவில்லையே, என்ன செய்வேன் ?" என்று விம்மினர் காசிலிங்கம்.

அவருடைய துயரத்தைக் கண்டதும் எனக்கும் என் துயரம் குபீரென்று பொங்கி வந்தது. ஒரு தந்தையின் சோகம் எப்படி இருக்குமென்பதை நான் அறிந்ததில்லை. இந்துமதியை எந்தனையோ வருஷங்களாகப் பிரிந்திருந்தவர் காசிலிங்கம். ஆயினும் அவருக்குத் தன் அருமைப் புதல்வியின் மீது என்ன வாஞ்சை ? கிட்டத் தட்டப் பைத்தியம் பிடித்த நிலையை அடைந்து விட்டாரே! பாவம் !

நானும் துயரம் தாங்காமல் கண்ணீர் விட்டேன். இந்த வழக்கில் நான் இந்து நிரபராதி என்று சந்தேகமற நிரூபிக்க முடியா விட்டால் என்னவாகும் ? அதை நினைக்கும்போதே என் அங்கங்களெல்லாம் பதறின.

என்னைப் பார்த்த காசிலிங்கம் உடனே தம் புலம்பலை நிறுத்தினர். அவருடைய கண்ணீரும் நின்றது.

" தம்பீ ! உன்னை நான் இங்கே வரச் சொன்னது என் பாப புண்ணியங்களைப் பற்றி ஆராய்வதற்காகவோ, அல்லது நான் படும் வேதனையைப் பகிர்ந்து கொள்ளவோ அல்ல. உன்னை இப்படி மனம் நோகச் செய்துவிட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது."

" நீங்களா என் மனத்தை நோகச் செய்தீர்கள் ? என்று நான் சீமை சென்றேனே அன்று முதல் என் மனம் நொந்து கொண்டுதான் இருக்கிறது. இந்துவை முதலில் சிறைப்படுத்தியது முதல் நெஞ்சம் எரிமலையைப்

போல் குமுறிக்கொண்டிருக்கிறது. உண்மையில் உங்களைப் பார்த்த பிறகு எனக்கு ஆறுதல் ஏற்பட்டிருக்கிறதென்று கூற வேண்டும். உங்களுடைய துயரைவிட என் துயரம் அதிகமானதல்ல என்று தேற்றிக் கொள்கிறேன்."

"அப்படிச் சொல்வது சரியல்ல, தம்பி! என் வாழ்க்கை இனிமேல் ரொம்ப நாள் இல்லை. ஆனால் உனக்கு இப்போதுதான் தொடங்கியிருக்கிறது. நான் ஆரம்பத்தில் சந்திரமணியை மணந்து கொண்டபோது நடந்ததை யெல்லாம் நினைத்துக் கொண்டால், குழந்தைகளாகிய நீங்கள் இருவரும் எங்களைப் போலக் கொஞ்ச நாளாவது இருக்க வேண்டுமென்று ஆசையாக இருக்கிறது. அதன் பிறகு இந்துமதி செத்துப் போனால் கூடப் பரவாயில்லை. அந்த இன்ப நினைவுகளிலேயே காலம் கழித்து விடலாம். நான் என் யோசனையைச் சொல்கிறேன். அதைப் பற்றி முடிவு செய்ய வேண்டியது நீதான்" என்றார்.

"நீங்கள் வெறும் யோசனை மட்டும் சொன்னால் போதாது. உங்களுக்குத் தெரிந்தவரையில் இந்தக் குங்குமத்துறைக்கு நீங்கள் வந்ததிலிருந்து நடந்த எல்லா விவரங்களையும் எனக்குச் சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால் அதிலிருந்து இந்துவை நிரபராதி என்று நிரூபிக்க எனக்கு ஏதேனும் விஷயம் கிடைக்கலாம்" என்றேன்.

காசிலிங்கம் தம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "இதை நானே உன்னிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். நீயே கேட்கிறாய். எப்படி ஆரம்பித்துச் சொல்வது என்றுதான் எனக்குப் புரியவில்லை" என்று கூறிவிட்டுச் சிறிது தண்ணீர் பருகினார். சற்று யோசித்தார். பிறகு தம்முடைய கதையைச் சொல்ல ஆரம்பித்தார்

இடிந்த கோட்டையின் சூழ்நிலைக்கு மத்தியில் காசிலிங்கம் தம்முடைய துயரமான வரலாற்றைக் கூற ஆரம்

பித்தார். நான் கேட்கும்போதே பல சமயங்களில் கண்ணீர் விட்டு விட்டேன். அவருடைய வார்த்தைகளிலேயே அந்த அதிசயக் கதையை எழுதுகிறேன்.

" நான் இந்த ஊருக்கு வந்தபோது இந்து பிறக்க வில்லை. மந்திரமூர்த்தி என்ற புண்ணியமூர்த்தி எங்களுக்குப் புகலிடம் அளித்திராவிட்டால் நாங்கள் இன்னும் எத்தனையோ கஷ்டங்களை அடைந்திருப்போம். அவர் அவ்வளவு தூரம் எங்களிடம் பிரியம் காட்டியதற்குப் பாவியான நான் என்ன செய்தேன் ? ஒன்றும் செய்யவில்லை. அவருக்குப் பாரமாக என்னுடைய மனைவியையும், குழந்தையையும் விட்டு விட்டு ஓடிப் போனேன்......"

" அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள் ? இந்து அவருக்குப் பாரமாகவே இல்லை. அது எனக்கு நன்ருகத் தெரியும். அவருக்குக் கிடைக்காத செல்வத்தை நீங்கள் அளித்தீர்கள் " என்றேன் நான்.

" அது உண்மைதான் தம்பீ. அந்தப் பெரியவருடைய பெருந்தன்மை அவ்வாறு எண்ணியது. சாதாரண மனிதர்களாக இருந்தால் என் மனைவியைச் சமையல்காரியாக நினைத்திருப்பார்கள். ஆனல், அவர் இருவரையும், தம்முடைய பெண்ணும், பேத்தியுமாக நினைத்தார். அவர் அவ்வளவு நல்லவராக இருந்ததால்தான் நான் ஓடிப் போனேன். இல்லா விட்டால் இருவரையும் நிர்க்கதியாய் விட்டுப் போயிருப்பேனு ? பார்! சில மிக நல்ல விஷயங்கள் கூடச் சில சமயங்களில் தீமையாக முடிகின்றன......அது கிடக்கட்டும். என் கதையைச் சொல்கிறேன் கேள்.

இங்கு வந்தது முதல் நாங்கள் ஆனந்தமாக இருந்தோம். இந்து பிறந்த பிறகு குதூகலம் அதிகமாயிற்று. அந்த ஜமீன்தார் சிநேகம் மட்டும் எனக்குக் கிடைத்திராமலிருந்தால் நாங்கள் சந்தோஷமாகவே இருந்திருப்போம்.

தங்கபாண்டியனுடைய தந்தை என்னிடம் நம்பிக்கை கொண்டார். தம்மிடம் விரோதம் பாராட்டியவர்களைப்

பற்றியெல்லாம் கூறினர். ஒரு நாள் தம்மை யாரோ தொடர்ந்து வருவதாகத் தமக்குத் தோன்றுவதாகவும், இரவில் தம் அறைக்கு வெளியே யாரோ நடமாடுவதாகத் தமக்குத் தோன்றுவதாகவும் கூறினர். இப் பயப் பிராந்தியினல் அவர் பல இரவுகள் தூங்குவதில்லை என்பதையும் நான் அறிந்திருந்தேன்.

'காசிலிங்கம்! என் குடும்பத்திலேயே ஒரு சாபக்கேடு இருக்கிறது. ஏழு தலை முறையாக எங்கள் குடும்பத்தில் ஜமீன்தாராக இருந்தவர்கள் யாரும் இயல்பாக இறந்து போனதில்லை. ஒருவேளை எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என் மகனைக் கவனித்துக் கொள்ளுங்கள். அவனையும் ஏதும் செய்துவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று ஜமீன்தார் ஒரு நாள் கூறினர்.

இப்படி இருக்கையில்தான் ஒரு நாள் அவர் கொலை செய்யப்பட்டு இறந்து போனர். என்னை அந்தக் கொலை செய்ததாகப் பழி சுமத்தப் பார்த்தார்கள்.

தெய்வாதீனமாக அதிலிருந்து தப்பி நான் திரும்பி வந்தேன்.

பிறகு ஒரு தடவை நானும் சந்திரமணியும் மலைச் சாரலில் சொக்கையாவைச் சந்தித்த பொழுது அவனிடம் இருந்த வாலறுந்த நாய் என் சிந்தனையைத் தூண்டியது. அதை எங்கே பார்த்திருக்கிறேமென்று என் மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டேன். கடைசியில் என் நண்பனுன புகைப்பட நிபுணர் சேகரின் புகைப்பட ஆல்பத்தில் பார்த்திருக்கிறேனென்பதும், அதைப் பற்றி அவன் கூறிய விஷயமும் ஞாபகத்துக்கு வந்தன.

அந்த வாலறுந்த நாய் சொக்கையாப் பாண்டியரின் ஒன்றுவிட்ட சகோதரருடையது. அவருக்கு நிறையச் சொத்துக்கள் இருந்தன. ஆனல், அவருக்குச் சந்ததி இல்லை. புகைப்பட நிபுணர் சேகரின் வீட்டுக்குப் பக்கத்து

வீட்டில் அவர் இருந்தார். சேகருக்குப் படம் பிடிப்பதில் உள்ள ஆசையால் எதைக் கண்டாலும் படம் பிடித்து வைப்பார். ஒருநாள் சொக்கையாவின் சகோதரர் முத்து ராமலிங்க பாண்டியர் நாயுடன் நடந்து செல்லும்போது பின் பக்கத்திலிருந்து படம் எடுத்தார் சேகர். அவர் அறியாமல் இன்னும் இரண்டு மூன்று படங்களும் எடுத்தார்.

இந்தப் படங்களை எடுத்த இரண்டு நாட்களுக் கெல்லாம் சொக்கையா பக்கத்து வீட்டுக்கு வந்து சேர்ந் தார். தோட்டத்தில் நிற்கும்போது இந்தச் சொக்கையாவை அடிக்கடி பார்த்திருக்கிறார் சேகர். வேலைக்காரர்கள் மூலம் முத்துராமலிங்க பாண்டியருக்கு இவர் தம்பி முறை ஆகவேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டார்.

சொக்கையா சேகருடன் சிநேகம் செய்து கொண்டார். அவருடைய படங்களை வியந்து பாராட்டினார். தம்மைக் கூடப் போட்டோ எடுக்கச் சொன்னார். அதற்கு நிறையப் பணம் கொடுத்தார். சொக்கையாவுக்கு வேட்டையில் மிகப் பிரியம். அவர் வீட்டுத் தோட்டத்தில் இருக்கும் மரங்களில் துள்ளி ஓடும் அணில்களையோ, சத்தமிடும் காக்கைகளையோ கூடச் சில சமயம் தம் வேட்டைத் துப்பாக்கியினால் பயிற்சிக்காகச் சுட்டுப் பார்ப்பதுண்டு.

ஒருநாள் சொக்கையாப் பாண்டியர் ஒரு மரத்தில் உட்கார்ந்திருந்த ஏதோ ஒரு பறவையைக் குறி பார்த்துக் கொண்டிருந்தபோது தற்செயலாகக் கையில் காமிராவுடன் அங்கே சென்ற சேகர் சட்டென்று அதைப் படம் பிடித்தார். இதைச் சொக்கையா கவனிக்கவில்லை.

ஒரு நாளிரவு சேகர் தம் வீட்டு மாடியிலிருந்து பார்த்த போது பக்கத்து வீட்டு மாடியில் கண்ணாடி ஜன்னலில் நிழலைக் கவனித்தார். உள் பக்கத்தில் ஒரு மங்கலான வெளிச்சம் இருந்திருக்க வேண்டும். கண்ணாடி ஜன்னல்

மூடியிருந்தது. அதன்மீது விழுந்த நிழலைப் பார்த்தபோது கையில் ஒரு துப்பாக்கியுடன் யாரோ ஒருவர் செல்வதாகத் தோன்றியது சேகருக்கு. சிறிது நேரத்துக்கெல்லாம் விளக்கு அணைந்து விட்டது. வெகுநேரம் அங்கு நின்றிருந்தும் சேகருக்கு ஒன்றும் தெரியவில்லை சேகரின் மனத்தில் இனந்தெரியாத ஒரு பயம் உண்டாயிற்று.

# 19. சொக்கையாவின் பயம்

அன்று இரவில் துப்பாக்கியுடன் சென்றது சொக்கையாவாக இருக்கலாமென்று சேகருக்குத் தோன்றியது. ஆனால், ஒன்றையும் நிச்சயம் செய்துகொள்ள முடியாதவராகப் படுக்கையில் சென்று படுத்துக்கொண்டார். உடனே சேகர் நன்ருகத் தூங்கியும் விட்டார்.

காலையில் போலீசார் வந்து கூப்பிட்ட பிறகுதான் அவர் விழித்துக் கொண்டார், அவரைப் போலீசார், 'ஏதாவது இரவு சத்தம் கேட்டதா?' என்றும், 'யாராவது பக்கத்து வீட்டையோ, தம் வீட்டையோ சுற்றி வந்தார்களா?' என்றும் பலவிதமாகக் கேள்விகள் கேட்டார்கள். தமக்கு ஒன்றும் தெரியாதென்று மறைத்து விட்டார் சேகர். வீணுக வம்பில் அகப்பட்டுக் கொள்ளக் கூடாதென்பது அவர் கொள்கை.

முதல் நாள் இரவு முத்துராமலிங்க பாண்டியர் இறந்து போனதாகவும், அவர்மீது பாய்ந்திருந்த தோட்டா வேட்டைத் துப்பாக்கிகளுக்கு உரியது என்றும் தெரிந்து கொண்டபோது தாம் மௌனம் சாதித்ததற்காகப் பின்னல் சேகர் மிகவும் வருந்தினுர். சொக்கையாதான் அவருடைய சொத்துக்களை அடைவதற்காக அவரைக் கொலை செய்திருக்க வேண்டுமென்று நம்பினுர். ஆனல், அதற்குள்

காரியங்கள் வெகு தூரம் சென்று விட்டன. வீட்டிலிருந்த சில முக்கியமான சாமான்கள் காணமல் போய் இருந்த படியால் யாரோ திருடர்கள்தான் அவரைக் கொன்று விட்டுச் சாமான்களைத் திருடிக்கொண்டு போய் இருக்க வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டார்கள் போலீஸார்.

சேகருக்கு எல்லாவற்றையும்விட வியப்பளித்தது என்னவென்ருல் திடீரென்று பக்கத்து வீட்டிலிருந்த வால் அறுந்த நாயைக் காணுததுதான். அதைப் பற்றி யாரைக் கேட்டாலும் ஒரு விவரமும் தெரியவில்லை.

இதெல்லாம் நடந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு நான் சேகரைப் பார்க்கச் சென்றேன். சந்திரமணி அப்போது ஆஸ்பத்திரியில் கால் முறிந்து படுத்துக்கொண் டிருந்தாள். சர்க்கஸில் நான் சேர்ந்த புதிதிலிருந்து சேகர் எனக்கு நண்பன். சந்திரமணியைக் குணப்படுத்து வதற்குப் பணம் வேண்டியிருந்தது. அவன் மூலம் சந்திர மணியின் நகைகளை விற்கலாம் என்பதற்காகவும், அவனிடமே கொஞ்சம் கடன் வாங்கிக் கொள்ளலாம் என்றும் எண்ணி அங்கு சென்றேன். ஒரு நாள் அவ னுடன் தங்கியிருந்தபோது என்னுடைய கஷ்டங்களை யெல்லாம் அவனிடம் கூறினேன். அவனும் தன்னைப் பற்றிக் கூறினன். போட்டோ ஆல்பத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது வாலறுந்த நாயின் படத்தைப் பார்த்தேன். பக்கத்து வீட்டிலிருந்த நாய் அது'வென்றும், அந்த வீட்டு எஜமானர் இறந்து போனதற்கு முதல் தினத்திலிருந்து அதைக் காணவில்லை என்றும் சேகர் என்னிடம் கூறினன். அதைப் பற்றிய விஷயங்களை நான் என் கவலையில் காதில் வாங்கிக் கொள்ளவேயில்லை. சொக்கையாவிடம் அதைப் பார்த்த பிறகுதான் ஞாபகம் வந்தது. உடனே சேகரை வரவழைத்தேன். அவனிட மிருந்து மேலே சொன்ன முழு விவரங்களையும் தெரிந்து கொண்டேன்.

நான் கலாட்டா வழக்கினல் தண்டனை அடைந்து சிறையிலிருந்தபோது ஒரு புரட்சிக்காரரை அங்கே பிடித்துப் போட்டிருந்தார்கள். பிரிட்டிஷ் ராஜாங்கத்துக்கு விரோதமாகச் சதி செய்ததாக அவர்மீது குற்றம் சுமத்தி யிருந்தார்கள். அவருடைய பெயர் வீரமுத்து. நோயினல் மிகவும் மெலிந்தவர். உடல் வலிமையே கிடையாது. ஆனல் உள்ளத்தில் ஒரே வீர உணர்ச்சிதான். அவரை அச் சிறை அதிகாரிகள் கொடூரமாக நடத்தினர்கள். அனவசியமாக அடித்தார்கள். அதிக வேலை கொடுத் தார்கள். நான்தான் நண்பனுக்கு நண்பனயிற்றே. அவர் என்னிடம் பிரியமாக இருந்தபடியால் ஒரு நாள் சிறை யதிகாரி அவரைச் சாட்டையால் அடித்தபோது குறுக்கே விழுந்து அந்த அடியை நான் வாங்கிக் கொண்டேன். அதன் பயனகத்தான் எனக்குத் தண்டனை நீடித்தது.

நாங்கள் சிறையிலிருந்தபோது அவர் தம்முடைய வீரம் ததும்பும் பேச்சால் பணக்காரர்களும், ஜமீன்தார் களும் எவ்வாறு ஏழை மக்களின் ரத்தத்தை உறிஞ்சு கிறர்களென்றும், உலகத்தில் ஜனநாயக ஆட்சி ஏற்படு வதுதான் அதற்கு விமோசனம் என்றும் கூறி வந்தார். எனக்கும் சொக்கையாவின்மீது இருந்த வெறுப்பினல் அவர் கூறியதெல்லாம் உண்மையென்று பட்டது. ஈசுவர மூர்த்தியும், சொக்கையாவும், சந்திரமணியின் மாமன் மார்களும் எங்களுக்கு இழைத்த கொடுமைகள் கொஞ்ச நஞ்சமில்லை. அவற்றையெல்லாம் எண்ணி எண்ணி அவர்கள்மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று என் ரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது.

நான் விடுதலையடைந்து வெளியே வந்த பிறகு, வீரமுத்துவும் சீக்கிரத்தில் தப்பி வந்து விட்டார். குங்குமத் துறையை அடுத்த மலைக்காடுகளில்தான் அவர் வசித்து வந்தார். என்னை அவர் சொக்கையாவைப் பழி வாங்க

வேண்டுமென்றும், ஈசுவரமூர்த்தியைப் பழிவாங்க வேண்டு மென்றும் அடிக்கடி கூறித் தூண்டி விடுவார்.

அவர் மாறுவேஷத்தில் வந்து என்னை மலைச்சாரலில் சந்திப்பதுண்டு. ஒரு சமயம் நாங்கள் அவ்வாறு சந்தித்த பொழுது, "நமது இயக்கம் நடத்தப் பணம் வேண்டி யிருக்கிறது. நீ சம்பாதித்துத் தரவேண்டும்" என்றார்.

நான் ஒப்புக் கொண்டேன். அப்போதுதான் வாலறுந்த நாயைக் கண்டேன். சேகர் எங்கள் கட்சியைச் சேர்ந்தவன். ஆனால் அது யாருக்கும் தெரியாது.

நாங்கள் இருவரும் சொக்கையாவிடம் சென்று அவர் செய்த பாதகத்தை வெளியிட்டு விடுவோமென்று பயமுறுத்தினோம். சேகர் தன்னிடம் அவர் வேட்டைத் துப்பாக்கியுடன் இருக்கும் புகைப்படம் இருப்பதையும், அவர் குற்றவாளி என்று தான் நிரூபிக்க முடியும் என்றும் கூறிப் பயமுறுத்தினான்.

சொக்கையா கொஞ்சம் கலங்கிப் போனார். நான் பிறகு, "எனக்கு நீங்கள் செய்த இன்னொரு காரியமும் தெரியும். என்மீது நீங்கள் குற்றம் சுமத்தப் பார்த்தீர் களே! ஜமீன்தாரைக் கொன்றது நீங்கள்தான் என்பதை யும் என்னால் நிரூபிக்க முடியும். மூன்று வருஷங்களுக்கு முன்னால் நீங்கள் வேட்டைத் துப்பாக்கியால்தான் முத்து ராமலிங்க பாண்டியரைக் கொலை செய்தீர்கள். ஜமீன் தாரும் வேட்டைத் துப்பாக்கியாலேயே இறந்திருக் கிறார். ஜமீன்தார் இறந்த சமயத்தில் நீங்கள் வீட்டில் இல்லை. ஸ்நானம் செய்துவிட்டு ஈர வேஷ்டியுடன் வந்தீர்களென்பது போலீஸாருக்குத் தெரியும்" என்றேன்.

சொக்கையா சுலபமாகப் பயப்படுகிறவரில்லை. ஆனால் ஏனோ தெரியவில்லை; அன்று மிகவும் பயந்தார். அதற்கு வீரமுத்து எழுதிய கடிதம்தான் காரணம் என்பதைப் பின்னால் தெரிந்து கொண்டேன். நாங்கள் சொல்வதைக்

கேட்காவிட்டால் சொக்கையாவைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தி வீரமுத்து எழுதியிருந்தாராம்.

" என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள் ?" என்றார் சொக்கையா. அவர் முகத்தில் அசடு தட்டிற்று.

எங்கள் இயக்கத்துக்குப் பணம்தான் தேவையாக இருந்தது. பத்தாயிரம் ரூபாய் கேட்டோம். உடனே தருவதாக வாக்களித்தார். அதே மாதிரி தரவும் செய்தார். அன்று சொக்கையா தம் குதிரையைக்கூட எங்களுக்குப் பரிசாக அளித்தார். சேகரின் காமிராவை உடைத்ததற்கு நஷ்டஈடு என்று கூறினார். அந்தக் குதிரையில் நான் வீடு வந்து சேர்ந்தபோது சந்திரமணியின் முகம் போன போக்கைப் பார்க்கவேண்டுமே ! என்னிடம் ஒரேயடியாகச் சண்டை போட்டாள்.

ஒரு வாரம் கழிந்த பிறகு, நான் சர்க்கஸ் கம்பெனியில் சேரப் போவதாகக் கூறிவிட்டு மலைச் சாரலில் வசித்த வீரமுத்து கோஷ்டியினருடன் போய்ச் சேர்ந்து கொண்டு புரட்சிக்காரனாகி விட்டேன். பிழைப்புக்கு வழி வேண்டு மென்று சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து பார்த்தேன். ஆனால், அது ஒத்து வரவில்லை. முடிந்தபோதெல்லாம் சந்திரமணியைப் போய்ப் பார்த்துச் சமாதானப்படுத்தி விட்டு வந்தேன்.

குங்குமத்துறையை மலையாள தேசத்திலிருந்து பிரிக்கும் மேற்குத் தொடர்ச்சி மலையின் சரிவுகளில் அடர்த்தியான காடுகள் இருக்கின்றன. எங்கள் கட்சி யினரின் தலைமை ஸ்தாபனம் அங்கேதான் இருந்தது. வீரமுத்துவின் தலைமையில் நாங்கள் எங்கள் இயக்கத்தைப் பலப்படுத்தினோம். பாலங்களை வெடி குண்டுகளால் தகர்ப்பது, மின்சாரக் கம்பிகளை அறுப்பது, ரயில்களைக் கவிழ்ப்பது முதலிய வேலைகளைச் செய்து வந்தோம். அப்போது எனக்கிருந்த ஆவேசத்தில் நானும் இந்தக்

காரியங்களில் ஊக்கத்தோடு ஈடுபட்டேன். ஆனால், இதனால் ஏழை மக்களைத்தான் துன்புறுத்துகிறேன் என்பதை அப்பொழுது நான் தெரிந்து கொள்ளவில்லை.

உண்மையில் ஈசுவரமூர்த்தியும், பங்குதாரர்களுமாக நடத்திக் கொண்டிருந்த பாங்கில் நாங்கள் செலவுக்காகப் பணம் கொள்ளையடித்தபோதுதான் என் மனம் குளிர்ந்தது. அந்தப் பாங்கின் பங்குதாரர்களில் சந்திர மணியின் மாமன்மார்கள் இருவர் இருந்தார்கள். இந்தச் சமாசாரம் எங்கள் தலைவருக்குத் தெரியுமாதலால் மந்திர மூர்த்தியிடமிருந்து அவர்கள் பெற்றுக் கொண்ட ரூபாய்கள் மூவாயிரத்தை என்னிடம் கொடுத்து விட்டு மீதியைத்தான் இயக்கத்தின் செலவுக்கு எடுத்துக் கொண்டர். அதை எடுத்துக் கொண்டு நான் குங்குமத்துறைக்குச் சென்றேன். சந்திரமணியும் மந்திரமூர்த்தியும் அதைக் கண்டு பயந்தே போனார்கள். சந்திரமணி என்னுடன் வருவேனென்று அடம் பிடித்தாள். எங்கள் மீது கண் காணிப்பு அதிகமாகி வந்தபடியால் சில நாட்கள் குங்குமத் துறைக்கே போகாமலிருப்பது நல்லது என்று நான் தீர்மானித்தேன். ஆகவே சந்திரமணியிடம் நான் மலாய் நாடு போகப் போவதாகச் சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

எனக்கு மாத்திரம் சந்திரமணியையும், இந்துமதி யையும் விட்டுப் போக மனம் வந்ததா என்ன? எத்தனையோ தடவை இந்த இயக்கத்தில் சேராமல், குழந்தையோடும் மனைவியோடும் எங்கேயாவது சௌக்கிய மாக இருந்திருக்கக் கூடாதா என்று ஏங்கியிருக்கிறேன். என் குழந்தை இந்துவைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் நெஞ்சம் அவளைப் பார்க்க வேண்டுமென்று துடிக்கும். ஒரு தந்தையின் கடமையை நான் சரியாக நிறைவேற்றவில்லையே என்று வருந்துவேன். சந்திர மணியும் நானுமாக அவளுடைய மொழிகளைக் கேட்டு

இன்புறுவதாகவும், அவளுடைய விளையாட்டுக்களைக் கண்டு ரஸிப்பதாகவும் கற்பனை செய்து கொள்வேன்.

என்னதான் எனக்கு அவர்களோடு போய் இருக்க ஆசையாக இருந்தாலும் அது சாத்தியமாகாது என்பதும் தெரிந்திருந்தது. இயக்கத்தின் வேலைகளில் நான் ரொம்ப தூரம் காலை வைத்துவிட்டேன். அதிலிருந்து பின் வாங்கும் நிலையில் நான் இல்லை. மேலும் போலீஸுக்கு என்னைப் பற்றித் தகவல்கள் தெரிந்து விட்டன. என்னை இனிமேல் மனிதனாக வாழ விடமாட்டார்கள் என்பதும் புலனாகி விட்டது.

கடைசியாக நான் சந்திரமணியைப் பார்த்தபோது அவள் ரொம்ப உடம்பு சரியில்லாமலிருந்து எலும்புந் தோலுமாக ஆகியிருந்தாள். அவளைப் பார்த்தபோது நான் அனுபவித்த சித்திரவதையை விவரிக்க முடியாது. ரங்கதுரை! அவளுக்கு இழைத்த அநீதியினால்தான் இன்று நான் இப்படிப்பட்ட கொடிய துயரத்தை அனுபவிக்க நேர்ந்திருக்கிறது. எங்கள் அருமைப் புதல்விக்கு மரண தண்டனை விதித்திருக்கிறார்கள் என்று தெரிந்தும் ஒன்றும் செய்ய இயலாத நிலையில் நான் இருக்கிறேன், தம்பீ. வழக்கு நடந்த இடத்துக்குக்கூட என்னால் வர முடியவில்லையே!"

"நீங்கள் அனாவசியமாக மனதை நொந்து கொள்கிறீர்கள்" என்று ஆரம்பித்தேன்.

"இப்பொழுது அதைப்பற்றி நாம் தர்க்கம் செய்ய வேண்டாம். கதையைத் தொடர்ந்து சொல்கிறேன்" என்று கூறிவிட்டுக் காசிலிங்கம் சற்று நேரம் ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

"அப்படியானால் ஒன்று கூறி விடுங்கள். நீங்கள் எப்படிப் 'பகத்சிங்' என்று பெயர் வைத்துக் கொண்டீர்கள்?"

" வீரமுத்துவுக்குத் தென்னாட்டுப் ' பகத்சிங் ' என்ற பெயர் பரவியிருந்தது. அவரைப் பிடித்துவிட்ட பிறகு நான் கொஞ்ச நாட்கள் இயக்கத்தை நடத்தி வந்தேன். நான் தலைவனாக இருந்தபடியால் எனக்கே ' பகத்சிங் ' என்ற பெயரைச் சூட்டி விட்டார்கள் ஜனங்கள். நிஜ ' பகத்சிங் ' தூக்கில் இடப்பட்டார் " என்று கூறிப் பெரு மூச்சு விட்டார் காசிலிங்கம்.

" ஆமாம்! நீங்கள் என் தந்தையைச் சிறையில் சந்தித்தது பற்றிக் கூறவில்லையே ?" என்று நான் கேட்டேன்.

" எத்தனையோ நாட்களுக்கு முன்னால் நடந்த சம்பவங்களல்லவா ? எனக்குக் கோவையாகச் சொல்லத் தெரியவில்லை " என்று கூறிவிட்டுக் காசிலிங்கம் மேலும் தொடர்ந்தார்.

" என் அதிசயமான வாழ்க்கையில் நான் கந்தசாமியிடம் சிநேகம் செய்து கொண்டதும் ஒரு அதிசயம்தான். நான் ஒரு பாலத்தைத் தகர்த்த குற்றத்துக்காகப் பிடிக்கப் பட்டு இரண்டாவது தடவை சிறை சென்றேன். அங்கே நான் கந்தசாமியைச் சந்தித்தேன். அவருடைய வாழ்க்கையைப் பற்றி ஒரு நாள் கேட்டபோது எனக்குப் பச்சாத்தாபம் பிறந்தது. அதுவும் ஈசுவரமூர்த்திதான் அவர் சிறையிலிருப்பதற்குக் காரணம் என்று தெரிந்ததும் கந்தசாமியிடம் பாசமே உண்டாகிவிட்டது.

கந்தசாமி அடிக்கடி தாம் செய்த தவறுகளைப் பற்றி எண்ணி வருந்துவார். ' எனக்கு ஒரு மகன் இருக்கிறான். அவனை நன்றாக வளர்க்காமல் போய்விட்டேனே. என் மகனுக்கு நான் தந்தையாகவே இல்லாமலிருந்து விட்டேனே ' என்று புலம்புவார். நான் என் கதையையும், நானும் ஒரே குழந்தையை விட்டுப் பிரிந்திருப்பதையும் அவருக்குக் கூறிச் சமாதானப்படுத்துவேன்.

அவர் தாம் சிறையிலிருந்து வெளியே வந்தால் எங்களுடன் சேர்ந்து விடுவதாகக் கூறி வந்தார். பாவம்! நல்ல மனிதர். தாம் சீட்டாடியதையும், தம் மனைவியைச் சரியாக நடத்தாததையும் எண்ணி வருந்தி வருந்தி அதற்குப் பிராயச்சித்தம் செய்து விட்டார்.

ஒரு நாள் எங்கள் இருவருக்குமே சிறையில் இருப்பது பொறுக்க முடியாதென்று ஆகிவிட்டது. தப்பிச் செல்ல முயற்சி செய்வதென்று தீர்மனித்தோம். அப்படித் தீர்மானித்த பிறகு இருவரும் ஒருவருக்கொருவர் பிரதிக்ஞை செய்து கொண்டோம். தப்பிச் செல்லும் முயற்சியில் யாருக்கேனும் உயிர் போய்விட்டாலோ, அல்லது திரும்பப் பிடிபட்டுவிட்டாலோ, தப்பிச் செல்பவர் இன்னொருவருடைய குடும்பத்தைக் கவனித்து, வேண்டிய உதவிகள் செய்ய வேண்டியது என்று பிரதிக்ஞை செய்து கொண்டோம்.

கந்தசாமி என்னிடம், ' காசிலிங்கம்! உம்மைப் போல் நான் சர்க்கஸ்காரன் அல்ல. திறமைசாலியும் அல்ல. ஆனால் நான் தப்பிச் செல்ல விரும்புவதற்கு என் மகன் ரங்கதுரையைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல்தான் காரணம். அவனுக்கு நான் செய்ய வேண்டிய கடமையில் தவறி விட்டேன். இனிமேலாவது எப்படியேனும் அவனுக்குப் படிக்க வசதிகள் செய்து தர வேண்டும் என்பது என் ஆசை. உங்களுக்கு ஒரு சிறு பெண் குழந்தை இருக்கிறாள் என்று கேட்டதும், என் ஒரே மகனுக்கு



அவளை மணம் முடித்து வைத்து நம் உறவை நிரந்தரமாக்கிக்கொள்ள வேண்டுமென்று நினைத்தேன் ' என்றார்.

நான், 'அதற்கென்ன இப்போது? என் பெண் இன்னும் பச்சைக் குழந்தை. உங்கள் மகனும் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிருன். அவர்கள் பெரியவர்களாகும் போது பேஷாகக் கல்யாணம் செய்து கொள்ளட்டும். நாம் குறுக்கே நிற்கப் போவதில்லை' என்றேன்.

அவர் சிரித்துவிட்டு, 'அதுவரை நாம் இருவரும் உயிரோடு இருக்க வேண்டுமே?' என்ருர். பாவம்! மறு நாளே துப்பாக்கிக் குண்டுகளுக்கு அவர் இரையாக நேர்ந்தது."

# 20. இடி விழுந்தது

காசிலிங்கம் சற்று நிறுத்திஞர். தம் கண்களைத் துடைத்துக் கொண்டு பிறகு வானத்தைப் பார்த்துக் கொண்டே தொடர்ந்து கூறிஞர்.

"நான் அதன் பிறகுதான் உன்னை வந்து ஈசுவர மூர்த்தியிடமிருந்து காப்பாற்றினேன். பணமும் அனுப்பி வந்தேன். அதன் பிறகு எனக்கு இந்தப் பலாத்காரச் செயல்கள் பிடிக்காமல் போய்விட்டன. வீரமுத்து தூக்கி லிடப்பட்ட பிறகு எல்லாருக்கும் உற்சாகம் குன்றிவிட்டது. பாலத்தை உடைப்பதும், ரயிலைக் கவிழ்ப்பதும் ஏழை மக்களையே பாதிக்கிறதென்று நான் உணர்ந்தபோது என்னையே சபித்துக் கொண்டேன். நான் கடைசியாகச் சந்திரமணியைப் பார்த்துவிட்டு வந்த பிறகு, போலீஸ் உபத்திரவம் வேறு அதிகரித்துவிட்டதால் மலேயாவுக்குச் சென்றுவிட்டேன்.

பல வருஷங்கள் அங்கே திண்டாடிய பிறகு ஒரு நாள் எனக்கு இந்துவையும், சந்திரமணியையும் பார்க்க வேண்டுமென்று தாங்க முடியாத வெறி பிடித்து விட்டது.

சந்திரமணியை நான் விட்டுவிட்டுச் சென்றதை நினைத்து மனம் நொந்து போனேன்.

நான் திரும்பி வரும்போது மனம் சங்கடப்பட்டுக் கொண்டே இருந்தது. ஒரே ஆவலாக நேரே குங்குமத் துறைக்கு வந்து சேர்ந்தேன். மாறு வேஷத்தில் வந்தேன். எனக்குத்தான் எப்பேர்ப்பட்ட பேரிடி விழுந்தது? அக்கம் பக்கத்தில் விசாரித்தபோது சந்திரமணி இறந்து போய் இரண்டு நாட்கள்தான் ஆகி யிருந்தன என்று தெரிய வந்தது. துயரம் தாங்க முடியாமல் இதே ஊமையன் கோட்டையில் வந்து உட்கார்ந்து விம்மி விம்மி அழுதேன்; கதறினேன். என்னைத் தேற்றுவார் யாரும் இல்லை.

பிறகு, இந்துவையாவது பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருந்தது. ஆனால், அவளிடம் என்னை அவளுடைய தந்தை என்று சொல்லிக்கொள்ள வெட்கமாக இருந்தது. அவளுக்கு என்ன தோன்றுமோ? நான் கொள்ளைக்காரன் என்றெல்லாம் மனத்தில் எண்ணங்கள் ஏற்பட்டிருக்கலாம். என்னைப் பார்த்து அவள் வெறுப்புக் கொண்டு விட்டால் என்ன செய்வது என்று பயந்தேன். சந்திரமணி இருந்தபோது எனக்கு என் குழந்தையின் மீது பாத்தியதை இருந்தது. இப்போது திடீரென்று அந்தப் பந்தம் உடைந்து போய் விட்டது. அதுவரையில் தன்னைக் கவனிக்காமலேயே இருந்த கல் நெஞ்சன் என்று இந்துமதி என்னைப் பற்றி எண்ணமாட்டாளா?

மேலும் இந்துவுக்கு ஒரு குறையும் வராமல் புண்ணிய வான் மந்திரமூர்த்தி பார்த்துக் கொள்ளும்போது எனக்கு என்ன கவலை என்று நினைத்தேன்.

இந்துவைத் தூரத்திலிருந்தாவது பார்த்துவிட்டுப் போக வேண்டுமென்று எனக்கு ஆசையாக இருந்தது. ஆகவே, மாறு வேஷத்தில் சுற்றினேன். ஒரு நாள் பாதிரித் தோட்டத்துக்கு இந்து போவதைப் பார்த்தேன்.

அதற்கு எதிர்ப் பக்கமாக வந்து அந்தச் சிவப்பு பங்களா வுக்குள் நுழைந்து மாடியில் ஒரு ஜன்னலைத் திறந்து வைத்துக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போதுதான் நீயும் இந்துவும் பேசிக்கொண்டிருந் தீர்கள். எனக்கு நீ யாரென்பது அப்போது தெரியாதே. பிறகு உன்னைப் பற்றி அறிந்துகொள்ள முயற்சி செய்தேன். நீ தங்கபாண்டியனுக்கு நண்பன் என்றும், தங்கபாண்டியன் ரொம்ப நல்லவனாக இருக்கிறானென்றும் ஜமீன் ஆட்களிடமிருந்து தெரிந்து கொண்டேன். உன் பெயர் தெரிந்ததுமே நீ கந்தசாமியின் பிள்ளைதான் என்று ஊகித்தேன்.

என் மனத்துக்குச் சற்று ஆறுதல் உண்டாயிற்று. நீயும், தங்கபாண்டியனும் படிக்கும் கல்லூரிக்குச் சென்று உங்களைப் பற்றி விவரமாக விசாரித்தேன். நீ அதே ரங்கதுரைதான் என்பது ஊர்ஜிதமாயிற்று. அப்போது தான் நான் உண்மையிலேயே குதூகலமடைந்தேன்.

நான் திரும்பக் குங்குமத்துறைக்கு வந்தபோது, உனக்குச் சீமை செல்ல உத்தரவு வந்துவிட்டதென்று கேள்விப்பட்டேன். நீ என்றைய தினத்தில் கிளம்பு கிறாய் என்று தெரிந்து கொண்டதும், உன்னை எப்படி யாவது சந்திக்க வேண்டுமென்று பாதிரித் தோட்டத்தில் வந்து காத்திருந்தேன். முதல் நாள் இந்துமதி வேலி யருகில் நிற்பதைப் பார்த்தேன். உனக்காகத்தான் காத்திருக்கிறாள் என்றும், நீ வருவாயென்றும் ஊகித்தேன். ஆனால் நீ வரவில்லை.

மறுநாளும் பங்களாவின் மேல் மாடியில் ஏறி ஒளிந்து கொண்டிருந்தேன். இந்துமதியிடம் விடை பெற்றுச் செல்ல நீ வருவாயென்று நினைத்தேன்.

இருட்டிய பிறகு அரண்மனைப் பாதை வழியாக யாரோ வருவது தெரிந்தது. நீதான் என்று நினைத் தேன். ஆனால், அந்த உருவம் ஒரு வியக்கத்தக்க

காரியம் செய்தது. தோட்டத்தைப் பெருக்கிக் குவித்திருந்த காய்ந்த இலைச் சருகுக் குப்பலின்மீது படுத்துக்கொண்டு, சருகுகளால் தன்னை நன்ருக மூடிக்கொண்டது. எனக்கு ஒரே வியப்பாகப் போயிற்று. ஒன்றும் விளங்கவில்லை.

ஐந்து நிமிஷங்களுக்குள் அதே பாதையில் வேறு யாரோ வந்தார். இது நிச்சயமாக நீதான் என்று நினைத்தேன். அந்த மனிதர் புன்னை மரத்தடியை அடைந்ததும் இந்து வந்தாள். எனக்கு ஏதோ விபரீதம் நடக்கப் போகிறதென்று மாத்திரம் தெரிந்தது. என்ன செய்வதென்று யோசித்துக் கொண்டே இருக்கையில் நான் சிறிதும் எதிர்பாராத விஷயங்கள் நடந்து விட்டன.

நான் மாடியில் ஜன்னல் அருகில் நின்றுகொண்டிருந்தேன். இறங்குவது என்ருல் பின்பக்கம் சென்று நான் இறங்கவேண்டும். நான் போய்விட்டால் அங்கு நடப்பதைப் பார்க்க முடியாதே என்று தயங்கினேன். அதே சமயத்திலே சருகுகளிலிருந்து அந்த உருவம் எழுந்தது. முன்னலிருந்த உருவத்தைத் தாக்கியது.



என் இதயமே ஒரு கணம் ஓய்ந்து போய்விட்டது. உனக்குத்தான் ஆபத்து வந்துவிட்டதென்று நினைத்தேன். அடுத்த கணம் புதிய உருவம் ஓடிற்று. இந்துமதியும் ஓடினள். அதன் பிறகு நீயாக இருக்க முடியாதென்று தோன்றியது. ஓடுவது யாரென்று தெரிந்துகொள்ள விரும்பிப் பின்பக்கம் வந்து மாடியிலிருந்து குதித்தேன். அதற்குள் அந்த உருவம் எங்கே மறைந்ததென்று தெரியவில்லை. அடிபட்டது யாரென்று தெரிந்துகொள்ள விரும்பி அங்கே சென்று பார்த்தேன்

சொக்கையா என்று தெரிந்ததும் ஆறுதலே உண்டா யிற்று. எப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்து இந்து காப் பாற்றப்பட்டாளென்று தெரிந்து, காப்பாற்றிய மனித னிடம் நன்றிகூட உண்டாயிற்று. அப்போது அங்கே யாரோ வருவது தெரியவே சட்டென்று மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டேன். சொக்கையாவின் அருகில் வந்து பார்த்தது அய்யாக்குட்டி என்று தெரிந்து வியப்படைந் தேன். அய்யாக்குட்டி வேகமாகப் போய்விட்டான். சொக்கையாவுக்கு உயிர் நிச்சயமாகப் போய்விட்டது என்று தெரிந்துவிட்டது. ஆகவே, அங்கே இருப்பதனால் ஆபத்து வரும் என்று நானும் வேகமாக ஓடிப் போய் விட்டேன்.

மறுநாள் ஊரே அல்லோலகல்லோலப் பட்டது. இந்த விவரங்கள் ஒன்றும் வெளி வராமலிருக்க வேண்டுமே என்று கவலைப் பட்டேன். அய்யாக்குட்டியை பற்றி ரொம்பக் கவலையாக இருந் தது. அவனைப் பற் றியும் பண்ணை ஆட்கள் மூலம் தெரிந்து கொண் டிருந்தேன். அவ னால் இந்துவுக்கு ஏதாவது தீங்கு நேருமென்று தோன்றினால் அவனை மடக்கிப் பயமுறுத்துவதென்று தீர்மானித்திருந்தேன். அவன் அவ்வளவு தூரம் துணியமாட்டானென்றும் நான் எதிர்பார்த்தேன்.



நான் அங்கே அதிக நாட்கள் இருக்க முடியவில்லை. சொக்கையாவின் கொலைக்குப் பிறகு எங்கே பார்த்தாலும் போலீஸார் சஞ்சரிக்க ஆரம்பித்தார்கள். ஊமையன் கோட்டைக்குக்கூட வந்து தேடினார்கள். ஆகவே நான் போகவேண்டியதாயிற்று. அய்யாக்குட்டியினால் இந்து வுக்கு எந்த அபாயமும் நேராது என்று எனக்குத் திட மாகத் தெரிந்த பிறகு புறப்பட்டேன். குங்குமத்துறையில் இருக்க எனக்கு இடமும் இல்லையல்லவா?

சுமார் ஒரு வருடம் கழித்து நான் திரும்பி வந்த போது மந்திரமூர்த்திப் பண்ணையார் இறந்த விவரம் எனக்குத் தெரிய வந்தது. இந்துவை அவர் யாரோ பத்ம நாபன் என்ற வக்கீலிடம் ஒப்படைத்திருப்பதாகத் தெரிந்துகொண்டேன்.

குங்குமத்துறை குடியானத் தெருவில் தெரிந்து கொள்ள முடியாத விஷயமே கிடையாது. அங்கே இந்த அய்யாக்குட்டி இந்துவைத் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகப் பேசிக் கொள்கிறானென்று தெரிய வந்தது. இதை அவன் குங்குமத்துறை ஜமீன் காரியஸ் தரிடம் சொல்லிக் கொண்டிருந்ததைத் தன் காதாலேயே கேட்டதாகக் கண்ணுசாமி சத்தியம் செய்தான். அவள் அதற்குச் சம்மதிக்காவிட்டால் அவளைப் பயமுறுத்தித் தன்னால் சம்மதிக்க வைக்க முடியுமென்றும் கூறினானும். எனக்கு விஷயத்தை ஒருவாறு ஊகிக்க முடிந்தது. இந்து அவ்வளவு அவசரமாகப் பத்மநாபன் வீட்டுக்குச் சென்று விட்ட காரணமும் புரிந்தது.

என்னுடைய கோபத்தில் ஒரு நாள் அவனுடைய சினிமாக் கொட்டகையை எரித்துவிட்டேன். பிறகு அவனால் இந்துவுக்குக் கஷ்டம் ஏற்படக் கூடாதென்று ஒரு கடிதமும், நஷ்டஈடாகப் பணமும் கொடுத்தேன். நான் செய்தது வீண் போகவில்லை. பின்னால் அவன் நன்றி

யுடன் இந்துவுக்கு வேண்டிய உதவி செய்திருக்கிருன்" என்று கூறி நிறுத்திஞர் காசிலிங்கம்.

"பின்னே, இந்து அய்யாக்குட்டியின் மீது சந்தேகப் படுவதாக எழுதிக் கொடுத்திருக்கிருளே. அப்போதே நான் நினைத்தேன், அது ராஜாராமாக இருக்க முடியா தென்று. அவருக்கு அவ்வளவு துணிவு கிடையாது! நிச்சயம் யாராக இருக்கலாமென்று ஊகித்தீர்களா?"

"ஊகித்தேன் தம்பி. ஆனல், அதை நிரூபிக்க முடியாது. மேலும் உனக்கும் மனம் ரொம்பச் சங்கடப் படும்."

"எப்படியிருந்தாலும் அதைச் சொல்லிவிடுங்கள்."

காசிலிங்கம் சற்று யோசித்தார். "தம்பி! அதைக் கூறுவது ரொம்ப அவசியமென்று தோன்றிஞல் பிறகு கூறுகிறேன். இப்போது அதைச் சொல்வதால் பயன் ஏதுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்று கூறிஞர். நான் அவர் யார்மீது சந்தேகப்படுகிருர் என்று ஊகிக்க முயன்றேன்.

காசிலிங்கம் எழுந்து அடுப்பைப் பற்ற வைத்தார். "உன்னேடு பேசிக்கொண்டே இருந்ததில் சாப்பாட்டைப் பற்றிக்கூட மறந்து விட்டேன், தம்பி. மாப்பிள்ளேக்கு மாமஞர் சாப்பாடுகூடப் போட வேண்டாமா? உன்னே இவ்வளவு தூரம் வரச் சொல்லிப் பட்டினியாகத் திருப்பி யனுப்பினேன் என்று தெரிந்தால் இந்துமதிக்குக் கோபம் வராதா?" என்று சொல்லிக்கொண்டே அருகிலிருந்த பாழும் மண்டபத்துக்குச்சென்று ஒரு சிறிய மூட்டையையும், ஒரு கரியேறின பானேயையும் எடுத்து வந்தார். சற்றுத் தூரத்தில் சலசலவென்ற ஒலி யுடன் ஓடிக்கொண்டிருந்த ஓடையிலிருந்து அந்தப்



பானையில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்து அடுப்பின் மீது வைத்தார். மூட்டையைப் பிரித்து அதிலிருந்த அரிசியைப் பானையில் அப்படியே கொட்டினார்.

என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டு, "இப்படித்தான் தம்பி நான் வெகு நாட்களாகச் சமைத்துச் சாப்பிடுகிறேன். நீ என்னைப் பார்த்துப் பரிதாபப்படவே வேண்டாம். இந்துவைப் பற்றிய கவலை மட்டும் இல்லையானால் நான் ஆனந்தமாகக் காலங் கழித்து விடுவேன். அதற்கு நான் கொடுத்து வைக்கவில்லை. இந்து மட்டும் உன் கையைப் பிடித்திருந்தால் எனக்கு இந்த உலக பந்தமே அடியோடு விட்டுப் போயிருக்கும். ஒரு சந்நியாசியைப்போல் நான் பற்று அற்ற வாழ்க்கை நடத்தியிருப்பேன்" என்றார்.

"அதனால்தான் இப்படி உருவந் தெரியாமல் மெலிந்து போய் விட்டீர்கள்!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, தம்பி! நான் பட்ட கஷ்டங்களெல்லாம் எனக்கு உடல் வலிமையையே அளித்தன. ஒரு நாள்கூட நான் ஜுரமோ, தலைவலியோ வந்து படுத்ததே கிடையாது. பாதையே இல்லாத மலைக் காடுகளிலெல்லாம் நான் அநேக மைல்கள் ஏறி இறங்கியும் இருக்கிறேன். அப்பொழுதெல்லாம் நான் களைப்படைந்ததே இல்லை. சந்திரமணி இறந்து போன பிறகுதான் எனக்கு உடலில் சோர்வு என்பது ஒன்று உண்டு என்பது புலனாயிற்று. இந்து சிறைப்பட்ட செய்தி வந்த பிறகு எனக்கு உடம்பில் சக்தியே போய் விட்டது, துரை!"

"எந்தத் தந்தைக்குத்தான் இந்த மாதிரி ஒரு விஷயத்தைக் கேட்டுச் சகித்துக் கொண்டிருக்க முடியும்?"

"அதிலும் எனக்கு இந்துவின் அருகில் இருக்க முடியவில்லை. வழக்கு விவரங்களைப் பத்திரிகையில் அல்லவா படித்தேன்? அவைகளில் இந்துவைப் பரித

சித்துச் சில பத்திரிகைகளும், அவளுக்கு இரக்கப்பட்டுச் சில பத்திரிகைகளும் எழுதியிருந்தன. ஆமாம், தம்பி! வழக்கு நடந்த விவரங்களை நான் முழுதும் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. நீ ஒவ்வொரு விஷயத்தையும் விவரமாகச் சொல்லேன்."

"சொல்லுகிறேன். அதை நினைக்கும்போதெல்லாம் எனக்கு உள்ளமும் உடலும் பற்றி எரிகின்றன. சந்தர்ப்ப சாட்சியங்கள் எல்லாம் இந்துவுக்கு விரோதமாக அல்லவா இருந்தன?"

"ஆமாம், தம்பீ! நான் உன்னைச் சந்தித்து, 'இந்து சொக்கையாவைக் கொல்லவில்லை. இன்னொரு உருவம் கொன்றதைக் கண்ணால் பார்த்தேன்' என்பதைக் கூறி யிருந்தால், அப்போதே சாட்சிக் கூண்டிலேறிச் சொல்லி யிருந்தால் இந்துவை விடுவித்து இருப்பார்களே? அப்படிச் செய்யாமல் இருந்து விட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது!"

"நீங்கள் வருத்தப்பட வேண்டாம். நீங்கள் அவ்வாறு கூறியிருந்தால் அவளுடைய குற்றத்தை மறைக்கப் பார்க் கிறீர்கள் என்று தோன்றும். உங்கள் மீது வேறு வாரண்டுகள் இருப்பதால் நீங்களும் சிறை சென்றிருப் பீர்கள். அதனால் ஒருவித லாபமும் ஏற்பட்டிருக்காது" என்றேன்.

"சரி! அப்படியே இருந்தாலும் இனி மேல் அதைப் பற்றி வருந்திப் பயன் இல்லை. நீ சொல்லு தம்பி இந்து வுக்கு விரோதமாகச் சாட்சி சொன்னவர்கள் யார்? என்ன வென்ன சொன்னார்கள் என்பதைச் சொல்லு" என்று கூறிவிட்டு இரண்டொரு சுள்ளிகளைப் பொறுக்கி அடுப்பில் சொருகினார். பிறகு என் எதிரில் உட்கார்ந்தார்.

நாங்கள் ஒரு உயரமான தேக்கு மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்தோம். சுற்றிலும் தேக்கு மரச் சருகுகள்

சரசரவென்ற ஒலியை உண்டாக்கிக் கொண்டு காற்றில் பறந்தன.

எதிர்ப் பக்கத்திலும் நாலைந்து உயரமான தேக்கு மரங்கள் நின்றன. அவற்றின் வெள்ளி இலைகள் வெய்யிலில் பள பளவென்று ஒளிவீசி மின்னின.

கொஞ்ச தூரத்தில் ஒரு குன்றிமணிச் செடி காய்ந்து கிடந்தது. அதன் சிவந்த ரத்தினம் போன்ற மணிகள் கேட்பாரற்றுக் கீழே சிதறியிருந்தன.

இந்துவுக்குக் குன்றிமணி என்றால் மிகவும் பிரியம். முன்பு பல்லாங்குழி விளையாடுவதற்கு ஒரு சிறிய பெட்டி நிறையக் குன்றிமணிகள் வைத்திருந்தாள். அந்தக் குழந்தை போன்ற இதயமுள்ள இந்து சொக்கையாவைக் கொன்று விட்டதாகப் பழி சுமத்தியிருக்கிறார்களே, இது என்ன அக்ரமம் ?

"என்ன தம்பி! சிந்தனையில் மூழ்கிவிட்டாயா ?" என்றார் காசிலிங்கம்.

"உலகத்தில் நடக்கும் அக்கிரமங்களையும், மனித உருக்கொண்ட ராக்ஷசர்களையும் நினைத்தால் நெஞ்சு கொதிக்கிறது. பத்மநாபன் கூசாமல் கூறிய பொய்களை நினைத்தால் எனக்கே அவருடைய கழுத்தைத் திருகிவிட வேண்டுமென்று ஆத்திரம் பொங்குகிறது."

"அவர் என்ன சொன்னார் தம்பி ?"

"மந்திரமூர்த்திப் பண்ணையார், 'சொக்கையா கொலை நடந்தது பற்றி இந்துவின் மீது சந்தேகம் ஏற்படக் காரணம் இல்லையே ?' என்று பத்மநாபனைக் கேட்டாராம். அதற்கு இவர், 'சந்தேகம் ஏற்பட முகாந்திரமில்லை' என்று கூறினாராம். இந்துவுக்குச் சொக்கையா என் பெயர் போட்டுக் கடிதம் எழுதியது, இந்து அங்கே போய்விட்டு வந்தது, அன்று அவளுக்கு ஜுரம் வந்தது, மறு நாள் சொக்கையா கொலை செய்யப்பட்ட செய்தி தெரிந்ததும்

தாம் இந்துவிடம் விசாரித்தது முதலிய எல்லா விவரங்களையும் மந்திரமூர்த்திப் பண்ணையார் பத்மநாபனிடம் கூறினாராம். கடிதத்தைத் தாம் எரித்து விட்டதாகவும் பண்ணையார் கூறினாராம்.

"இதையெல்லாம் பத்மநாபன்கூறவே பிராஸிக்யூஷன் தரப்பில் இந்துமதிதான் குற்றம் செய்தாளென்பது மந்திர மூர்த்திக்குத் தெரிந்திருந்தது என்றும், பத்மநாபனிடம் அவர் இதையெல்லாம் கேட்டதும், கடிதத்தை எரித்ததும் பயத்தினலேயே என்றும் வாதாட இடம் உண்டாயிற்று."

"ஏன் தம்பி! நமது வக்கீல் பத்மநாபனை ஒன்றும் குறுக்குக் கேள்விகள் கேட்கவில்லையா?"

"கேட்டார். ஆனால் பத்மநாபன் அதற்குச் சளைத்து விடக் கூடியவரா? சுடச்சுடப் பதில் சொல்லிச் சமாளித்துக் கொண்டார். நமது வக்கீல், 'எதிரி உங்கள் வீட்டிலிருந்து ஓடிப் போனதாகக் கூறினீர்களே ? ஏன் போனார் என்று கூற முடியுமா ?' என்று கேட்டார்.

பத்மநாபன், 'ஓடிப்போனவளைத்தான் கேட்க வேண்டும்' என்றார்.

'நீங்கள் ஊகித்த காரணம் ?' என்று நம் வக்கீல் கேட்டதும், பிராஸிக்யூஷன் வக்கீல், 'இதெல்லாம் வழக்குக்குச் சம்பந்தமில்லாத விஷயங்கள்' என்று மறுத்தார். நீதிபதியிடம் நமது வக்கீல் சம்பந்தமுள்ளது தான் என்று வாதாடிச் சம்மதம் பெறவேண்டியிருந்தது.

பிறகு பத்மநாபன், 'அவளுக்குத் திருமணம் செய்து வைப்பதாக நான் மந்திரமூர்த்திக்கு வாக்களித்திருந்தேன். ஈசுவரமூர்த்தி என்ற என் நண்பர் அவளை மணந்து கொள்ள விரும்பினார். நான் அவளுடைய சம்மதத்தைக் கேட்டேன். அப்போது யோசித்துச் சொல்வதாகக் கூறி விட்டு இரண்டு நாட்களுக்குப் பின் ஓடிப் போய் விட்டாள்' என்று கூறினார்.

'ஈசுவரமூர்த்தியைத்தான் மணந்து கொள்ள வேண்டுமென்று நீங்கள் வற்புறுத்தினீர்களா ?' என்று நம் வக்கீல் நீலகண்டன் கேட்டார்.

'இல்லவே இல்லை. அவளுக்கு இஷ்டமில்லை என்று கூறியிருந்தால் மணம் செய்து வைத்திருக்கவே மாட்டேன்' என்றார் பத்மநாபன்.

'பின் ஏன் நீங்கள் அவருடைய கார்டியனாக இருந்தும் அவளைத் தேடிக் கண்டுபிடிக்கவில்லை. அது தவறல்லவா ?' என்றார் நீலகண்டன்."

# 21. வழக்கு விவரங்கள்

இந்த வழக்கைப் பற்றிய விவரங்களை நான் காசிலிங்கத்துக்குக் கூறிக்கொண்டே வரும்போது பலவித மான உணர்ச்சிகள் என் உள்ளத்தில் போராடின. ஆனால் காசிலிங்கம் சிலையைப்போல் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தார். நான் பத்மநாபன் கூறியதைச் சொல்லத் தயங்கிச் சற்று நிறுத்தினேன்.

"அதற்குப் பத்மநாபன் என்ன பதில் சொன்னார் தம்பீ ?" என்று கேட்டார் காசிலிங்கம்.

"பத்மநாபனுடைய நெஞ்சழுத்தம் அவருடைய பதிலிலிருந்து தெரிந்தது. அதுவும் இவர் கூசாமல் சொன்ன பொய்யை நினைத்தால் நீறு பூத்திருக்கும் கோபம் மூண்டு எழுகிறது.

'அவள் என் வீட்டிலிருந்து வைரங்களைத் திருடிக் கொண்டு ராஜாராம் என்கிறவனோடு ஓடிப் போய்விட்டாள். சினிமாவில் வேறு சேர்ந்து விட்டாள். இந்த விவரங்கள் எனக்கு மூன்று வருஷங்கள் கழித்துத்தான் தெரிந்தன. எவனோ ஒருவனுடன் ஓடிப்போன பெண்ணை மறுபடியும்

வீட்டில் சேர்த்துக்கொள்ள எனக்கு இஷ்டமில்லை' என்றார் பத்மநாபன்.

இந்தச் சமயத்தில் நீதிபதி குறுக்கிட்டு, 'உங்கள் கேள்விகளுக்கும் வழக்குக்கும் சம்பந்தமே இருப்பதாகத் தெரியவில்லையே!' என்று நம்முடைய வக்கீல் நீலகண்டனைக் கேட்டார்.

அதற்கு நீலகண்டன், 'எதிரி ஓடிப் போனதும், பெயரை மாற்றி வைத்துக் கொண்டதும் குற்றவாளி மனப் பான்மையால்தான் என்று பிராஸிக்யூஷனில் கூறினார்கள். அவள் ஓடிப் போனதற்கும் பெயரை மாற்றி வைத்துக் கொண்டதற்கும் ஈசுவரமூர்த்தியை மணந்து கொள்ள விருப்பமில்லாததுதான் காரணம் என்பதை நான் நிரூபிக்க விரும்புகிறேன்' என்றார்.

'நீங்கள் இத்தனை கேள்விகள் கேட்டும் அது நிரூபணமாகவில்லை. அப்படியே இருந்தாலும் குற்றவாளி இந்தக் குற்றம் செய்யவில்லை என்று நிரூபிக்க அதில் ஒன்றும் சான்று இருப்பதாகத் தெரியவில்லை' என்றார் நீதிபதி.

உடனே நீலகண்டன் வேறுவிதமாகக் கேள்வி கேட்டார் :

'கைதியின் வளர்ப்புத் தந்தை அவர் குற்றவாளி என்று உங்களிடம் கூறியதற்கு என்ன ருசு இருக்கிறது ?'

'எனக்கு அந்த விஷயங்கள் விவரமாகத் தெரிந்திருப் பதுதான் ருசு' என்று பதிலளித்தார் பத்மநாபன்.

பத்மநாபன் சாட்சியமே இந்து குற்றவாளி என்று நிரூபிக்கப் போதுமானது என்று பலர் எண்ணினார்கள். பத்திரிகையில்கூட அவ்வாறுதான் எழுதியிருந்தது'' என்று கூறினேன்.

"இந்துமதி வாக்குமூலத்தில் எல்லா விவரங்களையும் எழுதிக் கொடுத்து விட்டாளா?" என்று காசிலிங்கம் என்னைக் கேட்டார்.

"அவளைக் கைது செய்த சமயம் நான் அருகில் இல்லை. அவளை ஏதேதோ கேள்விகள் கேட்டுத் துளைத் திருக்கிறார் போலீஸ் இன்ஸ்பெக்டர். அவள் பாவம்! வந்தது வரட்டுமென்று உண்மை முழுவதையும் கூறி விட்டாள். வாக்குமூலத்திலும் சகல விவரங்களும் எழுதப் பட்டிருக்கின்றன" என்றேன்.

"அப்படியென்றால் ?........."

"தான் கடிதத்தைப் பார்த்துவிட்டுப் போனது, அங்கே தான் எதிர்பார்த்தவருக்குப் பதிலாகச் சொக்கையா இருந்தது, அவனைப் பின்னாலிருந்து ஒரு உருவம் வந்து குத்தியது, தான் ஓடிவந்து விட்டது, இத்தனை விவரங் களையும் இந்து எழுதிக் கையெழுத்துப் போட்டிருக்கிறாள். குற்றம் செய்தது யார் என்பது தெரியுமா என்று கேட்டிருக்கிறார்கள். தெரியாது என்று கூறி இருக் கிறாள். இத்தனைக்கும் பிறகு, 'நான் சொக்கை யாவைக் கொலை செய்ய வேண்டுமென்று நினைத்ததே இல்லை. நான் நிரபராதி' என்று கடைசியில் இந்துமதி கூறினால் இன்ஸ்பெக்டர் நம்பி விடுவாரா? 'குற்றம் நடந்த சமயத்தில் அருகிலிருந்ததாக எதிரி ஒப்புக் கொண் டிருக்கிறாள். சந்தர்ப்ப சாட்சியங்கள் எல்லாம் அதற்குப் பொருத்தமாக இருப்பதால் அதை அவள் ஒப்புக்கொண்டே தீரவேண்டியிருக்கிறது. ஆனால் தண்டனைக்குப் பயந்து தான் நிரபராதி என்கிறாள். எதிரிதான் குற்றவாளி என்பதில் சந்தேகமில்லை' என்று இன்ஸ்பெக்டர் கூறுகிறார்."

"பாதிரித் தோட்டத்தில் இந்துமதி யாரைப் பார்க்கப் போனாள் என்று கேட்டார்கள் அல்லவா?"

"ஆமாம்! கேட்டார்கள் அதற்கு அவள் முதலில் பதில் சொல்ல மறுத்துவிட்டாள். பின்னால் நான் சாட்சி சொன்னபோது நீலகண்டன் என்னை, 'நீங்கள் பிரதி

வாதிக்குப் பாதிரித் தோட்டத்துக்கு வரும்படி கடிதம் எழுதியதுண்டா ?' என்று கேட்டார். நான், ' இல்லை ' என்றேன்.

' நீங்கள் ஊருக்குப் போகும் விஷயம் பிரதிவாதிக்குத் தெரியும் அல்லவா ?' என்று என்னைக் கேட்டார்.

' தெரியும் ' என்றேன்.

' என்று நீங்கள் அவரைக் கடைசியாகப் பார்த்தீர்கள் ?'

' நான் சென்னை புறப்படுவதற்கு முதல் நாள் பார்த்தேன்.'

' பாதிரித் தோட்டத்தில் உங்களை வந்து சந்திக்கும்படி அவரிடம் அன்று நீங்கள் கூறியது உண்மையா ?'

' உண்மை.'

' நீங்கள் ஏன் அங்கு போகவில்லை ?'

' திருநந்திபுரத்தில் எனக்கும் தங்கபாண்டியனுக்கும் வேறு வேலை இருந்தது. அது நான் எதிர்பார்த்தபடி சீக்கிரம் முடியவில்லை. ஆகவே நான் பாதிரித் தோட்டத்துக்கு வர முடியவில்லை.'

' மறுநாளும் அப்படியே ஆயிற்று ?'

' ஆமாம்.'

' ஆகவே பிரதிவாதிக்குப் பாதிரித் தோட்டத்துக்கு வரும்படி நீங்கள் எழுதியதுபோல் கடிதம் வந்தால் அங்கே அவர் செல்வதில் அதிசயம் இல்லையே ' என்று கேட்டார் வக்கீல் நீலகண்டன்.

நான் பதில் சொல்வதற்குள் பிராஸிக்யூஷன் வக்கீல் எழுந்து, ' அவ்வாறு கேள்வி கேட்பது தவறு. சாட்சியை ஒரு அனுமானம் செய்ய இடம் கொடுக்கிறது இந்தக் கேள்வி ' என்றார். நீதிபதியும், ' அப்படிச் சாட்சியைக் கேள்வி கேட்கக் கூடாது ' என்றார்.

உடனே நீலகண்டன் என்னைப் பார்த்து, 'எதிரிக்கும் இறந்து போனவருக்கும் ஏதாவது விரோதம் இருந்ததா ?' என்று கேட்டார்.

' இல்லை ' என்றேன்.

' அவ்வளவு உறுதியாக எப்படிச் சொல்லுகிறீர்கள் ?'

' விரோதம் இருந்திருந்தால் என்னிடம் இந்துமதி சொல்லாமல் இருந்திருக்க மாட்டாள்.'

' நீங்கள் பொறுப்புள்ள உத்தியோகம் வகித்தவர். உமக்கு மிகவும் நெருங்கியவராக இருந்தபோதிலும் குற்றவாளியைத் தப்புவிக்க முயற்சிப்பீரா ?'

' குற்றவாளியென்பது நிச்சயமாகத் தெரிந்தால் தப்புவிக்க மாட்டேன் ' என்று கூறினேன்.

உடனே பிராஸிக்யூஷன் வக்கீல் எழுந்து, ' நீங்கள் சென்னைக்குப் புறப்பட்டபொழுது திரும்பி உடனே வருவதாக இருந்தீர்களா ?' என்று கேட்டார்.

' இல்லை. நேரே இங்கிலாந்து செல்வதாக இருந்தேன்.'

' அப்படியிருந்தும் நீங்கள் உங்களுடைய வருங்கால மனைவியிடம் அதைக் கூறி விடைபெற்றுக் கொள்ளாமல் போனீர்களா ?'

' நான் அப்படிக் கூறவில்லை. நான் இங்கிலாந்து செல்லும் விஷயம் இந்துவுக்குத் தெரியும். ஆனால் நான் குங்குமத்துறையிலிருந்து புறப்படுவதற்கு முதல் நாள் காலைதான் பார்த்தேன். அதன் பிறகு ரயிலேறும் வரையில் அவளைச் சந்திக்க முடியாமல் திருநந்திபுரத்தில் வேலை இருந்தது.'

' அப்படி இல்லை என்றும், நீங்கள் விடைபெற்றுக் கொள்ளத் திரும்பி வரமாட்டீர்கள் என்பது எதிரிக்குத் தெரியும் என்றும் நான் கூறுகிறேன். இதை ஒப்புக் கொள்கிறீர்களா ?'

நீதிபதியே இங்கு குறுக்கிட்டு, 'நீங்கள் கேட்கும் கேள்வியின் பயன்என்ன என்பது எனக்கு விளங்க வில்லை' என்று கூறினார்.



அதற்குப் பிராஸிக்யூஷன் வக்கீல், 'மைலார்ட்! இவர் முதல் நாள் காலையில் இனிமேல் எதிரியைப் பார்க்க வர இயலாது என்று தெரிவித்து விட்டே புறப்பட்டிருக்கிறார் என்றும், எழுதி அனுப்பப்பட்ட கடிதம் இவருடையது அல்ல என்பதை அறிந்தே எதிரி குற்றம் நடந்த ஸ்தலத்துக்குச் சென்றிருக்கிறார் என்றும் நான் கருதுகிறேன்!' என்றார்.

'சரி! மேலே கேளுங்கள்' என்று கூறினார் நீதிபதி.

எனக்கு உடம்பெல்லாம் எரிந்தது.

'எதிரி உமது கையெழுத்தைப் பார்த்ததே இல்லையா?'

'ஒரு தடவை பாட்டு எழுதிக் கொடுத்திருக்கிறேன்.'

'சொக்கையா கடிதம் எழுதியிருந்தால் அது உம்முடைய கையெழுத்தில்லை என்று எதிரிக்குத் தெரிந்திருக்க வேண்டும் அல்லவா?'

அப்போது டிபென்ஸ் வக்கீல் எழுந்து, 'சாட்சி ஒரு விஷயத்தை அனுமானம் செய்ய இடம் கொடுக்கிறது, இந்தக் கேள்வி!' என்று கூறினார்.

அதன் பிறகு என்னை அவர் ஒன்றும் கேட்கவில்லை. ஆனாலும் எனக்கு மனத்தில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. பிராஸிக்யூஷன் வக்கீல் பேச்சு எல்லோர் மனத்திலும் உண்மை என்று தோன்றும்படி அமைந்துவிட்டதோ

என்ற பயம் உண்டாயிற்று. இந்துமதி வேண்டுமென்றே அந்த இடத்துக்குப் போனாள் என்பதுதான் ஜூரர்கள் மனத்தில் படும் என்று எனக்குத் தோன்றியது.

நீங்களே பாருங்கள். நான் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறேன். திரும்பி வர இரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகும். அவளை மணந்து கொள்வதாக வாக்களித்திருக்கிறேன். அந்த மாதிரி சந்தர்ப்பத்தில் நான் அவளிடம் கட்டாயம் விடைபெற்றுக் கொண்டுதான் போயிருக்க வேண்டும் என்றுதானே தோன்றும். தங்கபாண்டியனுக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருந்தபடியால் நான் இந்துவைப் பார்க்க வரவில்லை என்பது பொருத்தமாக இல்லை அல்லவா? நான் வராதபடியால் முதலிலேயே தான் வரமாட்டேன் என்பது இந்துவுக்கு நிச்சயமாகத் தெரியும் என்றுதான் அனைவரும் கருதுவார்கள். எனக்கு அதை எண்ணியபோதே தலை சுற்றியது.''

"ஏன் தம்பி! அப்படியானால் இந்துமதி ஏன் பிள்ளையாரை அங்கு எடுத்துச் சென்றாள் என்று கேட்டிருக்கலாமே!'' என்று கூறினார் காசிலிங்கம்.

"அதைக் கேட்பதற்காகத்தான் வக்கீல் நீலகண்டன் இந்துவைச் சாட்சிக் கூண்டில் ஏற்றி விசாரித்தார். அதிலிருந்து இன்னொரு விபரீதம் முளைத்தது'' என்று கூறித் தொடர்ந்தேன்.

"இந்து சாட்சிக் கூண்டில் ஏறி நின்றதும் நியாயஸ்தலம் முழுவதும் அமைதி நிலவியது. அதற்குக் காரணம் அத்தனை துயரத்துக்கு இடையிலும் அவள் முகத்திலுள்ள சௌந்தர்யம் அப்படியே இருக்கிறதே என்ற வியப்பினாலா அல்லது இத்தனை அழகுள்ள பெண் இப்படி ஒரு குற்றம் செய்தாளா என்ற அதிசயத்தினாலா என்று எனக்கு இன்னும் புரியவில்லை. யார் யார் என்ன நினைத்தார்களோ,

நான் அறியேன். ஆனால் இந்துவைத் தூக்கிக் கொண்டு எங்கேனும் பறந்து சென்றுவிட வேண்டுமென்ற ஆவேசம் எனக்கு ஏற்பட்டது.

டிபென்ஸ் வக்கீல் இந்துவைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார் : 'பதட்டமில்லாமல் பதில் சொல்லுங்கள், அம்மா ! உங்களுக்கு எத்தனை மணி சுமாருக்கு இந்தக் கடிதம் வந்தது ?'

'மணி நான் பார்க்கவில்லை. இருள் கவிய ஆரம்பித்து விட்டது. கடிதத்தை வாங்கிக் கொண்டு விளக்கருகில் சென்று படித்தது ஞாபகம் இருக்கிறது.'

'கையெழுத்தைக் கவனித்தீர்களா ?'

'அதைப் பற்றிய சிந்தனையே எனக்கு எழவில்லை.'

'கடிதத்தைக் கண்டதும் நீங்கள் என்ன செய்தீர்கள்?'

'உடனே பாதிரித் தோட்டத்துக்கு ஓடிச் சென்றேன்.'

'தந்தப் பிள்ளையார் உங்களுடையது என்று சொன்னீர்களே ! அதை எப்போது எடுத்துக் கொண்டீர்கள் ?'

'அது கடிதம் வந்தபோது என் கையில்தான் இருந்தது. அதை எப்படியாவது அவரிடம் கொடுக்க வேண்டும் என்று கையிலேயே அன்று முழுதும் வைத்துக் கொண்டிருந்தேன்.'

'ரங்கதுரை உங்களிடம் விடைபெற்றுக் கொண்டு போயிருந்தால், அதாவது அந்த இரண்டு நாட்களும் உங்களைச் சந்திக்க மாட்டேனென்று கூறியிருந்தால் நீங்கள் பிள்ளையாரைக் கையில் வைத்துக் கொண்டு இருந்திருப்பீர்களா ?'

'மாட்டேன்'

'ரங்கதுரை உங்களைப் பாதிரித் தோட்டத்தில் சந்திக்கும்படி கூறினாரா ?'

'ஆம். முதல் நாள் காலையில் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தபொழுது, மாலையில் பாதிரித் தோட்டத்தில் வந்து சந்திக்கும்படி கூறினார்.'

'அன்று நீங்கள் போயிருந்தீர்களா ?'

'போயிருந்தேன். ஆனால் அவர் அன்று மாலை வரவில்லை.'

'ஆகவே மறுநாள் கடிதம் வந்ததும் அவர்தான் கட்டாயம் வந்திருப்பார் என்று எண்ணினீர்களா ?'

'ஆம்.'

'அங்கே நீங்கள் சென்றதும் என்ன நடந்தது என்று கூற முடியுமா ?'

இந்து நிதானமாக நடந்ததையெல்லாம் ஒன்று விடாமல் தெளிவாகச் சொன்னாள். எனக்கே அவளுடைய அமைதி தவழும் முகத்தைக் கண்டு அதிசயமாக இருந்தது. இதயம் கசிந்தது.

அது முடிந்ததும் பிராஸிக்யூஷன் வக்கீல் குறுக்குக் கேள்விகள் கேட்டார்.

'ரங்கதுரை என்று கையெழுத்திட்ட கடிதம் வந்ததும் பாதிரித் தோட்டத்துக்குப் போனீர்கள் அல்லவா ?'

'ஆமாம்.'

'அப்போது இருட்டும் நேரம் என்றும் கூறினீர்கள் அல்லவா ?'

'ஆம்.'

'அந்த மாதிரி இருட்டு வேளைகளில் ரங்கதுரை உங்களைப் பாதிரித் தோட்டத்துக்குத் தனியே வரச் சொல்லி முன்பின் தெரியாத பையனிடம் கடிதம் எழுதி அனுப்பக்கூடுமென்று நீங்கள் நம்பினீர்களா ?'

'நான் எதையுமே அப்போது சிந்தனை செய்ய வில்லையே ?'

'அவர் உங்களிடம் விடைபெற்றுக் கொள்ள வீட்டுக்குத்தானே நியாயமாக வந்திருக்க வேண்டும்?'



'ஆம்!'

'அவ்வளவு கண்ணியமான ஒரு வாலிபர் இருட்டிய பிறகு உங்களைப் பாதிரித் தோட்டத்துக்கு வரச் சொல்லி எழுதியிருந்தது உங்களுக்கு விநோதமாகக் கூடப் படவில்லையா?' என்று கேட்டார் பிராஸிக்யூஷன் வக்கீல். இந்து என்ன பதிலளிக்கப் போகிறாள் என்பதைக் கோர்ட்டில் கூடியிருந்த அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்தனர்.

# 22. இந்துவின் சாட்சியம்

இந்துமதி அதுவரை தைரியமாகக் கொஞ்சங்கூடத் தயங்காமல் பதில் சொல்லிச் சமாளித்து வந்தாள். இப்பொழுது மட்டும் சற்றுத் தயங்கினாள். ஒரு கண நேரம் கழித்துப் பேசியபோது அதில் தயக்கத்தின் சாயலே இல்லை. மிக நிதானமான குரலில் தெளிவாக உச்சரித்துப் பேசினாள். சிறிதும் பயமோ தயக்கமோ வெளியில் தெரியவில்லை. 'உண்மையைச் சொல்ல எனக்கு என்ன பயம்?' என்று அவள் எல்லோரையும் பார்த்துக் கேட்பதுபோல இருந்தது.

'எனக்கு அவரைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணம் ஒன்றுதான் அப்போது இருந்தது. வேறு எவ்வித சிந்தனையும் எழவில்லை. பின்னால் நான் செய்தது எவ்வளவு பெரிய தவறு என்று மிக வருந்தினேன்' என்றாள்.

'சரி! அப்படியே இருக்கட்டும். சொக்கையாவை ஏதோ ஒரு உருவம் கத்தியால் குத்திவிட்டு ஓடியதாகவும், நீங்களும் உடனே வீட்டுக்குப் போய் விட்டதாகவும் கூறினீர்கள். அப்படியானல் நீங்கள் போலீஸுக்குத் தகவல் தெரிவித்திருக்க வேண்டுமல்லவா ? ஏன் அவ்வாறு செய்யவில்லை ?'

'எனக்கு இந்த மாதிரி ஒரு விஷயம் நேரக்கூடும் என்று தோன்றியதே கிடையாது. நான் கண்ட பயங்கரக் காட்சி என் அறிவையே பேதலித்துப் போகச் செய்து விட்டது. நான் வீட்டுக்கு ஓடிவந்த பிறகு ஒரே நடுக்கமாக இருந்தது. அன்றிரவே ஜுரம் வந்துவிட்டது. எனக்குப் போலீஸுக்குத் தகவல் கொடுக்க வேண்டுமென்ற எண்ணமே தோன்றவில்லை !'

'உங்கள் வளர்ப்புத் தந்தை மந்திரமூர்த்தியிடம் இதையெல்லாம் எப்போது கூறினீர்கள் ?'

'எனக்கு உடம்பு சரியான பிறகு, அதாவது இந்தச் சம்பவம் நடந்து நான்கு நாட்களுக்குப் பிறகு கூறினேன்.'

'கடிதத்தை என்ன செய்தீர்கள் ?'

'என் தந்தை அதை எரித்துவிட்டார் !'

'நீங்கள் குற்றம் செய்ததாக அவர் நம்பியபடியால் தான், அவர் உங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று அதைத் தீயில் போட்டு எரித்துவிட்டார் என்று நான் கூறுகிறேன். அது சரியா ?'

'நான் அந்தக் குற்றத்தைச் செய்யவும் இல்லை. என் தந்தை அவ்வாறு எண்ணவும் இல்லை !'

'பின் ஏன அவர் அந்தக் கடிதத்தை எரிக்க வேண்டும் ?'

இந்துவின் முகத்தில் புன்னகையின் சாயை தோன்றியது. 'என்மீது சந்தேகம் ஏற்பட இடமிருக்கிறது என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. அதனல்

தான் எரித்து விட்டார்' என்று அவள் கூறியபோது, 'இவ்வளவு சிறிய விஷயம் உங்களுக்குத் தெரியவில்லையா? நான்தான் கூறவேண்டுமா ?' என்று கேட்பது போலவே இருந்தது.

ஆனால், எனக்கு அளவிலாத சோர்வு உண்டாயிற்று. இந்து வழக்கை இன்னும் கடினமாகச் செய்துவிட்டாள். என் கால்களில் ஒரு தளர்ச்சி உண்டாயிற்று.

'இதைப் பற்றி நீங்கள் ரங்கதுரைக்குக் கடிதம் எழுதினீர்களா ?'

'இல்லை.'

'ஏன் ?'

'என் தந்தை எழுதக்கூடாது என்று என்னைத் தடுத்துவிட்டார்.'

பிராஸிக்யூஷன் வக்கீல் அர்த்தபுஷ்டி ததும்பும் புன்னகையுடன் ஜூரிகளை ஒரு தரம் பார்த்துவிட்டு மறுபடியும் குறுக்கு விசாரணையைத் தொடர்ந்தார்.

'உங்களுக்குச் சொக்கையாவின்மீது விரோதம் உண்டா ?'

'கிடையாது.'

'நல்ல எண்ணம் உண்டா ?'

'கிடையவே கிடையாது !'

'அப்படி என்றால் என்ன பொருள் என்று விளக்கிக் கூற முடியுமா ?'

'சொக்கையா ரொம்பப் பொல்லாதவர். யாருக்குமே அவரைப் பிடிக்காது. நான் அவர் வழிக்குப் போகாமல் ஒதுங்கிக் கொண்டேனே தவிர, அவரிடம் விரோதம் பாராட்டவில்லை.'

இந்துவின் தெளிவான பதில் மறுபடியும் எனக்கு நம்பிக்கையை வளரச் செய்தது.

ஆனால், வக்கீல் அவளை விடவில்லை. 'சொக்கையாவுக்கும் உங்கள் வளர்ப்புத் தந்தையான மந்திரமூர்த்திக்கும் நிலங்கள் சம்பந்தமான தகராறுகள் இருந்தனவா ?' என்று கேட்டார்.

நமது கட்சி வக்கீல் நீலகண்டன் எழுந்து, 'வழக்குக்கும் இந்தக் கேள்விக்கும் சம்பந்தமிருப்பதாகத் தெரியவில்லை, மை லார்ட்!' என்றார் நீதிபதியைப் பார்த்து.

நீதிபதியும், 'இதன் அவசியம் எனக்குப் புரியவில்லையே ?' என்றார்.

'குற்றவாளியின் மனத்தில் சொக்கையாமீது எப்படிப் படிப்படியாகத் துவேஷம் வளர்ந்திருக்க வேண்டும் என்று நிரூபிக்கவே இவைகளைக் கேட்கிறேன், மை லார்ட்!' என்றார் பிராஸிக்யூஷன் வக்கீல்.

'சரி! கேளுங்கள்' என்றார் நீதிபதி.

உடனே வக்கீல் இந்துமாவைப் பார்த்து, 'அதாவது உங்கள் தந்தைக்கும் சொக்கையாவுக்கும் நிலத் தகராறுகளும், அது சம்பந்தமாகக் கோர்ட் விவகாரங்களும் வெகு நாட்களாக இருந்து வந்தன என்பது உங்களுக்குத் தெரியுமா ?'

'தெரியும்.'

'சொக்கையாவினால் உங்கள் வளர்ப்புத் தந்தை வறுமை நிலையடைந்தார் என்று சொல்வது உண்மை தானே ?'

'உண்மைதான்.'

'உங்களுடைய உண்மைத் தந்தை காசிலிங்கத்துக்கும், சொக்கையாவுக்கும் ரொம்ப விரோதம் என்பதும் அப்போது உங்களுக்குத் தெரியுமா ?'

'தெரியும்!'

'காலஞ்சென்ற ஜமீன்தாரைக் கொலை செய்தது உங்கள் உண்மைத் தந்தை காசிலிங்கம்தான் என்று சொக்கையா முதலில் குற்றம் சாட்டினர் அல்லவா ?'

' ஆமாம்.'

' இதெல்லாம் உங்களுக்கு முதலிலேயே தெரியுமல்லவா ?'

' தெரியும் !'

' உங்கள் தாயாரைப் பற்றிச் சொக்கையா கேவலமாகப் பேசுவதுண்டா ?'

அதுவரை தனக்கும் வழக்குக்கும் சம்பந்தமே இல்லாததுபோல் அலட்சிய பாவத்துடன் பதில் அளித்து வந்த இந்து, யாரும் எதிர்பாராத வண்ணம் விம்மி விட்டாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழிந்தது. ஒரு நிமிஷம் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்றவள், பிறகு உடனே சமாளித்துக்கொண்டாள்.



' ஆம், பேசியதுண்டு ' என்றாள்.

' உங்களுக்குச் சுசீலாதேவி என்று ஒரு வாத்தியாரம்மா இருந்தாரா ?'

' ஆம்.'

' அவர் உங்களுக்குச் சொக்கையாவைப் பற்றி ஏதாவது எச்சரிக்கை செய்ததுண்டா ?'

' உண்டு. ' சொக்கையா நல்ல நடத்தை உள்ளவர் அல்ல. நீகூட அவர் கண்ணில் படாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று கூறினார்.'

'ஆகவே, நீங்கள் சொக்கையா உங்களைச் சந்திக்க முயற்சி செய்யலாம் என்று எதிர்பார்த்தீர்கள் என்று கூறலாமா ?'

'அப்படிச் சொல்ல முடியாது. அவர் வழிக்குப் போகாமல் ஒதுங்கியிருக்க வேண்டுமென்று நினைத்த துண்டு.'

'சுசீலாதேவியைச் சொக்கையா பாதிரித் தோட்டத்தை வாங்கியதன் மூலம் அங்கிருந்து விரட்டிவிட்டது உண்மைதானே ?'

'உண்மைதான் !'

'அது உங்களுக்கு மிகவும் ஆத்திரமூட்டியது அல்லவா ?'

'சுசீலாதேவி போனரே என்று எனக்கு வருத்த மாக இருந்தது.'

'நான் கேட்டதற்குப் பதில் சொல்லுங்கள்! சுசீலா தேவியைச் சொக்கையா சரியாக நடத்தவில்லை என்பத ஞலும், உங்கள் தாயாரைப் பற்றி அவர் கேவலமாகப் பேசினர் என்பதாலும், உங்களுடைய கஷ்டங்களுக் கெல்லாம் அவர் காரணமாக இருந்தார் என்பதாலும் அவர்மீது உங்களுக்கு வெறுப்பும் கோபமும் ஏற்பட் டிருந்தனவா ?'

'ஆம் !'

'இளைய ஜமீன்தார் தங்கபாண்டியனும், அவனுடைய நண்பனை ரங்கதுரையும் உங்கள் வீட்டுக்கு வரக்கூடாது என்று சொக்கையா தடுத்த விவரம் உங்களுக்குத் தெரியுமல்லவா ?'

'தெரியும்.'

'உங்களுடைய வளர்ப்புத் தந்தை மந்திரமூர்த்தி தமக்குச் சொந்தமான இரண்டு வேலி நிலத்தையும்

சொக்கையாவுக்கு விற்பதாக ஏற்பாடு செய்திருந்தார் அல்லவா ?'

' ஆமாம் !'

' சொக்கையா அதை வாங்கியிருந்தால் நீங்கள் ரொம்பக் கஷ்ட தசையை அடைந்திருப்பீர்கள் அல்லவா ?'

' ஆமாம் !'

' அவர் இறந்ததனுல் அந்த நிலம் தங்கிவிட்ட தல்லவா ?'

' ஆமாம் !'

' கடைசியாக இரண்டொரு கேள்விகள் கேட்டுவிட்டு நிறுத்திக் கொள்கிறேன் ' என்று நீதிபதியைப் பார்த்துப் பிராஸிக்யூஷன் வக்கீல் கூறினுர். ஒரு நிமிஷம் யோசனை செய்துவிட்டு இந்துவைப் பார்த்து, ' சம்பவம் நடப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன் நீங்கள் ரங்கதுரையை அதே பாதிரித் தோட்டத்தில் வந்து சந்தித்தீர்கள் அல்லவா ?' என்று கேட்டார்.

' ஆம்.'

' முதல் நாள் மாலையும் பாதிரித் தோட்டத்துக்குப் போனதாகக் கூறினீர்கள் அல்லவா ?'

' ஆம் !'

' அப்படியானுல் தந்தப் பிள்ளையாரை முதல் நாளே நீங்கள் அங்கு எடுத்துப் போயிருந்திருக்கலாம் அல்லவா ?'

' நான் முதல்நாள் எடுத்துக்கொண்டு போகவில்லை !'

' கடிதம் வந்த சமயத்தில் பிள்ளையார் கையிலிருந்தது என்று ஒப்புக்கொண்டீர்கள் அல்லவா ?'

' ஆம்.'

' நீங்கள் அங்கே சென்ற வேகத்தில் பிள்ளையாரைக் கையுடன் எடுத்துச் சென்றிருக்கலாம் அல்லவா ?'

'நான் அதை நல்ல நினைவுடன்தான் எடுத்துச் சென்றேன்.'

உடனே பிராஸிக்யூஷன் வக்கீல் நீதிபதியைப் பார்த்து, 'இதைவிடக் குறைந்த காரணங்களுக்கு எல்லாம் கொலை நடந்திருக்கிறது மை லார்ட். எதிரிதான் குற்றவாளி என்பது நிரூபணமாகிவிட்டது' என்று கூறிவிட்டுச் சடாரென்று உட்கார்ந்துகொண்டார். எனக்கு என்ன தீர்ப்பு வருமென்று அப்போதே தெரிந்துவிட்டது." அதை நான் காசிலிங்கத்திடம் கூறும்போதே எனக்கு நெஞ்சை அடைத்தது.

"ஆமாம்! ஒருவன் கொல்லப்பட்டால் அதற்கு ஏதேனும் ஆயுதம் உபயோகப்பட்டிருக்க வேண்டுமல்லவா? அதைப்பற்றி ஒன்றையுமே காணோமே?" என்று கேட்டார் காசிலிங்கம்.

"அது உண்மைதான். ஆனால் பிராஸிக்யூஷனுக்கு ஆயுதம் கிடைக்கவில்லை. அவர்கள் அதைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் தங்களுடைய திறமையைக் குறைத்துக் கொள்வதாக ஆகும். நமது கட்சியில் ஆயுதத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தால் அவர்கள் உடனே, 'கடிதத்தை எரித்து ஒரு தடையத்தை மறைத்தவர்கள், ஆயுதத்தையும் வைத்துக்கொண்டிருப்பார்களா? அவளுடைய தந்தை அதையும் மறைத்திருப்பார்' என்று கூறுவார்கள். அதனால் அதைப்பற்றிப் பேச முடியவில்லை" என்றேன்.

"இந்துமதி உனக்குக் கொடுப்பதற்காகத் தந்தப் பிள்ளையாரை எடுத்துச் சென்றதாகக் கூறியிருக்கிறாளே. அதைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்? வேண்டுமென்று கொலை செய்யப் போனவள் தடையம் ஒன்றை எடுத்துக் கொண்டு போவாளா?"

"நமது கட்சியில் அதைத்தான் வலியுறுத்தப் பார்த்தோம். அதற்காகத்தான் இந்துவையே சாட்சிக் கூண்டில்

ஏற்றினோம். ஆனால் இந்து உண்மையைச் சொல்லி அதைக் கெடுத்துவிட்டாள். கடிதம் வந்தபோது தன் கையில் பிள்ளையார் இருந்தது என்றாள். ஆகவே அவள் அதைக் கையோடு மறந்துபோய் எடுத்துக்கொண்டு போயிருந்திருக்கலாம் அல்லவா? எனக்குக் கொடுப்பதற்காகத்தான் அதை வைத்துக்கொண்டிருந்தாள் என்பது என்ன நிச்சயம்? ஏதோ கையில் வைத்துக்கொண்டு இருந்திருக்கலாம். அந்தச் சமயத்தில் சொக்கையாவிடமிருந்து கடிதம் வரவே, 'இதுதான் சரியான சமயம் பழி வாங்க' என்று நினைத்து உடனே ஓடிப் போயிருக்கலாம்; குற்றம் செய்யும்போது தவறிக் கீழே விழுந்திருக்கலாம். அல்லது அதற்கு முதல் நாளே போட்டிருக்கலாம்' இது பிராஸிக்யூஷன் வாதம். அப்படித்தான் ஜூரர்களும் நினைப்பார்கள் அல்லவா?" என்றேன்.

"ஏன் தம்பீ! அப்படியே சொக்கையா உன் பெயரில் கடிதம் எழுதியிருந்தால் அவன் ஏதோ கெட்ட எண்ணத்துடன்தான் வரவழைத்திருக்க வேண்டுமென்று தெளிவாகத் தெரிகிறதே. அவன் விரித்த வலையில் இந்து அகப்பட்டுக் கொண்டுவிட்டாள் என்று நாம் வாதாட வேண்டாமா?"

"அவர்கள்தான் சொக்கையா எழுதிய கடிதம் என்று தெரிந்துதான் இந்து அங்கே போனாள் என்று சொல்கிறார்களே. சொக்கையா தன்னைச் சந்திக்க விரும்புவார் என்று இந்து எதிர்பார்த்தாளென்று அவர்கள் நிரூபித்து விட்டார்களே. சுசீலாதேவி சொக்கையா விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லி எச்சரிக்கை செய்ததாக இந்து ஒப்புக் கொள்ளவில்லையே?"

"அட கடவுளே!"

"அதனால் இந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவனைக் கொன்றாள் என்றுகூட நாம் வாதாட

முடியாத நிலையிலிருக்கிறோம். மேலும் அது நம்முடைய நோக்கமில்லையே. இந்து நிரபராதி என்று நிரூபிப்பது தானே நம்முடைய நோக்கம்!"

"அதற்கு என்ன வழி ?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை."

"இது என்ன அக்கிரமம் தம்பீ! எப்படியாவது அவளை விடுதலை செய்தேயாக வேண்டும்."



"உண்மையில் குற்றம் செய்தவனைக் கண்டுபிடித்து ஒப்புக்கொள்ளச் செய்தால் ஒழிய, இந்துவைக் காப்பாற்ற வேறு வழியிருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்றேன் அளவற்ற துயரத்தோடு.

காசிலிங்கம் மௌனமானார்.

* * *

அன்று மாலை நான் தங்கபாண்டியனைச் சந்தித்த பொழுது அவனுக்கு நல்ல ஜுரம் அடித்துக்கொண்டிருந்தது. டாக்டரை நானே சென்று அழைத்து வந்தேன். தங்கபாண்டியனுக்கு ஒரு பெரிய ரணசிகிச்சை நடந்திருந்தபடியால் அவனுக்கு ஜுரத்தைத் தாங்கும் சக்தியே இல்லை. டாக்டர் அவனுக்கு டைபாயிட் ஜுரம் என்று அபிப்ராயப்பட்டார்.

மருந்தெல்லாம் எழுதிக் கொடுத்துவிட்டு டாக்டர் போனார். பிறகு நான் மருந்து வாங்கிக்கொண்டு வர ஆளை அனுப்பிவிட்டுத் தங்கபாண்டியனுக்கு அருகில் உட்கார்ந்தேன்.

" இன்று காலை முதல் நீ எங்கே போனாய் ரங்கதுரை? சாப்பிடக்கூட வரவில்லையே?" என்று கேட்டான் தங்க பாண்டியன்.

" இந்து சிறையில் தன்னந்தனியே உட்கார்ந்து தன் முடிவை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும்போது வேறு எதைப் பற்றியாவது என்னால் சிந்திக்க முடியுமா பாண்டியா ? அதே யோசனையாகத்தான் இருந்தேன்."

" உன்னுடைய துயரம் எனக்குத் தெரியாதா ? இந்துவைக் கட்டாயம் நீ விடுதலை செய்து அழைத்துக் கொண்டு வந்துவிடுவாயென்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது, துரை !"

" அது எங்கே முடியப் போகிறது பாண்டியா ? இந்துவை நிரபராதி என்று நிரூபிக்க இதுவரையில் எந்தச் சாட்சியமும் கிடைக்கவில்லை. ஹைக்கோர்ட்டில் விசாரணை ஆரம்பிக்க இன்னும் ஒரே வாரம்தான் இருக் கிறது. நம்பிக்கைக்கே இடத்தைக் காணவில்லையே. எனக்கு என்னமாக இதயம் பதைக்கிறது தெரியுமா ? நிரபராதியான இந்து தண்டனை அடையப் போகிறாள். பாண்டியா ! அவளைப் பற்றிய தீர்ப்பு வெளியான உடனேயே என் முடிவும் வெளியாகிவிடும். நாங்கள் இந்த உலகில் ஒன்றாகச் சேர்ந்து வாழ முடியவில்லை என்றாலும் மறு உலகிலாவது கை கோத்துக்கொண்டு செல்ல ஆசைப்படுகிறேன். இந்துவுக்குத் தண்டனை நிறைவேற்றப்பட்டது என்பதை நான் காதால் கேட்க விரும்பவில்லை." எனக்கு உணர்ச்சி மிகுதியால் தொண்டையை அடைத்துக்கொண்டது.

தங்கபாண்டியனின் கண்கள் கலங்கின. " ரங்கதுரை ! நீ ஏன் இப்படி மனத்தைக் கலங்க அடித்துக் கொள்கிறாய்? கவலைப்படுவதால் எதையும் சரிசெய்துவிட முடியாது. நானும் இந்தச் சமயத்தில் இப்படிப் படுத்துக்கொண்டு

இருக்கிறேனே என்றுதான் வருத்தமாக இருக்கிறது" என்றான்.

"நீ என்ன செய்ய முடியும் பாண்டியா ? எங்கள் விதி இப்படியாக வேண்டும் என்றிருந்தால் யார்தான் என்ன செய்ய முடியும் ?" என்று கூறும்போதே எனக்கு மளமளவென்று கண்களில் ஜலம் பொங்கி வழிந்து விட்டது.

"துரை ! நீ எனக்கு எவ்வளவோ உதவிகள் செய்திருக்கிறாய். நாம் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த காலத்திலிருந்து என்மீது அன்புடன் நடந்து கொண்டிருக்கிறாய். எனக்குத் துணையாகவும், என் மனத்துக்கு ஒரு பலமாகவும் இருந்திருக்கிறாய். எனக்குத் தைரியம் ஊட்டி மனிதனாகச் செய்தவன் நீதான். என் மாமா சொக்கையாவின் மரணத்தினால் உனக்கும், உன் இந்துவுக்கும் இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்துவிட்டது. அதை நினைத்து நினைத்து என் மனம் ஆறவே மாட்டேன் என்கிறது. ரொம்ப வேதனையாக இருக்கிறது, துரை. நீ சாப்பிட்டு வா. உன்னுடன் எனக்குப் பேசவேண்டும்" என்றான் தங்கபாண்டியன்.

"என் சாப்பாட்டைப் பற்றி நீ கவலைப்படாதே. இன்று நான் என் மாமனார் இட்ட விருந்தைச் சாப்பிட்டு விட்டு வந்திருக்கிறேன்" என்றேன்.

"அப்படியா ?"

"ஆமாம். கஞ்சி வடிக்காத சாதமும், புளித்த தயிரும் கூடப் பசிக்கு ரொம்ப நன்றாக இருந்தன."

"மாமனார் என்று ஏதோ சொன்னாயே ? ஓட்டலில் சாப்பிட்டாய் என்றல்லவா நினைத்தேன் ?"

"இல்லை ! இல்லை. என் சொந்த மாமனார் காசிலிங்கத்தைப் பற்றித்தான் கூறினேன்."

தங்கபாண்டியன் திடீரென்று எழுந்து உட்கார்ந்து, “ என்ன ? காசிலிங்கமா ? அவர் உயிரோடிருக்கிருரா ?” என்ருன்.

அவனை மெதுவாகப் படுக்க வைத்துக்கொண்டே, “ பாண்டியா ! இப்படி உடம்பை அலட்டிக் கொள்கிருயே. உன்னிடம் நான் இதைக் கூறியிருக்கவே கூடாது. இங்கே ஒருவருமில்லாத சமயத்தில் உடம்பை அதிகமாக்கிக் கொண்டால் நான் எப்படி ஊருக்குப் போவது ?” என்று கேட்டேன்.

“அது கிடக்கட்டும். காசிலிங்கம் என்ன சொன்ஞர்?”

“ என்ன சொல்வார் ? மனம் முறிந்து போய், தான் செய்த தவறுகளையெல்லாம் எண்ணி வருந்துகிருர். இந்துவை நினைத்துப் புலம்புகிருர். அவரைப் பார்க்கவே வேதனையாக இருக்கிறது.”

“ ஐயோ பாவம் ! வேறு ஏதாவது விஷயங்கள் சொன்ஞரா ?” என்று கேட்டான் தங்கபாண்டியன்.

“ வழக்கின் விவரங்களை யெல்லாம் விடாமல் சொல்லும்படி கேட்டார். இந்துவை விடுதலை செய்வதற்கு என்ன உதவி வேண்டுமாஞலும் செய்யத் தயாராக இருக்கிருர். ஆஞல் அவர் என்ன செய்ய முடியும் ? நிஜக் குற்றவாளியைக் கண்டு பிடிப்பது ஒன்றுதான் இந்துவை விடுதலை செய்ய வழியென்று கூறினேன். பாவம் ! அப்படியே சிலை மாதிரி உட்கார்ந்து விட்டார்.”

“ குற்றம் செய்தது யாரென்று அவருக்கு ஏதேனும் சந்தேகம் இருப்பதாகச் சொன்ஞரா ?” என்று ஆவலுடன் கேட்டான் தங்கபாண்டியன்.

அதன் பிறகு காசிலிங்கம் கூறிய எல்லா விஷயங்களையும் விவரமாக அவனிடம் கூறினேன். அவர் தான் ஊகித்த மனிதர் யாரென்று கூற மறுத்து விட்டதையும்

31

கூறினேன். தங்கபாண்டியன் கவனமாக எல்லாவற்றையும் கேட்டான்.

கடைசியாக அவனை ரொம்பச் சிரமப்படுத்தி விட்டதாக எனக்குத் தோன்றியது. "இதை நினைத்து நீ கவலைப்படாதே, பாண்டியா. உடம்பைப் பார்த்துக் கொள்வதுதான் முக்கியம்" என்று கூறிவிட்டு எழுந்து சென்றேன்.

நேற்றிரவு தங்கபாண்டியனுக்கு ஜுரம் அதிகமாயிற்று. இன்று முழுதும் அப்படியே இருந்தது. டாக்டர் ராவ் என்னைப் பார்த்து, "நோயாளிக்கு இதயம் ஏற்கனவேயே பலஹீனம். ஒரு பெரிய ஆபரேஷன் வேறு செய்து கொண்ட உடம்பு. இப்போது ஜுரம் இவ்வளவு அதிகமாக இருக்கிறது. யாருக்காவது தெரியப்படுத்த வேண்டுமானால் உடனே செய்து விடுங்கள். என்னால் இயன்றவரையில் நான் முயற்சி செய்கிறேன்" என்றார்.

எனக்கு அறிவே குழம்பி விடும்போலிருந்தது. 'தங்கபாண்டியன் இறந்து விட்டால்? ஐயையோ! அவனை எப்படியாவது காப்பாற்றிவிடவேண்டும். இந்தச் சமயத்தில் தானா இவனுக்கு இப்படி உடம்புக்கு வரவேண்டும்? கடவுளே! இப்படியெல்லாம் சோதனை செய்யலாமா?' என்றெல்லாம் என் மனம் புலம்பியது. அவனை விட்டு நகராமல் கவனித்துக் கொண்டேன்.

லக்ஷ்மியும், அவள் சின்னம்மாவும் நாகபுரியில் இருந்தனர். லக்ஷ்மியின்கணவனுக்குத் தங்கபாண்டியனின் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது என்று தந்தி அடித்தேன்.

* * *

தங்கபாண்டியனுக்கு நினைவு தவறி விட்டது. அவனுக்கு ஐஸ் வைத்துக் கொண்டே உட்கார்ந்திருந்தேன். ஆகவே காசிலிங்கத்தைச் சந்திக்க மறுபடியும்

ஊமையன் கோட்டைக்குப் போக முடியவில்லை. பாவம்! அவர் என்ன எண்ணிக் கவலைப்படுகிறுரோ? தங்கபாண்டிய னுக்கு என் அஜாக்கிரதையினுல் ஆபத்து நேர்ந்து விட்டால் பிறகு, என்னை என்னுல் மன்னித்துக்கொள்ளவே முடியாது.

தங்கபாண்டியன் நிலை சிறிதும் குணமடையவில்லை. நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வந்தது.

# 23. புதிய குரல்!

நான் தந்தியடித்த ஐந்தாவது நாள் லக்ஷ்மி, அவளுடைய கணவர், சின்னம்மா எல்லோரும் வந்து விட்டனர். சின்னம்மா கண்ணீர் விட்டுப் புலம்ப ஆரம் பித்து விட்டார். அவரைச் சமாதானப்படுத்த வெகு நேரமாயிற்று.

லக்ஷ்மி என்னிடம் பிரியமாகப் பேசினுள். இந்துவின் கதியைப் பற்றி எல்லோரும் பரிதாபப்படுகிறுர்கள். தங்கபாண்டியனைப் போலவே லக்ஷ்மியும், " எங்கள் குடும்பத்தில் நடந்த ஒரு விஷயத்தினுல் உங்களிரு வருக்கும் இவ்வளவு கஷ்டம் வந்துவிட்டதே என்று வருத்தமாக இருக்கிறது " என்றுள். பிறகு இந்துமதி யைப் பற்றியெல்லாம் விசாரித்தாள். ஆறுதலும் சொன்னுள். ஆனுல் என் மனக் குமுறலை வார்த்தை களினுல் தணித்துவிட முடியுமா ?

இரண்டு நாட்களில் வழக்கு ஆரம்பமாகிறது. நான் சென்னைக்குப் புறப்பட்டேன். தங்கபாண்டியனிடம் விடைபெற்றுக் கொள்ளக்கூட முடியவில்லை. சுய நினைவே இல்லாமல் இருக்கிறுன். லக்ஷ்மி எனக்கு உற்சாகமூட்டி அனுப்பி வைத்தாள்.

ரயிலில் செல்லும்போது இந்து எழுதியிருப்பது ஞாபகம் வருகிறது. நானும் அவளும் ரயிலில் போவதாக, ஸ்டேஷனில் படுத்துக் கொண்டிருக்கும்போது கனவு கண்டதாக எழுதியிருக்கிருள். பாவம்! இந்துவின் கனவு கனவாகவே ஆகிவிடுமோ? அவளை எங்கும் என்ஞல் அழைத்துக்கொண்டே போக முடியாமல் போய் விடுமோ ?

குங்குமத்துறையிலிருந்து சென்னை வந்து சேர்ந்ததும் முதலில் இந்துமதியைப் போய்ப் பார்த்தேன். இந்து என்னைக் கண்டதும் ஒரு மலர்ந்த புன்னகையுடன் எழுந்து நின்ருள். அதைக் கண்டதும் என் நெஞ்சில் வேதனை பரவிற்று. அவளை விடுதலை செய்து அழைத்துப் போகும்படியான சாட்சிகளோடு நான் வரவில்லை என்பது அவளுக்குத் தெரியாது. அவள் நிரபராதி என்பதை நிரூபிக்க நான் ரூசு ஒன்றையும் கண்டு பிடிக்கவில்லை. இந்து தன் மனத்தில் அவளைக் காப்பாற்ற வந்த தெய்வமாக என்னை எண்ணிப் பூஜிக்கிருள். என்னைப் பார்த்ததும் அவள் கண்களில் ஒரு அசாதாரணமான ஒளி சுடர் விடு கிறது. நீல வானிலிருந்து இரண்டு சுடர்களைப் பறித்து அவள் கண் களில் பதித்தமாதிரி தோன்றுகிறது.



எனக்கு வார்த்தைகளே ஒன் றும் வரவில்லை. அவள் கையி லிருந்த புத்தகம் என் கண்ணில் பட்டது.

"என்ன புத்தகம் படிக்கிருய், இந்து ?" என்று கேட்டேன்.

"சுந்தரகாண்டம் படிக்கிறேன். சீதை அசோகவனத்தில் சிறைப்பட்டிருந்ததைப் படிக்கும்

போது, ஆறுதலாக இருக்கிறது. சீதாபிராட்டியாரின் துயரம் தீர்ந்ததுபோல் என் துயரமும் நிச்சயமாகத் தீர்ந்துவிடும் என்ற நம்பிக்கை பிறந்திருக்கிறது.''

"நீ இப்படி நம்பிக்கையுடனிருப்பது எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது, இந்து! முதலில் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்யக் கூடாதென்று பிடிவாதம் பிடித்தாயே. அப்படியெல்லாம் இனிமேல் செய்ய மாட்டாயல்லவா?''

"செய்யவே மாட்டேன். உங்கள் மனத்தை முன்பு நான் ரொம்ப நோகச் செய்து விட்டேன். இன்னமும் அப்படிச் செய்வேனா?''

"இல்லை, இந்து. நீ நோகச் செய்தாய் என்று நான் நினைத்தேன். அது எவ்வளவு தவறு என்பதும், நீ எப்படிப்பட்ட தியாகத்துக்குத் தயாராக இருந்தாய் என்பதும், உன் அன்பின் அற்புதமான வடிவமும் உன்னுடைய கதையைப் படித்தபோது தெரிந்தன. உன்மீது நான் ஆத்திரப்பட்டதையெல்லாம் இப்போது நினைத்தால்கூட வெட்கமாக இருக்கிறது.''

"ஏதாவது புதிதாக விஷயம் கிடைத்ததா?''

"இந்து! ஒரு முக்கியமான விஷயம் இருக்கிறது. அது என்னவென்று நீ கண்டுபிடி, பார்ப்போம்'' என்றேன்.

"நம்முடைய கல்யாணத்துக்கு நாள் குறித்து ஏற்பாடுகள் செய்து விட்டீர்களா?'' என்று விஷமப் புன்னகையுடன் கேட்டாள் இந்துமதி.

எனக்கு நெஞ்சை அடைத்தது. அதற்குப் பதில் சொல்லாமல், "உன் தந்தை காசிலிங்கத்தைப் பார்த்தேன்'' என்று கூறினேன்.

இந்து திடீரென்று எழுந்து நின்றாள். அவளுடைய முகத்தில் தோன்றிய மாறுதல், என்ன உணர்ச்சியினால் ஏற்பட்டது என்று எனக்கு விளங்கவில்லை. அவளுடைய உடல் முழுவதும் படபடப்பினால் நடுங்கியது.

"உண்மையாகவா?" என்று கேட்டாள். அவளுடைய குரலிலும் நடுக்கம் தெரிந்தது,

"நீ அமைதியாகக் கேள், இந்து!" என்று கூறிவிட்டுக் காசிலிங்கத்தை நான் சந்தித்துப் பேசியவைகளையெல்லாம் விவரமாகக் கூறினேன்.

அமைதியாக எல்லாவற்றையும் இந்து கேட்டாள். நான் கூறிய பிறகு, "எனக்கு அவரைப் பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருக்கிறது. நீங்கள் அவரை எப்படியாவது இங்கே அழைத்து வந்திருக்கக் கூடாதா? என் அம்மா இறக்கும் வரையில் அவருடைய நினைவாகவே இருந்தாள் என்பதை நான் அவரிடம் கூறவேண்டும். அம்மாவுக்கு நான் அதைச் சொல்வதாக வாக்கு அளித்திருக்கிறேன்" என்றாள்.

"அதைச் சொல்ல முடியாமல் போய்விடாது, இந்து! உன்னை விடுதலை செய்து நான் அழைத்துச் சென்ற பிறகு அவரை நீ பார்த்துப் பேச எத்தனை தடவை வேண்டுமானாலும் சந்தர்ப்பம் கிடைக்கும்" என்றேன்.

இந்துவின் உடல் இரண்டாம் முறையாக நடுங்கிற்று. "என்ன இந்து! ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? நீ ரொம்பத் தைரியமாக இருந்தாயே?" என்று கவலையுடன் கேட்டேன்.

"விடுதலை என்ற சொல்லைக் கேட்டாலே எனக்குப் பயமாக இருக்கிறது" என்றாள் இந்து.

"ஏன் அம்மா அப்படிச் சொல்கிறாய்?" என்று கேட்டேன்.

இந்துவின் நிர்மலமான கண்களிலிருந்து கண்ணீர் உதிர்ந்தது.

"ஒரு வாரத்துக்கு முன்னால் இங்கு ஈசுவரமூர்த்தி வந்திருந்தார். அவர் பேசியதைக் கேட்ட பிறகு இங்கேயே இருந்து விடலாம் என்று தோன்றுகிறது. விடுதலையை

விடச் சிறை வாசமே மேல். அவருடைய பயமுறுத்தல்கள் சிறையில் பலிக்காதல்லவா ?"

ஈசுவரமூர்த்தியைப் பற்றி நன்ருக அறிந்திருந்த நான்கூட அதைக் கேட்டுத் திகைத்தேன். லாக்-அப்பில் இந்துவை வந்து பார்த்துப் பயமுறுத்துவார் என்று நான் எதிர்பார்க்கவில்லே.

" அவர் என்ன சொன்ஞர் ?" என்று கேட்டேன்.

" என்னத்தைச் சொல்வார் ? படுபாவி அவர் சொன்னபடி நான் கேட்பதாக எழுதிக் கொடுத்தால் என்னே எப்படியாவது இதிலிருந்து விடுதலே செய்வதாகக் கூறிஞர். ' நான் முடியவே முடியாது ' என்றேன்.

அதற்கு அவர், ' இந்து ! ரங்கதுரையால் உன்னே விடுதலே செய்ய முடியவே முடியாது. நான் சொன்னபடி கேட்டால் உனக்கு ரொம்ப நல்லது. அல்லது ரங்கதுரை உன்னே விடுதலே செய்து விட்டாலும் உன்னே நான் சும்மா விட மாட்டேன் ' என்ருர். எனக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. 'நீங்களே என்னேப் போலீஸிலும் காட்டிக் கொடுத்து விட்டுப் பயமுறுத்தல் வேறு செய்கிறீர்களா ?' என்று கேட்டேன். துயரத்திஞலும், கோபத்திஞலும், அவமானத்தாலும் என் உடல் முழுதும் நடுங்கிற்று.

அதற்கு அவர் சிரித்துவிட்டு, ' இந்து, உன்னேக் காட்டிக் கொடுத்தது நான் அல்ல. உன்னே இந்தக் கதிக்கு உள்ளாக்கியதும் நான் அல்ல. உன் அருமைத் தந்தையே சொக்கையாவைக் கொன்று விட்டு உனக்கு இந்தக் கதி வரும்படி செய்திருக்கிருன். நீ இப்படிச் சிறையில் கிடப்பது தெரிந்தும் தான் முன் வந்து குற்றத்தை ஒப்புக் கொள்ளவில்லே. இப்படிப்பட்ட அழகான தந்தை உன்னே என்றென்றும் காப்பாற்றுவா னென்று நீ நம்புகிருய். ரங்கதுரையைப்பற்றியோ சொல்ல

வேண்டியதே இல்லை. சுலோசனாவோடு அவன் கல்கத்தாவில் காதல் நாடகம் ஆடியதெல்லாம் எல்லோரும் அறிந்த விஷயம்—அவளுடைய பெயரையே கெடுத்து விட்டது. அவனைப்பற்றி எத்தனையோ புகார்கள் மேலிடத்துக்குச் சென்றதால்தான் அவனை அவ்வளவு அவசரமாக ஊர் மாற்றிவிட்டார்கள். இப்படிப்பட்டவர் களைத்தான் நீ நம்புகிறாய் !' என்றார்.

என் புத்திகூடக் கொஞ்சம் தடுமாறிப் போய் விட்டது. உண்மையிலேயே குற்றம் செய்தது என் தந்தையாக இருக்கலாமோ என்ற சந்தேகம்கூட ஏற்பட்டது. ஆனால், ஈசுவரமூர்த்தியிடம் நான் அதையெல்லாம் காட்டிக்கொள்ள வில்லை. அவர் தொடர்ந்து கூறினார். ' இந்து ! உனக்காக நான் பத்மநாபனிடம் சண்டை பிடித்துக் கொண்டேன் அவர்தான் உன்னைப் பற்றிப் போலீஸுக்குத் தகவல் கொடுத்தார். ரங்கதுரை தன் பெண்ணின் பெயரைக் கெடுத்து விட்டானென்று அவருக்கு ரொம்பக் கோபம். அவர் இப்படிச் செய்ததற்காக நான் அவரை மிகவும் கோபித்துக் கொண்டேன். இப்போது நாங்கள் முகா லோபனமே செய்வதில்லை. உனக்காக நான் எதை வேண்டுமானாலும் தியாகம் செய்யத் தயாராகஇருக்கிறேன். இந்து ! நான் சொன்னபடி கேட்டால் உனக்கும் நல்லது ; ரங்கதுரைக்கும் நல்லது ' என்று கூறினார்.

' நான் உங்களுடன் பேசத் தயாராக இல்லை. நீங்கள் தயவு செய்து போய் விடுங்கள் !' என்றேன்.

' இந்து ! உன்னுடைய கர்வம் எப்படிப்பட்டதென்று எனக்கு நன்றாகத் தெரியும். ஆயினும் இந்தச் சிறையில் அடைபட்டுக் கிடக்கும்போதுகூட நீ இவ்வளவு திமிருடன் பேசுவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் உன்னை நான் சும்மா விடப் போவதில்லை. அது மட்டும் நிச்சயம் ' என்று கூறி விட்டுப் போனார் " என்று கூறி, விம்மி விம்மி அழுதாள் இந்து.

சிறையில் தன்னந்தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு அபலைப் பெண்ணை இவ்வாறு பயமுறுத்தத் துணிந்த ஈசுவரமூர்த்தி மீது எனக்கு ஆத்திரம் பொங்கியெழுந்தது. இதயத்தில் 'திகுதிகு'வென்று தீ எரிவது போல் இருந்தது. ஈசுவரமூர்த்தியை என்ன செய்வதென்று தீவிரமாக யோசித்தேன்.

இந்துவின் விம்மல்கள் என் கோபத்துக்கு எண்ணெய் ஊற்றிய மாதிரி இருந்தன.

" இந்து ! நீ இந்தக் கயவனுடைய பேச்சுக்காகக் கண்ணீர் விடாதே. அவனை நான் கவனித்துக் கொள்கிறேன் " என்றேன்.

இந்து என்னை நீர் நிறைந்த கண்களால் ஏறிட்டுப் பார்த்தாள். தண்ணீர் நிறைந்த வாவிலில் மூழ்கியிருக்கும் நீலோத்பல மொட்டு மாதிரி அவளுடைய விழிகள் கண்ணீரின் வழியாகப் புலப்பட்டன. அந்தக் கணத்தில் எனக்கு ஈசுவரமூர்த்தியின் மீது இருந்த கோபங்களெல்லாம் மறைந்துவிட்டன. வாழ்க்கையின் கசப்பு



அழிந்துவிட்டது. கஷ்டங்களெல்லாம் தொலைந்துவிட்டன. இந்துவின் மீது உள்ள அன்பு என்னும் சாகரத்தில் அமிழ்ந்து விட்டேன். ஆகா ! என்ன மனோகரமான அனுபவம் அது. அதனால்தான் ஒருவர் மீது உண்மையான அன்பு இருந்தால் அது எல்லாக் கஷ்டங்களையும் போக்கடித்து விடும் என்று சொல்லுகிறார்கள் போலிருக்கிறது. இதனால்தான் அன்பினால் மனிதர்கள் தெய்வத் தன்மையை அடைவதாகக் கூறுகிறார்கள் போலும். என்னுடைய குரோதமும், கசப்பும், துயரமும் அடியோடு மறைந்து விட்டனவே. புனிதமானதொரு உணர்ச்சி

இந்துவின் கண்களைச் சந்தித்தபோது என் உடலெங்கும் பரவியது.

தெய்வீகம் பொருந்திய நதிகளின் நிர்மலமான நீரில், பகலவன் உதயமாகும் புனிதமான நேரத்தில் ஸ்நானம் செய்வதால் ஏற்படுவது போன்ற தூய உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. கண்களின் மூலம் எங்கள் இதயங்கள் கலக்கும்போதெல்லாம் என் உள்ளம் தூய்மையடைந்து விடுகிறது.

எங்களுடைய எண்ணங்களின் போக்கு வேருக இருக்கலாம். எங்களிருவருடைய ஆசாபாசங்கள் வேருக இருக்கலாம். வாழ்க்கையின் இலட்சியங்களே ஒருவேளை வெவ்வேருக இருக்கலாம். ஆயினும் எங்கள் இதயங்கள் இரண்டும் ஒரு இடத்தில் சங்கமம் ஆகி விடுகின்றன. அந்தச் சங்கமத்தில் மூழ்கிய நாங்கள் இருவரும் புனிதத் தன்மை அடைகிருேம்.

இந்து இரண்டு தரம் ஏதோ கூறிஞள்; எனக்குக் காதில் விழவில்லே. அவளுடைய சிவந்த அதரங்களின் அசைவுதான் தெரிந்தது.

இந்துவின் கரங்களிரண்டையும் என் கைகளில் வைத்து மூடிக்கொண்டே, " இந்து ! உன்ஞல்தான் நான் மனிதஞக வாழ்கிறேன். உன்னுடைய நினைவுதான், என்னை என்றும் தடுமாருமல் காத்து வந்திருக்கிறது. உனக்கு நான் அதற்காக என்றென்றும் நன்றியுடைய வஞக இருக்கவேண்டும் " என்றேன்.

" இரண்டு நிமிஷங்களுக்கு முன்ஞல் ஈசுவர மூர்த்தியிடம் ஆத்திரப்பட்டீர்கள். அதற்குள் நன்றியைப் பற்றிப் பேசுகிறீர்களே ?" என்ருள் இந்து.

" ஆமாம் இந்து ! என்னைக் குரோதம், கோபம், மதமாற்சரியம் முதலியவற்றிலிருந்து உன் அன்பு காத்து வருகிறது. அதஞல்தான் அப்படிக் கூறினேன்."

"என்னுடைய அன்பினுல் உங்களுக்கு ஈசுவர மூர்த்தியிடம் கோபம் வராமலிருந்தால் எனக்கு உங்களிடம்தான் கோபம் வரும்" என்ருள் இந்து. அவள் வதனத்தில் துயரச் சாயை மறைந்து, புன்னகையின் ரேகை ஓடியது. அந்த மாறுதலேப் பார்த்து நான் வியப்படைந்தேன். உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சிகள் தான் முகத்தில் எத்தனை விதமான மாறுதல்களை உண்டாக்குகின்றன ? ஒரே முகம்தான். அதில் கோபமும், மகிழ்ச்சியும், நாணமும், துயரமும் எப்படிப் பின்னிப் படர்ந்து விளையாடுகின்றன ? சினிமாவில் நடிப்பதைப் பார்த்து வியக்கிருேமே ! வாழ்க்கையில் நம் முன்னே எப்போதும் தோன்றிக் கொண்டேயிருக்கும் இந்த அதிசயங்களை நாம் பார்க்கவும், ரஸிக்கவும், இவற்றை உண்டாக்கிய மகா கலைஞனை வாழ்த்தவும் தவறி விடுகிருேமே ! என்று நினைத்தேன். என் உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை இந்துவிடமும் கூறினேன்.

"உன் முகத்தில் தோன்றி மறையும் உணர்ச்சி அலைகளைப் பார்க்கும்போது எனக்கு இறைவனுடைய அற்புதமான கலையைப் பற்றி வியப்பாக இருக்கிறது, இந்து. அந்தச் சமயங்களில் எனக்குக் கடவுள் மாதா பிதாவாகவோ, அல்லது குருவாகவோ, கருணைக் கடலாகவோ தென்படுவதில்லை. அவர் ஒரு மகா கலைஞராகவே தோன்றுகிருர்" என்றேன்.

"அந்த அற்புதக் கலைஞரைப் பற்றி எண்ணி நான் கூட வியந்திருக்கிறேன், மிஸ்டர் ராய் !" என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். சுலோசனு சிறைக் கதவின் அருகில் நின்று கொண்டிருந்தாள்.

# 24. மனம் நெகிழ்ந்தது !

சுலோசனாவைக் கண்டதும் இந்து பாய்ந்து சென்று அன்புடன் அவளைத் தழுவிக் கொண்டாள்.

சுலோவைப் போல என்னால் இந்துவிடம் சுதந்திர மாக நடந்து கொள்ள முடியவில்லையே என்று எனக்கு ஆதங்கமாக இருந்தது.

இரண்டு பேரும் சற்று நேரம் கண்ணீர் விட்டார்கள். கொஞ்சம் சிரித்தார்கள். இருவரும் சேர்ந்தாற்போலப் பேசத் தொடங்கினார்கள் ; உடனே நிறுத்தினார்கள். இந்த வேடிக்கையை நான் அனுபவித்துக் கொண்டிருந்தேன். இருவரும் பேசாமலிருக்கவே, " பேஷ் ! இரண்டு பேரும் இப்படி ஸ்திரீ தர்மத்துக்கே விரோதமாக மௌனம் சாதிக்கிறீர்களே !" என்றேன்.

சுலோசனா என்னைப் பார்த்து, " எத்தனையோ விஷயங்கள் பேச வேண்டியிருப்பதால் எதை முதலில் பேசுவது, எதைப் பின்னால் பேசுவது என்று எங்களுக்குத் தெரியவில்லை " என்றாள்.

" ஆமாம் ! நீங்கள் எப்படி இங்கு வந்தீர்கள் ?" என்று கேட்டேன்.

" நீங்கள் வந்த அதே வழியாகத்தான் வந்தேன். இந்துவைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு மட்டும் ஆசையிருக்காதா என்ன ?" என்று கேட்டாள் சுலோ.

" நீங்கள் எதற்காக இங்கு வந்து வீணாகத் தொந்தரவுகளை வரவழைத்துக் கொள்ள வேண்டும் ? அப்பாவுக்குத் தெரிந்தால் என்ன ஆகுமென்று நீங்கள் யோசிக்க வேண்டாமா ?" என்று கேட்டேன்.

இந்துவும், " ஆம் சுலோசனா ! இங்கு வந்திருக்கவே கூடாது. உன்னுடைய மனம் எனக்குத் தெரியாதா ? என்னை வந்து பார்த்தால்தான் உன்னுடைய அன்பு எனக்குத் தெரியுமா, என்ன ?" என்றாள்.

"இந்து! நான் உண்மையில் உனக்காக இங்கு வரவில்லை. என்னுடைய கடமையைச் செய்ய வந்திருக்கிறேன். ஒரு நிரபராதி மீது அக்கிரமமாகச் சுமத்தப் பட்டிருக்கும் குற்றங்களை நினைத்து என் நெஞ்சம் கொதிக்கிறது. அதற்கு என்னால் முடிந்த நிவர்த்தியைச் செய்யலாமென்றுதான் வந்திருக்கிறேன்."

"சுலோ! நீங்கள் இப்போது என்ன செய்தும் பயனில்லை. விஷயம் நம் கையை மீறிப் போய் விட்டது. குற்றவாளியைக் கண்டு பிடித்தாலொழிய இந்துவை விடுவிக்க யாராலும் முடியாது. ஆகவே, நீங்கள் செய்வது வீணுகத்தான் போகும். அப்படியிருக்கும் போது கஷ்டங்களை விலைக்கு வாங்கிக் கொள்வானேன்? உங்கள் தந்தையின் மனக்கசப்புக்கு நீங்கள் ஆளாவானேன்?" என்றேன்.

"மிஸ்டர் ராய்! நான் இனிமேல் சுதந்திரமான பெண். அவருடைய வீட்டில் இனி நான் இருக்கப் போவதில்லை. நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று என் தந்தை சொன்ன சாட்சியம் அத்தனையும் பொய் என்றும், இந்து எங்கள் வீட்டிலிருந்து வைரங்களைத் திருடிக்கொண்டு ஓடவில்லை என்றும், இவர்தான் புதுச்சேரியிலிருந்து வைரங்களை வரவழைத்து வியாபாரம் செய்தார் என்றும் கூறப் போகிறேன். தாங்கள் தயவு செய்து இதைச் செய்ய எனக்கு உதவி செய்ய வேண்டும்" என்றாள்.

"என்ன சொல்கிறாய், சுலோ? இதனால் என்ன ஆகுமென்று உனக்குத் தெரியாதா?" என்று கேட்டாள் இந்து.

"நன்றாகத் தெரியும்."

"வேண்டாம், சுலோசனா! எனக்கு இந்துமதியைக் காப்பாற்ற வேண்டுமென்பதுதான் நோக்கமே தவிர

உங்கள் குடும்பத்தை நாசம் செய்வது என் எண்ணமல்ல. மேலும் இந்து இதற்கு ஒரு நாளும் சம்மதிக்மாட்டாள்.''

'' ஆமாம் ! நிச்சயமாக இப்படிச் செய்யவே கூடாது.''

'' இந்து ! உங்கள் இருவராலும் எப்படி எங்கள் வாழ்க்கை குலேவதை பார்த்துக் கொண்டிருக்க முடியாதோ, அதே மாதிரி உங்களுடைய வாழ்க்கை என் தந்தையால் குலேவதை என்னுல் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.''

''சுலோசனு! உங்களுடைய தியாக உணர்ச்சி பிரமிக்கச் செய்கிறது, அதிலும் உங்களுடைய நிலேயிலுள்ளவர்கள், எங்களேச் சேர்த்து வைக்க இப்படிப்பட்ட மகத்தான தியாகம் செய்ய முடியுமென்று நான் கருதியதே இல்லே. ஆனுல் இப்படி நீங்கள் செய்து உங்கள் தந்தையைக் காட்டிக் கொடுப்பதால் பலன் ஏற்பட வேண்டுமே. இதனுல் உங்கள் வீட்டில் இந்து திருடவில்லே என்பது ருசுவாகிறது என்றே வைத்துக் கொள்வோம். ஆனுல் அவள் மீது சுமத்தப்பட்டிருப்பது திருட்டுக் குற்றம் அல்லவே. அவள் சொக்கையாவைக் கொலே செய்யவில்லே என்பதை உங்களால் ஒரு நாளும் நிரூபிக்க முடியாதே ?''

'' அது எனக்கும் தெரிகிறது. ஆனுலும் ஒரு சாட்சி கூறியதில் பாதி பொய் என்று நிரூபித்து விட்டால் இன்னெரு பாதிக்கும் பலமில்லாமல் போய்விடுமல்லவா ? இவர்கள் பொய்ச் சாட்சி கூறுகிருர்கள் என்பது மட்டுமாவது நிரூபணமாகி விடுமல்லவா ?''

'' சுலோ ! நீங்கள் நினேப்பது போல் இது அவ்வளவு சுலபமல்ல. ஒருவேளே செஷன்ஸ் கோர்ட்டில் நீங்கள் டிபென்ஸ் தரப்பில் சாட்சி கூறியிருந்தால் பிராஸிக்யூஷன் சாட்சிகள் கலகலத்துப் போயிருக்கும். இப்போது வழக்கு ஹைக்கோர்ட்டுக்குப் போய்விட்டது. இருக்கிற சாட்சியங் களே வைத்துக் கொண்டுதான் வழக்கைப் பரிசீலனே செய்வார்கள். புதிதாகச் சாட்சிகளே அழைக்க முடியாது.

நீங்கள் போலீஸில் இப்படிச் சொன்னுல் உங்கள் தந்தை சும்மா இருக்க மாட்டார். நாங்கள் தூண்டி விட்டிருக்கிறோம் என்பார். போலீஸிலும் தங்களுடைய வழக்கு பொய் என்றும், தங்களுடைய சாட்சிகள் பொய்ச் சாட்சிகள் என்றும் இலேசில் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அந்த மாதிரி விசித்திரமான சம்பவங்களெல்லாம் கதைகளில் தான் நேரும். உண்மைக்கு அவை சிறிதும் ஒத்து வராது."

" அப்படியானுல் நான் ஒன்றுமே செய்ய முடியாதா ?"

" முடியாதென்றுதான் நினைக்கிறேன். இந்து, தான் குற்றவாளி என்று ஒப்புக்கொள்ளவில்லையே தவிர, அவள் தான் குற்றவாளி என்று ஜூரிகளும், நீதிபதிகளும் தீர்மானிக்க வேண்டிய அளவு விஷயங்களைக் கூறி விட்டாள். குற்றம் நடந்ததைக் கண்ணுல் பார்த்ததாகக் கூறினுள். அதைப்பற்றி வெளியே தெரிந்தால் தன்மீது சந்தேகம் ஏற்படும் என்று பயந்து போலீஸில் தகவல் கொடுக்கவில்லை என்று சொல்லியிருக்கிருள். தந்தப் பிள்ளையார் தன்னுடையது என்ருள். குற்றம் செய்தவர் யாரென்று தனக்குச் சந்தேகங்கூட இல்லை என்று கூறி யிருக்கிருள். விஷயங்கள் இப்படி இருக்கும்போது நீங்கள் செய்யும் தியாகத்திஞல் என்ன பயன் ? உங்கள் தந்தையை ஒருவேளை பிடித்துச் சிறையில் அடைத் தாலும், அதனுல் இந்துவுக்கு ஒரு பயனும் இல்லை" என்றேன்.

இந்து புன்னகையுடன், " எனக்குப் பயனுள்ளதாக நீ ஒரு காரியம் கட்டாயம் செய்யவேண்டும் சுலோ. எனக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால்..." என்று எனக்கு ஏதோ சொல்ல ஆரம்பித்தபோது, சுலோசனு குறுக்கிட்டாள்.

" நான் எதுவும் செய்வதாக ஒப்புக்கொள்ள முடியாது, இந்துமதி !" என்ருள் சுலோ மிகவும் அழுத்தமாக.

இந்து ஒரு கணம் திகைத்தாள். நான் சிரித்துவிட்டு, “என்ன இந்து ? சுலோசனு உனக்கு ஒன்றும் நேர்ந்து விடாது என்று சொல்கிருள்” என்றேன். இந்துவின் முகம் மலர்ந்தது.

“சுலோ! உங்கள்மீது எனக்கு ரொம்பப் பொருமை ஏற்படுகிறது இந்து உங்களைப் பார்த்த பிறகுதான் இப்படி அகமும் முகமும் மலரச் சிரிக்கிருள். என்னைப் பார்த்துச் சிரிப்பதே இல்லை” என்றேன்.

“ஏன் இந்து அப்படிச் செய்கிருய்? அவர் உனக்காக எப்படி உருகிஞர் என்பதை நான் கண்களால் பார்த்திருக்கிறேன். என்ன வேதனைப்பட்டார் தெரியுமா? ஆனுல், என்னை மாத்திரம் நம்பாமல் இருந்துவிட்டார். மனத்தை விட்டு ஒன்றையும் கூருமலேயே மூடி மறைத்துக் கொண்டிருந்தார். அதுதான் எனக்கு வருத்தம்” என்ருள் சுலோ.

“எனக்கு உண்மையிலேயே அதை நினைத்தால் வருத்தமாக இருக்கிறது, சுலோசனு! உங்களுடைய பெருந்தன்மை எனக்குத் தெரியாமல் போயிற்று. என்னை மன்னித்து விடுங்கள்” என்றேன்.

இந்து சுலோவைப் பார்த்து, “நான் என்ன சொல்லப் போகிறேன் என்றுகூடத் தெரிந்து கொள்ளாமல் மறுத்து விட்டாயே?” என்ருள்.

“நீ ஏதாவது அசட்டுப் பிசட்டென்று வாக்குறுதி கேட்டால் நான் கொடுக்கத் தயாராக இல்லை. உனக்கு ஒன்றும் நேரப் போவதில்லை. தயவு செய்து அப்படிப் பேசாதே. மிஸ்டர் ராய்! நான் போய் வருகிறேன். என் உதவி எப்போது உங்களுக்குத் தேவையோ அப்போது டெலிபோனில் கூப்பிட்டு ஒரு வார்த்தை சொல்லுங்கள். உடனே உங்கள் அறையில் வந்து சந்திக்கிறேன்” என்று கூறிவிட்டுச் சுலோ சட்டென்று வெளியே போய் விட்டாள்.

"ஏன் இந்து! சுலோவிடம் என்ன வாக்குறுதி கேட்பதாக இருந்தாய்?" என்று கேட்டேன்.

"சுலோசனு ரொம்பக் கெட்டிக்காரி. நான் என்ன கேட்பேனென்று ஊகித்து விட்டாள். அதனுல்தான் மழுப்பி விட்டாள். எனக்குத் தண்டனை நிறைவேற்றப் பட்டு விட்டால் உங்களே அவள் மணந்துகொள்ள வேண்டுமென்று கேட்பதாக இருந்தேன்."

நான் இந்துவின் முகத்தைக் கோபமாகப் பார்த்தேன்.

"ஏன் கோபம் வருகிறது உங்களுக்கு? நான் நினைப்பது நியாயம்தானே?" என்ருள் இந்து.

"இந்து! நீ இன்னும் என்னேப் புரிந்துகொள்ள வில்லேயே என்று எனக்கு வருத்தமாக இருக்கிறது. நீ தண்டனை அடைவதைப் பார்த்துக்கொண்டு நான் இருப்பேனு?"

"ரொம்ப அழகாக இருக்கிறது. இப்படியெல்லாம் நீங்கள் பேசவே கூடாது."

"இல்லே, இந்து! நீ அவசியம் தெரிந்துகொள்ளத் தான் வேண்டும். உனக்கு இயற்கையாக மரணம் சம்பவித்ததென்ருல் நான் பொறுத்துக் கொள்வேன். அது இறைவன் பொறுப்பு என்று சமாதானப்படுத்திக் கொள்வேன். உன் பிரிவு என்னுல் தாங்க முடியாமல் இருந்தாலும் நம்முடைய அன்பின் இனிமை அந்தத் துயரத்தில் கலந்தே இருக்கும். உன்னுடைய அன்பு என் வேதனேயைக்கூட இனிமையான துயரமாகச் செய்து விடும். ஆனுல், உனக்குத் தண்டனை கிடைத்தால் அதை என்னுல் தாங்கவே முடியாது. உனக்கு ஒரு ஆபத்தும் வராமல் பாதுகாப்பேன் என்று உன் அன்னேயிடம் வாக்குறுதி அளித்தேன். அதை நான் காப்பாற்ருமல் இருந்தால் என் மனச்சாட்சி என்னேப் பிழிந்தெடுத்து விடும். உனக்கு அப்படியே தண்டனை நிறைவேறுவதாக

இருந்தாலும் அதற்கு முன்னுல் உன்னை மணந்துகொள்ள அனுமதி கேட்பேன். பிறகு..."

"போதும்! போதும்! என்னுல் தாங்க முடியவில்லை" என்று என் வாயைப் பொத்தினுள் இந்து. அவளுடைய கன்னங்களில் கண்ணீர் முத்துக்கள் உருண்டு உருண்டு ஓடி வந்து புடவைமீது சொட்டி மறைந்தன.

"ஏன் அழுகிருய் இந்து?" என்று பதற்றத்துடன் கேட்டேன்.

"இது அழுகை அல்ல; ஆனந்தக் கண்ணீர்" என்ருள் இந்து.

இந்துவிடம் விடை பெற்றுக்கொண்டு கிளம்பினேன். காரில் சற்றுத் தூரம் சென்றதும் சுலோசனு பஸ் ஸ்டாண்டில் நிற்பதைப் பார்த்தேன். அவளெதிரில் காரை நிறுத்தினேன். சுலோசனு ஒன்றுமே பேசாமல் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

"ஏன் சுலோ? நீங்கள் காரில் வரவில்லை என்று என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா?" என்று கேட்டேன்.

"இது என்ன பிரமாதம் மிஸ்டர் ராய்? நான் ஒருவருக்கும் தெரியாமல் வந்தேன். அதனுல்தான் காரை எடுத்துக்கொண்டு வரவில்லை" என்ருள் சுலோசனு.

அவள் சற்றுப் பொறுத்து, "மிஸ்டர் ராய்! நீங்கள் எல்லா விஷயங்களேயும் இந்துவிடம் கூறிவிட்டீர்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம்! இந்துவுக்கு நான் என் வாழ்க்கை முழுவதையும் எழுதிக் கொடுத்தேன். அதில் கல்கத்தாவில் நடந்த சம்பவங்களேயும் எழுதினேன். அவளிடம் எதையும் மறைக்க நான் விரும்பவில்லை" என்றேன்.

" உங்கள் வரைக்கும் அது உண்மைதான். ஆனால், என்னைப் பற்றி சொல்லியிருக்க வேண்டாம். அது அவளுடைய மனத்திலிருந்து அகலவே அகலாது. இந்துவின் தங்கமான குணத்தினால் எனக்கு ஏதோ தவறு இழைப்பதாக அவளுக்குத் தோன்றும்."

" இருந்தாலும் ஒளிக்காமல் கூறவேண்டியது என் கடமையல்லவா ? ஏதாவது சிறிய விஷயத்தை இந்துவிடமிருந்து மறைத்தாலும் எங்களுடைய இதயங்களின் ஐக்கிய உணர்ச்சி சிதைந்து போய்விடும்."

" அது எப்படி ? நீங்கள் உங்களுடைய விஷயம் எதையும் மறைக்க வேண்டாமே. நான் கூறியவற்றை மட்டும் அடியோடு மறந்திருக்கலாமே ?"

" அப்படி முடியுமா சுலோசனா ? இந்துவிடமிருந்து எதையேனும் மறைத்தால் எங்களுடைய உள்ளங்கள் விலகிப் போய்விடும். நான் அப்படிச் செய்யமாட்டேன். இருவருடைய இதயங்கள் ஒன்றுபட்டிருக்கிறது என்றால் என்ன பொருள் ? தங்களுடைய இதயத்தில் எழும் எண்ணங்களையும், ஆசாபாசங்களையும் அவரவர்கள் தெரிந்து கொள்வது போலவே மற்றவருடையதையும் கண்ணாடியின் மூலம் பார்ப்பதுபோல் தெரிந்துகொள்ள வேண்டும். அன்புக்கு அடிப்படையானது உண்மை. அப்படி இருக்கும்போது நான் ஒரு முக்கியமான சம்பவத்தை இந்துவிடமிருந்து மறைக்கலாமா ?" என்றேன்

சுலோசனா சற்று நேரம் யோசனையுடன் இருந்தாள். பிறகு, " நீங்கள் கூறியதும் ஒரு விதத்தில் நல்லதுதான். இல்லாவிட்டால் வேறுவிதமாக அவள் சந்தேகப்பட்டு மனம் வருந்திக்கொண்டிருப்பாள் " என்றாள்.

சுலோசனாவை அவளுடைய வீட்டின் அருகில் இறக்கி விட்டுவிட்டு நான் வக்கீலைப் பார்க்கச் சென்றேன். மறு நாள் வழக்கு ஆரம்பமாகவிருந்தது.

சுலோசனா சொன்னதையெல்லாம் அவரிடம் கூறி யோசனை கேட்கலாமென்று எண்ணிக் கொண்டே போனேன். அவரும் சுலோசனா என்ன சொன்னாலும் இனிமேல் பயன்படாது என்று கூறிவிட்டார். எனக்கு மனம் ஒடிந்து போய் விட்டது.

ஈசுவரமூர்த்தி இந்துவைப் பயமுறுத்தியதை நினைத்த போது எனக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. பழைய நினைவுகளை மனத்தில் ஓடவிட்டுக்கொண்டே காரை வேகமாக ஓட்டிச் சென்றேன்.

எதிரில் ஒரு நெடிய மனிதர் நடந்து வந்து கொண் டிருந்தார். அவருடைய காவிநிறத் தலைப்பாகை கண்களைக் கவர்ந்தது. தலைப்பாகையின் உயரம் அந்த மனிதருடைய உயரத்தை மிகைப்படுத்திக் காட்டிற்று.

கார் அவரைக் கடந்து மேலே சென்றுவிட்டது. பிறகுதான் எனக்கு அவரை எங்கோ பார்த்திருப்பது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. காரை நிறுத்திவிட்டுத் தேடிப் பார்த்தேன். அவரைக் காணவில்லை. நான்கு பக்கமும் சாலைகளுள்ள நெருக்கமான இடம் அது. அவர் எங்கே போனாரென்று கண்டு பிடிப்பது அசாத்தியம் என்று தீர்மானித்துக்கொண்டு கிளம்பிச் சென்றேன்.

திடீரென்று ஈசுவரமூர்த்தியின் வீட்டுக்குப் போய் அவரை மிரட்டினால் என்ன என்று தோன்றியது. நான் தான் கந்தசாமியின் பிள்ளை என்பதை அவரிடம் சொல்லும்போது அவருக்கு ஒரே அதிர்ச்சியாக இருக்காதா என்று எண்ணிக்கொண்டே போனேன்.

காரை ஈசுவரமூர்த்தி வீட்டு வாசலில் நிறுத்திவிட்டு உள்ளே நுழைந்தேன். அங்கு முதலில் என் கவனத் தைக் கவர்ந்தது, கீழே கிடந்த ஒரு கவர்தான். அதன் மீது ஈசுவரமூர்த்தியின் விலாஸம் எழுதப்பட்டிருந்தது. அந்தக் கையெழுத்து எனக்கு ரொம்பத் தெரிந்த எழுத்துப்

போல இருந்தது. ஆனால் யாருடையதென்று உடனே ஞாபகம் வரவில்லை. 'இன்று என்ன வந்துவிட்டது எனக்கு? சற்று முன்னால் யாரையோ பார்த்தமாதிரி இருந்தது. ஆனால் ஞாபகம் வரவில்லை. இந்தக் கையெழுத்தும் தெரிந்த மாதிரி இருக்கிறது. ஆனால் நினைவு வரவில்லை' என்று எண்ணிக்கொண்டே அந்தக் கவரைக் கையில் எடுத்துப் பார்த்தேன். ஒரு பக்கம் கிழிக்கப்பட்டுக் கடிதம் எடுக்கப்பட்டிருந்தது. அதன் முத்திரையில் அன்றையத் தேதி குறிக்கப்பட்டிருந்தது. எந்த ஊரிலிருந்து வந்திருக்கிறதென்று பார்த்தேன். ஒன்றும் தெரியவில்லை. ஒரே கறுப்பாக இருந்தது.

அந்தச் சமயத்தில் பக்கத்து அறையிலிருந்து மணியடிக்கும் சத்தம் கேட்டது. உடனே அறைக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தேன். ஈசுவரமூர்த்தி ஒரு கடிதத்தைப் படித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார்.

# 25. விந்தை நிகழ்ந்தது!

நான் உள்ளே நுழைந்ததும் ஈசுவரமூர்த்தி தலை நிமிர்ந்து என்னைப் பார்த்தார். அவருக்கு என்னைக் கண்டதும் வியப்பு ஏற்பட்டதா இல்லையா என்று சொல்ல முடியவில்லை.

அவரிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று புலப்படவில்லை. அவரும் பேசாமல் உட்கார்ந்திருந்தார். என்னை உட்காரக்கூடச் சொல்லவில்லை.

நான் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, "என்னை நீங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள்?" என்றேன்.

" நாம் எதிர்பாராத விஷயங்கள் எவ்வளவோ நடக்கின்றன " என்ருர்.

" நீங்கள் இந்துவைச் சிறையில் பார்த்துப் பயமுறுத்தியது கூட அத்தகைய எதிர்பாராத சம்பவம்தான் போலிருக்கிறது."

ஈசுவரமூர்த்தியின் முகம் சுருங்கியது. " அதைப் பற்றி நீ யார் கேட்பதற்கு ? நான் இந்துவிடம் பேசுவதை நீ தடுத்துவிட முடியுமோ ?" என்று அனல் வீசக் கேட்டார்.

" மிஸ்டர் ஈசுவரமூர்த்தி ! உங்களுடைய மிரட்டலுக்கு நான் பயந்துவிடமாட்டேன். சொல்ல வந்ததைச் சொல்லிவிட்டுத்தான் போவேன். நீங்கள் இனிமேல் இந்துவைச் சிறையில் சென்று பார்க்கக் கூடாது. இனிமேல் எங்களுடைய வாழ்க்கையில் எந்தக் காரணம் பற்றியும் தலையிட வேண்டாம். அப்படிச் செய்தால் பின்னல் வருந்துவீர்கள் " என்றேன்.

அவருடைய முகம் இன்னும் விகாரமடைந்தது. " எனக்கு உபதேசம் செய்ய வந்திருக்கிருயா ? பயமுறுத்த வந்திருக்கிருயா ? இந்த மிரட்டலுக்கு நான் பயந்து விடுவேன் என்று நினைக்காதே ? என் விஷயத்தில் நீ தலையிடாமல் விலகிக்கொண்டு விடு. இல்லாவிட்டால்..." என்று கூறிவிட்டு மேலே சொல்வதற்கு வார்த்தைகள் அகப்படாதமாதிரி திண்டாடினர்.

" இதைப் பாருங்கள். உங்களைப் பயமுறுத்த நான் வரவில்லை. ஒரு உண்மையைச் சொல்லத்தான் வந்தேன். வீணுக உங்களுடைய கோபத்தைச் செலவழிக்க வேண்டாம். உங்கள் விஷயத்தில் நான் தலையிட வில்லை. நீங்கள் எங்களுடைய விஷயத்தில் குறுக்கிட வேண்டாமென்று கேட்டுக்கொள்ளத்தான் வந்தேன்.

இந்துமதி என் மனைவி. அதைச் சொல்லத்தான் வந்தேன்."

ஈசுவரமூர்த்தியின் கோபம் அளவு கடந்துவிட்டதாகத் தோன்றியது. ஒரு குதி குதித்து எழுந்து நின்ருர். "ஏய்! அயோக்கிய சிகாமணியே! சுலோசனுவின் பெயரைக் கெடுத்தாகிவிட்டது. இனிமேல் இந்துவின் வாழ்வையும் கெடுக்கப் போகிருயாக்கும்? மானம், மரியாதை உள்ளவனுக இருந்தால் சுலோசனுவைக் கல்யாணம் செய்துகொள். அதற்குப் பிறகு எனக்கு உபதேசம் செய்யலாம்" என்ருர்.

எனக்கும் ரௌத்ராகாரமான கோபம் வந்தது. அதைக் கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டு "உங்களைக் கண்டும் உங்கள் சாட்டையைக் கண்டும், பத்து வயதுச் சிறுவனுக இருந்தபோது நான் பயந்திருக்கலாம். இனி மேல் பயப்படமாட்டேன், மிஸ்டர் ஈசுவரமூர்த்தி! என் தகப்பனுருக்கு நீங்கள் செய்த அநீதிக்கு நான் நியாய மாகப் பழி வாங்கியிருக்கவேண்டும். ஆனல் அதைப் பொறுத்துக்கொண்டேன். அவர் மீதும் குற்றம் இருந்தது என்பதனுல் உங்கள் அக்கிரமத்தைப் பொறுக்க முடிந்தது. ஆனல் களங்கமில்லாத இந்துவை நீங்கள் துன்புறுத்துவதை நான் ஒரு நாளும் பார்த்துச் சகித்திருக்க மாட்டேன். உங்களைப் போலீஸில் காட்டிக் கொடுக்க என்னல் முடியும். உங்கள் சமாசாரம் எனக்கு நன்ருகத் தெரியும்" என்றேன்.

ஈசுவரமூர்த்தியின் முகம் மாறுதல் அடைந்தது. ஆனல் அது என்ன மாறுதல் என்று என்னல் ஊகிக்க முடியவில்லை. கோபமும், அதிர்ச்சியும் சேர்ந்த மனேநிலை அப்படித்தான் இருக்கவேண்டும். என்னை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தார்.

"அந்தத் திருடனுடைய பிள்ளையா நீ? அதனுல் தான் ஊரை ஏமாற்றிப் பிழைக்கிருய்? உன்னைப்போன்ற

திருடர்களின் பிள்ளைகளுக்கும், அயோக்கியர்களின் பிள்ளைகளுக்கும் மாஜிஸ்ட்ரேட் உத்தியோகம் கொடுக்கிறார்களே, அந்தப் பரம முட்டாள்களைச் சுண்ணாம்புக் காளவாயில்தான் போடவேண்டும்" என்று கூறினார்.

"என்னுடைய பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டு, ஐயா. நீங்கள் சொல்லச் சொல்ல நான் கேட்டுக்கொண்டே இருப்பேன் என்று நினைக்க வேண்டாம். இந்துவை விடுவித்த பிறகு......" ஈசுவரமூர்த்தி ஏதோ ரொம்ப ஹாஸ்யமான விஷயத்தை நான் கூறிவிட்டதுபோல் வறண்ட குரலில் சிரித்தார்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று அவரைக் கேட்டேன்.

"துரை! நான் சொல்வதைக் கேள். உன்னைப் பார்த்தால் புத்திசாலியென்று தோன்றுகிறது. இந்துமதி குற்றம் செய்யவில்லை என்பதை உன்னால் ஒரு நாளும் நிரூபிக்க முடியாது! நான் ஒருவன்தான் அதை நிரூபிக்க முடியும். அதை என்னிடம் விட்டுவிடு. சுலோசனாவை மணந்து கொண்டுவிடு. வீண் பிடிவாதம் இந்துவைக் காப்பாற்றாது. உன் பிடிவாதம் இந்துவை மரணத்தின் வாயில் கொண்டு தள்ளுகிறது என்பதை நினைவு வைத்துக்கொள்" என்றார்.

எனக்குத் திடீரென்று, 'இந்தப் படுபாவிதான் ஒரு வேளை அந்தக் குற்றத்தைச் செய்திருப்பாரோ?' என்று சந்தேகம் உதித்தது. 'ஆனால் அதை எப்படிச் சந்தேகமறத் தெரிந்து கொள்வது? மகா பாபங்களுக்கு அஞ்சாத இந்தக் காதகன் அது வெளி வராமல் அமுக்கிவிடத் தகுந்த ஏற்பாடுகள் செய்யாமலிருப்பானா? இந்தப் படுபாவி, என் இந்துவின்மீது பழியைச் சுமத்தி அவள் சிறையில் வாடுவதைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கிறானே' என்று எண்ணமிட்டேன். அக்கினித் திராவ

கத்தை உள்ளத்தில் யாரோ கவிழ்த்து விட்டதுபோல் இருந்தது.

"அடப் பாவி! அவள் நிரபராதி என்று தெரிந்திருந்தும் இத்தனை நாட்கள் சும்மா இருக்க உங்களுக்கு எப்படி மனம் வந்தது? ஆனால் நீங்கள் அவளை விடுதலை செய்து இம்சை செய்வதைக் காட்டிலும் அவள் தண்டனை அடைவதே மேல். மிஸ்டர் ஈசுவரமூர்த்தி! ஒரு நிரபராதி தண்டனை அடைவதை நானும் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுள் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்" என்று ஆத்திரம் பொங்கக் கூறி விட்டு வெளியில் வந்து விட்டேன்.

நான் காரைக் கிளப்பிக்கொண்டு கேட்டைத் தாண்டிச் சென்றபோது பக்கத்துச் சந்து ஒன்றில் அந்த மஞ்சள் தலைப்பாகை மறைவதைப் பார்த்தேன். நானும் அந்தச் சந்தில் திரும்பி வேகமாகப் போனேன். ஆனால் மஞ்சள் தலைப்பாகையைக் காணவே இல்லை. என் உள்ளம் குழம்பியது.

நான் ஈசுவரமூர்த்தியின் வீட்டிலிருந்து புறப்பட்ட பொழுது இருட்டத் தொடங்கியிருந்தது. எரியும் என் உள்ளத்தைக் குளிரச் செய்து கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் கடற்கரையில் கொண்டு போய்க் காரை நிறுத்தினேன். குளிர்ந்த கடல் காற்று உடலுக்கு இதமாக இருந்தது. ஆனால்



உள்ளத்தின் எரிச்சலைச் சிறிதும் தணிக்கவில்லை. இந்துவுடன் கை கோர்த்துக்கொண்டு இந்தக் கடற்கரைக்கு வருவதாக நான் பகற்கனவு கண்டதெல்லாம் ஞாபகம் வந்து என்னைத் துன்புறச் செய்தது.

சாட்டப்பட்டிருக்கும் இந்துமதியின் தந்தை. அவள் குற்றம் செய்யவில்லை என்பதைக் கூறவும், நான்தான் குற்றவாளி என்பதை ஒப்புக் கொள்ளவும் இங்கே வந்திருக்கிறேன் " என்றார்.

என்னையறியாமல் என் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்தது. அவசரமாகத் துடைத்துக் கொண்டேன். வக்கீல் நீலகண்டன் என்னைப் பிரமிப்புடன் பார்த்தார். பிராஸிக்யூஷன் பக்கத்தில் எல்லோரும் திகைத்து நின்றார்கள்.

பிறகு சம்பவங்கள் விரைவாக நடைபெற்றன. காசிலிங்கத்திடம் வாக்குமூலம் வாங்கிக்கொண்டு அவரையும் லாக்-அப்பில் வைக்கச் சொல்லி உத்தரவு பிறப்பித்தார் பிரதம நீதிபதி.

காசிலிங்கத்தின் பேரில் குற்றம் ருசுவாகும் வரையில் இந்துமதியையும் வெளியே விடமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். காசிலிங்கத்தைப் பார்த்தேன். அவர் கையில் விலங்கை மாட்டிக் கொண்டிருந்தார்கள். அவர் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தார். அந்தப் பார்வை, ' தம்பி! இதுதான் எனக்கு ஏற்ற முடிவு. இந்துவை யாவது காப்பாற்ற முடிந்ததல்லவா ? எப்படியிருந்தாலும் நான் தண்டனைக் குரியவன் நீ வருத்தப்படாதே !' என்று என்னிடம் கூறுவதுபோலிருந்தது.



ஆம்! உண்மைதான். காசிலிங்கம் பல குற்றங்கள் செய்தவர். அவர் இந்த வழக்கில் இல்லாவிட்டாலும், வேறு எத்தனையோ குற்றங்களுக்குத் தண்டனை அடைய வேண்டியவர். ஆனால் என் இந்து ஒன்றுமறியாதவள். ஆகவே அவள் தண்டனை அடையக் கூடாது. அவரே தம்மைப் போலீஸில் ஒப்படைத்து'க் கொண்டது எனக்கு நிம்மதியளித்தது. பெரிய சுமை நெஞ்சிலிருந்து இறங்கியது மாதிரி இருந்தது. ஆனால் இந்துவின் மனம் எவ்வளவு வேதனைப்படும் என்று எண்ணியபோது எனக்கும் சொல்லமுடியாத துயரம் உண்டாயிற்று. நான் கோர்ட்டிலிருந்து வெளியே வந்தேன்.

காரை எடுத்துக் கொண்டு மறுபடியும் ஈசுவரமூர்த்தி வீட்டுக்குச் சென்றேன். அவரிடம் எப்படியாவது கெஞ்சிக் கேட்டு உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசை என்னை அங்கே போகத் தூண்டியது. ஆனால் அவர் வீட்டில் இல்லை என்றும், முதல் நாள் இரவுதான் திருநந்திபுரம் சென்றார் என்றும் அவர்கள் வீட்டு ஆள் கூறினார். திருநந்திபுரம் என்றதும் எனக்குப் பளிச் சென்று நேற்று நான் வந்தபோது ஈசுவரமூர்த்தி படித்துக் கொண்டிருந்த கடிதம் ஞாபகம் வந்தது. அந்தக் கையெழுத்து யாருடையது என்றும் விளங்கிவிட்டது.

ஆகா! நான் எத்தனை நாட்களாகக் கண் இருந்தும் குருடனாக இருந்திருக்கிறேன். காசிலிங்கம் என்னிடம் தான் சந்தேகித்த ஆசாமி யார் என்று சொல்ல மறுத்ததன் காரணமும் அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

அந்தக் கடிதம் என் மனத்தில் மறுபடியும் வட்ட மிட்டது. அந்தக் கையெழுத்து யாருடையது? கவரில் அன்றையத் தேதி தான் போட்டிருந்தது. அப்போதுதான் வந்திருக்க வேண்டும். ஈசுவரமூர்த்தி ஒரு கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தது ஞாபகம் வந்தது. ஆம்! அவர் அந்தக் கடிதத்தைத்தான் படித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். என் உள்ளுணர்வுக்கு அந்தக் கடிதத்தில் இந்துவைக் காப்பாற்ற ஏதோ விஷயம் இருக்கிறதென்று தோன்றியது. 'இது என்ன வைத்தியக்கார எண்ணம்? தும்பை விட்டு வாலைப் பிடிப்பதுபோல இருக்கிறதே!' என்ற எண்ணமும் கூட எழுந்தது. ஆனாலும் அந்தக் கடிதம் என் நெஞ்சை விட்டு அகலவில்லை. அதில் ஏதோ இருக்கிறது. அது என்னவாக இருக்கும்?

என்னால் அந்தக் கடிதத்தின் உறுத்தலைத் தாங்க முடியவில்லை. உடனே புறப்பட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இன்ஸ்பெக்டரைத் தேடிப் பிடித்து என்னுடைய சந்தேகத்தை வெளியிட்டேன்.

இன்ஸ்பெக்டர் தாமோதரம் ரொம்பக் கண்யமான மனிதர். என்னுடைய ஆதாரமில்லாத சந்தேகத்தை அனுதாபத்துடன் கேட்டார். பிறகு, "மிஸ்டர், ராய்! உங்களிடம் எனக்கு ரொம்ப மரியாதை உண்டு. ஆனால் இந்தச் சந்தேகத்தை வைத்துக்கொண்டு நான் எதுவும் செய்ய முடியாதென்பது உங்களுக்கே தெரிந்த விஷயம். என்னால் இயன்றவரை முயற்சி செய்கிறேன். எனக்கே அந்த ஈசுவரமூர்த்திமீது வேறு சந்தேகங்கள் இருக்கின்றன. ஏதாவது ஒரு விஷயத்துக்கு ருசு இருந்தால் அவருடைய வீட்டைச் சோதனை போடலாம். ஆனால் நாளை வழக்கு நடைபெறுவதற்குள் நான் ஒன்றும் செய்ய முடியாது. எனக்கும் அமரதாரா சிறுமியாக இருந்தபோது இந்த மாதிரி ஒரு குற்றம் செய்திருப்பாளென்று தோன்றவில்லை. இருந்தாலும் பார்ப்போம். நான் சாட்சிகளைக்

கொண்டு நிர்ணயிக்க வேண்டுமே தவிர என்னுடைய ஊகங்களைக் கொண்டு ஒன்றும் செய்யக் கூடாது என்பது உங்களுக்குத் தெரியும். என்னால் முடிந்ததைச் செய்கிறேன் " என்றார்.

* * *

மறு நாள் கோர்ட்டில் ஒரே கூட்டம். அமரதாரா கொலை வழக்கு அவ்வளவு தூரம் எல்லோரையும் கவர்ந்திருந்தது. அத்தனை பேரிலும் என் மனத் துடிப்பை அறிந்து ஆறுதல் காட்ட யாரும் இல்லை. இந்துமதிகூட அங்கே இல்லை.

திடீரென்று என் கண்கள் மஞ்சள் தலைப்பாகைமீது விழுந்தன. அதற்குள் வழக்கு ஆரம்பமாகி விட்டபடியால் எனக்கு மஞ்சள் தலைப்பாகையைக் கவனிக்க நேரமில்லை.

பழைய சாட்சியங்களையே, அச்சடித்து வைத்துக் கொண்டு படித்துக் காட்டினார்கள். எனக்கு ஒரே தவிப்பாக இருந்தது. சுமார் பதினைந்து நிமிஷங்கள் கடந்திருக்கும். பிராஸிக்யூஷன் சாக்ஷிகளின் பலம் நன்றாக விளங்கி விட்டது. அந்தச் சமயத்தில்தான் அந்த எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது.

மஞ்சள் தலைப்பாகை அணிந்த ஆசாமி எழுந்து நின்றார். அப்போதுதான் எனக்குப் பளிச்சென்று அவர் யாரென்று தெரிந்தது. அவர் என்ன செய்யப் போகிறார் என்று நான் யோசிப்பதற்குள், அவர் ஓடிச் சென்று சாட்சிக் கூண்டில் ஏறினார்.

அவர் என்ன செய்யப் போகிறாரென்று எனக்குத் தெரிந்து விட்டது. ஆனால் நான் செயலற்று உட்கார்ந்திருந்தேன்.

காசிலிங்கத்தின் குரல் கம்பீரமாகக் கோர்ட்டில் ஒலித்தது.

" கோர்ட்டார் அவர்களே ! நான் 'பகத்சிங்' என்று பெயர் கொண்ட காசிலிங்கம். இந்த வழக்கில் குற்றம்

சாட்டப்பட்டிருக்கும் இந்துமதியின் தந்தை. அவள் குற்றம் செய்யவில்லை என்பதைக் கூறவும், நான்தான் குற்றவாளி என்பதை ஒப்புக் கொள்ளவும் இங்கே வந்திருக்கிறேன்" என்றார்.

என்னையறியாமல் என் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்தது. அவசரமாகத் துடைத்துக் கொண்டேன். வக்கீல் நீலகண்டன் என்னைப் பிரமிப்புடன் பார்த்தார். பிராஸிக்யூஷன் பக்கத்தில் எல்லோரும் திகைத்து நின்றார்கள்.

பிறகு சம்பவங்கள் விரைவாக நடைபெற்றன. காசிலிங்கத்திடம் வாக்குமூலம் வாங்கிக்கொண்டு அவரையும் லாக்-அப்பில் வைக்கச் சொல்லி உத்தரவு பிறப்பித்தார் பிரதம நீதிபதி.

காசிலிங்கத்தின் பேரில் குற்றம் ருசுவாகும் வரையில் இந்துமதியையும் வெளியே விடமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். காசிலிங்கத்தைப் பார்த்தேன். அவர் கையில் விலங்கை மாட்டிக் கொண்டிருந்தார்கள். அவர் என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தார். அந்தப் பார்வை, 'தம்பி! இதுதான் எனக்கு ஏற்ற முடிவு. இந்துவையாவது காப்பாற்ற முடிந்ததல்லவா? எப்படியிருந்தாலும் நான் தண்டனைக்குரியவன் நீ வருத்தப்படாதே!' என்று என்னிடம் கூறுவதுபோலிருந்தது.



ஆம்! உண்மைதான். காசிலிங்கம் பல குற்றங்கள் செய்தவர். அவர் இந்த வழக்கில் இல்லாவிட்டாலும், வேறு எத்தனையோ குற்றங்களுக்குத் தண்டனை அடைய வேண்டியவர். ஆனால் என் இந்து ஒன்றுமறியாதவள். ஆகவே அவள் தண்டனை அடையக் கூடாது. அவரே தம்மைப் போலீஸில் ஒப்படைத்து'க் கொண்டது எனக்கு நிம்மதியளித்தது. பெரிய சுமை நெஞ்சிலிருந்து இறங்கியது மாதிரி இருந்தது. ஆனால் இந்துவின் மனம் எவ்வளவு வேதனைப்படும் என்று எண்ணியபோது எனக்கும் சொல்லமுடியாத துயரம் உண்டாயிற்று. நான் கோர்ட்டிலிருந்து வெளியே வந்தேன்.

காரை எடுத்துக் கொண்டு மறுபடியும் ஈசுவரமூர்த்தி வீட்டுக்குச் சென்றேன். அவரிடம் எப்படியாவது கெஞ்சிக் கேட்டு உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசை என்னை அங்கே போகத் தூண்டியது. ஆனால் அவர் வீட்டில் இல்லை என்றும், முதல் நாள் இரவுதான் திருநந்திபுரம் சென்றார் என்றும் அவர்கள் வீட்டு ஆள் கூறினான். திருநந்திபுரம் என்றதும் எனக்குப் பளிச் சென்று நேற்று நான் வந்தபோது ஈசுவரமூர்த்தி படித்துக் கொண்டிருந்த கடிதம் ஞாபகம் வந்தது. அந்தக் கையெழுத்து யாருடையது என்றும் விளங்கிவிட்டது.

ஆகா! நான் எத்தனை நாட்களாகக் கண் இருந்தும் குருடனாக இருந்திருக்கிறேன். காசிலிங்கம் என்னிடம் தான் சந்தேகித்த ஆசாமி யார் என்று சொல்ல மறுத்ததன் காரணமும் அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

# 26. விவாகம் நடந்தது!

குற்றவாளி யாரென்பது தெரிந்த பிறகு சொல்ல முடியாத தளர்ச்சி உண்டாயிற்று. வாழ்க்கையின் மீதும், உலகத்தின் மீதும் அருவருப்பு உண்டாயிற்று. நான் தங்கியிருந்த ஹோட்டல் அறையில் போய் என் படுக்கையில் தடாலென்று விழுந்தேன். ஒரு மணி நேரம் எண்ணுததெல்லாம் எண்ணித் தத்தளித்துத் தவித்த பிறகு ஒரு முடிவுக்கு வந்தேன்.

'உலகத்தில் உண்மைக்காக வாழவேண்டும் என்றுல் நெஞ்சை ஈரப் பசையில்லாமல் துடைத்துக் கொண்டு விட வேண்டும். ஆனல் இப்படி என்னை உண்மை சோதிக்கப் போகிறதென்று நான் நினைத்தேனு?' என் மனம் இரண்டாகப் பிளந்து போய் விடும் போல இருந்தது.

டெலிபோன் அறைக்குப் போய்ச் சுலோசனுவைக் கூப்பிட்டேன். நல்ல வேளையாகச் சுலோசனுவே டெலிபோனை எடுத்தாள். உடனே என் அறைக்கு வரச் சொல்லி விட்டு மறுபடியும் அறையில் வந்து உட்கார்ந்தேன்.

பதினைந்து நிமிஷங்களில் சுலோ வந்துவிட்டாள். அவளிடம் என் மனவேதனையைக் கொட்டித் தீர்த்தேன்.

"நீங்கள் அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருந்தது என்று படித்துப் பார்க்கவில்லையே? கையெழுத்தின் மூலம் தானே யாரென்று தெரிந்து கொண்டீர்கள். அவர்தான் குற்றவாளி என்று நீங்கள் எப்படிக் கூற முடியும்?"

"இதைப் பாருங்கள் சுலோசனு! அன்றைய தினம் நானும், தங்கபாண்டியனும் திருநந்திபுரத்தில் வக்கீல் வீட்டில் பேசிக்கொண்டிருந்தோம். ஜமீன் அதிகாரங்கள் தங்கபாண்டியன் கைக்கு வருவதைப் பற்றிய சட்டபூர்வ

மான விஷயங்களை அலசி ஆராய்ந்து கொண்டிருந்தோம். நான் திரும்பவும் குங்குமத்துறை சென்று சாமான்களை எடுத்துக் கொண்டு, இந்துவிடமும் விடைபெற்றுக் கொண்டு வரவேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால் நேரமாகி விட்டது. முக்கியமான விஷயங்கள் பல இருந்தன. சொக்கையா வாங்கிய கடனையெல்லாம் தீர்க்கத் தங்கபாண்டியன் பொறுப்பாளி இல்லை என்று எப்படிக் கூறுவதென்பதைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தோம். ஆகவே, நான் அவனைப் போய்ச் சாமான்களைக் கொண்டு வந்து விடச் சொன்னேன். அன்று டிரைவர் வராததால் அவனே காரை ஓட்டிக் கொண்டு போனான். ரயில் புறப்படும் சமயத்தில்தான் திரும்பி வந்தான். இவன் குங்குமத்துறைக்குப் போனபோது அங்கே ஏதோ நடந்திருக்கிறது அது என்னவென்று எனக்குந் தெரிந்து கொள்ள வேண்டும். தங்கபாண்டியன் சாகக் கிடக்கிறான். அவன் இறப்பதற்கு முன்னால் நான் அவனிடமிருந்து வாக்கு மூலம் எழுதி வாங்கிக் கொள்ள வேண்டும், இன்றே நான் புறப்பட்டுப் போகிறேன் '' என்றேன்.

" ஆமாம்! அதற்கும் கடிதத்துக்கும் என்ன சம்பந்தம் ?"

" தங்கபாண்டியன் தானாக இப்படி ஒரு காரியம் செய்திருக்கமாட்டான். ஈசுவரமூர்த்தியின் தூண்டுதலினால் தான் செய்திருக்க வேண்டும். தங்கபாண்டியன் தான் குற்றவாளி என்பதை நிரூபிக்க அவன் எழுதிய கடிதம் ஏதேனும் ஈசுவரமூர்த்தியிடம் இருக்க வேண்டும். அதனால் தான் அவர், ' என் ஒருவனால்தான் இந்துவை விடுதலை செய்ய முடியும் ' என்று கூறினார். தாமே செய்திருந்தால் அவ்விதம் கூறமாட்டார் அல்லவா ? அது மட்டுமில்லை. தங்கபாண்டியனிடமிருந்து கடிதம் வந்ததும் அவர் உடனே திருநந்திபுரம் புறப்பட்டுப் போயிருக்கிறார்.

தங்கபாண்டியனே ஈசுவரமூர்த்தியைப் பற்றித் தவறிக்கூட என்னிடம் ஒரு வார்த்தை பேசியதில்லை. இவையெல்லாம் தான் என் சந்தேகத்துக்கு ஆதாரங்கள்."

"குங்குமத்துறையில் இத்தனை நாட்கள் இருந்தீர்களே. தங்கபாண்டியனிடம் இதைப் பற்றி நீங்கள் ஒன்றுமே பேசவில்லையா ?"

"பேசாமல் என்ன ? எப்போதும் புலம்பிக் கொண்டு தான் இருந்தேன், சுலோ. அவனும் அனுதாபப்படுவான். காசிலிங்கத்தைப் பார்த்ததாகக் கூறியபோதுதான் அவன் தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான். அவர் யாரைக் குற்றவாளியென்று கருதுகிறார் என்று கேட்டான். ஆனால் அப்போது அவன் மீது எனக்குச் சிறிதும் சந்தேகம் எழவில்லை. ஏன் தெரியுமா ? அவன் அதற்கு முன்னாலெல்லாம் வெறும் கோழையாய் இருந்தான். சொக்கையா அவனைப் பார்க்கக் கல்லூரிக்கு வருகிறார் என்று தெரிந்தால் கண்ணீர் விட்டு அழுவான். அவரைப் பார்க்கவே அஞ்சுவான். சொக்கையாவிடம் பயப்படக் கூடாதென்றும், அவரை எதிர்த்து நின்று, அவருடைய அட்டூழியங்களையெல்லாம் தடுக்க வேண்டும் என்றும் நான்தான் அவனுக்குத் தைரியம் கூறி வந்தேன். அதனால்தான் அவன் செய்திருக்கலாம் என்ற எண்ணமே எனக்கு எழாமல் போய்விட்டது. சீமை செல்வதற்கு முன் என்னை வழியனுப்ப இவன் வந்தபோதுகூட, 'உன் மீது குற்றம் சுமத்தப் பார்ப்பார்கள். ஜாக்கிரதையாயிரு' என்று கூறினேன்.

. அவன் ஊருக்குச் சென்றதும், பெட்டி படுக்கைகளை எடுத்து வந்ததும் யாருக்கும் தெரியாது என்று அறிந்து மன நிம்மதிகூட அடைந்தேன். ஆனாலும் தங்கபாண்டியன் இப்படி என்னை ஏமாற்றக் கூடும் என்று நினைத்துப் பார்த்ததே இல்லை."

" ஒரு வகையில் அது உங்கள் தவருகவே இருக்கலாம் மிஸ்டர் ராய். சொக்கையாவைத் தங்கபாண்டியனுக்கு எப்போதும் பிடிக்காது. நீங்கள் அவனுடைய பயத்தைப் போக்கி, சொக்கையாவை எதிர்த்து நிற்க வேண்டுமென்று யோதித்து வந்தீர்கள். அவனுக்கு ஏற்கனவே இருந்த துவேஷம் உங்கள் போதனையினுல் அதிகரித்து பழி வாங்கும் எண்ணத்தைத் தூண்டியிருக்கலாம். நீங்கள் அவனைக் கோழை என்று நினைத்ததாலேயே, தான் கோழையல்ல என்பதைத் தனக்கே நிரூபணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவனுக்கு வேகம் பிறந் திருக்கும். ஈசுவரமூர்த்தியும் சேர்ந்து தூபம் போடவே இப்படி முடிந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் இன்ஸ்பெக்டர் தாமோதரத்தைக் கலந்து கொண்டு மீதிக் காரியங்களைச் செய்யுங்கள் " என்ருள் சுலோசனு.

" சுலோசனு ! நான் இன்று ஊருக்குப் புறப்படு கிறேன். தாமோதரத்தைப் பார்க்கப் போக வேண்டி யிருப்பதால் இந்துவைப் பார்க்க நேரமில்லை. அவளை இன்று பார்க்க எனக்குத் தைரியமும் வராது. நீங்கள் போய் அவளுக்குத் தேறுதல் சொல்லுங்கள். எல்லா விஷயங்களை யும் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள். நான் இரண்டு நாட்களில் வந்து விடுகிறேன் " என்று கூறிவிட்டுக் கிளம்பினேன். அறைக் கதவைத் திறந்ததும் ஒரு தந்தியைக் கொண்டு வந்து ஒரு சிப்பந்தி கொடுத்தான். அவசரமாகப் பிரித்துப் படித்தேன். " தங்கபாண்டியன் காலமானர் " என்ற வாக்கியம் அதில் காணப்பட்டது. என்னுடைய ஏமாற்றத்தையும், துயரத்தையும் வார்த்தை களினுல் வெளியிட முடியுமா ? காசிலிங்கம் இந்துவைக் காப்பாற்ற அப்படிப் பொய் சொல்கிருர் என்று தீர்ப்பாகி, உண்மையான குற்றவாளியும் தன் குற்றத்தை ஒப்புக் கொள்ளாமல் இறந்து போய் விட்டால் இந்துவின் கதி என்ன ? எனக்கு உலகம் சுழன்றது. பூகம்பமும், எரி

மலையும், புயலும் பிரளயமும் என் இதயத்தில் குமுறி வெடித்தன. கடவுள் என்று ஒருவர் இருந்தால் அவர் செத்துப் போயிருக்க வேண்டும் என்றுகூட நினைத்தேன்.

அதன் பிறகு நடந்ததெல்லாம் கனவில் கண்ட மாதிரி இருக்கிறது. என் மனம் அவ்வளவு தூரம் பேதலித்துப் போய்விட்டது. என்னுடைய ஒரே நண்பன் என்று நான் கருதி வந்த தங்கபாண்டியன் இப்படி ஒரு காரியம் செய்துவிட்டு, அதை என்னிடம் கடைசிவரையில் ஒப்புக் கொள்ளாமல் இருந்துவிட்டானென்ற வேதனை என் அறிவைக் கலங்கச் செய்துவிட்டது.

இன்ஸ்பெக்டர் தாமோதரத்தினிடம் எல்லா விஷயங்களையும் ஒருவாறு கூறிவிட்டுக் குங்குமத்துறைக்குச் சென்றேன். தங்கபாண்டியனின் ஈமக்கிரியைகள் முடிந்துவிட்டிருந்தன. என்னைக் கண்டதும் சின்னம்மாவும், லக்ஷ்மியும் கதறி அழுதார்கள். நானும் கண்ணீர் விட்டேன். ஆனால் முழுவதும் தங்கபாண்டியனின் மறைவுக்காக மட்டும் வருந்தினேன் என்று கூற முடியாது. என் உள்ள நிறைவில் ஒரு கள்ளம் புகுந்துகொண்டு தான் இருந்தது. அதைக் குறித்து எனக்கு வெட்கமாக இருந்ததே தவிர அதைப் போக்கிக்கொள்ள முடியவில்லை. தங்கபாண்டியன் இறந்த அன்று ஈசுவரமூர்த்தி அவனை வந்து பார்த்துப் பேசிக்கொண்டிருந்தார் என்று தெரிந்ததும் எனக்குக் கோபம் அதிகமாயிற்று.

தங்கபாண்டியனுடைய வக்கீல் என்னுடன் பேச வேண்டுமென்று சொன்னபோதுதான் எனக்கு அறிவு சற்றுத் தெளிவடைந்தது. அவர் அனுப்பியிருந்த காரில் திருநந்திபுரத்துக்குப் போய்ச் சேர்ந்தேன்.

வக்கீல் கூறிய விஷயங்கள் என்னை ஆச்சரியத்தில் மூழ்க அடித்துவிட்டன. தங்கபாண்டியனை நான் மனப் பூர்வமாக மன்னித்து விடும்படியான விஷயங்களை

அவர் கூறினர். தங்கபாண்டியன் தான் செய்த குற்றத்தை எழுதச் செய்து கையெழுத்துப் போட்டிருந்தான். திருநந்திபுரம் ஸெஷன்ஸ் கோர்ட் மாஜிஸ்ட்ரேட்டை அழைத்து வரச் செய்து அவருக்கு எதிரில் வாக்குமூலம் எழுதினும். அவரும் கையெழுத்துப் போட்டிருந்தார். அதைத் தவிர சொக்கையாவினல் எடுத்துக்கொள்ளப்பட்ட மந்திரமூர்த்திப் பண்ணையாரின் நிலங்களையெல்லாம் என் பெயருக்கு அவன் எழுதி வைத்திருந்தான். லக்ஷ்மியின் கணவரும் அதற்குப் பூரண சம்மதம் கொடுத்தாராம்.

"இதையெல்லாம் எனக்கு நீங்கள் ஏன் முன்னமேயே தெரிவிக்கவில்லை ?" என்று வக்கீலைக் கேட்டேன்.

"ஈசுவரமூர்த்திக்கு எந்த விஷயமும் தெரியக் கூடாது என்றுதான் ரொம்ப ரகசியமாக இவைகளைச் செய்தோம்."

"அப்போது நான் நினைத்தது சரிதானு ? ஈசுவரமூர்த்திதான் தங்கபாண்டியனைத் தூண்டிவிட்டிருக்க வேண்டும் என்று நினைத்தேன். அப்படியானல் ஈசுவரமூர்த்திக்குத் தங்கபாண்டியன் இரண்டு நாட்களுக்கு முன்பு எதற்காகக் கடிதம் எழுதினன் ?"

"அவருக்கு எழுத வேண்டியது தன் கடமை என்று எண்ணினன். இந்துமதி தண்டனை அடைவதைத் தன்னல் பொறுக்க முடியாதென்றும், தான் குற்றவாளி என்பதை ஒப்புக்கொண்டுவிடப் போவதாகவும் எழுதினன். ஆனல், அவருக்கு மற்ற விஷயங்கள் எதுவும் தெரியாது. ஆகவேதான் அவர் பாண்டியனைப் பார்க்க வந்தபோது கூட யாரும் அவரைத் தடுக்கவில்லை. லக்ஷ்மியின் கணவர், லக்ஷ்மி, நான் மூவரும் இருந்தபடியால் அவரால் ஒன்றும் பேசமுடியவில்லை. தனியாக இரண்டு நிமிஷம் பேசினர்கள். அப்போது அவர் எதையும் ஒப்புக்கொள்ள வேண்டாம் என்று அவனிடம் கூறினராம்."

"தங்கபாண்டியன் இறந்துவிட்டான் என்று தெரிந்ததும் ஈசுவரமூர்த்தி இங்கு வந்திருப்பது எனக்குத் தெரிந்திருந்தபடியால் அவரே அவனைக் கொன்று விட்டாரோ என்றுகூட நினைத்தேன்."

"உங்கள் மனம் ரொம்பக் குழம்பிப் போயிருக்கிறது, மிஸ்டர் ராய். கவலைப்படாதீர்கள். அமரதாராவை விடுதலை செய்வது என்னுடைய பொறுப்பு. இந்த ஊரில் அவளுடைய வழக்கை விசாரணை செய்த மாஜிஸ்ட்ரேட் தான் வாக்குமூலம் எழுதும்போது அருகில் இருந்தார். கவலையே வேண்டாம்."

"இருந்தாலும் இத்தனை குற்றங்கள் செய்த ஈசுவர மூர்த்தி தப்பித்துக்கொள்வது ரொம்ப அநியாயம். தங்க பாண்டியன் அவருடைய தூண்டுதலினால்தான் செய்ததாக எழுதவில்லையே."

"ஈசுவரமூர்த்திக்கு எதிராக எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. அதைப்பற்றியும் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. தங்கபாண்டியனின் தந்தையான பழைய ஜமீன்தாரைக் கொன்றது ஈசுவரமூர்த்தியின் ஆள்தான் என்பதும், சொக்கையா அதற்கு உடந்தை என்பதும், அரண்மனைப் பாதாளக் கிடங்கைச் சோதனை போட்டபோது தெரிய வந்தன. பாதாளக் கிடங்கில் உள்ள ஒரு ரகசிய அறையில் பல கடிதங்கள் இருந்தன. தான் எதிலாவது அகப்பட்டுக்கொண்டால் மற்றவர்களைக் காட்டிக் கொடுத்துவிட்டுத் தப்பி விடலாம் என்று எண்ணிச் சொக்கையா அவற்றைப் பத்திரப்படுத்தியிருக்க வேண்டும். இவையெல்லாம் சமீபத்தில்தான் தங்க பாண்டியனுக்கும் எனக்கும் தெரிய வந்தன.

"தங்கபாண்டியனைச் சொக்கையாவைக் கொன்று விடும்படி தூண்டிவிட்டபோது ஈசுவரமூர்த்தி, சொக்கையா தான் அவன் தந்தையைக் கொலை செய்ததாகக் கூறி

யிருந்தார். அதற்குக் காரணம் சொக்கையாவுக்கு ஈசுவர மூர்த்தியைப் பிடிக்காமல் போனதுதான். ஈசுவரமூர்த்தியின் ஆள் வெகு நாட்களாக ஜமீன்தாரைத் தொடர்ந்துகொண்டிருந்தது சொக்கையாவுக்குத் தெரியும். இதற்கு அவரும் உடைந்தையாக இருந்தார். பின்னல் இருவருக்கும் மனஸ்தாபம் வந்துவிடவே சொக்கையா இந்த விஷயத்தை வெளியிட்டுவிடப் போவதாக ஈசுவர மூர்த்தியைப் பயமுறுத்தியிருக்கிருர். ஈசுவரமூர்த்தி அவர் இதை வெளியிடாமலிருப்பதற்காகவென்று பத்தாயிரம் ரூபாய் கொடுக்க ஒப்புக்கொண்டிருக்கிருர். அந்தக் கடிதம் ரகசிய அறையிலிருந்து அகப்பட்டிருக்கிறது. இதனுலேயே அவர் தங்கபாண்டியனைத் தூண்டியிருக்கிருர். அவனுக்கும் சொக்கையாமீது துவேஷம் ஏற்பட எத்தனையோ காரணங்கள் இருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக அந்தப் பாதகன் தன் நண்பனுடைய காதலியை ஏமாற்றுகிருன் என்பதைத் தெரிந்துகொண்டபோது அவனல் தாங்க முடியவில்லை.''

"என்ன, என்ன கூறினீர்கள்?''

"ஆமாம். உன்னுடைய சாமான்களை எடுத்து வருவதற்காகப் பாண்டியன் குங்குமத்துறைக்கு வந்தான் அல்லவா? ஊருக்குச் சற்றுத் தூரத்தில் வண்டி பெட்ரோல் இல்லாததால் நின்றுவிட்டது. ஆகவே பெட்ரோல் எடுத்து வர அரண்மனைக்கு நடந்து சென்ருன். வாசலில் நுழையப் போகும் சமயத்தில் சொக்கையாவின் அறையிலிருந்து ஒருசிறுவன் கடிதத்துடன் வெளியே செல்வதைப் பார்த்தான். அவனைத் தொடர்ந்து போய் மிரட்டி அதைப் பிடுங்கிப் படித்திருக்கிருன். அதிலிருந்த விஷயம் அவனுடைய ஆத்திரத்தைக் கிளறி விட்டிருக்கிறது. ஆகவே பாதிரித் தோட்டத்துக்குப் போய்க் கத்தியுடன் ஒளிந்து கொண்டிருக்கிருன். முதலில் அவரைக் கொல்லும் நோக்கமே அவனுக்கு இல்லையாம். தற்காப்புக்காகத்தான்

எடுத்துக் கொண்டாளும். ஆனால் இந்துமதியை அந்தப் பாதகன் நெருங்குவதைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை யாம். அவரை நேருக்கு நேர் பார்த்தால் தன் தைரியம் பஞ்சாய்ப் பறந்து விடுவதை நினைத்து அவரைத் தீர்த்து விட்டான். இதை அவனே என்னிடம் கூறினான்."

நான் விம்மி விம்மி அழுதேன். இந்துமதியைக் காப்பாற்ற அவன் எடுத்துக்கொண்ட சிரத்தையை என் நெஞ்சம் போற்றியது. இருந்தாலும் தவறு தவறுதான் அல்லவா ? நல்ல வேளையாக அவனைச் சீக்கிரமாகவே யமன் அழைத்துக்கொண்டு விட்டான். இல்லாவிட்டால் அவன் தண்டனை அடைவதை நான் பார்க்கும்படி நேரிட்டிருக்கும்.

இந்த விவரங்களையெல்லாம் தெரிந்துகொண்ட பிறகு என் உள்ளத்தில் ஆழ்கடலின் அமைதி நிலவியது. வெகு நாட்களாக ஓய்வில்லாமல் அடித்துக் கொண்டிருந்த சூறாவளி அடங்கிச் சாந்தம் குடிகொண்டது.



இந்துவின் கரத்தைப் பிடித்து நான் லாக்-அப்பி லிருந்து அழைத்து வந்து சரியாக ஒரு மாதம் ஆனதும், குங்குமத் துறையில் பண்ணையார் மந்திர மூர்த்தியின் வீட்டில் அவளுடைய கழுத்தில் மாலையிட்டு மணந்து கொண்டேன்.

சுலோசனாவும், ரமேஷூம், ராஜாராமும் வந்திருந்து உற்சாக மாக நடத்தி வைத்தார்கள். முனுசாமிக் கவுண்டரும் அவரது பத்தினியும் மனம் உவந்து ஆசி கூறினார்கள். சந்திரமணியும், பண்ணையார் மந்திர

மூர்த்தியும் சூக்ஷ்மரூபத்தில் வந்து ஆசி கூறி யிருப்பார்கள்.

காசிலிங்கத்தைத் திருநந்திபுரத்தில்தான் வைத்திருந் தார்கள். நாங்கள் விவாகம் செய்துகொண்ட அன்றே அவரை மணக்கோலத்துடன் சென்று பார்த்தோம். கண்களில் நீர் ததும்ப, "நீங்கள் இருவரும் மண வாழ்க்கையின் பூரண இன்பத்தையும் அனுபவிக்க வேண்டும். இறைவன் உங்களையாவது சந்தோஷமாக வைக்கட்டும்" என்றார். நாங்களும் விம்மிவிட்டோம்.

சுலோசனா அன்று மாலை எங்களுடன் பேசிக்கொண் டிருந்தபோது, "இந்து! உன் தந்தையின் கதியைக் குறித்து நீ வருத்தப்படாதே. என் தகப்பனாரையும் கைது செய்துவிட்டார்கள். ஈசுவரமூர்த்தி தன் விசாரணையின் போது அவரையும் காட்டிக் கொடுத்துவிட்டார். குற்றம் செய்தவர்கள் தண்டனை அடைவதை நம்மால் தவிர்க்க முடியாது. அதற்காக வருந்தியும் பயனில்லை" என்று சொன்னாள்.

இந்துவும் கண்ணீருடன் அதை ஆமோதித்தாள்.

"நானும் இந்த வழக்குகள் முதலிய விவகாரங்களில் ஈடுபடப் போவதில்லை, சுலோசனா! இனிமேல் நாங்கள் இருவரும் இங்கேயே தங்கியிருந்து நிம்மதியாக விவசாய வாழ்க்கையில் ஈடுபடப் போகிறோம்" என்றேன்.

ராஜாராம் உடனே, "ஐயையோ! இந்துமதி நடிப்பதை நிறுத்திவிட்டால் என் கதி என்ன ஆவது?" என்று கேட்டார்.

"நான் நடித்ததெல்லாம் எனக்குப் போதும், ராஜா ராம். இனிமேல் நான் வாழ்நாளில் எந்தப் படத்திலும் நடிக்கவேமாட்டேன். எனக்கு ஓய்வுதான் தேவை. பணம் வேண்டியதில்லை" என்றாள் இந்து.

"உனக்கு நடிப்பதில் விருப்பமிருந்தால் நான் தடை சொல்லவேமாட்டேன், இந்து!" என்றேன்.

"போதுமே, இந்தப் பேச்சு! வேறு ஏதாவது பேசுங்கள். விவசாயத்தைப் பற்றிச் சொல்லுங்கள்" என்றாள்.

அதற்கு வள்ளி விடவில்லை. அமரதாராவின் போட்டோப் படங்கள் உள்ள ஆல்பங்களைக் கொண்டு வந்து புரட்டிப் பார்க்க ஆரம்பித்தாள். நானும் அவற்றைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தேன்!



மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, இராயப்பேட்டை, சென்னை—14.